# நிலமெல்லாம் இரத்தம்

## ஒரு கிறிஸ்தவ கண்ணோட்டம்

திரு. பா ராகவன் அவர்களின் ‘நிலமெல்லாம் இரத்தம்’
புத்தகத்தின் விமர்சனம்

**ஆன்சரிங் இஸ்லாம் தமிழ்**

**ஜூலை 2017**

# பொருளடக்கம்

# 1) நிலமெல்லாம் இரத்தம் - அறிமுகம்

[உமரின் மொபைல் அலறுகிறது. அவன் தம்பி அப்ரகாம் சௌதி அரேபியாவிலிருந்து போன் செய்துக்கொண்டு இருக்கிறான். அப்ரகாம் மூன்று ஆண்டுகளுக்கு முன்பாக இஸ்லாமை தழுவினான். ஒவ்வொரு ஆண்டும் ரமளான் மாதத்தில் இஸ்லாம்-கிறிஸ்தவம் பற்றி இவ்விருவர் பேசிக்கொள்வார்கள், கடித பரிமாற்றம் செய்துக் கொள்வார்கள். இந்த ஆண்டு (2016), இவ்விருவரின் உரையாடல் என்னவென்பதை படியுங்கள். உமர் போன் எடுத்து பேசுகிறான்]

**உமர்:** ஹலோ! அப்ரகாம்

**அப்ரகாம்:** ஹலோ, உமரண்ணா. அஸ்ஸலாமு அலைக்கும்.

**உமர்:** வ அலைக்கும் ஸலாம். எப்படி இருக்கிறாய்?

**அப்ரகாம்:** அல்ஹம்துலில்லாஹ்! நான் நன்றாக இருக்கிறேன். நீங்க மற்றும் வீட்டில் எல்லோரும் எப்படி இருக்காங்க?

**உமர்:** கர்த்தரின் கிருபையால் எல்லோரும் சுகமாக இருக்கிறார்கள். நாம் ஒவ்வொரு வாரமும் வெள்ளிக்கிழமை தானே பேசுவது வழக்கம், இன்று என்ன திடீரென்று போன் செய்தாய்?

**அப்ரகாம்:** இன்னும் சில நாட்களில் ரம்ஜான் ஆரம்பிக்கப்போகிறது. நீங்க விசேஷமாக ரம்ஜான் மாதத்தில் நேரத்தை ஒதுக்கி என்னோடு பேசுவீங்க, மெயில் எழுதுவீங்க இல்லையா! இந்த வருஷம் என்ன பிளான் வெச்சிருக்கீங்க என்று கேட்கலாம் என்று போன் செய்தேன்.

**உமர்:** ஓ.. ரம்ஜானா! நான் மறந்தே போயிட்டேன். இந்த வருஷத்துக்காக இதுவரை நான் எந்த ஒரு பிளானும் போடவில்லை. உன்னிடம் ஏதாவது பிளான் இருந்தா சொல்லு.

**அப்ரகாம்:** என்கிட்டே ஒரு பிளான் இருக்கு. உங்களுக்கு ஒரு புத்தகத்தை PDF ஃபைலாக அனுப்புகிறேன். அதை படிங்க.

**உமர்:** நம் தமிழ் முஸ்லிம்கள் எழுதிய புத்தகமாக இருந்தால், அதை நான் ஏற்கனவே படிச்சிருப்பேன் என்று நினைக்கிறேன்.

**அப்ரகாம்:** புத்தகத்தின் பெயர் "நிலமெல்லாம் இரத்தம்", அதை எழுதியவர், எழுத்தாளர் பா ராகவன் ஆவார். இதற்கு முன்பாக இதை படிச்சிருக்கீங்களா?

**உமர்:** ஓ.. நிலமெல்லாம் இரத்தமா! சில ஆண்டுகளுக்கு முன்பு, ஒரு தளத்தில் அதன் சில அத்தியாயங்களை படிச்சிருக்கேன். பா ராகவன் அவர்களின் எழுத்துக்களை நான் விரும்பி படிப்பதுண்டு. நேரம் கிடைக்கும் போதெல்லாம், அவரது தளத்திற்குச் சென்று கட்டுரைகளை படிப்பேன்.

**அப்ரகாம்:** நல்லதா போச்சு, உங்களுக்கு ஏற்கனவே பாராவைப் பற்றித் தெரிந்திருக்கிறது! ஒரு முஸ்லிமல்லாதவர் என்ற முறையில் இவர் இப்புத்தகத்தை நடுநிலையோடு எழுதியுள்ளார். பாலஸ்தீன், இஸ்ரேல் பற்றிய விவரங்களை தெளிவாகவும், சுவாரசியமாகவும்

எழுதியுள்ளார். நீங்க இந்த புத்தகத்தை முழுவதுமாக கட்டாயம் படிச்சு உங்க கருத்தைச் சொல்லனும், இது தான் இந்த ஆண்டின் ஹோம் வர்க் உங்களுக்கு.

**உமர்:** எனக்கு பெரிய வேலையை கொடுத்திட்டியே! ஒரு இந்து எழுத்தாளர் எழுதிய புத்தகத்தை முஸ்லிம்கள் புகழ்ந்தால், கண்டிப்பாக அதில் அனேக தில்லுமுல்லு நடந்திருக்கும்.

**அப்ரகாம்:** நீங்க நினைக்கிறபடி ஒன்றுமில்லை. பாரா நடுநிலையோடு, வீணான மிகைப்படுத்துதல் இல்லாமல் எழுதியுள்ளார். இஸ்ரேல் நாடு உருவாக்கப்பட்டது பற்றியும், அங்கு நடந்துக்கொண்டு இருக்கும் சண்டைகள் பற்றியும் நீங்க என்ன நினைக்கிறீங்க?

**உமர்:** சில ஆண்டுகளுக்கு முன்பாக நான் படித்த ஒரு சில அத்தியாயங்களிலேயே சில மிகைப்படுத்தல்களைக் கண்டேன். ஆங்காங்கே சில உண்மைகளை மறைத்து, முஸ்லிம்களுக்கு சாதகமாக அவர் எழுதியிருப்பதாக தெரிகிறது. எனக்கு நேரமின்மையின் காரணமாக அவருக்கு பதில் எழுதவில்லை. இஸ்ரேல் பாலஸ்தீன் செய்திகளை அவ்வளவாக விரும்பி படிப்பதில்லை. எனவே. . .

**அப்ரகாம்:** அதை இதைச் சொல்லி நழுவ வேண்டாம். கட்டாயம் இந்த புத்தகத்தை படிக்கிறீங்க, உங்க கருத்தைச் சொல்றீங்க.

**உமர்:** ம்ம்ம்…. படிக்கிறேன். ஆனால், எனக்கு தெரிஞ்ச விஷயங்களைப் பற்றி மட்டுமே நான் எழுதுவேன். அதாவது இஸ்லாம் கிறிஸ்தவம் பற்றி அவர் உண்மைக்கு புறம்பாக எழுதியிருந்தால், அதைப் பற்றி நான் என் கருத்தைச் சொல்வேன். பாலஸ்தீனா-இஸ்ரேல் சண்டைப் பற்றி அவர் எழுதியதை சரி பார்க்க நான் சரித்திர விவரங்களை அதிகம் படிக்கவேண்டி இருக்கும். இப்போதைக்கு எனக்கு அதற்கு நேரமில்லை. இதைப் பற்றி நான் என் விமர்சனத்தை வைக்கமுடியாது.

**அப்ரகாம்:** பரவாயில்லை, உங்க விருப்பத்தின்படியே செய்யுங்க. உங்களால் அவரது புத்தகத்தில் பிழைகளை கண்டுபிடிக்கமுடியாது. நீங்க தவறாக விமர்சித்தால், நான் உங்களை சும்மா விடமாட்டேன்.

**உமர்:** எனக்கு சம்மதம் தான். பேசிக்கிட்டே இருக்கும் போதே, நிலமெல்லம் இரத்தம் PDFஐ அனுப்பிட்டியே! நான் முதலாவது இந்த புத்தகத்தை படிக்க ஆரம்பிக்கிறேன். அதன் பிறகு உனக்கு மெயில் அனுப்புகிறேன்.

**அப்ரகாம்:** ரொம்ப சந்தோஷம், இந்த ரம்ஜானோடு உங்க கதை முடியப்போகிறது, அதாவது, இஸ்லாம் பற்றிய உங்களுடைய தவறான கண்ணோட்டம் மாறப்போகிறது. அதுவும் முஸ்லிமல்லாத ஒருவர் எழுதிய புத்தகம் உங்களை சிந்திக்கவைக்கப் போகிறது என்பதை நினைக்கும் போது, ரொம்ப சந்தோஷமாக இருக்கிறது.

**உமர்:** தம்பி, நீ அகங்கையிற் போட்டு புறங்கையை நக்க பார்க்கிறாய்! இதனால் உனக்கு ஒரு உபயோகமும் உண்டாகப்போவதில்லை. அல்லாஹ்வின் புத்தகமே என்னை மாற்றமுடியாத போது, மனுஷன் எழுதியது என்னச் செய்யும்? சும்மா இருந்த எழுத்தாளர் 'பா ராகவன்' அவர்களை வம்புக்கு இழுத்து இருக்கிறாய்! அவர் ஒளிவு மறைவு இன்றி எழுதியிருந்தால், நல்லது. அதை விட்டுவிட்டு, முஸ்லிம்களுக்கு சாதகமாகவும், இஸ்லாம்

பற்றிய உண்மைகளை மறைத்தும் அவர் எழுதியிருந்தால், அதற்கான கூலியை அவர் வட்டியோடு கட்டவேண்டி வரும்.

**அப்ரகாம்:** முதலில் அதை படியுங்க, பிறகு பேசலாம். குட்நைட்.

**உமர்:** குட்நைட்

**அடிக்குறிப்புக்கள்:**

1. **நிலமெல்லம் இரத்தம் — PDF டவுன்லோட் செய்ய சொடுக்கவும்.**
2. **நிலமெல்லம் இரத்தம் — பிளாக்கர் தளம்**
3. **எழுத்தாளர் பா. ராகவன் அவர்களின் தளம்.**

ꕥꕥꕥꕥ

## 2) 'மானுடகுலம்' என்றால் அதற்கு 'வெறும் அரபு நாடுகள்' என்று அர்த்தமாகுமா?

### (1. அரஃபாத்தின் மறைவும் பாலஸ்தீனமும்)

அன்புள்ள தம்பிக்கு,

உன் விருப்பத்தின் படியே நான் நிலமெல்லாம் இரத்தம் புத்தகத்தை படிக்க ஆரம்பித்துள்ளேன். உனக்கு எப்படி நன்றி சொல்லவேண்டுமென்று எனக்குத் தெரியவில்லை. நீ எனக்கு கரும்பு திண்ண கூலி மட்டும் கொடுக்கவில்லை, கரும்பு தோட்டத்தையே என் பெயரில் எழுதிவிட்டாய்.

எழுத்தாளர் பா. ராகவன் அவர்களின் புத்தகத்தை படிக்க என்னை கேட்டுக்கொண்டதற்காக, உன் வாயில் சக்கரையைத் தான் போடவேண்டும். நான் ஏற்கனவே சொன்னது போல, பாரா அவர்களின் புத்தகத்தில் வரும் தற்கால 'இஸ்ரேல் பாலஸ்தீனா' சண்டைப் பற்றி என் கருத்தைச் சொல்லாமல், பைபிள் மற்றும் குர்ஆனில் வரும் உண்மை விவரங்களை மாற்றி அவர் எழுதியிருந்தால், அவைகளுக்கு என் விமர்சனத்தை முன்வைப்பேன்.

அவர் நடுநிலையோடும், உண்மையை மறைக்காமலும் முக்கியமாக வேண்டாத மிகைப்படுத்தல் இல்லாமலும் இப்புத்தகத்தை எழுதியிருக்கிறார் என்று நீ சொன்னாய். ஆனால், நான் படித்த முதல் அத்தியாயத்திலேயே சில மிகைப்படுத்தல்களை நான் கண்டு இருக்கிறேன். அதைப் பற்றி இந்த கட்டுரையில் என் விமர்சனங்களை, கேள்விகளை முன்வைக்க விரும்புகிறேன்.

முக்கியமாக, இனி நான் எழுதப்போகும் விமர்சன கட்டுரைகளை உனக்கு எழுதாமல், நேரடியாக பா ராகவன் அவர்களுக்கே எழுதப்போகிறேன். இடையிடையே உனக்கும் (முஸ்லிம்களுக்கும்) பயன்படும் சில கேள்விகளையும், விவரங்களையும் முன்வைப்பேன். நீ

உன் பதில்களை முன்வைக்கலாம். நீ இக்கட்டுரைகளை படித்துவிட்டு, பாரா அவர்களுக்கும் அனுப்புவாய் என்று நம்புகிறேன்.

---

## ’மானுடகுலம்’ என்றால் அதற்கு ‘வெறும் அரபு நாடுகள்’ என்று அர்த்தமாகுமா?

**மதிப்பிற்குரிய பாரா அவர்களே,**

உங்களுக்கு என் வாழ்த்துதல்களை தெரிவித்துக் கொள்கிறேன்.

எடுத்த எடுப்பிலேயே ஏன் இந்த வாழ்த்துதல்? என்ற கேள்வி உங்களுக்கு எழலாம்.

இஸ்லாமைத்தொட்டு ஒரு புத்தகத்தை எழுதி, முஸ்லிம்களின் மனதில் எரிமலையாய் கடந்த 60 ஆண்டுகளாக எரிந்துக்கொண்டு இருக்கும் ஒரு முக்கியமான விஷயத்தின் (இஸ்ரேல் பாலஸ்தீனா பிரச்சனை) அணிவேர் வரைச் சென்று, முஸ்லிம்களிடம் அடிபடாமல் திரும்பி வந்து இருக்கிறீர்கள் என்றால், இது சாதனை இல்லையா? இது உங்களுக்கு கிடைத்த மிகப்பெரிய வெற்றியல்லவா! அதற்காகத்தான் என் வாழ்த்துதல்களை முதலிலேயே சொல்லிவிட்டேன்.

தற்காலத்தில் இஸ்லாம் பற்றியும், முஹம்மது பற்றியும் யாராவது புத்தகம் எழுதினால், ஒன்று, அவருக்கு மரணம் கிடைக்கும் அல்லது மேன்மை கிடைக்கும். இவ்விரண்டில் ஏதாவது நிச்சயம் கிடைக்கும். உங்களுக்கு முஸ்லிம்கள் மத்தியிலே மேன்மை கிடைத்துள்ளது அப்படியானால், என்ன அர்த்தம்? ஒன்று நீங்கள் எழுதியவைகளை அவர்கள் (முஸ்லிம்கள்) அங்கீகரித்துக் கொண்டு இருக்கவேண்டும், அல்லது அவர்கள் அங்கீகரிக்கும்படியாக நீங்கள் எழுதியிருக்கவேண்டும்.

விஷயத்துக்கு வருகிறேன். உங்களின் நிலமெல்லாம் இரத்தம் புத்தகத்தை படித்துக்கொண்டு இருக்கிறேன். உங்கள் எழுத்துக்களை படிக்கும் வாசகர்களில் நானும் ஒருவன். உங்கள் வரிகளை நான் பலமுறை ரசித்தும் ருசித்தும் படித்துள்ளேன். இந்த முறை, அவைகளை உரசிப்பார்க்க முடிவு செய்திருக்கிறேன், அக்னி பரிட்சை வைக்கப்போகிறேன். நிலமெல்லாம் இரத்தம் புத்தகத்தில் நீங்கள் பைபிள் மற்றும் குர்ஆன் பற்றிய விவரங்களை எழுதியுள்ளீர்கள். மேலும், பல சரித்திர விவரங்களையும், 20ம் நூற்றாண்டின் மிகப்பெரிய பிரச்சனையாகிய இஸ்ரேல் பாலஸ்தீனாவை கையில் எடுத்துக்கொண்டு உங்கள் கருத்தை (ஆய்வை) சொல்லியுள்ளீர்கள். இந்த முறை நான் வெறும் பைபிள் மற்றும் குர்ஆன் பற்றிய உங்களின் கருத்துக்களுக்கு மட்டுமே என் விமர்சனங்களை வைக்கப்போகிறேன், ஏனென்றால், இதர இஸ்ரேல்-பாலஸ்தீனா விவரங்களை சரி பார்க்க எனக்கு நேரம் போதாது, தேவைப்பட்டால் பிறகு பார்க்கலாம்.

ஒரு நடுநிலை எழுத்தாளராக முக்கியமாக, முஸ்லிமல்லாத எழுத்தாளராக இருந்துக்கொண்டு நீங்கள் மாற்று மத வேதங்களில் உள்ள விவரங்களை எழுதியிருக்கிறீர்கள். இதர மார்க்க விஷயங்களையும், வேதங்களையும் ஆய்வு செய்து எழுதுவது என்பது வரவேற்கத்தக்கது, ஆனால் உண்மைக்கு புறம்பாக எழுதுவது என்பது ஆபத்தானதாகும். ஒரு மார்க்க விஷயங்களை மிகைப்படுத்தியும், இன்னொரு மார்க்க விஷயங்களின் உண்மையை மறைத்தும் எழுதுவது என்பது, உங்களைப்போன்ற எழுத்தாளர்களிடம் மக்கள் எதிர்ப்பார்க்காத ஒன்றாகும்.

ஒரு கிறிஸ்தவனாக, உங்களின் நிலமெல்லாம் இரத்தம் என்ற புத்தகத்தை படித்து, என் விமர்சனத்தை முன்வைக்க எனக்கு அனுமதி கொடுப்பீர்கள் என்று நம்புகின்றேன் (நீங்கள் அனுமதி கொடுத்தாலும், முஸ்லிம்கள் கொடுக்கமாட்டார்கள் என்று எனக்குத் தெரியும்).

நான் உண்மைக்கு புறம்பான ஒன்றையும் எழுதவில்லை என்று நீங்கள் சொல்ல விரும்பினால், என் விமர்சனத்துக்கு பதிலைச் சொல்லும் படி தாழ்மையுடன் கேட்டுக்கொள்கிறேன். 'மதிப்பிற்குரிய பாரா அவர்கள்' என்று ஆரம்பத்தில் அழைத்துவிட்டு, இடையில் வந்து மதிப்பு கொடுக்காமல் விமர்சித்தால் எப்படி? என்று கேள்வி கேட்காதீர்கள், ஏனென்றால்,'நெற்றிக்கண் திறப்பினும் குற்றம் குற்றமே!'. நீங்கள் பாராவாக இருந்தாலும் சரி, வேறுயாராக இருந்தாலும் சரி, குற்றம் குற்றமே.

நிலமெல்லம் இரத்தம் அத்தியாயம் 1 ‘‘அரஃபாத்தின் மறைவும் பாலஸ்தீனமும்’’ விமர்சனம் தொடர்கிறது...

## ’மானுடகுலம்’ என்றால் அதற்கு ‘வெறும் அரபு நாடுகள்’ என்று அர்த்தமாகுமா?

திரு பாரா அவர்களே, முதல் அத்தியாயத்தில் நீங்கள் கீழ்கண்ட விதமாக எழுதியுள்ளீர்கள்.

**பாரா அவர்கள் எழுதியது:**

> *// ஒட்டுமொத்த மானுடகுலமே ஒரு தலைவரின் மரணச்செய்தியால் நிலைகுலைந்து போனது உண்மை. . . .*
>
> *இது வேறெந்தத் தலைவரின் மரணத்தின்போதும் இதற்குமுன் நடந்திராதது. வருத்தம் இருக்கும். துக்கம் இருக்கும். வாயடைத்துப் போகலாம். "அப்பா, செத்தானே" என்று சந்தோஷம் கூடச் சிலருக்குக் கொப்பளிக்கும். ஆனால் ஒட்டுமொத்த உலகமும் ஒரு சில நிமிடங்களாவது செயலற்றுச் சமைந்து நின்றதில்லை. (நிலமெல்லாம் இரத்தம் – 1. அரஃபாத்தின் மறைவும் பாலஸ்தீனமும்) //*

அரஃபாத்தின் மரண செய்தியால், மானுடகுலமே நிலைகுலைந்து போனார்கள் என்று நீங்கள் எழுதியிருப்பது உண்மைக்கு புறம்பானதாகும். ஒரு சின்ன விஷயத்தை மிகைப்படுத்திச் சொன்னதாகும்.

அரஃபாத் என்பவர் பாலஸ்தீனாவின் தலைவர், போராட்ட வீரர், இவர் மரித்த போது, அந்நாட்டவர் நிலைகுலைந்து போனார்கள் என்றுச் சொல்வது சரியானதாக இருக்கும். மேலும், இதர இஸ்லாமிய நாடுகளும் துக்கப்பட்டார்கள், நிலைகுலைந்து போனார்கள் என்றுச் சொல்வதும் சரியானதாகவே இருக்கும். ஏனென்றால், இஸ்ரேல் உருவாக்கப்பட்ட நாள் முதல், இதர இஸ்லாமிய நாடுகள் நேரடியாகவோ மறைமுகமாகவோ பாலஸ்தீனாவிற்கு ஆதரவாக இருக்கிறார்கள். மேலும், இதர மேற்கத்திய, ஐரோப்பிய ஆசிய நாடுகளில் பாலஸ்தீனத்துக்கு ஆதரவாக இருக்கும் சில நாடுகளும் துக்கப்பட்டு இருந்திருப்பார்கள். ஆக, அரஃபாத்தின் மரணம் மேற்கண்ட தலைவர்களுக்கும், மக்களுக்கும் மட்டுமே துக்கத்தை கொடுத்திருக்கும், அவ்வளவு தான். தெளிவாக உண்மையைச் சொல்வதை விட்டுவிட்டு, ’’மொத்த மானுடகுலம்’’ இவரது மரணத்தினால் நிலை குலைந்துப்போனது என்றுச் சொல்வது, ‘‘கொஞ்சம் அதிகம் தான்’’. இப்படிப்பட்ட சின்ன விஷயத்தை மிகைப்படுத்திச் சொல்லவேண்டிய அவசியமென்ன?

மேலும் ‘‘**ஒட்டுமொத்த உலகமும் ஒரு சில நிமிடங்களாவது செயலற்றுச் சமைந்து நின்றதில்லை**’’ என்றும் சொல்லியுள்ளீர்கள்.

அரஃபத்துடைய மரணத்திற்காக ஏன் ஒட்டுமொத்த உலகம் ஒரு நிமிடம் ஸ்தம்பித்து நிற்கும்? இவர் பாலஸ்தீனாவின் போராட்ட வீரர், தலைவர் மற்ற நாடுகளுக்கும் இவருக்கும் என்ன சம்மந்தம்?

வீரப்பாண்டிய கட்டப்பொம்மன் படத்தின் வசனம் தான் எனக்கு ஞாபகம் வருகிறது. உதாரணத்திற்கு இந்தியாவை எடுத்துக்கொள்வோம். அரஃபாத்துடைய மரணத்தினால் ஒட்டு மொத்த இந்தியா ஒரு நிமிடம் செயலற்று நிற்பதற்கு அரஃபாத், **நம் மக்களோடு வயலுக்கு வந்தாரா? நாற்று நட்டாரா? ஏற்றம் இறைத்தாரா? அல்லது, கொஞ்சி விளையாடும் எங்குல பெண்களுக்கு மஞ்சள் அரைத்து கொடுத்தாரா? மாமனா? மச்சானா?**

அரஃபாத்துடைய கடைசி மரண ஊர்வலத்தை நான் வீடியோவில் பார்த்தேன், பாலஸ்தீனத்தின் மக்கள் துக்கப்பட்டது உண்மை தான், இதர முஸ்லிம் நாடுகளின் தலைவர்கள் துக்கப்பட்டது உண்மை தான். அதற்காக உலகத்தில் உள்ள 190+ நாடுகளும் நிலைகுலைந்து நின்றது என்றுச் சொல்வது, ஏற்றுக்கொள்ளக்கூடியதாக இல்லை. மேலும், ஆய்வு செய்து புத்தகங்களை எழுதும் உங்களைப் போன்றவர்களின் பேனாவிலிருந்து இப்படிப்பட்ட மிகைப்படுத்தல் வரிகள் வருவது, மிகவும் வருத்தப்படவேண்டிய விஷயமாகும்.

**திரு எம்ஜிஆர் அவர்களின் கடைசி ஊர்வலத்தை பார்த்திருக்கின்றீர்களா?**

நாட்டின் தலைவர்கள் முக்கியமாக மக்களுக்காக வாழும் தலைவர்கள் மரணிக்கும்போது, மக்கள் நிலைகுலைந்துப் போவதை நாம் பாலஸ்தீனத்தில் மட்டுமல்ல, உலகின் எல்லா நாடுகளிலும் காணலாம். அவ்வளவு ஏன், நம் புரட்சித் தலைவர் எம்ஜிஆர் அவர்கள் மரணித்த போது, சென்னையில் மக்கள் கண்ணீர் விட்ட காட்சியை யாராவது மறக்கமுடியுமா? உங்களைப்போன்ற எழுத்தாளர்களின் வரிகளால் அதனை மறைக்கத்தான் முடியுமா? எத்தனை இலட்சங்கள் சென்னையில் கூடிவிட்டார்கள். புரட்சித் தலைவரின் இறுதி ஊர்வலத்தை, அரஃபாத்தின் இறுதி ஊர்வலத்தோடு ஒப்பிட்டுப்பாருங்கள், அப்போது வித்தியாசம் புரியும். நான் மிகைப்படுத்தி எழுதினால் யார் கேட்பார்கள் என்ற குறுகிய எண்ணத்தில் நீங்கள் இப்படி எழுதுவது, ஒரு எழுத்தாளருக்கு அழகல்ல. இவர் நடிகர், அவர் போராட்ட வீரர் என்று வித்தியாசம் காணவேண்டாம். புரட்சித் தலைவரும் நடிகராக இருந்து, முதலமைச்சர் ஆனவர் தான், மக்களுக்கு சேவை செய்தவர் தான், மக்களுக்காக வாழ்ந்தவர் தான். இன்னும் நம் முன்னாள் பிரதமர் திருமதி. இந்திரா காந்தி அவர்கள் மற்றும் முன்னாள் ஜனாதிபதி திரு. அப்துல் கலாம் அவர்களின் இறுதி ஊர்வலத்தையும் பாருங்கள் மக்கள் அலையென கடந்துவந்தார்கள்.

அரஃபாத்திற்காக மக்கள் சிந்திய கண்ணீர் மற்றும் அவர்களின் அழுகையின் சத்தம் இராணுவ வீரர்களையும் ஒரு நிமிடம் அசைத்துவிட்டது என்று சொல்வது வேடிக்கையாக இருக்கிறது. செண்டிமெண்டுக்கு யார் உருகமாட்டார்கள், இதற்கு இராணுவ வீரர்கள் ஒரு விதிவிலக்கா. எம்ஜிஆருக்காக மக்கள் கண்ணீர் விட்டு அழுதுக்கொண்டு இருக்கும் போது, எம்ஜியாரை நேசித்த இராணுவ வீரர்கள் அந்த இடத்தில் இருந்திருந்தால், ஒரு நிமிடமாவது கண்கலங்கமாட்டார்களா? இப்படியெல்லாம் நடக்காது என்று உங்களால் உறுதியாக கூறமுடியுமா?

உலகிலேயே எப்போதும் நடக்காத நிகழ்ச்சி நடந்தது மாதிரியும், அரஃபாத் என்பவரே உலக கதாநாயகர் மாதிரியும் நீங்கள் எழுதியிருப்பது கொஞ்சம் அல்ல, அதிகப்பிரசங்கித்தனமாகும். மக்கள் எண்ணிக்கையை வைத்து ஒருவரின் நிலையை எப்போதும் நாம் எடைப்போடமுடியாது, எடைப்போடவும் கூடாது.

ஒருவேளை நீங்கள் பயன்படுத்தும் அகராதியில் "**உலகம் என்ற வார்த்தைக்கு அரபு நாடுகள் அல்லது இஸ்லாமிய நாடுகள் மட்டும் தான்**" என்று பொருள் உள்ளதா? உங்களை பொருத்தமட்டில் முஸ்லிம் நாடுகள் நான் உலகம், முஸ்லிம் மக்கள் தான் ஒட்டுமொத்த மானுடகுலம். உலகில் உள்ள மீதமுள்ள நாடுகள் அனைத்தும் நாடுகளே அல்ல என்று நீங்கள் எண்ணிவிட்டீர்களா?

**பாரா அவர்கள் எழுதியது:**

> *// அராஃபத் என்றொரு தலைவனைக் கொடுத்தது. இன்னொரு ஐம்பதாண்டு காலத்துக்கு, அவர் இடைவிடாத போராட்டங்களை நடத்திவந்தார். முதலில் ஆயுதப்போராட்டம். பிறகு, அமைதிப் போராட்டம். . . . //*

முதலாவது அவர் ஆயுதப்போராட்டம் செய்தார், பிறகு அமைதிப்போராட்டம் செய்தார் என்று நீங்கள் எழுதியுள்ளீர்கள். அரஃபாத் அமைதிப்போராட்டம் செய்தாரா? அரஃபாத் எப்போது எந்தெந்த வகையில் அமைதிப்போராட்டம் செய்தார் என்பதை பட்டியலிட்டுக் காட்டமுடியுமா? அறிந்துக் கொள்ளவேண்டுமென்று நான் ஆவலாக உள்ளேன்.

அடுத்ததாக, உலக நாடுகளின் தலைவர்கள் அரஃபாத்தின் மரணத்தின் போது என்ன சொன்னார்கள் என்பதையும் காண்போம். உங்கள் எழுத்துப்படி, ஒட்டுமொத்த உலகம் அப்படியே ஸ்தம்பித்துப்போனது. ஆனால், பல நாடுகளின் தலைவர்கள் கருத்துப்படி, அரஃபாத் மரித்ததினால் இனி இஸ்ரேல் பாலஸ்தீனா நாடுகளுக்கிடையே அமைதி உண்டாகும் என்பதாகும். அமைதி உண்டாவதற்கான வாய்ப்புக்கள் கையில் இருந்தபோதிலும், அதை ஏற்றுக்கொள்ள மனமில்லாமல், அரஃபாத் வேண்மென்றே இஸ்ரேலுடன் சண்டைபோட்டுக்கொண்டே இருந்தார் என்று அவர்கள் சொல்லியுள்ளார்கள்.

**கீழ்கண்ட இரண்டு தொடுப்புக்களையும் படித்துப் பாருங்கள். இவைகளிலிருந்து சில கருத்துக்களை மட்டும் நான் கீழே தருகிறேன்.**

**Arafat's death: Global reaction in quotes**

**World leaders have been sending their condolences following the death of Palestinian leader Yasser Arafat. Below are some of the tributes and reflections.**

**Many of them express the hope for further efforts to achieve peace in the Middle East.**

> **For nearly four decades, he expressed and symbolised in his person the national aspirations of the Palestinian people.**
>
> **Now that he is gone, both Israelis and Palestinians, and the friends of both peoples throughout the world, must make even greater efforts to bring about the peaceful realisation of the Palestinian right of self-determination.**

**UN Secretary General Kofi Annan**

> **The people of Pakistan, and indeed the entire Muslim world, is in deep shock at the passing away of Mr Arafat, who tirelessly struggled throughout**

**his life for the attainment of the rights of the Palestinian nation and for securing an independent state for them.**

**Pakistani President Pervez Musharraf**

மூலம்: **http://news.bbc.co.uk/2/hi/middle_east/4001697.stm**

பாகிஸ்தான் ஜனாதிபதி சொன்னது போலத்தான், நீங்கள் எழுதியிருக்கவேண்டும், அதாவது இவரது மரணத்தினால் ஒட்டுமொத்த இஸ்லாமிய நாடுகள் அதிர்ச்சி அடைந்தார்கள் என்பது தான் உகந்ததாக இருக்கும். இதை விட்டுவிட்டு, உலகமே அதிர்ச்சிக்குள்ளாகியது என்று நீங்கள் எழுதியது டூ மச் **(too much).**

**I think history will judge him very harshly for not having seized the opportunity in the year 2000 (at US-brokered peace talks) to embrace the offer that was very courageously made by the then Israeli Prime Minister Ehud Barak, that involved the Israelis agreeing to about 90% of what the Palestinians wanted.**

**Australian Prime Minister John Howard**

**I regret that in 2000 he missed the opportunity to bring that nation into being.**

**[I pray] for the day when the dreams of the Palestinian people for a state and a better life will be realised in a just and lasting peace.**

**Former US President Bill Clinton**

மேலும் இந்த தொடுப்பையும் படிக்கவும்: **http://www.voanews.com/content/a-13-2004-11-11-voa76-67483947/281662.html**

**முடிவுரை:**

மதிப்பிற்குரிய பாரா அவர்களே, இல்லாத ஒன்றை இருப்பதாக கற்பனைச் செய்துக்கொண்டு, நீங்கள் அதிகமாக மிகைப்படுத்திச் எழுதியுள்ளீர்கள். அரஃபாத் தன் நாட்டிற்காக தன் முழு வாழ்வையும் அர்ப்பணித்தவர் என்பதில் சந்தேகமில்லை. கவனிக்கவும், தன் நாட்டிற்காக மட்டுமே பாடுபட்டார், அவர் இதர நாடுகளுக்காக பாடுபடவில்லை. அவர் உலக நாடுகள் அனைத்தின் மக்களுக்காகவும் உழைத்திருக்கவேண்டும் என்று நான் சொல்லவரவில்லை. ஒரு நாட்டிற்காக உழைத்தவரை எடுத்துக்கொண்டு, உலகத்திற்கே இரட்சகராக வந்தவர் போல ஏன் பில்டப் கொடுக்கிறீர்கள் என்பது தான் என் கேள்வி. பாலஸ்தீனாவிற்கு அடுத்தபடியாக, இதர இஸ்லாமிய நாடுகள் அவருக்காக துக்கப்பட்டார்கள் அவ்வளவு தான். ஒட்டு மொத்த உலகமே அரஃபாத்துக்காக துக்கப்பட்டது என்று நீங்கள் சொல்வதை, ஒருவேளை அரஃபாத் கேட்டிருந்தால், அவரே சிரித்திருந்திருப்பார் உங்களைப் பார்த்து கேலியாக.

ཬཙཬཙཬཙཬཙ

# 3) மூலநூல்களை பாராமல் பக்குவமாக புத்தகம் எழுதிய பாரா

## (2 - ஆப்ரஹாம் முதல்)

**மதிப்பிற்குரிய பாரா அவர்களுக்கு,**

உங்களுடைய 'நிலமெல்லாம் இரத்தம்' என்ற புத்தகத்தின் முதல் அத்தியாயத்தில் காணப்பட்ட தேவையில்லாத மிகைப்படுத்தல் பற்றி நான் என் கருத்தை **முந்தைய பதிவில்** எழுதியிருந்தேன். இப்போது அடுத்த அத்தியாயத்தைப் பற்றி என் கருத்தை முன்வைக்கிறேன்.

உங்களுடைய இரண்டாம் அத்தியாயத்தை படித்துக்கொண்டே இருந்த போது, 'இந்த மனுஷன் இப்படியும் எழுதுவாரா?' என்ற எண்ணம் மனதில் தோன்றியது.

**மூன்று மார்க்கங்களுக்கு சம்மந்தப்பட்ட விவரங்களை எழுதும் பொழுது:**

- மூல நூல்களில் உள்ளவற்றுக்கு எதிராக எழுதும் தைரியம் இவருக்கு எப்படி வந்தது?
- யாரை திருப்திப்படுத்த இப்படி எழுதுகிறார்?
- உண்மைகளை மறைத்து இவ்விதம் எழுதுவதினால் இவருக்கு என்ன லாபம்? போன்ற கேள்விகள் எழும்பின.

ஒரு வேளை நாம் எவைகளை மாற்றி எழுதினாலும் கிறிஸ்தவர்கள் கேள்வி கேட்கமாட்டார்கள் என்ற அசட்டு தைரியமா? அல்லது முஸ்லிம்களுக்கு ஆதரவாக எழுதுவதால், ஏதாவது பிரச்சனை வந்தால் முன்வரிசையில் நின்று முஸ்லிம்கள் பாதுகாப்பார்கள் என்ற நம்பிக்கையா? எது எப்படியோ, புத்தகம் வெளிவந்து 10 ஆண்டுகளுக்கு மேல் ஆகிவிட்டது. [அவரது அசட்டு தைரியத்திற்கு அங்கீகாரம் அளிக்கும் விதத்தில் தமிழ் கிறிஸ்தவர்களும் கடந்த 10 ஆண்டுகளாக ஒரு கேள்வியும் கேட்காமல் இருந்துவிட்டார்கள் என்று நினைக்கும் போது, கிறிஸ்தவர்களை கடிந்துக் கொள்ளவேண்டுமென்று தோன்றுகிறது. இப்படி நான் செய்வதற்கு முன்பாக, முதலாவது என் வீட்டு நிலைக்கண்ணாடி முன் நின்றுக்கொண்டு, என்னை நானே முதலாவது கடிந்துக்கொண்டு, அதன் பிறகு மற்றவர்களிடம் செல்லவேண்டும். என் கண்ணில் உத்திரம் இருக்க அடுத்தவன் கண்ணில் இருக்கும் துரும்பை பார்ப்பானேன்? என் கண்ணில் உள்ள உத்திரத்தை நீக்கும் முயற்சி தான் இது.]

**இப்போது பாரா அவர்களின் வரிகளை கவனிப்போம்:**

### 1) கால வரிசையை மாற்றியது ஏன்?

**பாரா அவர்கள் எழுதியது:**

> *// அந்தப் பெரியவருக்கு வயது எண்பத்தைந்து. நிறைவாழ்வு வாழ்ந்தவர் என்றுதான் சொல்லவேண்டும். ஆனால் ஒரு குறை இருந்தது. அவருக்குக் குழந்தை இல்லை. அவரது மனைவிக்கும் இது சம்பந்தமாக வருத்தம்தான். ஆனால் வருந்தி என்ன பயன்? அப்படித்தான் விதித்திருக்கிறது போலிருக்கிறது என்று பெரியவர் நினைத்தார்.*
>
> *ஆனால் அவர் மனைவிக்கு மட்டும் ஒரு யோசனை. ஒருவேளை பிரச்னை தன்னிடம்தான் இருக்குமோ? தன்பொருட்டுத் தன் கணவர் எதற்காக போகிற*

*காலத்தில் வருத்தத்துடன் போகவேண்டும்? தானே இன்னொரு திருமணம் செய்துவைத்துவிட்டால் என்ன என்று நினைத்தான்.*

*எண்பத்தைந்தெல்லாம் அப்போது ஒரு வயதே அல்ல. ஆகவே அவர் துணிந்து தன் வேலைக்காரியைத் தன் கணவருக்கு இரண்டாந்தாரமாகத் திருமணம் செய்துவைத்தார். சொல்லிவைத்த மாதிரி அந்தப் பெண் உடனே கர்ப்பம் தரித்துவிட்டாள். //*

**மேற்கண்ட வரிகளில் பாரா அவர்கள் சொல்லவருவது என்னவென்றால்,**

**ஆபிரகாமுக்கும் சாராளுக்கும் பிள்ளை இல்லாமல் இருந்ததால், வாரிசுக்காக 'சாராள்' சுயமாக சிந்தித்து, தன் அடிமைப்பெண்ணை ஆபிரகாமுக்கு மனைவியாக கொடுத்தாராம். அப்போது பிறந்த குழந்தை தான் இஸ்மவேல். பைபிள் சொல்வது இதைத்தானே, இதில் என்ன தவறு இருக்கிறது என்று சிலர் கேட்கலாம். இப்படி கேட்பவர்கள் முதலாவது, ஆதியாகமம் புத்தகத்தின் அத்தியாயங்கள் 15, 16 & 17ஐ படிக்கவேண்டும்.**

**இந்த மூல நூலில் சொல்லப்பட்டவைகளுக்கு மாற்றமாக எப்படி நாஜூக்காக பாரா அவர்கள் தில்லுமுல்லு செய்திருக்கிறார் என்பதை பார்ப்பதற்கு முன்பாக, அவரது இதர வரிகளையும் ஒரு முறை படித்துவிடுவோம், அப்போது தான் கிளைமாக்ஸ் புரியும்.**

**பாரா அவர்கள் எழுதியது:**

*// சந்தோஷம்தான். இந்த வயதில் இப்படியும் விதித்திருக்கிறதே என்கிற சந்தோஷம். ஆனாலும் தன் முதல் மனைவி மூலமாக ஒரு குழந்தை இல்லாத வருத்தமும் இருக்கவே செய்தது. பெரியவருக்கு இப்போது தொண்ணூற்றொன்பது வயது. அவரது மகனுக்கு பன்னிரண்டு வயது. முதல் மனைவிக்கு எண்பத்தொன்பது வயது. இரண்டாவது மனைவியின் வயது அப்போது என்ன என்று சரியாகத் தெரியவில்லை. இத்தனை தள்ளாத காலத்தில் அவரது கனவிலோ, நினைவிலோ ஒருநாள் கடவுள் வந்து பேசினார்.*

*இதோ பார். உனக்கு இன்னொரு குழந்தை பிறக்கப்போவது உறுதி. அதுவும் இத்தனை நாளாகக் குழந்தை இல்லாத வருத்தத்தை மட்டுமே கருவாகச் சுமந்துகொண்டிருந்த உன் முதல் மனைவி மூலம் அது நடக்கப்போகிறது என்று ஒரு குரல் கேட்டது.*

*பெரியவரால் இதை நம்ப முடியவில்லை. இதென்ன கூத்து? நானோ தொண்ணூற்றொன்பது வயதுக்கிழவன். என் மனைவிக்கு என்னைவிடப் பத்து வயதுதான் குறைவு. இந்த வயதில் இன்னொரு குழந்தை எப்படி சாத்தியம் என்று அவநம்பிக்கையாகக் கேட்டார்.*

*அதுசரி. கடவுள் தீர்மானித்துவிட்டால் வயது ஒரு பிரச்னையா என்ன?*

*சீக்கிரமே அவரது முதல் மனைவி கருவுற்றாள். அடுத்த வருடம் குழந்தையும் பிறந்துவிட்டது. அவருக்கு அப்போது நூறு வயது. //*

**இப்போது பாரா அவர்கள் செய்த தவறு என்னவென்பதை சுருக்கமாக பார்ப்போம்.**

**பைபிளில் கொடுக்கப்பட்ட கால வரிசையின் படி:**

**1)** ஆபிரகாம் தனக்கு பிள்ளையில்லை என்று முதலாவது வேண்டுதல் செய்கிறார் **(**ஆதியாகமம் **15:1-3)**

**2)** இந்த வேண்டுதலுக்கு தேவன் 'உன் கர்ப்பப்பிறப்பாயிருப்பவனே, உனக்கு சுதந்திரவாளி' என்று பதில் அளிக்கிறார். அதாவது உனக்கு பிறக்கும் பிள்ளையே உன் சொத்துக்களுக்கு சொந்தக்காரனாக இருப்பான் என்று தேவன் சொன்னார். **(**ஆதியாகமம் **15:4).** இந்த நேரத்தில் ஆபிரகாமுடைய மனைவியாக இருப்பது சாராள் ஆவார்கள்.

**3)** மேலும் உன் சந்ததி வானத்தின் நட்சத்திரங்களைப் போல அதிகமாக இருப்பார்கள் என்றும் சொல்கிறார், இதை ஆபிரகாம் நம்புகிறார் (பார்க்க ஆதியாகமம் **15:5,6).** பிள்ளை பற்றிய வாக்கை தேவன் ஆபிரகாமுக்கு கொடுத்த போது, ஆபிரகாமும் சாராளும் கணவன் மனைவியாக இருந்தார்கள். ஆகார் என்பவர் சாராளின் ஒரு அடிமைப்பெண்ணாக இருந்தார்களே தவிர, ஆபிரகாமின் மறுமனையாட்டியாக அப்போது இல்லை.

**4)** அடுத்ததாக, பிள்ளைக்கான வாக்கை பெற்றுவிட்ட பிறகும், தேவன் பிள்ளையை கொடுக்கும் வரை காத்திராமல், சாராள் அவசரப்பட்டு தன் அடிமைப்பெண்ணை ஆபிரகாமுக்கு மறுமனையாட்டியாக கொடுக்கிறார்.

**5)** ஆகாருக்கு ஒரு மகன் பிறந்த பிறகு, **13** ஆண்டுகள் கழித்து மறுபடியும் தேவன் தன் முந்தையை வாக்கை நிறைவேற்றும் காலம் சமீபம் என்பதைச் சொல்ல ஆபிரகாமிடம் மறுபடியும் வந்து பேசுகிறார். இந்த சந்திப்பு பிள்ளை பற்றி சொல்லப்பட்ட இரண்டாவது சந்திப்பு.

இதைப் பற்றி எழுதும் போது, பாரா அவர்கள் எப்படிப்பட்ட வார்த்தைகளை பயன்படுத்தி, விஷயத்தை திசை திருப்பியிருக்கிறார் என்பதை கவனியுங்கள்:

**பாரா அவர்கள் எழுதியது:**

> *// இத்தனை தள்ளாத காலத்தில் அவரது கனவிலோ, நினைவிலோ ஒருநாள் கடவுள் வந்து பேசினார்.*
>
> *இதோ பார். உனக்கு இன்னொரு குழந்தை பிறக்கப்போவது உறுதி. அதுவும் இத்தனை நாளாகக் குழந்தை இல்லாத வருத்தத்தை மட்டுமே கருவாகச் சுமந்துகொண்டிருந்த உன் முதல் மனைவி மூலம் அது நடக்கப்போகிறது என்று ஒரு குரல் கேட்டது. //*

கவனிக்கவும், **13** ஆண்டுகளுக்கு முன்பு, முதல் முறை சாராளுக்கும் உனக்கும் பிள்ளை பிறக்கும் என்றுச் தேவன் சொன்னதை அப்படியே மறைத்து ஏப்பம் விட்டு இருக்கிறார் பாரா அவர்கள்.

"இதோ பார். உனக்கு இன்னொரு குழந்தை பிறக்கப்போவது உறுதி" என்று எழுதுவதிலிருந்து, "முதல் குழந்தை பிறந்தது கூட என் வாக்கினால் தான் என்று தேவன் சொன்னதாக" பாராவின் புத்தகத்தை படிப்பவர்கள் புரிந்துக் கொள்ளவேண்டுமென்று பாரா மனப்பால் குடித்துவிட்டார்.

"இப்போது கொடுக்கப்போகும் பிள்ளை உன் முதல் மனைவிக்கு பிறக்கும் என்று" தேவன் சொன்னதாக எழுதுகிறார். ஆனால், **13** ஆண்டுகளுக்கு முன்பாக பிள்ளைப் பற்றிய வாக்கும், வானத்து நட்சத்திரங்கள் போல ஆபிரகாமின் சந்ததி இருக்கும் என்று சொன்ன வாக்கும்,

ஆரகாமின் முதல் மனைவி சாராள் இருக்கும் போது சொன்னது தான். இவைகளை வாசகர்கள் புரிந்துக் கொள்ளக்கூடாது என்பதற்காக நாஜூக்காக மாற்றி சொல்லியுள்ளார்.

பாராவின் இன்னொரு தைரியம் என்னவென்றால், அவர் எழுதிக்கொண்டு இருந்த தொடர் குமுதம் ரிப்போர்ட்டர் என்ற பத்திரிக்கையாகும். எத்தனை கிறிஸ்தவர்கள் இப்பத்திரிக்கையை படிக்கிறார்கள்? அப்படி படித்தாலும், பழைய ஏற்பாட்டில் வரும் ஆபிரகாமின் சாராளின் நிகழ்ச்சிப் பற்றி யார் அக்கரை கொள்வார்கள்? ஒரு வேளை சில கிறிஸ்தவர்கள் அக்கரை காட்டினாலும், இவரிடம் கேள்வி கேட்க யாரிடம் நேரமிருக்கிறது? ஒரு வேளை சில கிறிஸ்தவர்களிடம் நேரம் இருந்தாலும், இவர்கள் கத்தியை எடுத்தா கேள்வி கேட்கப்போகிறார்கள்? என்ற நம்பிக்கையில் பாரா அவர்கள் பழைய ஏற்பாட்டு நிகழ்ச்சிகளில் தன் விருப்பப்படி விளையாடி இருக்கிறார்.

கடந்த 10 ஆண்டுகளாக முஸ்லிம்களின் வரிகளை படித்துக்கொண்டு இருக்கும் என்னைக் கேட்டால், ஒரு முஸ்லிம் எப்படி தில்லுமுல்லு செய்து உண்மையை தன் புத்தகங்களில் மறைப்பாரோ, அதை விட மென்மையாக விளையாடியுள்ளார். இவர் யாரிடமிருந்து கற்றாரோ தெரியவில்லை, அவ்வளவு திறமையாக எழுதியுள்ளார் (அல்லாஹ் நோஸ் த பெஸ்ட்). ஒரு வேளை முஸ்லிம்களை திருப்திபடுத்தவேண்டுமென்பதற்காக இப்படி எழுதினாரா?

'ஆபிரகாம், சாராள் மற்றும் ஆகார்' கதையை இவர் இஸ்லாமிய வேதமாகிய குர்-ஆனிலிருந்து படித்திருக்கலாம் அல்லவா என்று என்னிடம் சிலர் கேட்கலாம். இதற்கு சாத்தியமில்லை, ஏனென்றால், இவர் மேலே எழுதிய நிகழ்ச்சி முழுவதுமாக பைபிளில் உள்ளது தான், குர்-ஆனுக்கு இப்படியெல்லாம் நிகழ்ச்சிகளை கோர்வையாக சொல்லும் வழக்கமில்லை என்பதை அறியவும், அரைகுறையான விவரங்கள் மட்டும் தான் குர்-ஆனில் காணமுடியும். பைபிளிலிருந்து விவரங்களை எடுத்து, வேண்டுமென்ற திருத்தி எழுதியிருக்கிறார். இந்த தவறை பாரா அவர்கள் தெரிந்தேசெய்துள்ளார்.

இன்னும் ஒரு விஷயத்தை சொல்லிவிட்டு, இக்கட்டுரையை இப்போதைக்கு முடிக்கிறேன்.

**அடுத்தபடியாக, பாரா அவர்கள் இப்படி எழுதுகிறார்:**

> *// அதுவரைக்கும், தன் கணவன் வாரிசில்லாமல் போய்விடக்கூடாதே என்று மட்டுமே நினைத்து வந்த அந்தப் பெண்மணிக்கு, தன் வேலைக்காரி கர்ப்பமானது தெரிந்தது முதல், துக்கமும் பொறாமையும் பொங்கியெழ ஆரம்பித்துவிட்டது. அவளைப் பற்றி அடிக்கடி தன் கணவரிடம் குறை கூற ஆரம்பித்தாள். //*

பாரா அவர்கள் உருப்படியாக, பைபிளின் மூன்று அத்தியாயங்களை சுயநினைவோடு படித்தாரா என்ற சந்தேகம் வருகிறது? அல்லது நீண்ட டீவி தொடர் எழுதுவது போல, மனதில் தோன்றியதை எழுதினாரா?

ஆதியாகமம் 16:4ம் வசனம் தெளிவாகச் சொல்கிறது, ஆகார் தான் தாயாக போகிறேன் என்று அறிந்த போது, தனக்கு வாழ்வு கொடுத்த எஜமாட்டியையே அற்பமாக எண்ணினாள்.

**அவன் ஆகாரோடே சேர்ந்தபோது, அவள் கர்ப்பந்தரித்தாள்; அவள் தான் கர்ப்பவதியானதைக் கண்டபோது, தன் நாச்சியாரை அற்பமாக எண்ணினாள். (ஆதியாகமம் 16:4)**

ஆனால், பாரா அவர்கள் என்ன எழுதினார்கள்? "தன் வேலைக்காரி கர்ப்பமானது தெரிந்தது முதல், துக்கமும் பொறாமையும் பொங்கியெழ ஆரம்பித்துவிட்டது. அவளைப் பற்றி அடிக்கடி தன் கணவரிடம் குறை கூற ஆரம்பித்தாள்.".

அண்ணே பாரா அவர்களே, ஆதியாயகமம் 16ம் அத்தியாயத்தை படித்தீர்களா? எபிரேய மொழியில் படித்தீர்களா? அல்லது அரபி மொழியில் படித்தீர்களா? என்று நான் கேட்கவில்லை, தமிழில் படித்தீர்களா? என்று தான் கேட்கிறேன். 16ம் அத்தியாயத்தின் 15ம் வசனத்தை படித்த நீர் ஏன் 14ம் வசனத்தை படிக்கவில்லை? ஒருவேளை 14 என்பது உங்களுக்கு பிடிக்காத எண்ணாக இருக்குமோ?

உருப்படியாக ஒரு வசனத்தை படித்து புரிந்துக்கொண்டு, அது சொன்னது போலவே எழுதத்தெரியாதவர்கள் ஏன் புத்தகம் எழுத வரவேண்டும்?

நடுநிலையோடு எழுதுபவர் எப்படி எழுதவேண்டும்? எப்படி ஆய்வு செய்யவேண்டும்? மூல நூல்களில் சொல்லப்பட்டவைகளை அப்படியே எழுதிவிட்டு, உங்கள் விமர்சனங்களை ஆதாரங்களோடு வைக்கவேண்டும். இப்படி செய்யத்தெரியாதவர்கள் ஏன் மற்ற மார்க்கங்களின் விஷயங்களில் மூக்கை நுழைத்துவிட்டு, அறுபட்டுப்போகவேண்டும்? நடுநிலையோடு எழுதமுடியவில்லையென்றால், பேனாவை கீழே வைத்துவிட்டு, வேறு வேலையை செய்யலாமே. நேர்மையாக பணம் சம்பாதிக்க அனேக வேலைகள் உலகில் உண்டு, முடிந்தால் சௌதி அரேபியாவிற்குச் சென்று ஏதாவது வேலையைத் தேடிக்கொள்ளலாமே!

கதை சுவாரசியமாக இருக்கும் என்பதற்காக இப்படி மாற்றி மறைத்து எழுதினேன் என்றுச் சொல்லாதீர்கள். கிறிஸ்தவ வேதத்தின் விவரங்களை மாற்றி எழுதுவது போல, இஸ்லாமிய விவரங்களை திருத்தி நிலமெல்லாம் இரத்தம் என்ற புத்தகத்தை நீங்கள் எழுதியிருந்தால், பல ஆண்டுகளுக்கு முன்பே, உங்கள் வீடெல்லாம் இரத்தமாக மாறியிருந்திருக்கும்.

இதோடு நான் என் விமர்சனத்தை முடித்துக் கொள்கிறேன்.

அடுத்த பாகத்தில் இன்னும் இரத்தம் கசியும் . . .

ജ്ഞ ജ്ഞ ജ്ഞ ജ്ഞ

## 4) அரேபியர்களின் தந்தை இஸ்மாயீல் அல்ல

### (அத்தியாயம் 2: ஆப்ரஹாம் முதல்)

**மதிப்பிற்குரிய பாரா அவர்களே,**

உங்களுடைய ‘நிலமெல்லாம் இரத்தம்’ புத்தகத்திற்கு இதுவரை இரண்டு விமர்சன கட்டுரைகள் எழுதப்பட்டுள்ளது. இரண்டாம் அத்தியாயத்தில் நீங்கள் எழுதிய இதர விவரங்களில் உள்ள உண்மையை இப்போது ஆய்வு செய்வோம்.

**1. தவளை தன் வாயால் கெடும்:**

**பாரா அவர்கள் எழுதியது:**

> *// இரண்டு மனைவிகள். இரண்டு ஆண் குழந்தைகள். இதற்கு மேல் என்ன? நிம்மதியாகக் கடவுளுக்கு நன்றி சொல்லிக் கொண்டு, அந்தக் குடும்பம் ஒரே வீட்டிலேயே தழைத்திருந்திருக்கலாம். ஆனால் சக்களத்திப் பிரச்னை இப்போது முன்னைக்காட்டிலும் தீவிரமடைந்துவிட்டது. இது அவரை வருத்தியது. //*

நீங்கள் பைபிளில் படித்தது ஒன்று, இங்கு எழுதியது இன்னொன்று. சக்களத்திப் பிரச்னை என்ற இரு வார்த்தைகளால் ஒரு முக்கியமான விவரத்தை மறைத்துள்ளீர்கள்.

> பிள்ளை வளர்ந்து, பால் மறந்தது; ஈசாக்கு பால் மறந்தநாளிலே ஆபிரகாம் பெரிய விருந்துபண்ணினான். பின்பு எகிப்து தேசத்தாளாகிய ஆகார் ஆபிரகாமுக்குப் பெற்ற குமாரன் பரியாசம்பண்ணுகிறதைச் சாராள் கண்டு, **(ஆதியாகமம் 21:8-9)**

மேற்கண்ட வசனத்தின் படி, இஸ்மாயீல் தன் தம்பியை பரியாசம் செய்தபடியினால், சாராள் ஆபிரகாமிடம் புகார் செய்து, ஆகாரை அனுப்பிவிடும் படி கேட்கிறார்கள். முதல் முறை ஆகார் சாராளை அற்பமாக எண்ணினார், இதனால் சாராள் கடினமாக ஆகாரை நடத்தினார். இரண்டாம் முறை இஸ்மாயீல் ஈசாக்கை பரியாசம் செய்தார், இதனால் வீட்டைவிட்டு போகவேண்டிய நிர்பந்தம் அவர் மீது வந்தது. தவளை தன் வாயால் கெடும் என்பார்கள், அது போலத் தான் ஆகாரின் கதையும். வாயை வைத்துக்கொண்டு சும்மா இருந்திருந்தால், எல்லாமே நலமாக நடந்திருக்கும். வேண்டாத விஷயத்தில்! மூக்கை நுழைத்தால், எல்லோருக்கும் இப்படித்தான் நடக்கும். ஆகார் வீட்டைவிட்டு வெளியேற்றப்பட்டதற்கு காரணம், ஆகாரும் இஸ்மாயீலும் தான். ஆனால், நீங்கள் சக்களத்திச் சண்டை என்ற போர்வையில் அதனை மூடிவிட்டீர்கள்.

**2) உண்மையான வாரிசு & வாக்குத்தத்த வாரிசு:**

**பாரா அவர்கள் எழுதியது:**

> *// ரொம்ப நாள் இச்சிக்கலை இழுத்துக்கொண்டே போகமுடியாது என்று முடிவு செய்தவர், தமது இரண்டாவது மனைவியை ஒருநாள் அழைத்துப் பேசினார். குடும்ப அமைதியின் பொருட்டு அவள் அந்த வீட்டைவிட்டு வெளியேறிவிடவேண்டும் என்றும் சொன்னார். என்னதான் அவள், அவருக்கு முதல் முதலில் வாரிசு என்று ஒன்றை உருவாக்கி அளித்தவள் என்றாலும், பெரியவரால் தன் மூத்த மனைவிக்குப் பிறந்த குழந்தையைத்தான் உண்மையான வாரிசாக எண்ண முடிந்தது. //*

ஈசாக்கு உண்மையான வாரிசு என்றுச் சொல்வதைவிட, வாக்குத்தத்த வாரிசு என்றுச் சொல்வது தான் சரியாக பொருந்தும். இஸ்ரேல் பாலஸ்தீனா பிரச்சனையின் மையப்புள்ளி மட்டுமல்ல, எல்லா புள்ளிகளும், தேவன் வாக்குகொடுத்த ஆபிரகாமின் வாரிசு யார் என்பதில் தான் உள்ளது.

இறைவன் வாக்கு கொடுத்தால், நிச்சயம் செய்வார் என்பதை நம்பி சாராள் காத்திருந்திருக்கவேண்டும். இறைவனுக்கு உதவி செய்ய நாமே வலியச் சென்று முயலக்கூடாது. இந்த பார்முலாவை அறியாதபடியினால் தான் சாராள் தன் அடிமைப்பெண்ணை தன் கணவனின் மடியில் கொடுத்தார், இதனால் தன் மடியில் நெருப்பை அள்ளிப் போட்டுக்கொண்டார். வேலைக்காரிக்கு பண உதவி மற்றும் இதர உதவிகள் அனைத்தும் செய்யலாம், ஆனால் எஜமானனின் மஞ்சத்திற்கு அனுப்பக்கூடாது. இதனை புரிந்துக்கொள்ளாதபடியினால் தான் சாராளுக்கு பிரச்சனை வந்தது.

பாரா அவர்களே, ''பெரியவரால் தன் மூத்த மனைவிக்குப் பிறந்த குழந்தையைத் தான் உண்மையான வாரிசாக எண்ண முடிந்தது'' என்று நீங்கள் எழுதிய வரியில் கொஞ்சமும் உண்மை இல்லை. இங்கு பிரச்சனை ஆபிகராம் அல்ல. ஒரு வேளை ஆகாரும், இஸ்மாயீலும் தான் பிரச்சனையாக இருந்தார்களா என்று கேட்டால், அதுவும் இல்லை. இங்கு பிரச்சனை தேவனுடைய வாக்குத்தத்தம் ஆகும். நான் உன்னை ஆசீர்வதித்து, உன் சந்ததிக்கு இந்த மண்ணை கொடுப்பேன் என்று தேவன் வாக்கு கொடுத்தார். சாராளுக்கும் ஆபிரகாமுக்கும் பிறக்கும் பிள்ளையோடு நான் உடன்படிக்கை செய்து, என் வாக்கை நிறைவேற்றுவேன் என்று தேவன் சொன்னார். அவருடைய நேரத்திற்காக காத்திருக்க முடியாத சாராள் மற்றும் ஆபிரகாம், ஆகாரையும் இஸ்மாயீலையும் திரைக்கதையில் நடிக்க வாய்ப்பு கொடுத்துவிட்டார்கள். ஆனால், சரியான நேரத்தில் தேவன் ஈசாக்கை நடிக்க அனுப்பிவிட்டார்.

பாரா அவர்களே! இந்த விவரங்களை நீங்கள் படித்திருந்தும், அதனைமாற்றி எழுதியுள்ளீர்கள். ஆகாரையும், இஸ்மாயீலையும் வீட்டைவிட்டு அனுப்பவில்லை, ஆபிரகாமை விட்டு அனுப்பவில்லை, சாராளை விட்டு அனுப்பவில்லை, வீட்டில் அமைதி வரும் என்பதால் அனுப்பவில்லை. அவர்களை 'ஈசாக்கை' விட்டு அனுப்பினார்கள். இதனை சாராளோ, ஆபிரகாமோ செய்யவில்லை, இதற்கு முழுவதுமாக பொறுப்பு வகித்தவர் ''தேவன்''.

இஸ்மாயீல் ஈசாக்கை பரியாசம் செய்தபடியினால் தான் வீட்டைவிட்டு அனுப்பப்பட்டார் என்பது திரைக்கதையில் நாம் காணும் விவரங்களாகும். ஆனால், திரைக்கு பின்னால் தேவன் தன் திட்டத்தை நிறைவேற்றும்படி சரியான காலத்துக்காக காத்திருந்தார். ஒரு குறிப்பிட்ட காலம் வரும் போது, ஆகார் மற்றும் இஸ்மாயீல் மூலமாக எந்த பிரச்சனையும் உருவாகாமல் இருந்திருந்தாலும், ஆபிரகாம் இஸ்மாயீலை தனியே அனுப்பிவிடும்படி தேவன் கட்டளை கொடுத்திருப்பார். ஏனென்றால், ஈசாக்கு தனியாக வாழவேண்டும் அவனுடைய சந்ததி மற்ற சந்ததிகளோடு கலக்கக்கூடாது. இது தேவனுடைய திட்டம். சில ஆண்டுகளுக்கு பிறகு நடக்கவேண்டிய ஒரு விஷயம், இஸ்மாயீல் ஈசாக்கை பரிகாசம் செய்தபடியினால், சீக்கிரமாக நடந்துவிட்டது, அவ்வளவு தான்.

ஆகாரையும் இஸ்மாயீலையும் வீட்டைவிட்டு அனுப்பிவிட்டார்கள் என்றுச்சொன்னால், "அவர்களை ஆபிரகாம் நாடு கடத்திவிட்டார்" என்று அர்த்தமல்ல. இஸ்மாயீலையும் நான் ஆசீர்வதிப்பேன் என்று தேவன் சொன்னதால், அதை நம்பி ஆபிரகாம் தனியாக வாழும் படி அனுப்பினார். வேறுவகையில் சொல்வதென்றால், கூட்டுக்குடும்பம்

**தனிக்குடும்பமானது. ஈசாக்கும் இஸ்மாயீலும் ஒரே வீட்டில் அல்லது ஒரு இடத்தில் வாழாமல், தனித்தனியே வாழ்ந்தார்கள், அவ்வளவு தான். ஆபிரகாம் மரித்த போது, இவ்விருவரும் சேர்ந்துதான் அவரை அடக்கம் செய்தார்கள்.**

**ஆபிரகாம், தனக்கு இருந்த இன்னொரு மனைவியின் பிள்ளைகள் குறிப்பிட்ட வயதை அடைந்தவுடன், அவர்களுக்கு தேவையான சொத்துக்களை கொடுத்து ஈசாக்கை விட்டு தூரம் அனுப்பிவிட்டார். ஆக, தேவனுடைய நாடகத்தில் இவர்கள் எல்லோருமே நடிகர்கள் தான். சிலர் செய்யும் தவறுகளால், நாடகத்தின் சில நிகழ்ச்சிகளை தேவன் முன்னமே நடக்கும் படி செய்துவிடுகிறார். ஆனால், திரைக்கதையில் அவர் திட்டமிட்டது தான் கிளைமாக்ஸில் நடக்கும்.**

**இவைகளையெல்லாம் எனக்கு ஏன் சொல்கிறாய் என்று பாரா கேட்கலாம்! முஸ்லிம்களுக்கு இவைகளை விவரிப்பதை விட, அரைகுறையாக மார்க்க விஷயங்களை எழுதும் உங்களைப் போன்றவர்களுக்குத் தான் முதலாவது இவைகளை சொல்லவேண்டும். அடுத்தமுறை இப்படிப்பட்ட விஷயங்களை எழுதும் போது நடுநிலையோடு எழுதுவீர்கள் என்பதால், இவைகள் பற்றி அழுத்தமாக சொல்லவேண்டி வருகிறது.**

**பாரா அவர்கள் எழுதியது:**

> *// மறுபேச்சில்லாமல் அந்தப் பெண், தனக்குப் பிறந்த மகனை அழைத்துக்கொண்டு அந்த வீட்டைவிட்டு வெளியேறிவிட்டாள்.*
>
> *அந்தப் பெரியவர் இன்னும் எழுபத்தைந்து வயதுகாலம் வாழ்ந்தார். தம் முதல் மனைவி இறந்த பிறகு வேறொரு பெண்ணையும் திருமணம் செய்துகொண்டார். அவள் பெயர் கேதுரா (Keturah) அவளுக்கு ஆறு குழந்தைகள் பிறந்தன.*
>
> *கதையென்று நினைத்தால் கதை. வாழ்க்கை என்று நினைத்தால் வாழ்க்கை. ஆனால் இஸ்ரேலிய யூதர்களுக்கும் பாலஸ்தீனிய அரேபியர்களுக்குமான பிரச்னையின் மூலவித்து மேற்சொன்ன பெரியவரிடமிருந்துதான் தொடங்குகிறது. //*

**"வீட்டை விட்டு வெளியேற்றப்பட்ட ஆகாரை சந்தித்து, தேவன் என்ன சொன்னார்?" என்பதைப் பற்றி ஏதாவது ஒரு வரி நீங்கள் எழுதியிருக்கலாம். ஆனால், முஸ்லிம்களுக்கு சாதகமாக எழுதவேண்டும் என்பது தான் உங்கள் எண்ணமாக இருந்ததால், ஆகாரையும் இஸ்மாயீலையும் அம்போ என்று நடுத்தெருவில் விட்டுவிட்டார்களே! என்று வாசகர்கள் நினைக்கவேண்டும் என்பதால் இப்படி எழுதியிருக்கிறீர்கள்.**

**பாரா அவர்கள் எழுதியது:**

> *// அவர் பெயர் ஆபிரஹாம் (Abraham). அவருடைய முதல் மனைவியின் பெயர் சாரா. சாராவிடம் வேலைக்காரியாக (அடிமையாக) இருந்த பெண் ஆகார் Hagar) அவள் எகிப்து தேசத்தைச் சேர்ந்தவள். அவளுக்குப் பிறந்த குழந்தையின் பெயர் இஸ்மயீல் (Ishmael). சாராளுக்குப் பிறந்த குழந்தையின் பெயர் ஈஸாக் (Issacc).*
>
> *ஆபிரஹாமால் வீட்டைவிட்டு அனுப்பப்பட்ட ஆகாரின் மகனான இஸ்மயீலின் வம்சத்தவர்கள்தான் அரேபியர்கள். சாராவுக்குப் பிறந்த ஈஸாக்கின் வழிவந்தவர்கள் யூதர்கள். (இந்த வகையில் யூதர்களைக் காட்டிலும் அரேபியர்கள் பன்னிரண்டு வயது மூத்தவர்கள் என்றாகிறது.)*

*ஈஸாக் பிறந்ததை முன்னிட்டுத்தான் இஸ்மயீல் வீட்டைவிட்டு விரட்டப்பட்டான். இது நான்காயிரம் வருடங்களுக்கு முன்னர் நடந்ததாக யூதர்களின் வேதமான 'தோரா' (Torah) சொல்கிறது. //*

**இஸ்மாயீல் தான் அரேபியர்களின் பிதா என்பதற்கு என்ன ஆதாரம்?**

ஈஸாக்கின் வழிவந்தவர்கள் யூதர்கள், இதில் சந்தேகமில்லை. அரேபியர்கள் இஸ்மாயீலின் வம்சத்தார்கள் என்று நீங்கள் எழுதியிருக்கிறீர்கள். இது உண்மையா? இஸ்மாயீலின் வழியில் வந்தவர்கள் தான் அரேபியர்கள் என்று முஸ்லிம்கள் நம்புகிறார்கள், இன்னும் சில கிறிஸ்தவர்களும் பொதுவாக இப்படித்தான் நம்புகிறார்கள். ஆனால், இதில் உண்மையில்லை. முஸ்லிம்களின் புத்தகங்களை படித்துவிட்டு, இப்படி சரித்திரத்தில் இல்லாத ஒன்றை பாரா அவர்கள் கூறியிருக்கிறார்கள். இதர மக்களின் மத நம்பிக்கைகள் பற்றி புத்தகங்கள் எழுதும் போது, ஆய்வு செய்து, எச்சரிக்கையாக எழுதவேண்டும் என்பதை பாரா அவர்களுக்குச் சொல்லிக் கொள்கிறேன்.

யூதர்கள் தங்கள் முற்பிதாக்களின் வம்சாவழி பட்டியலை பாதுகாத்தார்கள். அது போல, இஸ்மாயீலின் வழியில் வந்தவர்கள் பாதுகாத்தார்களா? பாரா அவர்களுக்கு "அரேபியர்கள் இஸ்மாயீல் வம்சத்தில் வந்தவர்கள் என்ற" விவரம் எங்கேயிருந்து கிடைத்தது? முஸ்லிம்கள் சொல்வதை ஆய்வு செய்யாமல் அப்படியே எழுதியிருக்கிறார் இவர்.

இஸ்மாயீலின் வம்சாவழியில் வந்தவர்களின் பட்டியல் குர்-ஆனில் காணமுடியுமா? நிச்சயமாக முடியாது. இஸ்மாயீல் பற்றிய குறைந்தபட்ச விவரங்களுக்கும், முஸ்லிம்கள் பைபிளையே நம்பி இருக்கவேண்டியுள்ளது.

**இஸ்மாயீல் அரேபியர்களின் பிதா இல்லை என்பதற்கான ஆதாரம்?**

பெரும்பான்மையான கிறிஸ்தவர்கள் கூட அரேபியர்களின் பிதா இஸ்மாயீல் என்று தவறாக நினைத்துக்கொண்டு இருக்கிறார்கள். இது ஒரு பொதுவான கருத்து, ஆனால் உண்மையில்லை. பெரும்பான்மையான மக்கள் உண்மை என்று நினைப்பதெல்லாம், உண்மையாக இருக்கவேண்டும் என்ற கட்டாயமில்லை.

இஸ்மாயீல் அரேபியர்களின் பிதா இல்லை என்பதை விளக்கும் சில ஆய்வுக் கட்டுரைகளை கீழே தருகிறேன் (ஆங்கில கட்டுரைகள்). பாரா அவர்கள் இவைகளை படிப்பார் என்று நம்புகிறேன்.

1. **Ishmael is not the Father of Muhammad**
2. **Are the Arabs Descendants of Ishmael?**
3. **'Ishmael Is Not the Father Of Muhammad' Revisited**
4. **1. AI Index page — Ishmael**
5. **Encyclopedia of Islam Myths: Arabs are not descendants of Ishmael!**
6. **Is the Arab nation descended from Ishmael?**

தமிழ் வாசகர்களுக்கு வசதியாக இருக்கும் என்பதற்காக, 'ஏன் இஸ்மாயீல் அரேபியர்களின் பிதா இல்லை' என்பதைப் பற்றிய ஒரு சுருக்கத்தை இங்கு தருகிறேன்.

1.இஸ்மாயீலின் 12 குமாரர்களின் பெயர்கள் ஆதியாகமம் 25:12-16ல் கொடுக்கப்பட்டுள்ளது. அவர்கள் வட அரேபியா பகுதியில் இதர நாடோடி (nomad) மக்களோடு கலந்துவிட்டார்கள்.

**2.** இஸ்மாயீலும் அவரது சந்ததிகளும் ஆவிலா துவக்கி எகிப்துக்கு எதிராக அசீரியாவுக்குப் போகிற வழியிலிருக்கும் சூர்மட்டும் வாசம்பண்ணினார்கள். (பார்க்க ஆதியாகமம் **16:12 & 25:18).** எகிப்துக்கு கிழக்கு பகுதியில் அசீரியாவிற்கு போகும் வழியில் இருக்கும் பெரிய பகுதியில் வாழ்ந்தார்கள்.

**3.** ஆதியாகமம் **37:25-28;39:1**ல் இஸ்மவேலர்கள் "மீதியானியர்கள்" என்று அழைக்கப்பட்டார்கள். நியாயாதிபதிகள் **8:22-24; 71:1**ல் மீதியானியர்கள் "இஸ்மவேலர்கள்" என்று அழைக்கப்பட்டுள்ளார்கள். ஆக, இவர்கள் மீதியானியர்களோடு ஒன்றர கலந்துவிட்டிருந்தார்கள்.

**4.** ஆபிரகாம் மற்றும் இஸ்மாயீல் பிறப்பதற்கு முன்பிலிருந்தே அரேபியா தீபகர்ப்பத்தில் மக்கள் நாடோடிகளாக **(nomed)** வாழ்ந்துள்ளார்கள்.

**5.** இஸ்லாம் சொல்வது போல, அரேபியர்கள் எல்லோரும் இஸ்மாயீலின் சந்ததியிலிருந்து வந்தவர்கள் என்று கருதினால், ஆபிரகாமுக்கு முன்பிலிருந்தே அரேபியாவில் வாழ்ந்த மக்கள் என்னவானார்கள்? இஸ்மாயீலுக்கு முன்பாக வாழ்ந்த அரேபியர்கள் எங்கே போனார்கள்?

**6.** அரேபியர்கள் இஸ்மாயீலுக்கு பிறப்பிற்கு முன்பாகவே இருந்துள்ளார்கள் என்பது தான் உண்மையாகும். இஸ்மாயீல் வம்சத்தார்கள் வட அரேபியாவில் வாழ்ந்தார்கள், கொஞ்சம் கொஞ்சமாக ஏற்கனவே வாழ்ந்துக்கொண்டு இருந்த அரேபியர்களோடும், இதர மக்களோடும் ஒன்றர கலந்துவிட்டார்கள்.

**7.** சரித்திர மற்றும் தொல்பொருள் ஆய்வுகளின்படி, அரேபியாவின் தென் பகுதியில் உள்ள மக்காவிற்கு இஸ்மாயீல் சென்றதாக எந்த ஒரு தடயமும் இல்லை. அவர் அரேபியர்களின் தந்தையாக இருந்தார் என்பதும் பொய்யான தகவலாகும். முக்கியமாக, தற்கால அரேபிய சரித்திர தொல்பொருள் நிபுனர்களின் படி, முஹம்மதுவிற்கு முன்பு வரை, அரேபிய மக்களின் பிதாவாக "கஹ்தன்" என்பவர் கருதப்பட்டார் இஸ்மாயீல் அல்ல.

**இஸ்லாமிய நூல்களிலிருந்து சில ஆதாரங்கள்:**

மேலே சொன்ன ஆதாரங்கள், பைபிள் மற்றும் பைபிளுக்கு வெளியேயிருந்து எடுக்கப்பட்டவைகளாகும். இப்போது இஸ்மாயீல் அரேபியர்களின் பிதா அல்ல என்பதை நிருபிக்க இஸ்லாமிய ஆதாரங்களின் சுருக்கத்தைக் காண்போம்.

**1.** இஸ்மாயீல் மற்றும் ஆகார் அவர்களை மக்காவையில் விட்டுவந்தாராம் ஆபிரகாம் (இஸ்லாமுக்கு வெளியே இதற்கு எந்த ஒரு சரித்திர ஆதாரமுமில்லை).

**2.** குர்ஆனுக்கு அடுத்தபடியாக அல்லாஹ்வின் வஹியாக முஸ்லிம்களால் பிரதானமாக கருதப்படும் புகாரி ஹதீஸின் படி (முஹம்மதுவின் படி), மக்காவில் இஸ்மாயீல் இதர மக்களிடமிருந்து அரபி மொழியை கற்றுக்கொண்டாராம். இந்த விவரம் முஹம்மதுவிற்கு எப்படித் தெரியும்? என்று கேட்டால், அல்லாஹ் தான் இவருக்கு சொல்லியிருக்கிறார். இப்படித் தான் முஸ்லிம்கள் நம்புகிறார்கள். ஆக, அல்லாஹ்வின் படி, இஸ்மாயீல் அரபி மொழியை ஏற்கனவே அரேபியாவில் வாழ்ந்துக்கொண்டு இருந்தவர்களிடமிருந்து கற்றுக்கொண்டுள்ளார். இந்த ஹதீஸ் பொய் என்று முஸ்லிம்கள் சொல்வார்களா? கொஞ்சம் கேட்டுச்சொல்லமுடியுமா?

**புகாரி ஹதீஸ்: 3364**

> *. . . குழந்தை இஸ்மாயீல் (வளர்ந்து) வாலிபரானார். ஜுர்ஹும் குலத்தாரிடம் இருந்து அவர் அரபு மொழியை கற்றுக்கொண்டார். அவர் வாலிபரான போது அவர்களுக்கு பிரியமானவராகவும் அவர்களுக்கு மிக விரும்பமானவராகவும் ஆகிவிட்டார். பருவ வயதை அவர் அடைந்த போது அவருக்கு அவர்கள் தம்மிலிருந்தே ஒரு பெண்ணை மணமுடித்து வைத்தனர். . . .*

**1.** அரபி மொழி பேசும் மக்கள் அரேபியாவில் இருந்துள்ளார்கள், அவர்களிடமிருந்து அரபியை அவர் கற்றுக்கொண்டுள்ளார். இதன் படி, அரேபியர்கள் இஸ்மாயீலுக்கு முன்பாக அரேபியாவில் வாழ்ந்துள்ளார்கள் என்று தெரியவில்லையா? ஆக அரபி மொழி என்பது இஸ்மாயீலின் தாய் மொழி அல்ல என்பது முஸ்லிம்களின் நூல்களிலிருந்தே நிருபிக்கப்பட்டுவிட்டது.

**இஸ்லாமிய சரித்திர ஆசிரியர்களின் நூல்களிலிருந்து ஆதாரம்:** இப்னு இஷாக், தபரியின் சரித்திரம், இப்னு ஹிஷம், இப்னு சைத்

கீழ்கண்ட ஆய்வுக் கட்டுரையில் இஸ்லாமிய ஆரம்பகால சரித்திர நூல்களிலிருந்து ஆறுவகையான ஆதாரங்கள் கொடுக்கப்பட்டுள்ளது. இஸ்மாயீல் அரேபியர்களின் பிதா அல்ல என்பதை இதன் மூலமும் அறிந்துக் கொள்ளலாம்.

## Are the Arabs Descendants of Ishmael?

மூலம்: **http://www.answering-islam.org/authors/cornelius/arabs.html**

இந்த படத்தின்படி, இஸ்மாயீலுக்கு முன்பிலிருந்தே அரேபியர்கள் இருந்துள்ளார்கள். மேற்கண்ட கட்டுரையையும், இந்த படத்தையும் படித்துப் பாருங்கள், அப்போது உண்மை விளங்கும்.



**http://www.answering-islam.org/fileadmin/authors/cornelius/arabs.jpg**

**முடிவுரை:**

பாரா அவர்களே, சுருக்கமாகச் சொல்லவேண்டுமென்றால், இஸ்மாயீல் அரேபியர்களின் பிதா அல்ல, அவர் பிறப்பதற்கு முன்பிலிருந்தே, அரேபியர்கள் இருந்துள்ளார்கள், அரபி மொழி இருந்துள்ளது. அரேபியா முழுவதும், மக்கள் நாடோடிகளாக, கூடாரவாசிகளாக அரபி பேசிக்கோண்டு வந்துள்ளார்கள். இஸ்மாயீலும் அவரது வம்சத்தார்களும் இதர குழுக்களோடு கலந்துவிட்டார்கள், முக்கியமாக வட அரேபியாவில் வாழ்ந்தார்கள். சரியாகச் சொல்லவேண்டுமென்றால், இஸ்மாயீல் அரேபியர்களின் முற்புதா அல்ல, அதற்கு பதிலாக, இவர் அரேபிய மக்களில் ஒன்றர கலந்துவிட்டார். விஷயம் இப்படி இருக்கும் போது, முஹம்மது இஸ்மாயீல் வம்சத்தில் தான் வந்தார் என்பதும் நம்பத்தகாத சரித்திர ஆதாரமில்லாத கூற்றாகும். இதைப் பற்றி மேலும் அறிய மேலே கொடுக்கப்பட்ட கட்டுரைகளை படிக்கவும், இன்னும் ஆய்வு செய்யவும்.

உங்களை அடுத்த கட்டுரையில் சந்திக்கிறேன்.

ஐஐஐஐ

# 5) தானியேல் தரிசனமும் பாராவின் தரிசனமும்

## (அத்தியாயம் 4: கி.பி.)

**மதிப்பிற்குரிய பாரா அவர்களுக்கு,**

இந்த கட்டுரையில் உங்களின் '4) கி.பி.' என்ற அத்தியாயம் ஆய்விற்கு எடுத்துக்கொள்ளப்படுகின்றது. இவ்வத்தியாயத்தில் இயேசுவைப் பற்றிய உங்கள் புரிந்துக்கொள்ளுதலில் உள்ள பிழைகளை சுட்டிக்காட்ட விரும்புகிறேன்.

### 1) தானியேல் கண்ட மனுஷகுமாரன் யார்?

**பாரா அவர்கள் எழுதியது:**

> *// அவரைத் தனித்துக்காட்டிய முதல் விஷயம், அவர் தம்மை 'மனிதகுமாரன்' (பைபிளில் மனுஷகுமாரன் என்று வரும். Son of Man) என்று குறிப்பிட்டது. இது மிக முக்கியமான குறிப்பு. ஏனெனில் யூதகுலம் அப்படியருவனைத்தான் காலம் காலமாக எதிர்பார்த்துக்கொண்டிருந்தது. யூதர்களின் வேதத்தில், மனிதகுமாரன் எப்படி இருப்பான் என்பது பற்றி ஒரு குறிப்பு உண்டு. இறுதித் தீர்ப்பு நாளில் நீதி வழங்கும் நீதிபதியைப்போல் அவன் இருப்பான் என்று தான் கனவில் கண்டதாக யூதர்களின் வேதத்தில் டேனியல் என்கிற தீர்க்கதரிசி எழுதிய பகுதிகளில் வருகிறது.*
>
> *டேனியலின் கனவில் கிடைத்த குறிப்பு தன்னைப்பற்றியதுதான் என்பதாக இயேசு ஒருபோதும் சொன்னதில்லை. 'கர்த்தரால் மனிதகுமாரனுக்குச் சொல்லப்பட்டது' என்பதுபோல அவர் விளக்கிய விஷயங்கள் கூட படர்க்கையில்தான் (Third person) வருகின்றனவே தவிர ஒருபோதும் 'கர்த்தரால் எனக்குச் சொல்லப்பட்டது' என்பதுபோல அவர் குறிப்பிட்டதில்லை.*

*இயேசுவை ஏற்க மனமில்லாத யூதர்கள், இதையெல்லாமும் ஆதாரமாகக் காட்டி, 'வேதத்தில் குறிப்பிடப்பட்டிருக்கும் மனிதகுமாரன் இவர் அல்லர்' என்று சொன்னார்கள். //*

இந்த "மனித குமாரன்" என்பவரைத் தான் யூதர்கள் மேசியாவாக அடையாளப்படுத்தி, அவருக்காக காத்திருந்தனர். இதைப் பற்றி தானியேல் 7:13-14ல் கூறப்பட்டுள்ளது. "மனித குமாரன்" தான் மேசியா என்று யூதர்கள் எப்படி கண்டுபிடித்தார்கள்? இதனை அறிந்துக்கொள்ள தானியேல் புத்தகத்தில் மட்டுமல்ல, இன்னும் பழைய ஏற்பாட்டின் இதர புத்தகங்களிலும் மேசியாவைப் பற்றிய வர்ணனைகளை படிக்கவேண்டும். இதைப் பற்றி மேலும் அறிந்துக்கொள்ள இந்த கட்டுரையை படிக்கவும்: **The Son of Man as the Son of David - Examining the OT Evidence for The Messianic Identity of Daniel's Heavenly Figure**

மேலே பதித்த உங்களுடைய மேற்கோளின் இரண்டாவது பத்தியில் நீங்கள் கொடுத்த விமர்சனத்திற்கு என் பதிலை இங்கு பதிக்க விரும்புகிறேன்.

முதலாவது இந்த வரியை பார்ப்போம்:

*// டேனியலின் கனவில் கிடைத்த குறிப்பு தன்னைப் பற்றியது தான் என்பதாக இயேசு ஒருபோதும் சொன்னதில்லை. //*

**பாரா அவர்களே,**

இயேசு ''டேனியலின் கனவில் கிடைத்த குறிப்பு தன்னைப் பற்றியது தான்'' என்று சொல்லவில்லையென்று உங்களுக்கு எப்படித் தெரியும்?

இயேசு மூன்று / மூன்றரை ஆண்டுகள் சீடர்களோடு வாழ்ந்தார், அவர்களோடு பேசினார், உண்டார் மற்றும் உறங்கினார். நற்செய்தி நூல்களில் அவர் பேசிய மற்றும் செய்த காரியங்கள் அனைத்தும் பதிவு செய்யப்படவில்லை (யோவான் 21:25). சீடர்களிடம் ''தானியேல் தரிசனத்தில் கண்ட மனுஷகுமாரன் நான் தான்'' என்று அவர் சொல்லியும் இருக்கலாம் அல்லது சொல்லாமலும் இருக்கலாம். ஆனால், அவர் சொல்லவில்லை என்று உறுதியாக நீங்கள் எப்படி சொல்கிறீர்கள்? எனவே, பின்னணியை தெரிந்துக் கொள்ளாமல் ஒரு எழுத்தாளராக நீங்கள் "இயேசு சொல்லவில்லை" என்று உறுதியாக கூறக்கூடாது , இது உங்களின் முதலாவது பிழை.

இயேசு உயிர்த்தெழுந்த பிறகு, தம்முடைய இரண்டு சீடர்களுக்கு காணப்பட்டு, தம்மைப் பற்றி பழைய ஏற்பாட்டில் சொல்லப்பட்ட அனைத்தையும் அவர்களுக்கு தெளிவாக விளக்கிக்காண்பித்தார். மோசே முதற்கொண்டு அனைத்து தீர்க்கதரிசிகள் எழுதின வேத வாக்கியங்களை இயேசு விளக்கினார், இந்த நேரத்தில் அவர் தானியேல் கண்ட மனுஷகுமாரன் பற்றியும் சொல்லியிருக்கலாம். எனவே, அவர் அப்படி சொல்லவில்லையென்று நீங்கள் சொல்லக்கூடாது. பார்க்க லூக்கா 24:25-27 வசனங்கள்:

அப்பொழுது அவர் அவர்களை நோக்கி: தீர்க்கதரிசிகள் சொன்ன யாவையும் விசுவாசிக்கிறதற்குப் புத்தியில்லாத மந்த இருதயமுள்ளவர்களே, கிறிஸ்து இவ்விதமாகப் பாடுபடவும், தமது மகிமையில் பிரவேசிக்கவும் வேண்டியதில்லையா என்று சொல்லி, மோசே முதலிய சகல தீர்க்கதரிசிகளும் எழுதின வேதவாக்கியங்களெல்லாவற்றிலும் தம்மைக்குறித்துச் சொல்லியவைகளை அவர்களுக்கு விவரித்துக் காண்பித்தார். **(லூக்கா 24:25-27)**

சீடர்களிடம் இயேசு அப்படி சொல்லியிருக்கலாம், ஆனால் யூத மத தலைவர்களிடம் சொல்லவில்லையல்லவா? என்ற கேள்வி எழலாம். இதை மேலோட்டமாகப் பார்த்தால், நியாயமான கேள்வியாகத் தெரியும். ஆனால், யூத மதத்தலைவர்களிடம் சென்று "தானியேல் சொன்ன அந்த மனித குமாரன் நான்" என்று இயேசு சொல்லவேண்டியதில்லை. ஏனென்றால், "மனித குமாரன்" என்ற வார்த்தை முதலாம் நூற்றாண்டு யூதர்களிடம் மிகவும் பிரபல்யமான ஒன்று. பாரா அவர்கள் எதிர்ப்பார்க்கும் படி, இயேசு சொல்லவேண்டியதில்லை, அதைவிட மிகவும் அழுத்தமான வகையில் இயேசு சொல்லியுள்ளார். "நான் தான் அவர்" என்று சொல்வதை விட, அந்த மனுஷகுமாரனுக்கு இருக்கும் தெய்வீக தன்மைகள் அனைத்தும் என்னிடம் உள்ளது என்றுச் சொல்வது தான் சரியானதாக இருக்கும். இதைத் தான் இயேசு யூதர்களிடம் செய்துக் காட்டினார்.

பாரா அவர்களே உங்களுக்கு புரியவேண்டும் என்பதற்காக, மனுஷ குமாரன் எப்படிப்பட்டவராக இருக்கிறார் என்று இயேசு சொன்ன சில தெய்வீக வெளிப்பாட்டு வசனங்களைத் தருகிறேன்.

இயேசுவை கொலை செய்யும் அளவிற்கு யூதமத தலைவர்களை தூண்டிய வசனங்கள் இவைகளாகும். ஒரே வரியில் ''தானியேல் கண்ட மனுஷகுமாரன்'' நான் தான் என்றுச் சொல்வதைக் காட்டிலும், தம்மைப் பற்றி கீழ்கண்ட விதமாக இயேசு விளக்கியது தான் யூதர்களுக்கு நெத்தியடியாக உரைத்தது.

1. பாவங்களை மன்னிக்க பூமியில் மனுஷகுமாரனுக்கு அதிகாரம் உண்டு (மத்தேயு 9:6)
2. மனுஷ குமாரன் ஓய்வு நாளுக்கும் ஆண்டவராக இருக்கிறார்: (மத்தேயு 12:8)
3. மனுஷ குமாரனுக்கு சொந்தமாக தூதர்களும் இருக்கிறார்கள் (மத்தேயு 13:41)
4. மனுஷகுமாரன் கெட்டுப்போனதை இரட்சிக்க வந்தார். (மத்தேயு 18:11)
5. சீடர்களுக்கு யூதர்களை நியாயம் தீர்க்கும் அதிகாரம் கொடுக்கும் மனுஷகுமாரன். (மத்தேயு 19:28)
6. மின்னல் கிழக்கிலிருந்து தோன்றி மேற்கு வரைக்கும் பிரகாசிக்கிறது போல, மனுஷகுமாரனுடைய வருகையும் இருக்கும்(மத்தேயு 24:27).
7. மனுஷகுமாரனுடைய அடையாளம் வானத்தில் காணப்படும். அப்பொழுது, அவர் வல்லமையோடும் மிகுந்த மகிமையோடும் வானத்தின் மேகங்கள்மேல் வருகிறதை பூமியிலுள்ள சகல கோத்திரத்தாரும் கண்டு புலம்புவார்கள் (மத்தேயு 24:30).
8. மனுஷ குமாரன் எப்போது நியாயந்தீர்க்க வருவார் என்று மனிதர்கள் அறியாதபடியால், எப்போதும் ஆயத்தமாக இருக்கவேண்டும், விழித்திருக்கவேண்டும் (மத்தேயு 24:44, 25:13)
9. மனுஷகுமாரன் தமது மகிமைபொருந்தினவராய்ச் சகல பரிசுத்த தூதரோடுங்கூட வரும்போது, தமது மகிமையுள்ள சிங்காசனத்தின்மேல் வீற்றிருப்பார் (மத்தேயு 25:31)
10. மனுஷகுமாரன் தம்மைக்குறித்து எழுதியிருக்கிறபடியே போகிறார் (மத்தேயு 26:24)
11. மனுஷகுமாரன் சர்வ வல்லவருடைய வலது பாரிசத்தில் வீற்றிருப்பார், வானத்தின் மேகங்கள்மேல் வருவார் (மத்தேயு 26:64).

பாரா அவர்களே, மேற்கண்ட வர்ணனைகளை கவனித்த யூதர்களுக்கு ''இவர் தன்னை மேசியாவாக, தானியேல் தன் தரிசனத்தில் கண்ட மனுஷ குமாரனாக சொல்கிறார்'' என்பதை புரிந்துக் கொண்டார்கள். இன்னும் அனேக வசனங்களைக் காட்டலாம். உங்களுக்காக இப்போதைக்கு இது போதும்.

**2) யூதர்களின் ஓய்வு நாள் வெள்ளியா? சனியா?**

**பாரா அவர்கள் எழுதியது:**

> *// யூதர்களிடையே ஒரு வழக்கம் உண்டு. வாரம்தோறும் வெள்ளிக்கிழமை அவர்களுக்கு ஓய்வுநாள். அன்று எந்தக் காரியத்தையும் செய்யமாட்டார்கள். முற்றிலும் பிரார்த்தனைக்கான தினம் என்று பொருள். (Sabbath day). //*

பாரா அவர்களே, மேற்கண்ட உங்களுடைய வரிகளில் ஒரு சின்ன தவறு இருக்கிறது. இது பெரிய தவறு இல்லை. யுதர்களின் ஓய்வு நாள் சனிக்கிழமையாகும். நீங்கள் வெள்ளிக்கிழமை என்று எழுதியுள்ளீர்கள். அதாவது யூதர்களின் கணக்குப்படி, ஒரு நாளின் ஆரம்பம் முந்தைய நாள் மாலை ஆறு மணிக்கு ஆரம்பமாகி, மறுநாள் மாலை ஆறுமணிக்கு முடிவடையும்.

உங்களுடைய மேற்கண்ட கருத்து ஒருவகையில் சரியானது என்றுச் சொன்னாலும், அதாவது யூதர்களின் ஓய்வு நாள், வெள்ளிக்கிழமை மாலை 6 மணிக்கு தொடங்குகிறது, என்பதால் வெள்ளிக்கிழமை தான் அவர்களின் ஓய்வு நாள் என்றுச் சொல்வது சரியானது இல்லை. ஓய்வு நாளின் முக்கால் பாகம் சனிக்கிழமையாக இருப்பதால், சனிக்கிழமை தான் யூதர்களின் ஓய்வு நாள் என்றுச் சொல்வது தான் சரியானது. வேண்டுமானால், யூதர்களின் ஓய்வு நாள் வெள்ளிக்கிழமை மாலை தொடங்குகிறது என்றுச் சொல்லலாம். கிறிஸ்தவர்களுக்கும், யூதர்களுக்கும் உங்களுடைய வரியை சரியாக புரிந்துக்கொள்ளத்தெரியும், ஆனால், உங்கள் தொடர் கட்டுரைகளை, புத்தகத்தை படிக்கும் இதர மார்க்க மக்கள், வெள்ளிக்கிழமைத் தான் யூதர்கள் தேவனை ஆராதிக்கிறார்கள் என்று எண்ணிவிடுவார்கள். இது ஒரு பொது அறிவு கேள்வியாகவும் இருக்கிறது **(General Knowledge).**

முஸ்லிம்கள் வெள்ளிக்கிழமையும், யூதர்கள் சனிக்கிழமையும், கிறிஸ்தவர்கள் ஞாயிற்றுக்கிழமையும் தங்கள் இறைவனை தொழுதுக்கொள்கிறார்கள் என்பது **General Knowledge** ஆகும். உங்களைப்போன்ற எழுத்தாளர்கள் இப்படிப்பட்ட சின்ன சின்ன விஷயங்களில் தவறு செய்யக்கூடாது.

**3) கோயில் இடிக்கப்படும் என்கிற தீர்க்கதரிசனம்:**

**பாரா அவர்கள் எழுதியது:**

> *// இதன் தொடர்ச்சியாகத்தான் ஜெருசலேம் தேவாலய மதகுருமார்களின் நடத்தை மீதான அவரது விமர்சனங்களும், கோயில் நிச்சயமாக இடிக்கப்படும் என்கிற தீர்க்கதரிசனமும், அவரைக் கொலை செய்தே ஆகவேண்டும் என்கிற தீர்மானத்துக்கு யூத மதகுருக்களைக் கொண்டுவந்து சேர்த்தன. ஜெருசலேம் நகரின் பெருமைமிக்க கோயிலை இடித்துத் தரைமட்டமாக்கவும், மூன்றே நாட்களில் திரும்பக் கட்டவும் தன்னால் முடியும் என்று இயேசு சொன்னார். போதாது? மரணதண்டனை விதித்துவிட்டார்கள். ஆனால் ஒரு மரியாதைக்காகவாவது மன்னருக்கு விஷயத்தைத் தெரியப்படுத்தியாக வேண்டும். //*

**மேற்கண்ட வரிகளை படிக்கும்போது நீங்கள் தெளிவாக குழம்பியிருப்பது தெரிகிறது.**

இயேசு தேவாலயம் பற்றி இரண்டு இடங்களில் சொன்னதை நீங்கள் தவறாக புரிந்துக்கொண்டீர்கள்.

**1)** முதலாவதாக, தம்முடைய மரணம் மற்றும் உயிர்த்தெழுதலை குறிக்கும் வண்ணமாக, இந்த தேவாலயத்தை இடித்துப்போடுங்கள், அதனை நான் மூன்று நாளைக்குள் திரும்ப எழுப்புவேன் என்று சொன்னார். பார்க்க யோவான் **2:18-20**

**2)** இரண்டாவதாக, எதிர்காலத்தில் ஜெருசலேமுக்கு நடக்கும் தீங்கு பற்றி சீடர்களிடம் பேசும் போது, தீர்க்கதரிசமாக **'**இந்த தேவாலயத்தின் ஒரு கல்லின் மீது இன்னொரு கல் இருக்காது**'** என்று சொன்னார். பார்க்க மத்தேயு **24:2**

இயேசுவிற்கு எதிராக சாட்சி சொன்ன அன்றைய யூதர்கள், இயேசு சொன்னதை சிறிது மாற்றி சொன்னார்கள், அவர்களைப் போல நீங்கள் மாற்றி சொல்லியுள்ளீர்கள். "கோவலனை கொண்டு வா" என்ற கட்டளையை "கோவலனை கொன்று வா!" என்று புரிந்துகொண்டதற்கு சமமாக குழம்பியிருக்கிறீர்கள் நீங்கள்.

- **இயேசு சொன்னது -** இந்த ஆலயத்தை **இடித்துப்போடுங்கள்,** மூன்று நாளைக்குள்ளே இதை எழுப்புவேன்.
- **யூதர்கள் சொன்னது -** கைவேலையாகிய இந்தத் தேவாலயத்தை **நான் இடித்துப்போட்டு,** கைவேலையல்லாத வேறொன்றை மூன்று நாளைக்குள்ளே கட்டுவேன் என்று இவன் சொன்னதை நாங்கள் கேட்டோம்.
- **பாரா அவர்கள் சொன்னது -**ஜெருசலேம் நகரின் பெருமைமிக்க கோயிலை **இடித்துத் தரைமட்டமாக்கவும்,** மூன்றே நாட்களில் திரும்பக் கட்டவும் தன்னால் முடியும் என்று இயேசு சொன்னார்

பாரா அவர்களே, நீங்கள் சொன்னது போல இயேசு சொல்லவில்லை. அவர் சொன்னது "யூதர்களே ஆலயத்தை **நீங்கள் இடித்துப் போடுங்கள் (என்னை கொல்லுங்கள்),** நான் அதனை **எழுப்புவேன் (நான் உயிரோடு எழுந்து காட்டுவேன்)**"

நீங்களும், யூதர்களும் சொன்னது - "**இயேசுவே ஆலயத்தை இடிப்பாராம், அவரே அதனை எழுப்புவாராம்**".

அன்றைய யூதர்கள் இயேசுவிற்கு எதிராக பொய் சாட்சி சொன்னார்கள், இன்றைய பாராவாகிய நீங்கள் குழம்பி இப்படி சொல்லியிருக்கிறீர்கள் என்று தெரிகின்றது. ஒரு எழுத்தை மாற்றிச் சொன்னாலும் விபரீதம் அதிகமாக இருக்குமென்பதால் இதனை விளக்கினேன்.

### 4) எந்த உயிர்த்தெழுதல் இல்லையென்று யூதர்கள் நம்பினார்கள்?

**பாரா அவர்கள் எழுதியது:**

> *// சிலுவையில் அறையப்பட்டு, மீண்டும் உயிர்த்தெழுந்து அவர் விண்ணுக்குச் சென்றார் என்கிற கிறிஸ்தவர்களின் நம்பிக்கைதான் யூதர்களிடமிருந்து அவர்களை வேறுபடுத்திக்காட்டும் முதல் ஆதாரம். ஏனெனில், யூதர்களின் நம்பிக்கையின்படி, மரணத்துக்குப் பின் தேவதூதன் உயிர்த்தெழுவதென்பது கிடையாது. வேறுபாடு அங்கேதான் தொடங்குகிறது. //*

மதிப்பிற்குரிய பாரா அவர்களே, "யூதர்களின் நம்பிக்கையின்படி, மரணத்துக்குப் பின் தேவதூதன் உயிர்த்தெழுவதென்பது கிடையாது" என்பதை எங்கே படித்தீர்கள்? இதற்கு பழைய ஏற்பாட்டிலிருந்து ஏதாவது ஆதாரத்தை காட்டமுடியுமா? ஒரு தீர்க்கதரிசி மரித்த

பிறகு உயிர்த்தெழமுடியாது என்று சொல்லப்பட்டுள்ளதா? யோவான் ஸ்நானகன் மரித்த பிறகு, இயேசுவைக் கண்டவர்கள் 'இவர் யோவான் ஸ்நானகன் தான், அவர் மரித்து இயேசுவாக வந்துள்ளார்'' என்று சொல்லிக்கொண்ட யூதர்களும் உண்டு.

இயேசு வாழ்ந்த காலத்து யூதர்கள் பல பிரிவுகளாக பிரிந்து இருந்தார்கள். இவர்களில் கீழ்கண்ட இரண்டு வகையினரை பற்றி நாம் அதிகமாக புதிய ஏற்பாட்டில் காண்கிறோம்.

1. **சதுசேயர்கள் -** மரித்தவர்கள் உயிர்த்தெழுவதில்லை என்று நம்புபவர்கள் (மத்தேயு 22:23; மாற்கு 12:18-27; அப் 23:8)
2. **பரிசேயர்கள் -** மரித்த பிறகு உயிர்த்தெழுதல் உண்டு என்று நம்புபவர்கள் (அப் 23:6)

**நீங்கள் மேற்கண்ட யூதர்களில் எந்த பிரிவினரைப் பற்றி சொன்னீர்கள்?**

உங்கள் இவ்வரியை மேலோட்டமாக பார்ப்பவர்களுக்கு சிறிய தவறுபோலத் தான் தெரியும். ஆனால், கூர்ந்து உங்கள் வரிகளை ஆய்வு செய்பவர்களுக்கு அவைகளுக்கு பின்னால், என்ன நோக்கம் இருந்திருக்கிறது என்பது தெளிவாக புரியும்.

இங்கு உயிர்த்தெழுதல் பற்றிய இன்னொரு விவரத்தைச் சொல்லவேண்டி இருக்கிறது. எல்லா மனிதர்களும் மரித்த பிறகு கடைசி நாளில் உயிரோடு எழுத்திருப்பார்கள் என்று நம்புவது என்பது வேறு, இயேசு மரித்த பிறகு மூன்றாம் நாளில் உயிரோடு எழுந்தார் என்று நம்புவது வேறு.

உயிர்த்தெழுதல் (மரித்த பிறகு கடைசி நாளில் உயிரோடு எழுப்பப்படுதல்) உண்டு என்று நம்பும் பரிசேயர்களும் கூட, இயேசு மூன்றாம் நாளில் உயிரோடு எழுந்திருந்தார் என்று நம்பவில்லை. இதைப் பற்றித் தான் நீங்கள் சொல்ல வருகிறீர்கள் என்று நான் நினைக்கிறேன். எனவே, கொஞ்சம் தெளிவாக நீங்கள் எழுதும் படி கேட்டுக்கொள்கிறேன். பைபிள் கோட்பாடுகள் மற்றும் நம்பிக்கைகள் பற்றிய தவறான கருத்துக்களை பரப்பும் வேலையை நீங்கள்செய்யவேண்டாம், அதை செம்மையாகச் செய்ய உங்களுக்கு அதிகமாக உதவிய முஸ்லிம்கள் இருக்கிறார்கள்.

**5) ஜெருசலேம் சபையில் தலைமை வகித்தவர்கள் ஜேம்ஸ் மட்டும் தானா?**

**பாரா அவர்கள் எழுதியது:**

> *// இயேசு உயிர்த்தெழுந்ததாக நம்பியவர்கள், இயல்பாக சனாதன யூதர்களிடமிருந்து கருத்தளவில் விலகிப்போனார்கள். இயேசுவுக்குப்பின் அவர் விட்டுச்சென்றதைத் தொடரும் பொறுப்பின் தலைமை அதிகாரியாக இருந்த ஜேம்ஸ், (ஹீப்ரு மொழியில் ஜேக்கப். பைபிளில் யாக்கோபு என்று வரும்.) அவர்களின் வழிகாட்டியாக இருந்தார்.*
>
> *கி.பி.62_ல் ஜேம்ஸும் யூதர்களால் கல்லால் அடித்துக் கொல்லப்பட்டார். தொடர்ந்தும் தீவிரமாகவும் அவர் இயேசுவை தேவகுமாரனாகவும் கடவுள் அம்சம் பொருந்தியவராகவும் சித்திரித்துச் சொற்பொழிவுகள் ஆற்றியதே இதற்குக் காரணம்.*
>
> *ஜேம்ஸுக்குப் பிறகு ஜெருசலேம் நகரின் கிறிஸ்தவ தேவாலயத் தலைமைப் பொறுப்பில் இருந்தவர் சைமன். //*

பாரா அவர்களே, இவ்வரிகளில் ஒரு பெரிய தவறு காணப்படுகின்றது. ஜேம்ஸ் என்பவர் "ஜெருசலேம் சபையின் தலைமை அதிகாரியாக இருந்தார்" என்றுச் சொல்லியிருக்கிறீர்கள். இரண்டாவதாக, "ஜேம்ஸுக்குப் பிறகு ஜெருசலேம் நகரின் கிறிஸ்தவ தேவாலயத் தலைமைப் பொறுப்பில் இருந்தவர் சைமன்" என்று எழுதியுள்ளீர்கள். இதைப் பற்றி சிறிய விளக்கம் உங்களுக்கு கொடுக்கலாம் என்று விரும்புகிறேன். நீங்கள் புதிய ஏற்பாடு பற்றிய விஷயத்தில் தவறு மேல் தவறு செய்துக்கொண்டு இருக்கிறீர்கள்.

இயேசுவிற்கு அடுத்தபடியாக, ஜெருசலேம் (தலைமை) சபைக்கு அதிகாரிகளாக இருந்தவர்களை குறிப்பிட்டுச் சொல்லவேண்டுமென்றால், மூன்று சீடர்களை குறிப்பிடலாம். அவர்களின் பெயர்கள்: பேதுரு (சைமன்), யாக்கோபு மற்றும் யோவான் ஆவார்கள். இந்த மூவரில் பிரதானமானவராக சொல்வதென்றால், அவர் பேதுரு (சைமன்) ஆவார். பேதுரு தான் பிரதானமானவர் என்பதற்கு அனேக ஆதாரங்களை தரலாம், உதாரணத்திற்கு சிலவற்றை அப்போஸ்தலர் நடபடிகளிலிருந்து தருகிறேன்.

**1.** இயேசுவை காட்டிக்கொடுத்த யூதாஸின் இடத்தில், இன்னொரு சீடரை தேர்வு செய்யும் பொறுப்பை பேதுரு ஏற்றுக்கொண்டு, முடித்தும் வைத்தார் (அப் **1:15-26).**

**2.** பெந்தகோஸ்தே நாளில் முதலாவது கிறிஸ்தவ பிரசங்கத்தைச் செய்து, **3000** பேர் சபையில் சேர்த்துக்கொள்ளப்பட ஒரு கருவியாக இருந்தவர் பேதுரு ஆவார் (அப் **2:14-41).**

**3.** இயேசுவிற்கு பிறகு முதல் அற்புதத்தை இயேசுவின் பெயரில் செய்தவர் இதே பேதுரு ஆவார். மேலும் உடனே, தேவாலயத்தில் உள்ளவர்களுக்கு பிரசங்கம் செய்தார், **5000** பேர் சபையில் சேர்க்கப்பட்டார்கள். (அப் **3:1-4)**

**4.** பேதுருவும் யோவானும் கைது செய்யப்பட்டு, யூதமத தலைவர்கள் முன் நிறுத்தப்பட்ட போது, இதே பேதுரு, அவர்களுக்கு விளக்கம் அளித்து பிரசங்கம் செய்தார். யோவானுக்கும் சேர்த்து தான் இவர் பேசினார் (அப் **4:3-12).**

**5.** சபையின் ஊழியத்தேவைக்காக பணத்தை சேகரிப்பதற்கு பொறுப்பாளராக இருந்தவர் பேதுரு தான். மேலும் அனனியா/சப்பீராள் மீது தண்டனையை வருவித்ததும் இவரே. இவரது நிழலாகிலும் பட்டு சுகம் கிடைக்கவேண்டும் என்று மக்கள் விரும்பினார்கள். இவரை கைது செய்து சிறைச்சாலையில் அடைத்தபோது, தேவதூதனால் விடுவிக்கப்பட்டார் (அப் **5:1-29).**

**6.** இயேசுவின் நற்செய்தி யூதர்களுக்கு மட்டுமல்ல, அந்நிய ஜனங்களுக்கும் சொல்லவேண்டும் என்பதை தெரிவிப்பதற்காக, இயேசு பேதுருவிற்கு ஒரு தரிசனத்தைக் கொடுத்து புரியவைத்தார், அந்நிய ஜனங்களிடத்தில் அனுப்பினார். யூதர்களுக்குத் தான் சுவிசேஷம் சொல்லவேண்டும் என்று நம்பியிருந்த யூத பின்னணி சீடர்கள் அனைவருக்கும், இந்த விவரத்தை பேதுரு சொல்லும் போது, அவர்கள் அனைவரும் ஏற்றுக்கொண்டனர் (பார்க்க அப் **11:18).** இதன் மூலமாக, அவருக்கு இருந்த செல்வாக்கு, மதிப்பு என்னவென்பதை நாம் அறியமுடியும் (அப் **10-11:18).** அதாவது மத விஷயத்தில் ஒரு முக்கியமான தெரிவு செய்யவேண்டுமென்றால், பேதுரு பிரதானமானவராக இருந்தார்.

**7.** ஜெருசலேமுக்கு வெளியே ஸ்தாபிக்கப்பட்ட சபைகளில் ஒரு முக்கியமான பிரச்சனைக்கு தீர்வு காணப்படவில்லை என்பதால், ஜெருசலேமில் உள்ள தலைமை சபைக்கு அது கொண்டுவரப்படுகிறது. அதைப் பற்றி தலைமை சபையில் பலவாறு விவாதித்துக்கொண்டு இருக்கும்போது, பேதுரு எழுந்து நின்று அதை தீர்த்துவைக்கிறார். அதன் பிறகு, ஜேம்ஸ் எனப்பட்ட யாக்கோபு பேசுகிறார். ( அப் **15:1 -16:4)**

மேற்கண்ட விவரங்கள், பேதுரு தான் தலைமைச் சபைக்கு பிரதானமான தலைவராக இருந்தார் என்பதை தெரிவிக்கின்றன. இதனை அப்போஸ்தலர் நடபடிகளில் தெளிவாக சொல்லப்பட்டுள்ளது.

நீங்கள் குறிப்பிடம் சீடர் ஜேம்ஸ் (யாக்கோபு), இயேசுவின் சகோதரர் ஆவார். இயேசு உயிர்த்தெழுந்த பிறகு தான் இவர் இயேசுவை அங்கீகரிக்கிறார். இவருக்கு இயேசு வெளிப்பட்டார் அதைக் கண்டு தான் இவர் விசுவாசித்தார் (பார்க்க 1 கொரிந்தியர் 15:7).

> *// ஜேம்ஸுக்குப் பிறகு ஜெருசலேம் நகரின் கிறிஸ்தவ தேவாலயத் தலைமைப் பொறுப்பில் இருந்தவர் சைமன். //*

பாரா அவர்களே, உங்களுடைய மேற்கண்ட வரியில் நடந்த ஒன்றை அப்படியே தலைகீழாக மாற்றி எழுதியிருக்கிறீர்கள். பேதுருவும், யாக்கோபும் (இயேசுவின் சகோதரர்), யோவானும் ஜெருசலேம் தலைமை சபைக்கு தலைவர்களாக இருக்கிறார்கள். ஆனால், பேதுரு பிரதானமானவராவார். மேலும் கடைசியில் ஜெருசலேமை விட்டு வேறு இடத்திற்கு பேதுரு சென்றுவிடுகிறார். கி.பி. 62ல் யாக்கோபு கொல்லப்படுகிறார், பேதுரு கி.பி. 64ல் கொல்லப்படுகிறார்.

நீங்கள் சொன்ன விவரங்களை எந்த புத்தகத்தில் படித்தீர்கள்? அப்போஸ்தலர் நடபடிகளின் முதல் 15 அத்தியாயங்களை நீங்கள் படித்திருந்தாலே, நான் மேலே சொன்ன விவரங்கள் உங்களுக்கு தெளிவாக புரிந்து இருந்திருக்குமே!

நீங்கள் குறிப்பிட்ட ஜெருசலேம் சபையின் பிஷப் ஜேம்ஸ் (யாக்கோபு) என்பவரின் பெயர் முதலாவது அப்போஸ்தலர் நடபடிகள் புத்தகத்தில் 12:17ம் வசனத்தில் வருகிறது. அதுவரை பேதுரு தான் பிரதானமான தலைவராக வருகிறார். அப்போஸ்தலர் நடபடிகளில் முதல் பாதியில் பேதுரு மூலமாக நடந்த நிகழ்வுகள் விவரிக்கப்பட்டுள்ளன, இரண்டாம் பாகத்தில் பவுலின் மூலமாக நடந்த நிகழ்வுகள் விவரிக்கப்பட்டுள்ளன.

மேற்கண்ட உங்களுடைய வரியை படிக்கும்போது, நீங்கள் புதிய ஏற்பாட்டிலுள்ள அப்போஸ்தலர் நடபடிகள் புத்தகத்தை படிக்கவில்லை என்று நமக்கு தெரிகிறது. இயேசுவின் சீடர்களை பற்றி எழுதும் போது குறைந்தபட்சம் நற்செய்தி நூல்களையும், அப்போஸ்தலர் நடபடிகள் புத்தகத்தையும் படிக்காமல் எப்படி நீங்கள் அவர்கள் பற்றிய கருத்தை எழுதுகிறீர்கள்?

**முடிவுரை:**

அருமை பாரா அவர்களே! கோர்வையாக, ஒழுங்காக எழுதப்பட்ட புதிய ஏற்பாட்டு விவரங்களை புரிந்துக்கொள்வதில் நீங்கள் இப்படி குழப்பமடைவீர்களென்றால், குர்-ஆனை படித்தால் உங்கள் நிலை என்னவாகும் என்று சிந்தித்து பார்த்தால் எனக்கு பயமாக இருக்கிறது. பகலிலேயே உங்களுக்கு பசுமாடு தெரியவில்லையே, இரவிலே உங்களுக்கு எருமை எப்படி தெரியும்? தெளிவாக விளக்கப்பட்டுள்ள புதிய ஏற்பாட்டு விவரங்களை மாற்றி எழுதும் உங்களுக்கு, இங்கொன்று அங்கொன்றுமாக விவரங்களைக் கொண்ட குர்-ஆனை எப்படி படித்து, இம்மாம்பெரிய புத்தகத்தை எழுதிவிட்டீர்கள்?

அடுத்த கட்டுரையில் இன்னும் இரத்தம் கசியும். . .

ꙮꙮꙮꙮ

# 6) யூத ஜனத்தொகை புள்ளிவிவரம் சரியானதா?

## (அத்தியாயம் 6. பிரித்து ஆளும் சூழ்ச்சி)

**மதிப்பிற்குரிய பாரா அவர்களுக்கு,**

உங்களுடைய ஒவ்வொரு அத்தியாயத்தை படிக்கும் போதும், யூதர்கள் மற்றும் கிறிஸ்தவர்கள் பற்றி உங்கள் அடிமனதில் மறைந்திருப்பவைகள் ஒவ்வொன்றாக வெளிப்படுகின்றதை காணமுடிகின்றது. இஸ்லாமை நீங்கள் ஆதரியுங்கள் அது உங்கள் விருப்பம். ஆனால், யூத கிறிஸ்தவர்கள் பற்றி உண்மைக்கு புறம்பானவைகளை எழுதாதீர்கள்.

இப்போது ''பிரித்து ஆளும் சூழ்ச்சி'' என்ற ஆறாவது அத்தியாயத்தில் நீங்கள் பொறித்திருக்கும் சில மறைவான முத்துக்களை சுருக்கமாக காண்போம்.

**பாரா அவர்கள் எழுதியது:**

> *// கதையல்ல. உண்மையிலேயே இன்று உலகெங்கும் பரவி வசிக்கும் (இஸ்ரேலில் மட்டும் தொண்ணூறு சதவிகிதம்) சுமார் ஐம்பது லட்சம் யூதர்களுக்கும் அதுதான் நம்பிக்கை. அதுதான் ஞாபகார்த்தம். //*

அருமையான பாரா அவர்களே, நீங்கள் இந்த புத்தகத்தை **2004/2005**ம் ஆண்டில் எழுதினீர்கள். உங்கள் வரிகளின்படி:

- **2004/2005**ல் உலகத்தில் இருந்த யூதர்களின் ஜனத்தொகை சுமார்: **50** லட்சங்களாகும்.
- இஸ்ரேலில் மட்டும் **90%** யூதர்கள் இருந்தார்கள், அதாவது: **45** லட்சங்களாகும்.
- இஸ்ரேல் தவிர்த்து இதர நாடுகளில் **10%** யூதர்கள் இருந்தார்கள், அதாவது: **5** லட்சங்களாகும்.

**உங்களிடம் கேட்கவேண்டிய கேள்விகள்:**

- இந்த விவரங்களை எங்கேயிருந்து எடுத்தீர்கள்?
- எந்த நாட்டு கணக்கெடுப்பு இது?
- **2004**ல் உலக யூத ஜனத்தொகை **50** லட்சங்களா?
- இஸ்ரேலில் மட்டும் **90%** யூதர்கள் இருந்தார்களா?

பத்திரிக்கை துறைக்கு சம்மந்தப்பட்டவர்கள் இப்படியெல்லாம் தவறான விவரங்களை பரப்புவார்கள் என்று இதுவரைக்கும் எனக்கு தெரியாது.

**உண்மையான கணக்கெடுப்பை பார்ப்போம்:**

- **2004**ல் உலக யூத ஜனத்தொகை: **12.99** மில்லியன்கள் (சுமார் **129** லட்சங்கள் ஆகும்). ஒரு மில்லியன் என்பது **10** லட்சம் ஆகும். **[1]**
- **2005**ல் உலக யூத ஜனத்தொகை: **13.03** மில்லியன்கள் (சுமார் **130** லட்சங்கள் ஆகும்). **[2]**
- **2005**ல் இஸ்ரேலில் இருந்த யூதர்களின் எண்ணிக்கை, உலக யூத ஜனத்தொகையில் **40.2%** ஆகும். **[2]**

- **2014**ன் கணக்கெடுப்பின் படி, அமெரிக்காவில் மட்டும் இருக்கும் யூதர்களின் எண்ணிக்கை **57** இலட்சங்களை தாண்டுகிறது, அதாவது உலக யூத ஜனத்தொகையில் **40%** யூதர்கள் அமெரிக்காவில் வாழ்ந்துக்கொண்டு இருக்கிறார்கள். **[3]**
- விக்கீபீடியாவின்படி அமெரிக்காவில் **53** லட்சத்திலிருந்து **68** லட்சங்கள் வரை யூதர்கள் இருக்கிறார்கள். **[4]**

**Jewish Virtual Library** தளத்தில் கீழ்கண்ட புள்ளிவிவரங்கள் தரப்பட்டுள்ளது.

**உலக யூத ஜனத்தொகை (2014) கணக்கெடுப்பு:**

| Rank | Country | Population | % of Jewry |
|---|---|---|---|
| 1 | Israel | 6,103,200 | 42.9% |
| 2 | United States | 5,700,000 | 40.1% |

கி.பி. **1880** முதல் **2014** வரை உலக யூத ஜனத்தொகை கணக்கெடுப்பு, கீழேயுள்ள பட்டியலில் தரப்பட்டுள்ளது. நாம் கவனிக்கவேண்டிய ஆண்டுகள் **2004** ஆகும் **(2000** லிருந்து **2010** வரையுள்ள விவரங்கள்).

யூத ஜனத்தொகையின் கணக்கெடுப்பு **(1880** லிருந்து **2014** வரை):

| Year | Population |
|---|---|
| 1880 | 7,800,000 |
| 1900 | 10,600,000 |
| 1922 | 14,400,000 |
| 1925 | 14,800,000 |
| 1939 | 16,728,000 |
| 1945 | 11,000,000 |
| 1950 | 11,297,000 |
| 1955 | 11,800,000 |
| 1960 | 12,079,000 |
| 1970 | 12,585,000 |
| 1980 | 12,819,000 |
| 1990 | 12,868,000 |
| 2000 | 12,900,000 |
| 2010 | 13,428,300 |
| 2014 | 13,900,000 |

பாரா அவர்கள் கொடுத்த கணக்கையும், இதர ஜனத்தொகை கணக்கெடுப்பையும் ஒப்பிட்டால், கீழ்கண்ட வித்தியாசங்களை காணமுடியும்.

| விவரம் | பாரா அவர்களின் கணக்குப்படி | இதர ஜனத்தொகை கணக்கெடுப்பு | பாரா அவர்களின் புள்ளிவிவர தவறு |
|---|---|---|---|
| **2004/2005** உலக யூத ஜனத்தொகை | சுமார் **50** லட்சம் | சுமார் **129** லட்சம் | **79** லட்சம் |

| | | | |
|---|---|---|---|
| இஸ்ரேலில் யூதர்களின் சதவிகிதம் | 90% | 40-45% | பாதிக்கு பாதி |
| அமெரிக்காவில் யூத ஜனத்தொகை 2014 கணக்கெடுப்பு | இஸ்ரேல் தவிர்த்து இதர நாடுகளில் 10% யூதர்கள் இருக்கிறார்கள் (2004/2005ம் ஆண்டின் கணக்கு). | 40% | இதைப் பற்றி பாரா மூச்சு விடவில்லை |

இதுவரை நாம் கண்ட விவரங்களின் அடிப்படையில், பாரா அவர்களிடம் கீழ்கண்ட கேள்விகள் கேட்கவேண்டியுள்ளது:

**1.** 2004/2005ல் உலக யுத ஜனத்தொகை சுமார் 129 லட்சங்களாக இருக்கும் போது, உங்களுக்கு மட்டும் எப்படி 50 லட்சம் என்று கணக்கு வந்தது?

**2.** இஸ்ரேலில் மட்டும் 40%-45% யூதர்கள் இருக்கும்போது, நீங்கள் எப்படி 90% யூதர்கள் இஸ்ரேலில் இருக்கிறார்கள் என்றுச் சொல்கிறீர்கள்?

**3.** ஒரு பத்திரிக்கையாளராக (குமுதம் ரிப்போர்டர்) இருந்துக்கொண்டு, பொதுவாக கிடைக்கும் ஜனத்தொகை கணக்கெடுப்பையும் தப்பு தப்பாக சொல்கிறீர்களே, இதனை மக்கள் எப்படி எடுத்துக்கொள்வது? உங்களிடம் எப்படி மக்கள் சரியான விவரங்களை எதிர்ப்பார்க்கமுடியும்?

**4.** உங்கள் கணக்கிற்கும், இதர ஜனத்தொகை கணக்கெடுப்பிற்கும் இடையே 79 லட்சங்கள் வித்தியாசங்கள் வருகின்றதே! யாரிடமிருந்து இந்த கணக்கை வாங்கினீர்கள்? புள்ளிவிவரங்களில் ஓரிரு இலட்சம் வித்தியாசம் வந்தாலும் ஏற்கலாம், ஏனென்றால், கணக்கெடுப்பு என்று வந்துவிட்டால், 100% சரியாக இருக்காது, சில ஆயிரங்களில் வித்தியாசங்கள் வரலாம். ஆனால், 79 லட்சங்கள் வித்தியாசம் வராது. இது மக்களை முட்டாள்களாக்கும் மிகப்பெரிய ஏமாற்று வேலையாகும். ஒரு கொசுவை விழுங்கலாம், ஆனால், ஒட்டகத்தை விழுங்க முயலக்கூடாது. நீங்கள் முழு ஒட்டகத்தை விழுங்க முயன்றுள்ளீர்கள்.

**5.** உலக யூதர்களில் இஸ்ரேலில் மட்டும் 90% யூதர்கள் இருந்தார்களா? மீதமுள்ள 10% யூதர்கள் மட்டுமே உலகில் இதர நாடுகளில் வாழ்கிறார்களா? இப்படி மாற்றிச் சொல்வதினால், உங்களுக்கு என்ன நன்மை கிடைத்துவிட்டது?

**6.** நான் என்ன செய்வது? முஸ்லிம்கள் எனக்கு புத்தகங்களை கொடுத்து உதவினார்கள், அவைகளிலிருந்து எடுத்து நான் எழுதினேன் என்று சொல்லப்போகிறீர்களா?

**7.** ஒரு ஜனத்தின் கணக்கெடுப்பில் இப்படிப்பட்ட தில்லுமுல்லு செய்யும் உங்களிடம் எப்படி நடுநிலையான கருத்துக்கள், விமர்சனங்களை மக்கள் எதிர்ப்பார்க்க முடியும்?

மேற்கண்ட கணக்கெடுப்பை கொடுக்கும் தளங்களின் பெயர்களை நான் அடிக்குறிப்பில் கொடுத்துள்ளேன், வாசகர்கள் படித்து சரி பார்த்துக் கொள்ளலாம்.

**முடிவுரை:**

ஒரு ஜனத்தொகை கணக்கை சரியாக சொல்லத்தெரியாதவர்கள் எப்படி பத்திரிக்கைத்துறையில் வேலை செய்கிறார்கள்? ஆச்சரியமாக இருக்கிறது! யூத ஜனத்தொகை கணக்கை அப்படியே உல்டா செய்து, உங்கள் தொடர்களை படிக்கும் குமுதம் ரிப்போர்டர் வாசகர்களை ஏமாற்றியுள்ளீர்கள்.

அடுத்த பகுதியில் இன்னும் அனேக விவரங்களோடு சந்திக்கிறேன்.

**அடிக்குறிப்புக்கள்:**

**[1] http://www.jstor.org/stable/23604857?seq=1#page_scan_tab_contents**
**[2] http://www.ajcarchives.org/AJC_DATA/Files/2005_4_WJP.pdf**
**[3] http://www.jewishvirtuallibrary.org/jsource/Judaism/jewpop.html**
**[4] https://en.wikipedia.org/wiki/Jewish_population_by_country**

ஐஐஐஐ

# 7) கிறிஸ்தவர்கள் யூத எதிர்ப்புக் கொள்கையை (Antisemitism) ஆதரிப்பவர்களா?

## (அத்தியாயம் 6. பிரித்து ஆளும் சூழ்ச்சி)

மதிப்பிற்குரிய பாரா அவர்களுக்கு,

இந்த கட்டுரையில் ''பிரித்து ஆளும் சூழ்ச்சி'' என்ற ஆறாவது அத்தியாயத்தில் நீங்கள் முன்வைத்த சில விஷத்துளிகளைப் பற்றி காண்போம்.

உங்களுக்கு என் வேண்டுகோள் என்னவென்றால், இஸ்லாமை நீங்கள் ஆதரியுங்கள் அது உங்கள் விருப்பம், ஆனால், அதற்காக யூதர்கள் மற்றும் கிறிஸ்தவர்களுக்கு இடையில் விரிசல்களை உருவாக்காதீர்கள். யூதர்கள் மற்றும் கிறிஸ்தவர்கள் பற்றி உண்மைக்கு மாறானவைகளை எழுதாதீர்கள்.

**பாரா அவர்கள் எழுதியது:**

> *// முக்கியமாக, "இயேசுவைக் கொன்றவர்கள்" என்று கிறிஸ்தவப் பிரசாரகர்கள் மிகத்தீவிரமாக உலகெங்கும் சொல்லிக்கொண்டு போனது மாபெரும் அவமானமாக அவர்களின் வாழ்வின் மீது கவிந்து நின்றது.*
>
> . . .
>
> *இயேசுவைப் பின்பற்றி, அவர் பேசிய மொழிகளின் அடியற்றி வாழ முடிவெடுத்தவர்கள், கிறிஸ்தவர்கள் எனப்பட்டார்கள். அவர்களேதான் மிச்சமுள்ள தமது பூர்வீகக் குலத்தவரை அப்படிப் பழிக்கவும் தொடங்கினார்கள். வேற்று இனத்தவர்கள் அல்லர். முக்கியமாக, அராபியர்கள் அல்லர். (அத்தியாயம் 6. பிரித்து ஆளும் சூழ்ச்சி) //*

**ஆதி கிறிஸ்தவர்கள் யூதர்களை பழித்தார்களா?**

**உங்களுடைய வரிகளில் கீழ்கண்ட குற்றச்சாட்டுகளை நீங்கள் முன்வைத்துள்ளீர்கள்:**

**1) "இயேசுவைக் கொன்றவர்கள்" என்று கிறிஸ்தவப் பிரசாரகர்கள் மிகத்தீவிரமாக உலகெங்கும் சொல்லிக்கொண்டு போனார்கள்**

**2) கிறிஸ்தவர்கள் தமது பூர்வீக குலத்தவரை (யூதர்களை) பழித்தார்கள்**

**ஒரு பக்கம், அக்காலத்தில் அனேக யூதர்கள் கிறிஸ்தவர்களாக மாறிவிட்டார்கள் என்றுச் சொல்கிறீர்கள், ஆனால், இன்னொரு பக்கம் கிறிஸ்தவர்கள் யூதர்களை பழித்துக்கொண்டு இருந்தார்கள் என்றுச் சொல்கிறீர்கள். இது முரண்பாடு அல்லவா? கிறிஸ்தவர்கள் யூதர்களைப் பார்த்து ''இயேசுவை கொன்றவர்கள்'' என்று மிகத்தீவிரவாக பழித்தால், அதிக எண்ணிக்கையில் யூதர்கள் எப்படி கிறிஸ்தவர்களாக மாறுவார்கள்?**

**எவ்விதம் யூதர்கள் கிறிஸ்தவர்களானார்கள் என்பதை நீங்கள் விவரிப்பதை, இங்கு தருகிறேன்.**

**பாரா அவர்கள் எழுதியது:**

*// 5]* **கிருஸ்துவமும் யூதர்களும்:**

*கிறிஸ்தவ மதத்தின் எழுச்சி, யூதகுலத்துக்கு விடப்பட்ட முதல் மற்றும் மிகப்பெரிய சவால். இதில் சந்தேகமே இல்லை. கி.பி. 300-ம் ஆண்டு சிரியா, ஆசியா மைனர், கிரீஸ், சைப்ரஸ் மற்றும் ஆப்பிரிக்காவின் வடக்குப் பகுதியில் வசித்துவந்த யூதர்களில் மிகப்பெரும்பான்மையானோர் கிறிஸ்தவர்களாக மாறிவிட்டிருந்தார்கள். (நிலமெல்லாம் இரத்தம், 5] கிருஸ்துவமும் யூதர்களும்)*

**7] புத்தியால் வெல்வது:**

*முதலில் இனம் அழியாமல் காப்பதல்லவா முக்கியம்? மதம் காணாமல் போய்விடாதவாறு தடுப்பதல்லவா முக்கியம்?*

*அதுவும் எப்படிப்பட்ட காலகட்டம் அது! காட்டுத்தீ மாதிரி மத்தியக் கிழக்கு முழுவதும் கிறிஸ்தவம் பரவிக்கொண்டிருந்தது. பல யூதர்கள் கிறிஸ்தவர்களாக மாறிக்கொண்டிருந்தார்கள். சிறு தெய்வ வழிபாடுகளில் ஈடுபட்டுக்கொண்டிருந்த பல அராபிய இனக்குழுக்களும் மொத்தமாக கிறிஸ்தவத்தைத் தழுவிக்கொண்டிருந்தன. (நிலமெல்லாம் இரத்தம், 7] புத்தியால் வெல்வது) //*

**பாரா அவர்களே! நடுநிலையோடு நீங்கள் எழுதவில்லை. உங்களுக்கு நான் இஸ்லாமையும், கிறிஸ்தவத்தையும் சொல்லித்தரவேண்டி இருக்கிறது. இந்த இரண்டும், உங்கள் அனைத்து கட்டுரைகளுக்கும், நான் பதில் தரும்போது ஓரளவிற்கு நிறைவேறி விடும்.**

**கிறிஸ்தவர்கள் ''யூத எதிர்ப்பு கொள்கையை ''(Antisemitism) ஆதரிக்கும் மக்களாக காட்ட நீங்கள் முயன்றுள்ளீர்கள், அதே நேரத்தில், அரேபியர்கள் அப்படிப்பட்டவர்கள் அல்ல என்று சொல்ல முயன்றுள்ளீர்கள்.**

**''இயேசுவை கொன்றவர்கள்'' என்று யூதர்களை தீவிரவாக பழித்துக்கொண்டு இயேசுவின் சீடர்கள் பிரச்சாரம் செய்தார்கள் என்று நீங்கள் குற்றம் சாட்டினீர்கள். எனவே, புதிய ஏற்பாடும், இயேசுவின் சீடர்களாகிய ஆரம்பகால கிறிஸ்தவர்களும் யூதர்கள் பற்றி**

எப்படிப்பட்ட கருத்தை கொண்டிருந்தார்கள் என்பதை சுருக்கமாக எழுத விரும்புகிறேன். புதிய ஏற்பாடு தான் கிறிஸ்தவத்தின் அடிப்படை கோட்பாடுகளுக்கு அடித்தளம். எனவே, புதிய ஏற்பாட்டின் போதனைகளைத் தான் கிறிஸ்தவர்கள் பின்பற்றுவார்கள்.

## புதிய ஏற்பாடும், ஆரம்ப கால கிறிஸ்தவர்களும் யூதர்களை வெறுத்தார்களா? பழித்தார்களா? (ஆன்டி செமிடிஸத்தை ஆதரித்தார்களா?)

### அ) யூதர்களின் வேதத்தை படித்துக்கொண்டு யூதர்களை எப்படி வெறுக்கமுடியும்?

கிறிஸ்தவர்களின் பைபிளில் பழைய ஏற்பாடு மற்றும் புதிய ஏற்பாடு என்ற இரு பிரிவுகள் உள்ளன. பழைய ஏற்பாடு என்பது யூதர்கள் தனக் (Tanakh) என்றுச் சொல்லும் அவர்களின் வேதம் தான். யூதர்களின் வேதத்திலிருந்து அதாவது பழைய ஏற்பாட்டிலிருந்து ''யூத எதிர்ப்பு கொள்கையை'' ஆதரிக்கும் விவரங்களை யாராது காணமுடியுமா? முடியாதல்லவா!

புதிய ஏற்பாட்டை விட பழைய ஏற்பாடு மூன்று மடங்கு பெரியது. கிறிஸ்தவர்களின் பைபிள் தன்னிடம் ¾ பாகம் யூதர்களின் வேதத்தை (பழைய ஏற்பாட்டை) வைத்துக்கொண்டு, எப்படி அது யூதர்களுக்கு எதிராக பேசமுடியும்? புரியும் படி சொல்கிறேன், பைபிளின் கால்பாகம் (¼ புதிய ஏற்பாடு) எப்படி பைபிளின் முக்கால் பாகத்தை (¾ பழைய ஏற்பாடு) எதிர்க்கமுடியும்?

1. யூதர்களின் முற்பிதாக்கள் கிறிஸ்தவர்களுக்கு வழிக்காட்டிகள்.
2. யூதர்களின் முற்பிதா ஆபிரகாம் கிறிஸ்தவர்களின் விசுவாச தந்தை.
3. யூதர்கள் ஆபிரகாமின் இரத்த சம்மந்தமுள்ள சந்ததி, கிறிஸ்தவர்கள் ஆன்மீக (ஆவிக்குரிய) வகையில் ஆபிரகாமின் சந்ததி.
4. யூதர்களின் தீர்க்கதரிசிகள் கிறிஸ்தவர்களின் தீர்க்கதரிசிகள்.
5. யூதர்களின் வேதம் கிறிஸ்தவர்களின் வேதத்தின் முக்கால் பாகம்.
6. யூதர்களின் மேசியா கிறிஸ்தவர்களுக்கு இரட்சகர்.
7. யூதர்களாகிய இயேசுவின் சீடர்கள், கிறிஸ்தவர்களுக்கு அப்போஸ்தலர்கள், திருச்சபைக்கு அஸ்திபாரங்கள்.
8. யூத மண், கிறிஸ்தவர்களின் இரட்சகர் நடந்த புனித பூமி.

இப்படி இருக்க, கிறிஸ்தவர்களோ, புதிய ஏற்பாடோ எப்படி, ''யூத எதிர்ப்பு கொள்கையை'' ஆதரிக்கும்?

### ஆ) இயேசு யூதர்களை வெறுத்தாரா?

**இரட்சிப்பு யூதர்கள் வழியாக வருகிறது:**

ஒரு சமாரிய பெண்ணிடம் இயேசு பேசிக்கொண்டு இருந்தார். இவ்விருவர் தேவனை எந்த இடத்தில் தொழுதுக்கொள்வது சரியானது? என்ற தலைப்பு பற்றி பேசிக்கொண்டு இருந்தார்கள். அந்த பெண் ''சமாரியாவில் தொழுதுக்கொள்ளவேண்டும்'' என்றுச் சொன்னாள். ஆனால், யூதர்கள் ஜெருசலேமில் தொழுதுக்கொள்ளவேண்டுமென்று சொல்கிறார்களே! இதில் எது சரியானது என்று அவள் கேட்டாள். இயேசு சுருக்கமான வார்த்தைகளில் தெளிவாக கீழ்கண்டவிதமாக கூறினார்:

> நீங்கள் அறியாததைத் தொழுதுகொள்ளுகிறீர்கள்; நாங்கள் அறிந்திருக்கிறதைத் தொழுதுகொள்ளுகிறோம்; ஏனென்றால் இரட்சிப்பு யூதர்கள் வழியாய் வருகிறது. (யோவான் 4:22)

இங்கு ''நாங்கள்'' என்று இயேசு சொன்னபோது, தன்னையும் ஒரு யூதனாகவே அடையாளப்படுத்துகிறார். இவர் எப்படி யூதர்களை வெறுக்கமுடியும்? இரட்சிப்பு யூதர்கள் வழியாய் வருகிறது என்று அவர் சொன்ன போது, மேசியா யூதர்களின் வழியாக வருகிறார் என்பதை தெரிவிக்கிறார், அதாவது தன் மூலமாகத் தான் இரட்சிப்பு வரும் என்றுச் சொல்கிறார். இயேசு யூதர்களின் "தனக் வேதத்தில்" சொல்லப்பட்டவைகளை நிறைவேற்ற வந்தாரே ஒழிய அதனை அழிக்க அல்ல (மத்தேயு 5:17). இந்த உரையாடலின் கடைசியில் "சமாரியர்களும், யூதர்களும் எதிர்ப்பார்த்திருந்த மேசியா தாம் தான்" என்ற உண்மையை, அந்த பெண்ணிடம் உவமைகளாக அல்லாமல், தெளிவாக வெளிப்படுத்திவிட்டார். உலகத்திற்கான இரட்சகன் யூத வம்சத்திலிருந்து வந்தார் என்பது தான் இயேசுவைப் பற்றிய பூர்வீக விலாசம்.

இரட்சிப்பு யூதர்கள் வழியாக வருகிறது என்று 100% நம்பும் கிறிஸ்தவர்கள் எப்படி ''யூத எதிர்ப்பு கொள்கையை'' ஆதரிப்பார்கள்?

### இ) இயேசு யூதர்களை கடிந்துக்கொண்டது ஏன்?

முதல் நூற்றாண்டின் இஸ்ரேல் யூதர்கள் இயேசுவை புறக்கணித்தார்கள். தாங்களாகவே பல பாரம்பரியங்களை உருவாக்கிக்கொண்டும், தேவாலயத்தில் வியாபாரத்தை அனுமதித்துக்கொண்டும், தாங்கள் தான் நீதிமான்கள், மற்றவர்கள் எல்லோரும் பாவிகள் என்ற எண்ணத்தில் வாழ்ந்துக்கொண்டு இருந்தார்கள். இந்த நிலைப்பாட்டை இயேசு விமர்சித்தார், வேதவாக்கியங்களை சரியாக புரிந்துக்கொள்ளுங்கள் என்று அவர்களை கடிந்துக்கொண்டார்.

ஒரு மனிதனின் பிழைகளை சுட்டிக்கட்டி கடிந்துக் கொள்வது என்பது வேறு, அந்த மனிதனையே வெறுத்துத்தள்ளுவது என்பது வேறு. இயேசு பிழைகளை சுட்டிக்காட்டினார், ஆனால் யூதர்களை வேறுத்துத் தள்ளவில்லை.

பிள்ளைகள் மதுபானம் குடித்து வெறுத்து, புகைபிடித்து தங்கள் வாழ்க்கையை கெடுத்துக்கொள்ளும் போது, பெற்றோர்கள் அவர்களை கண்டிக்கிறார்கள், திட்டுகிறார்கள். ஆனால், அவர்கள் அப்படியே அழிந்துவிடவேண்டுமென்று பெற்றோர்கள் விரும்புவது இல்லை. இதைத்தான் இயேசுவும் செய்தார். அடிக்கிற கைதான் அனைக்கும் என்பார்களே, அது போல.

இயேசு அனேக யூதர்களை மெச்சிக்கொண்டார், அதுவும் அவர்கள் யூதமதத்தலைவர்களாக இருந்தார்கள், ஆனால், உண்மையான மனதுடன் சத்தியத்தை அறிந்துக்கொள்ள விரும்பினார்கள். இரகசியமாகவும் சில யூத மத தலைவர்கள் இயேசுவை பின்பற்றிக்கொண்டு இருந்தார்கள்.

> இயேசு நாத்தான்வேலைத் தம்மிடத்தில் வரக்கண்டு அவனைக்குறித்து: இதோ, கபடற்ற உத்தம இஸ்ரவேலன் என்றார். (யோவான் 1:47)

யூத மதத்தலைவர்கள் சொல்வதை செய்யுங்கள் என்று சீடர்களுக்கும், இதர ஜனங்களுக்கும் இயேசு கட்டளையிட்டார், ஆனால் அவர்களின் செய்கைகளை பின்பற்றாதிருங்கள் என்றார்.

> பின்பு இயேசு ஜனங்களையும் தம்முடைய சீஷர்களையும் நோக்கி: வேதபாரகரும் பரிசேயரும் மோசேயினுடைய ஆசனத்தில் உட்கார்ந்திருக்கிறார்கள்; ஆகையால், நீங்கள் கைக்கொள்ளும்படி அவர்கள் உங்களுக்குச் சொல்லுகிற யாவையும் கைக்கொண்டு செய்யுங்கள்; அவர்கள் செய்கையின்படியோ செய்யாதிருங்கள்; ஏனெனில், அவர்கள் சொல்லுகிறார்கள், சொல்லியும் செய்யாதிருக்கிறார்கள். (மத்தேயு 23:1-3)

எனவே, இயேசு யூதர்களை வெறுத்தார் என்பது ஆதாரமற்ற கூற்றாகும். யூதர்களை மட்டுமல்ல, உலக மக்கள் எவரையும் அவர் வெறுப்பதில்லை, ஏனென்றால், அவர் படைத்த படைப்பாயிற்றே!

**ஈ) யூதர்களுக்காக கண்ணீர் விட்ட இயேசு:**

ஆரம்ப முதல் யூதர்களை கடிந்துக்கொண்ட இயேசு, கடைசி நேரத்தில் அவர்கள் மேசியாவை அறிந்துக்கொள்ளாமல் இருந்ததைக் கண்டு, அவர்கள் மேல் வரவிருக்கும் ஆபத்தைப் பார்த்து கண்ணீர் விட்டார். பல நூற்றாண்டுகளுக்கு முன்பு ஆபிரகாமிடம் செய்த உடன்படிக்கையாயிற்றே, அதனை எப்படி மறக்கமுடியும்?

> அவர் சமீபமாய் வந்தபோது நகரத்தைப்பார்த்து, அதற்காகக் கண்ணீர் விட்டழுது, உனக்குக் கிடைத்த இந்த நாளிலாகிலும் உன் சமாதானத்துக்கு ஏற்றவைகளை நீ அறிந்திருந்தாயானால் நலமாயிருக்கும், இப்பொழுதோ அவைகள் உன் கண்களுக்கு மறைவாயிருக்கிறது. (லூக்கா 19:41-42)

**உ) இறைவனுடைய வார்த்தைகள் யூதர்கள் வழியாக வந்தது:**

இரட்சிப்பு யூதர்கள் வழியாக வருகிறது என்று இயேசு கூறினார். இங்கு புதிய ஏற்பாடு சொல்வதை கவனியுங்கள். தேவனுடைய வார்த்தைகள் அவர்களிடம் ஒப்புக்கொடுக்கப்பட்டது. மோசேவிடம் கர்த்தர் கொடுத்த 10 கட்டளைகள் தொடங்கி, பழைய ஏற்பாடு முழுவதுமான தேவனுடைய வார்த்தைகள் யூதர்களிடம் தான் ஒப்புவிக்கப்பட்டது, இது தான் மேன்மை.

> இப்படியானால், யூதனுடைய மேன்மை என்ன? விருத்தசேதனத்தினாலே பிரயோஜனம் என்ன? அது எவ்விதத்திலும் மிகுதியாயிருக்கிறது; தேவனுடைய வாக்கியங்கள் அவர்களிடத்தில் ஒப்புவிக்கப்பட்டது விசேஷித்த மேன்மையாமே. (ரோமர் 3:1-2)

யூதர்கள் பற்றி இப்படிப்பட்ட மேன்மையான வார்த்தைகளைச் சொல்லும் புதிய ஏற்பாடு, எப்படி ''யூத எதிர்ப்பு கொள்கையை'' ஆதரிக்கும்?

**ஊ) இறைவன் மனிதர்களுக்கு கொடுத்த பரிசுகள், யூதர்கள் வழியாகவே வந்தன:**

இரட்சிப்பு மட்டுமல்ல, இறைவன் உலக மக்களுக்கு கொடுத்த இதர பரிசுகளும் யூதர்கள் வழியாகவே வந்தது என்று புதிய ஏற்பாடு சாட்சி பகருகிறது.

> அவர்கள் இஸ்ரவேலரே; புத்திரசுவிகாரமும், மகிமையும், உடன்படிக்கைகளும், நியாயப்பிரமாணமும், தேவாராதனையும், வாக்குத்தத்தங்களும் அவர்களுடையவைகளே; பிதாக்கள் அவர்களுடையவர்களே; மாம்சத்தின்படி

கிறிஸ்துவும் அவர்களில் பிறந்தாரே, இவர் என்றென்றைக்கும் ஸ்தோத்திரிக்கப்பட்ட சர்வத்திற்கும் மேலான தேவன். ஆமென். (ரோமர் 9:4-5)

யூதர்களுக்குத் தான் புத்திரசுவிகாரம், மகிமை, உடன்படிக்கைகள், நியாயப்பிரமாணம், தேவாராதனைகள், வாக்குத்தத்தங்கள் கொடுக்கப்பட்டது, மேலும், அவர்கள் மூலமாக, இவைகள் அனைத்தும் இதர உலக மக்களுக்கு கிடைத்தது.

மேற்கண்ட பட்டியலில், கடைசியாக சொன்ன பரிசு 'கிறிஸ்து' ஆவார். இன்றைக்கு யூதர்கள் மேசியா தான் இயேசு என்று நம்பாமல் இருந்தாலும், அவர்களுக்கு நாம் (கிறிஸ்தவர்கள்) நன்றிச் சொல்ல கடமைப்பட்டுள்ளோம், ஏனென்றால், மாம்சத்தின்படி கிறிஸ்துவும் அவர்களில் பிறந்தபடியினால். தேவன் இவ்வுலகில் மனிதனாக வரமுடிவு செய்தபோது, அவர் தேவதூதராக வராமல், ஆபிரகாமின் சந்ததில் வந்தார், யூத வம்சத்தில் தாவீதின் மகனாக வந்தார் (எபிரேயர் 2:16, மத்தேயு 1:1).

தங்கள் அருமை இரட்சகரை கொடுத்த யூதர்களை எப்படி கிறிஸ்தவர்கள் பகைத்துக்கொள்வார்கள்? எப்படி அவர்களை வெறுத்துதள்ளுவார்கள்? நிச்சயமாக இல்லை. இது ஒரு புறம் இருக்க, அந்த இரட்சகர் சொன்னது போல, எந்த மக்களையும் வெறுப்பது கிறிஸ்தவர்களுக்கு தூரமானதாகும்.

### எ) யூதர்களை தேவன் புறக்கணித்துவிட்டாரா?

கிறிஸ்தவர்கள் இஸ்ரேல் தேசத்திற்கு ஆதரவாக இருக்கிறார்கள் என்பதற்கு காரணம் இருக்கிறது. தேவன் ஆபிரகாமிடம் "உன்னை ஆசீர்வதிக்கிறவர்களை ஆசீர்வதிப்பேன், உன்னைச் சபிக்கிறவனைச் சபிப்பேன்; பூமியிலுள்ள வம்சங்களெல்லாம் உனக்குள் ஆசீர்வதிக்கப்படும்." என்று கூறினார் (ஆதியாகமம் 12:3).

புதிய ஏற்பாட்டிலும் கவனிக்கும் போது, இயேசு பரலோகத்திற்கு எடுத்துக்கொள்ளப்படுவதற்கு முன்பு, சீடர்கள் அவரிடம் ". . . ஆண்டவரே, இக்காலத்திலா ராஜ்யத்தை இஸ்ரவேலுக்குத் திரும்பக் கொடுப்பீர் என்று கேட்டார்கள்." (அப் 1:6). அதற்கு இயேசு, யூதர்களையும், இஸ்ரேலையும் மறந்துவிடுங்கள், இனி அவர்கள் என் பட்டியலில் (உடன்படிக்கையில்) இல்லை என்றுச் சொல்லாமல், கீழ்கண்டவாறு கூறினார்:

> அதற்கு அவர்: பிதாவானவர் தம்முடைய ஆதீனத்திலே வைத்திருக்கிற காலங்களையும் வேளைகளையும் அறிகிறது உங்களுக்கு அடுத்ததல்ல. (அப் 1:7)

இஸ்ரேலுக்கு விடுதலை வரும், ஆனால், அதற்கு நியமிக்கப்பட்ட காலத்தில் அது வரும் என்று மறைமுகமாக சொல்லிவிட்டார், யூதர்களை முழுவதுமாக மறந்துவிடுங்கள் என்றுச் சொல்லவில்லை. புதிய ஏற்பாட்டின் ரோமருக்கு எழுதின நிருபத்தில் இவ்விதமாக கூறப்பட்டுள்ளது:

> . . . அதென்னவெனில், புறஜாதியாருடைய நிறைவு உண்டாகும்வரைக்கும் இஸ்ரவேலரில் ஒரு பங்குக்குக் கடினமான மனதுண்டாயிருக்கும். (ரோமர் 11:25)

அதாவது, யூதரல்லாத இதர உலக மக்கள் இயேசு மூலமாக வரும் இரட்சிப்பு பெற்று, அதன் நிறைவு ஒரு அளவிற்கு வரும்வரை, இஸ்ரவேலரில் ஒரு பங்குக்கு கடினமான மனதுண்டாகும் (அவர்கள் இரட்சகரை அறிந்துக் கொள்ளமாட்டார்கள்). யூதரல்லாத மக்களின் நிறைவு வரும் போது,

இந்தப்பிரகாரம் இஸ்ரவேலரெல்லாரும் இரட்சிக்கப்படுவார்கள். மீட்கிறவர் சீயோனிலிருந்து வந்து, அவபக்தியை யாக்கோபை விட்டு விலக்குவார் என்றும்; நான் அவர்களுடைய பாவங்களை நீக்கும்போது, இதுவே நான் அவர்களுடனே செய்யும் உடன்படிக்கை என்றும் எழுதியிருக்கிறது. (ரோமர் 11:26-27)

இப்படியிருக்க, தேவன் தம்முடைய ஜனங்களைத் தள்ளிவிட்டாரோ என்று கேட்கிறேன், தள்ளிவிடவில்லையே (ரோமர் 11:1).

தேவன் தாம் முன்னறிந்துகொண்ட தம்முடைய ஜனங்களைத் தள்ளிவிடவில்லை. (ரோமர் 11:2)

அப்படிப்போல இக்காலத்திலேயும் கிருபையினாலே உண்டாகும் தெரிந்துகொள்ளுதலின்படி ஒரு பங்கு மீதியாயிருக்கிறது. (ரோமர் 11:5).

எனவே, தேவன் இஸ்ரவேலர்களை தள்ளிவிடவில்லை. இப்படி இருக்க, கிறிஸ்தவர்கள் எப்படி யூதர்களை வெறுக்கமுடியும்? அவர்களை எப்படி பழிக்கமுடியும்?

**ஏ) ஆரம்ப கால சீடர்கள் மற்றும் கிறிஸ்தவர்கள் யூதர்களை வெறுத்தார்களா?**

இயேசு மட்டுமல்ல, அவரது சீடர்களும், ஆரம்ப கால கிறிஸ்தவர்களும் யூதர்களை வெறுக்கவில்லை, ''யூத எதிர்ப்பு கொள்கையை'' ஆதரிக்கவில்லை.

சகோதரரே, இஸ்ரவேலர் இரட்சிக்கப்படவேண்டும் என்பதே என் இருதயத்தின் விருப்பமும் நான் தேவனை நோக்கிச் செய்யும் விண்ணப்பமுமாயிருக்கிறது. (ரோமர் 10:1)

யூதர்கள் இயேசுவை மேசியாவாக அங்கீகரிக்கவேண்டுமென்று ஆரம்பகால கிறிஸ்தவர்கள் துடித்தார்கள். இங்கே பாருங்கள், உண்மையான அன்பின் இன்னொரு வெளிப்பாடு. யூதர்கள் இரட்சிக்கப்படுவார்களானால், நான் சபிக்கப்படவும் தயாராக இருக்கிறேன் என்கிறார், அப்போஸ்தலர் பவுல்.

எனக்கு மிகுந்த துக்கமும் இடைவிடாத மனவேதனையும் உண்டாயிருக்கிறது;

நான் சொல்லுகிறது பொய்யல்ல, கிறிஸ்துவுக்குள் உண்மையைச் சொல்லுகிறேன் என்று பரிசுத்த ஆவிக்குள் என் மனச்சாட்சியும் எனக்குச் சாட்சியாயிருக்கிறது.

மாம்சத்தின்படி என் இனத்தாராகிய என் சகோதரருக்குப் பதிலாக நானே கிறிஸ்துவைவிட்டுச் சபிக்கப்பட்டவனாக வேண்டுமென்று விரும்புவேனே. (ரோமர் 9:1-3)

இவைகளை படித்த முதல் நூற்றாண்டு கிறிஸ்தவர்கள் எப்படி யூதர்களுக்கு எதிராக செயல்படமுடியும்?

**புதிய ஏற்பாட்டின் இறையியல் என்ன?**

கடைசியாக, பாரா அவர்களே, உங்களுக்கு புதிய ஏற்பாட்டின் இறையியலை சிறிது விளக்கவேண்டியுள்ளது.

இயேசுவின் பிரதான சீடராகிய பேதுரு "இயேசுவை கொலை செய்த யூதர்களிடம் எப்படி பேசினார்" என்பதை பாருங்கள்.

இயேசு கொலை செய்யப்பட யூதர்கள் காரணமாக இருந்தது உண்மையே! ஆனால், கிறிஸ்தவர்கள் இதனை எப்படி பார்க்கவேண்டும்? இதற்கு பேதுரு பதில் சொல்வதை பாருங்கள்.

**1) தேவனின் திட்டம் மற்றும் முன்னறிவிப்பு**

> **2:23** அப்படியிருந்தும், தேவன் நிர்ணயித்திருந்த ஆலோசனையின்படியேயும், அவருடைய முன்னறிவின்படியேயும் ஒப்புக்கொடுக்கப்பட்ட அந்த இயேசுவை நீங்கள் பிடித்து, அக்கிரமக்காரருடைய கைகளினாலே சிலுவையில் ஆணியடித்துக் கொலைசெய்தீர்கள்.
>
> **2:36** ஆகையினால், நீங்கள் சிலுவையில் அறைந்த இந்த இயேசுவையே தேவன் ஆண்டவரும் கிறிஸ்துவுமாக்கினாரென்று இஸ்ரவேல் குடும்பத்தார் யாவரும் நிச்சயமாய் அறியக்கடவர்கள் என்றான். (அப்போஸ்தலர் நடபடிகள் 2:23, 36)

முதன் முதலாக யூதர்களுக்கு பேதுரு பிரசங்கம் செய்கிறார். "இஸ்ரவேலரே நீங்கள் இயேசுவை கொலை செய்தீர்கள் உண்மையே! ஆனால், அது தேவனின் திட்டம், மேலும் அவர் இதைப் பற்றி முன்னறிவித்து இருக்கிறார் எனவே, உங்களுக்கு தாழ்வு மனப்பான்மையோ அல்லது குற்ற உணர்வோ தேவையில்லை" என்று பிரசங்கம் செய்தார். இந்த பிரசங்கத்தைக் கேட்டு 3000 பேர் யூதர்கள் இயேசுவை ஏற்றுக்கொண்டார்கள். நீங்கள் இயேசுவை கொலை செய்தீர்கள், நீங்கள் குற்றவாளிகள் தான் என்று பழித்திருந்தால், இப்படி யூதர்கள் முதல் பிரசங்கத்திலேயே இயேசுவை ஏற்றுக்கொண்டு இருந்திருப்பார்களா?

இயேசுவை கொலை செய்ததற்கு யூதர்கள் எந்த அளவுக்கு பொறுப்பு வகிக்கவேண்டுமோ, அதே போல, தேவனும் பொறுப்பு வகிக்கவேண்டும், ஏனென்றால், உலக மக்களை இரட்சிக்க மேசியா மரிக்கவேண்டியது அவசியம். எனவே, இயேசுவை கொலை செய்ததில் யூதர்களுக்கும் மற்றும் தேவனுக்கும் 50-50 பங்கு ஆகும்.

யூதர்கள் வெறும் அம்பு தான், எய்தவர் தேவனாவார். தேவன் தான் அவரை நொறுக்க சித்தமானார். இதனை கிறிஸ்தவர்கள் சரியாக புரிந்துக்கொண்டுள்ளார்கள். எனவே, யூதர்கள் மீது தேவையில்லாத வெறுப்பை கிறிஸ்தவர்கள் வளர்த்துக்கொள்ளவில்லை.

> ஏசாயா **53:5** நம்முடைய மீறுதல்களினிமித்தம் அவர் காயப்பட்டு, நம்முடைய அக்கிரமங்களினிமித்தம் அவர் நொறுக்கப்பட்டார்; நமக்குச் சமாதானத்தை உண்டுபண்ணும் ஆக்கினை அவர்மேல் வந்தது; அவருடைய தழும்புகளால் குணமாகிறோம்.
>
> ஏசாயா **53:10** கர்த்தரோ அவரை நொறுக்கச் சித்தமாகி, அவரைப் பாடுகளுக்குட்படுத்தினார்; அவருடைய ஆத்துமா தன்னைக் குற்றநிவாரணபலியாக ஒப்புக்கொடுக்கும்போது, அவர் தமது சந்ததியைக் கண்டு, நீடித்தநாளாயிருப்பார், கர்த்தருக்குச் சித்தமானது அவர் கையினால் வாய்க்கும்.

**2) அறியாமையில் கொலை செய்த யூதர்கள்**

இதே பேதுரு, இன்னொரு இடத்தில் எப்படி யூதர்களுக்கு பிரசங்கம் செய்கிறார் என்று பாருங்கள். யூதர்கள் அறியாமல் கொலை செய்தார்கள் என்றுச் சொல்கிறார்.

> **3:15** ஜீவாதிபதியைக் கொலைசெய்தீர்கள்; அவரைத் தேவன் மரித்தோரிலிருந்தெழுப்பினார்; அதற்கு நாங்கள் சாட்சிகளாயிருக்கிறோம்.
>
> **3:17** சகோதரரே, நீங்களும் உங்கள் அதிகாரிகளும் அறியாமையினாலே இதைச் செய்தீர்களென்று அறிந்திருக்கிறேன்.
>
> **3:18** கிறிஸ்து பாடுபடவேண்டுமென்று தேவன் தம்முடைய தீர்க்கதரிசிகளெல்லாருடைய வாக்கினாலும் முன்னறிவித்தவைகளை இவ்விதமாய் நிறைவேற்றினார். (அப்போஸ்தலர் நடபடிகள் 3:15,17,18)

எனவே, கிறிஸ்தவர்கள் யூதர்களை பழிக்கவில்லை என்பது இதன் மூலம் அறியலாம்.

**3) யூதர்கள் கொலை செய்த இயேசுவே, இஸ்ரவேலுக்கு இரட்சகரானார்:**

இன்னொரு இடத்திலும் பேதுரு இதையே பிரதிபலித்தார். இஸ்ரவேலுக்கு மனந்திரும்புதலையும் பாவமன்னிப்பும் அளிக்கும்படியே இயேசு மரணத்திலிருந்து எழும்பினார்.

> **5:30** நீங்கள் மரத்திலே தூக்கிக் கொலைசெய்த இயேசுவை நம்முடைய பிதாக்களின் தேவன் எழுப்பி,
>
> **5:31** இஸ்ரவேலுக்கு மனந்திரும்புதலையும் பாவமன்னிப்பையும் அருளுகிறதற்காக, அவரை அதிபதியாகவும் இரட்சகராகவும் தமது வலதுகரத்தினாலே உயர்த்தினார். (அப்போஸ்தலர் நடபடிகள் 5:30-31)

கடைசியாக, இயேசு சிலுவையில் தம் உயிரை கொடுப்பதற்கு முன்பே, யூதர்களை மன்னித்துவிட்டார். பிதாவே இவர்களை மன்னியும் என்றுச் சொல்லிவிட்டு தான் அவர் மரித்தார். இயேசு மன்னித்த மக்களை குற்றப்படுத்த கிறிஸ்தவர்களுக்கு அதிகாரமில்லை.

மேற்கண்டவிதமான அஸ்திபாரத்தின் மீதுதான் ஆரம்பகால கிறிஸ்தவர்கள் தங்கள் ஊழியத்தை கட்டி எழுப்பினார்கள். பாரா அவர்களே, நீங்கள் சொல்வதெல்லம், உண்மையல்ல.

**முடிவுரை:** கிறிஸ்தவர்கள் யூதர்களை வெறுப்பவர்கள் என்ற விஷத்தை நீங்கள் கக்கியுள்ளீர்கள். நீங்கள் எழுதும் பேனாவில் மையை நிரப்பி எழுதுங்கள், விஷத்தையல்ல.

இன்னும் விஷமுறிவு தொடரும். . .

ꕤꕤꕤꕤ

# 8) யூத மண்ணில் அரேபியர்களின் முகவரி

**மதிப்பிற்குரிய பாரா அவர்களுக்கு,**

தெருவில் வாகனத்தில் வேகமாக சென்றுக்கொண்டு இருக்கும் போது, திடீரென்று வீட்டிலிருந்து கண்மூடித்தனமாய் வெளியே ஓடிவரும் பையன், வண்டிக்கு முன்பாக விழுவதைப்போல, உங்களின் புத்தகத்தை எந்த வேகத்தில் படிக்க முயன்றாலும் "உங்களின் சில வரிகள்" என் வேகத்திற்கு திடீர் பிரேக் போடுகின்றன.

நான் குறிப்பிடும் வரிகள் இவைகள் தான்.

**பாரா அவர்கள் எழுதியது:**

> *// . . . (அதாவது, அங்கே வாழ்ந்துகொண்டிருந்த அரேபியர்களை) . . .*[1]
>
> *. . . அதாவது, "நமது மண்ணின் பெருமையை, அயல்நாட்டுக்காரர்களே உணர்ந்திருக்கிறார்கள் பார், நீ இன்னும் உணரவில்லையா?" என்று பாலஸ்தீனத்து யூதர்களையும் அரேபியர்களையும் பார்த்து மறைமுகமாகக் கேட்பது . . .*[2]
>
> *. . . யூதர்களாகவும் இல்லாமல், கிறிஸ்துவர்களாகவும் இல்லாமல் பாலஸ்தீனமண்ணின் பழங்குடி இனத்தவர்கள் என்கிற ஒரே அடையாளமுடன் எவ்வித கலாசார வளர்ச்சியும் அற்று, வெறும் மனிதர்களாக வாழ்ந்துகொண்டிருந்த அரேபியர்களின் வாழ்க்கையில் அப்போதுதான் முதல்முறையாக ஒரு மலர்ச்சி ஏற்பட்டது. . . .*[2]
>
> *. . . இத்தனைக்கும் அவர்கள்தாம் அங்கே பெரும்பான்மை மக்கள்! . . .* [2] //

இன்னும் சில இடங்களில் **அரேபியர்களின் சொந்த மண் பாலஸ்தீனம்** என்றும் எழுதியிருக்கிறீர்கள். ஆனால், யூதர்கள் பற்றி வரும்போது மட்டும் ஒரு இடத்தில் "அவர்கள் வந்தேறிகள்" என்று எழுதியுள்ளீர்கள், கீழேயுள்ள மேற்கோளை பார்க்கவும். இதலிருந்து நீங்கள் எதற்காக இப்புத்தகத்தை எழுதினீர்கள் என்பதை விளங்கிக்கொள்ளலாம்.

> *// இரண்டாம் உலக யுத்தம் முடிவடைந்த தருணத்தில் பாலஸ்தீனில் இருந்த யூதர்களின் எண்ணிக்கை சுமார் ஆறு லட்சம். இவர்கள் அத்தனைபேரும் ஐரோப்பாவின் பல்வேறு நாடுகளிலிருந்து பாலஸ்தீன் வந்து சேர்ந்தவர்கள். அவர்களது மூதாதையர்களுக்கு பாலஸ்தீன் சொந்த ஊராக இருக்கலாம். அவர்களுக்குக் கண்டிப்பாக அது புதிய தேசம். அதாவது சொந்த தேசமே என்றாலும் வந்தேறிகள். அவர்களைத் தவிர உள்ளூர் யூதர்கள் என்று சொல்லிக்கொள்ளும்படியாக சுமார் இருபதாயிரம் பேர் இருந்தால் அதிகம். (54. பிரிட்டனின் திட்டம்)*[3] //

இக்கட்டுரையின் கருப்பொருள் அரேபியர்களின் பழங்குடி முகவரியைப் பற்றியது, யூதர்கள் பற்றியது அல்ல. எனவே, கருப்பொருளுக்குச் செல்லலாம் வாருங்கள்.

**அரேபியர்களின் முகவரிப் பற்றி பாரா அவர்கள் எழுதியவைகளின் சுருக்கம் இது தான்:**

**1)** பாலஸ்தீன மண்ணின் பழங்குடி இனத்தவர்கள் அரேபியர்கள் ஆவார்கள்.

2) பாலஸ்தீனாவில் அரேபியர்களே பெரும்பான்மை மக்களாக இருந்துள்ளார்கள்.

3) பாலஸ்தீனத்தில் அரேபியர்கள் எப்போதும் இருந்துக்கொண்டே இருந்துள்ளார்கள்.

இதுவரை கண்ட விவரங்களின் படி, பாரா அவர்களிடம் கீழ்கண்ட கேள்விகளுக்கு பதில்களை நாம் எதிர்ப்பார்ப்பதில் தவறில்லை என்று நினைக்கிறேன்.

**1) அரேபியர்கள் யூதேயாவில் எப்போதிலிருந்து பழங்குடி மக்களானார்கள்?**

நீங்கள் கி.பி. 4ம் நூற்றாண்டு நிகழ்ச்சிகளை விவரிக்கும் போது, "பாலஸ்தீனமண்ணின் பழங்குடி இனத்தவர்கள் என்கிற ஒரே அடையாளமுடன்'' என்று அரேபியர்களைக் குறித்து எழுதியுள்ளீர்கள்.

1. எந்த சரித்திர விவரங்களின் அடிப்படையில் ''பாலஸ்தீன மண்ணின் பழங்குடி இனத்தவர்கள் அரேபியர்கள்'' என்ற முடிவிற்கு வந்தீர்கள்?

2. எந்த சரித்திர புத்தகத்தில் இப்படி எழுதப்பட்டுள்ளது? அந்த சரித்திர புத்தகம் யாரால் எப்போது எழுதப்பட்டது?

3. எத்தனை நூற்றாண்டுகளாக அரேபியர்கள் பாலஸ்தீனாவில் முக்கியமாக யூதேயா பகுதியில் பழங்குடிகளாக இருந்தார்கள்?

4. மோசேயின் (யோசுவாவின்) காலம் (கி.மு. 1400) தொடங்கி யூதர்கள் யூதேயாவில் இருந்ததாக நாம் அறிகிறோம். அரேபியர்கள் அங்கு எப்போதிலிருந்து இருந்தார்கள் என்ற புள்ளிவிவரத்தை கொடுக்கமுடியுமா?

5. குறைந்தபட்சம் கி.மு. 1400 லிருந்து கி.பி. 400 வரையுள்ள காலக்கட்டத்தில், பாலஸ்தீனாவில் அரேபியர்களின் ஜனத்தொகை புள்ளிவிவரத்தை கொடுக்கமுடியுமா?

**2) அரேபியர்கள் பாலஸ்தீனாவில் பெரும்பான்மை மக்களா?**

கி.பி. நான்காம் நூற்றாண்டு விவரங்களை எழுதும் போது, அரேபியர்கள் பாலஸ்தீனாவில் பெரும்பான்மையாக இருந்தார்கள் என்று சொல்லியுள்ளீர்கள். இதன் அடிப்படையில் கீழ்கண்ட கேள்விகளுக்கு பதில்கள் எதிர்ப்பார்க்கப்படுகின்றது.

1. பாலஸ்தீனாவில் அரேபியர்கள் எந்த காலத்திலிருந்து பெரும்பான்மையாக இருந்தார்கள்?

2. எந்த காலத்திலிருந்து அவர்கள் முதலாவது பாலஸ்தீனாவில் வாழ ஆரம்பித்தார்கள்? அப்போது அங்கு இருந்த யூதர்கள் அல்லது இதர மக்கள் பெரும்பான்மையாக இருந்தார்களா? அல்லது சிறும்பான்மையாக இருந்தார்களா?

3. அரேபியர்கள் பாலஸ்தீனாவில் யாருடைய காலத்தில் பெரும்பான்மையாக இருந்தார்கள்? - மோசேயின் காலத்திலா? தாவீதின் காலத்திலா? அல்லது இயேசுவின் காலத்திலா?

4. அரேபியர்கள் கி.பி.யில் தான் பெரும்பான்மையாக மாறினார்கள் என்றுச் சொன்னால்? இதற்கான ஆதாரம் என்ன? மேலும் எந்த நூற்றாண்டிலிருந்து பெரும்பான்மையாக மாறினார்கள்?

எந்த ஒரு ஆதாரமும் கொடுக்காமல், ‘‘அவர்கள் பெரும்பான்மையானவர்கள்’’ என்று நடுவில் சொறுகி இருக்கிறீர்கள். ஓரளவிற்கு மத்திய கிழக்கு நாடுகளின் சரித்திரம் தெரிந்தவர்கள் கூட இதனை ஏற்றுக்கொள்ளமாட்டார்கள். எனவே, உங்கள் வாதங்களுக்கான ஆதாரங்களைக் கொடுங்கள்.

### 3) அரேபியர்கள் என்றால் யார்?

அரேபியர்கள் பெரும்பான்மையானவர்கள் என்ற விவரத்தை பிறகு பார்ப்போம். முதலாவது, அரேபியர்கள் என்றால் யார்? என்பதை விளக்குங்கள்.

ஒவ்வொரு காலக்கட்டத்திலும், அரேபியர்கள் என்ற வார்த்தை பலவகையான மக்களை குறிக்கின்ற ஒன்றாக இருக்கிறது.

- தற்காலத்தில் அரேபியர்கள் என்றால், மத்திய கிழக்கு மற்றும் வட ஆப்ரிக்கா பகுதியில் இருக்கும் இஸ்லாமிய நாடுகளையும், அங்கு அரபி பேசும் மக்களையும் குறிக்கும். தற்போது இரண்டு அடையாளங்களை இவ்வார்த்தை உள்ளடக்கியுள்ளது, இஸ்லாம் என்ற மத அடையாளம் மற்றும் அரபி மொழி என்ற அடையாளம். அரபி பேசும் கிறிஸ்தவர்களும் இருக்கிறார்கள், ஆனால், அரேபியர்கள் என்று பொதுவாக பேசும் போது, அரேபிய முஸ்லிம்களை அது குறிப்பதாக இருக்கிறது.

- கிபி ஏழாம் நூற்றாண்டுக்கு முன்பான காலக்கட்டத்தில் ‘‘அரபியர்கள்’’ என்றால், இஸ்லாமிய மத அடையாளம் இல்லாமல், அரேபியா தீபகர்ப்பத்தில், மற்றும் அதைச்சுற்றியுள்ள பகுதிகளில் அரபி பேசும் நாடோடி மக்களை குறிப்பதாக இருந்தது.

பைபிளின் பழைய ஏற்பாட்டுக் காலத்தில், அரேபியர்கள் யூதேயாவிற்கு வெளியே இருந்தார்கள், இதைப் பற்றிய பல குறிப்புக்கள் பைபிளில் காணலாம். மேலும், இதர சரித்திர ஆசிரியர்கள் எழுதிய விவரங்களிலும் இவைகளை காணலாம். யூதேயாவில் மற்றும் ஜெருசலேமில் அரேபியர்கள் பெரும்பான்மையாக இருந்தார்கள், அந்த பூமியில் அவர்கள் பழங்குடிகளாக இருந்தார்கள் என்று நீங்கள் எழுதியவைகளுக்கு ஆதாரங்களை கொடுக்கும் படி கேட்டுக்கொள்கிறேன்.

பழைய ஏற்பாட்டின் காலத்தில், யூதேயாவில் அரேபியர்கள் இல்லை என்பதையும், அவர்கள் யூதேயாவிற்கு வெளியே இருந்த நாடுகளில் இருந்தார்கள் என்பதையும் சுருக்கமாக இங்கு விளக்குகின்றேன்.

யூதேயாவில் ஒரு அரபியனும் இருக்கவில்லை என்று நான் சொல்லவரவில்லை. யூதர்களோடு கூட இதர ஜனங்களும் ஆங்காங்கே இருந்தார்கள், ஆனால், அவர்கள் பெரும்பான்மையான மக்களாக இல்லை, இது தான் என் வாதம்.

**அரேபியர்கள் பற்றி பழைய ஏற்பாடு**

**அ) சாலோமோனுக்கு அரபு தேசத்து சகல ராஜாக்கள் வெகுமதிகளை கொடுத்தார்கள்:**

> **10:14** சாலொமோனுக்கு வியாபாரிகளாலும், சுகந்த திரவிய வர்த்தகராலும், **அரபிதேசத்து சகல ராஜாக்களாலும்**, மாகாணங்களின் அதிபதிகளாலும் வந்த பொன்னையல்லாமல்,

**10:15** ஒவ்வொரு வருஷத்தில் அவனுக்கு வந்த பொன் அறுநூற்று அறுபத்தாறு தாலந்து நிறையாயிருந்தது. **(1 இராஜாக்கள் 10:14-15)**

**ஆ) இஸ்ரேல் இராஜா யோசபாத் தேவனுக்கு கீழ்படிந்த போது, அனைவருக்கும் பயமுண்டானது, எல்லா தேசத்தார்களும், அரபு தேசம் உட்பட காணிக்கை கொண்டு வந்து கொடுத்தார்கள், சமாதானம் நிலவியது:**

**17:10** யூதாவைச் சுற்றியிருக்கிற தேசங்களுடைய ராஜ்யங்களின்மேலெல்லாம் கர்த்தரால் உண்டான பயங்கரம் வந்ததினால், யோசபாத்தோடு யுத்தம்பண்ணாதிருந்தார்கள்.

**17:11** பெலிஸ்தரிலும் சிலர் யோசபாத்துக்குப் பகுதிப்பணத்தோடேகூடக் காணிக்கைகளையும் கொண்டுவந்தார்கள்; **அரபியரும்** அவனுக்கு ஏழாயிரத்து எழுநூறு ஆட்டுக்கடாக்களையும், ஏழாயிரத்து எழுநூறு வெள்ளாட்டுக்கடாக்களையும் கொண்டுவந்தார்கள். **(2 நாளாகமம் 17:`10-11)**

**இ) எத்தியோப்பியாவிற்கு அடுத்துள்ள அரபியர்கள்**

இஸ்ரேல் தேவனுக்கு கீழ்படியாத போது, யூதேயாவைச் சுற்றியிருந்த மற்ற தேசத்தார்களைக் கொண்டு தேவன் அவர்களை தண்டித்தார். மேலும் எத்தியோப்பியாவிற்கு அடுத்துள்ள அரபி தேசத்தார்களைக் கொண்டு தண்டித்தார்.

**21:16** அப்படியே கர்த்தர் பெலிஸ்தரின் ஆவியையும், எத்தியோப்பியாவுக்கடுத்த தேசத்தாரான **அரபியரின் ஆவியையும்** யோராமுக்கு விரோதமாக எழுப்பினார்.

**21:17** அவர்கள் யூதாவில் வந்து, பலாத்காரமாய்ப் புகுந்து, ராஜாவின் அரமனையில் அகப்பட்ட எல்லாப் பொருள்களையும், அவன் பிள்ளைகளையும், அவன் மனைவிகளையும் பிடித்துக்கொண்டுபோனார்கள்; யோவாகாஸ் என்னும் அவன் குமாரரில் இளையவனை அல்லாமல் ஒரு குமாரனும் அவனுக்கு மீதியாக வைக்கப்படவில்லை. **(2 நாளாகமம் 21:16-17)**

இங்கு குறிப்பிடும் அரபியர்கள், எத்தியோப்பியா தேசத்துக்கு பக்கத்தில் உள்ளவர்கள், அதாவது ஆப்ரிக்கா கண்டத்தில் இருந்த அரேபியர்கள். கீழ்கண்ட வரைப்படத்தில் எத்தியோப்பியா மற்றும் யூதேயாவிற்கு இடையே இருக்கும் இடைவெளியை பார்க்கவும்:

**http://49yzp92imhtx8radn224z7y1-wpengine.netdna-ssl.com/wp-content/uploads/2015/11/Distance-from-Eritrea-to-Israel.png**




**ஈ) உசியா சண்டை போட்ட கூர்பாகாலில் வசிக்கும் அரபியர்கள்:**

உசியா இராஜா, கூர்பாகாலில் குடியிருக்கும் அரபியர்களோடு யுத்தம் செய்து வெற்றிப்பெற்றார்.

> **26:7** பெலிஸ்தரையும் கூர்பாகாலிலே குடியிருக்கிற **அரபியரையும்** மெகுனியரையும் வெல்ல, தேவன் அவனுக்குத் துணை நின்றார். **(2** நாளாகமம் **26:7)**

கூர்பாகால் என்ற இடம் எங்கிருக்கிறது? இது பெட்ரா என்ற பகுதியில் (நபாட்டின்கள் ஆட்சி புரிந்த இடத்தில்) இருக்கிறது. இது யூதேயாவிற்கு வெளியே இருக்கிறது.

**International Standard Bible Encyclopedia**

**GUR-BAAL**

> **gur-ba'-al (gur ba`-al): The residence of certain Arabs against whom God helped Uzziah, king of Judah (2 Chronicles 26:7). Its mention immediately after the Philistines may have suggested the "Gerar" of the Targum. Association with the Meunim points to the East. It may be taken as certain that Jebel Neby Harun, near Petra, has always been crowned by a sanctuary. This may have been "the dwelling place of Baal"; or, accepting Kittel's emendation (Tur ba`al), "the rock" or "mountain of Baal." The Arabs probably dwelt in the region before the days of Petra (EB, under the word)**
>
> **W. Ewing**
>
> மூலம்: **biblehub.com/topical/g/gur-baal.htm**

**உ) ஜெருசலேம் நகர சுவரை கட்டும் போது எதிர்த்த அரபியனான கேஷேம்**

யூதர்கள் தாங்கள் அடிமைகளாக கொண்டு போகப்பட்டு 70 ஆண்டுகளுக்கு பிறகு வந்து ஜெருசலேமின் நகரச் சுவரை கட்டியபோது, அவர்களை எதிர்த்தவர்களில் அரேபியனான 'கேஷேம்' என்பவனும் ஒருவன்.

> 2:19 ஓரோனியனான சன்பல்லாத்தும், அம்மோனியனான தொபியா என்னும் ஊழியக்காரனும், **அரபியனான கேஷேமும்** இதைக் கேட்டபோது, எங்களைப் பரியாசம்பண்ணி, எங்களை நிந்தித்து: நீங்கள் செய்கிற இந்தக் காரியம் என்ன? நீங்கள் ராஜாவுக்கு விரோதமாகக் கலகம்பண்ணப்போகிறீர்களோ என்றார்கள். (நெகேமியா 2:19)

யார் இவன்? எப்படி இங்கு வந்தான்? யூதர்கள் பாபிலோனுக்கு பிடிக்கப்பட்டு 70 ஆண்டுகள் அடிமைகளாக இருந்த காலக்கட்டத்தில், ஜெருசலேமில் வந்து வாழ்ந்தவனாக இருக்கலாம், அல்லது யூதேயாவிற்கு தென் கிழக்கு பகுதியில் உள்ள பெட்ரா பிராந்தியத்தில் வாழ்ந்த அரபியனாக இருக்கலாம். இவ்வசனம் பற்றிய பைபிள் விரிவுரைகளின் தொடுப்புக்கள் சிலவற்றை கீழே தருகிறேன்.

**Smith's Bible Dictionary**

**Geshem**

> **and Gashmu (rain), an Arabian, mentioned in (Nehemiah 2:19) and Nehe 6:1,2,6 (B.C. 446.) We may conclude that he was an inhabitant of Arabia Petraea or of the Arabian desert, and probably the chief of a tribe." Gashum said it" made him a type of those who create a common report.**
>
> **Easton's Bible Dictionary**
>
> **Or Gashmu, firmness, probably chief of the Arabs south of Palestine, one of the enemies of the Jews after the return from Babylon (Nehemiah 2:19; 6:1, 2). He united with Sanballat and Tobiah in opposing the rebuilding of the wall of Jerusalem.**
>
> **International Standard Bible Encyclopedia**

**GESHEM**

> **ge'-shem (geshem, gashmu; Gesam, "rain storm"): An Arabian, probably chief of an Arabian tribe that had either settled in Southern Palestine during the exile in Babylon, or had been settled in or near Samaria by Sargon (Nehemiah 2:19;Nehemiah 6:1, 2, 6). He was a confederate of Sanballat and Tobiah, and strenuously opposed the building of the wall under Nehemiah. He with the others mocked at the first efforts to build the wall, and afterward repeatedly sought to entice Nehemiah to the plains of Ono. The name also occurs in the form Gashmu, perhaps an Assyrian form of the same name Geshem.**

**J. J. Reeve**

மூலம்: **biblehub.com/topical/g/geshem.htm**

**ஊ) ஏசாயாவின் தீர்க்கதரிசனம் - பாபிலோன் அழிக்கப்படும் போது, அரபியனும் அழிவான்:**

யூதேயாவிற்கு வெளியே இருக்கும் தேசங்களில் வாழும் அரபியர்கள் பாபிலோனோடு கூட சேர்ந்து அழிவார்கள் என்பதை ஏசாயா தீர்க்கதரிசனமாக கூறினார்.

> **13:19** ராஜ்யங்களுக்குள் அலங்காரமும், கல்தேயருடைய பிரதான மகிமையுமாகிய பாபிலோனானது தேவனால் சோதோமும் கொமோராவும் கவிழ்க்கப்பட்டதுபோல கவிழ்க்கப்படும்.
>
> **13:20** இனி ஒருபோதும் அதில் ஒருவரும் குடியேறுவதுமில்லை, தலைமுறைதோறும் அதில் ஒருவரும் தங்கித் தரிப்பதுமில்லை; **அங்கே அரபியன் கூடாரம் போடுவதுமில்லை;** அங்கே மேய்ப்பர் மந்தையை மறிப்பதுமில்லை. **(ஏசாயா 13:19-20)**

இவ்வசனங்களையும் பாருங்கள்.

> **21:13 அரபியாவின் பாரம்.** திதானியராகிய பயணக்கூட்டங்களே, நீங்கள் அரபியாவின் காடுகளில் இராத்தங்குவீர்கள்.
>
> **21:14** தேமாதேசத்தின் குடிகளே, நீங்கள் தாகமாயிருக்கிறவர்களுக்குத் தண்ணீர் கொண்டுபோய், தப்பி ஓடுகிறவர்களுக்கு அப்பங்கொடுக்க எதிர்கொண்டுபோங்கள். **(ஏசாயா 21:13-14)**
>
> **3:2** நீ மேடுகளின்மேல் உன் கண்களை ஏறெடுத்து, நீ வேசித்தனம்பண்ணாத இடம் ஒன்று உண்டோ என்று பார்; **வனாந்தரத்திலே அரபியன் காத்துக்கொண்டிருக்கிறது போல,** நீ வழி ஓரங்களில் உன் நேசருக்குக் காத்துக்கொண்டிருந்து, உன் வேசித்தனங்களாலும், உன் அக்கிரமங்களாலும் தேசத்தைத் தீட்டுப்படுத்தினாய். **(எரேமியா 3:2)**

அரேபியர்கள் யூதேயாவிற்கு வெளியே உள்ள தேசங்களில் குடியிருந்தார்கள், முக்கியமாக, அரேபியா தீபகர்ப்பத்திலும், நபாட்டியன்கள் வாழ்ந்த பகுதியில் (பெட்ரா, ஜோர்டான்) வாழ்ந்தவர்கள்.

ஆனால், அரபியர்கள் யூதேயாவின் மற்றும் ஜெருசலேமின் **'**பழங்குடிகள்**'** என்று எப்படி நீங்கள் சொல்கிறீர்கள்? அரேபியர்கள் யூதேயாவில் பெரும்பான்மையாக இருந்தார்கள் என்றும் சொல்கிறீர்கள். இவைகளுக்கெல்லாம் சரித்திர ஆதாரங்களை கொடுங்கள்.

**வேடிக்கையான வார்த்தைகள்:**

பாரா அவர்கள், ஒரு பக்கம் ''அரேபியர்கள் பாலஸ்தீனாவின் பழங்குடிகள்'' என்றுச் சொல்கிறார், ''பாலஸ்தீனாவின் பெரும்பான்மை மக்கள்'' என்று கூறுகிறார், ஆனால், அதே நேரத்தில், அரபியர்கள் அரேபிய மண்ணின் ஆதிவாசிகள் என்றும் கூறியுள்ளார். இந்த முரண்பட்ட விவரங்களை ஒரே அத்தியாயத்தில் ஒரே பத்தியில் எழுதியுள்ளார்.

**பாரா அவர்கள் எழுதியது:**

> // **. . .**அரேபிய மண்ணின் ஆதிவாசிகளான அவர்களுக்குக் கல்வி கூடக் கிடையாது. **. .[2]** //

இப்போது நாம் கேட்கவேண்டிய கேள்வி என்னவென்றால், அரேபியர்கள் அரேபிய மண்ணின் ஆதிவாசிகளா? அல்லது பாலஸ்தீனா மண்ணின் பழங்குடியினரா? என்பதாகும், இரண்டும் என்றுச் சொல்வீர்களானால், பாலஸ்தீனாவின் பழங்குடிகள் என்பதற்கு ஆதாரங்களைத் தாருங்கள்.

சரித்திர விவரங்களின் படி, அவர்கள் அரேபிய மண்ணின் ஆதிவாசிகள் ஆவார்கள், பாலஸ்தீனா, யூதேயா மண்ணின் பழங்குடிகள் அல்ல. பாரா அவர்களே, நீங்கள் மறுத்தால் ஆதாரங்களை கொடுங்கள்.

**முடிவுரை:**

பாரா அவர்களே, முதலாவது அரபியர்கள் என்றால் யார்? என்பதை விளக்குங்கள். பாலஸ்தீனா என்று நீங்கள் குறிப்பிடும் பிராந்தியத்தில் உள்ள அக்கால நாடுகளை குறிப்பிடுங்கள். பாலஸ்தீனா என்ற பெயர், எப்போது யாரால் அந்த பிராந்தியத்திற்கு சூட்டப்பட்டது என்று சொல்லுங்கள். இரண்டாவதாக, அரபியர்கள் எப்படி பாலஸ்தீனாவின் பழங்குடியானார்கள்? எந்த காலக்கட்டத்திலிருந்து அவர்கள் அங்கு வாழ்ந்துக்கொண்டு இருந்தார்கள் என்பதை ஆதரங்களோடு விளக்குங்கள்.

பாலஸ்தீனாவில் அரேபியர்கள் பெரும்பான்மை மக்களாக எப்போது மாறினார்கள் என்பதையும் சரித்திரத்திலிருந்து விளக்குங்கள். அரேபிய மண்ணின் ஆதிவாசிகள் எப்படி பாலஸ்தீனா (யூதேயாவின்) பழங்குடிகள் ஆனார்கள் என்பதையும் விவரியுங்கள். பாலஸ்தீனாவின் பழங்குடிகள் என்பது அரேபிய மண்ணின் ஆதிவாசிகள் என்பதற்கு முரண்படுகின்றதா? அல்லது ஒத்துப்போகின்றதா என்பதையும் விளக்குங்கள்.

**பாரா அவர்களே, இதனை படிக்க மறவாதீர்கள்:**

உண்மையில் பாலஸ்தீனா என்ற நாடு உண்டா?

இது என்ன முட்டாள் தனமாக கேள்வி? என்று என்னிடம் கேட்கத் தோன்றுகிறதா? அப்படியானால், ஜுஹைர் மொஹ்ஸென் என்பவர் என்ன சொல்கிறார் என்பதை படியுங்கள். இவர் யார்? இவரும் அரஃபாத்தும் சேர்ந்து தான் PLO இயக்கத்தை ஆரம்பித்தார்கள். பாலஸ்தீனா மக்கள் என்ற பெயரில் யாருமில்லை, பாலஸ்தீனா நாடு என்று உருவாக்கியதெல்லாம், அரபியர்கள் ஒன்றாக இருந்து, இஸ்ரேலை துரத்துவதற்காகும் என்றுச் சொல்கிறார்.

> **Zuheir Mohsen (1936—1979) was a Palestinian leader of the Syria-controlled as-Sa'iqa faction of the Palestine Liberation Organization (PLO) between 1971 and 1979.**
>
> **The Palestinian people does not exist. The creation of a Palestinian state is only a means for continuing our struggle against the state of Israel for our Arab unity. In reality today there is no difference between Jordanians, Palestinians, Syrians and Lebanese. Only for political and tactical reasons**

**do we speak today about the existence of a Palestinian people, since Arab national interests demand that we posit the existence of a distinct "Palestinian people" to oppose Zionism. Yes, the existence of a separate Palestinian identity exists only for tactical reasons, Jordan, which is a sovereign state with defined borders, cannot raise claims to Haifa and Jaffa, while as a Palestinian, I can undoubtedly demand Haifa, Jaffa, Beer-Sheva and Jerusalem. However, the moment we reclaim our right to all of Palestine, we will not wait even a minute to unite Palestine and Jordan.**

**James Dorsey, "Wij zijn alleen Palestijn om politieke reden", Trouw, 31 March 1977.**

மூலம்: **https://en.wikiquote.org/wiki/Zuheir_Mohsen & https://en.wikipedia.org/wiki/Zuheir_Mohsen**

அடுத்த பகுதியில் உங்களை சந்திக்கிறேன்.

**அடிக்குறிப்புக்கள்:**

**[1] நிலமெல்லாம் இரத்தம், அத்தியாயம் 9. யூதர்கள் இல்லாத ஜெருசலேம்**

இது, ஜெருசலேம் நகரின் கிறிஸ்துவர்களுக்கு மிகவும் சாதகமான அம்சமாகிப்போனது. யூதர்கள் இல்லாத ஜெருசலேமில் அவர்கள் மதப்பிரசாரம் செய்யவும் கிறிஸ்துவ தேவாலயங்களை எழுப்பி, தினசரி பிரார்த்தனைகளை நடத்தவும், மக்களை (அதாவது, அங்கே வாழ்ந்துகொண்டிருந்த அரேபியர்களை) இயேசுவின் பாதையில் அழைக்கவும் சௌகரியமாக இருந்தது.

**[2] நிலமெல்லாம் இரத்தம், அத்தியாயம் 11. கிருஸ்துவத்தின் வளர்ச்சி**

அப்படி வருகிற மேலை யாத்ரீகர்களுள் சிலரை நிரந்தரமாகவே ஜெருசலேமில் தங்கவைத்து, அவர்களைக் கொண்டும் உள்ளூரில் கிறிஸ்துவத்தைப் பரப்ப முடிவு செய்தார்கள். அதாவது, "நமது மண்ணின் பெருமையை, அயல்நாட்டுக்காரர்களே உணர்ந்திருக்கிறார்கள் பார், நீ இன்னும் உணரவில்லையா?" என்று பாலஸ்தீனத்து யூதர்களையும் அரேபியர்களையும் பார்த்து மறைமுகமாகக் கேட்பது. இந்த முயற்சியில், பாலஸ்தீனக் கிறிஸ்துவர்களுக்குக் கணிசமான வெற்றி கிடைத்தது என்றே சொல்லவேண்டும். ஏராளமான அரேபியர்களையும் அதிகபட்சம் சுமார் ஆயிரம் யூதர்களையும் அவர்கள் அப்போது கிறிஸ்துவர்களாக மாற்றிக்காட்டினார்கள். நான்காம் நூற்றாண்டின் இறுதியில் (கி.பி. 375-395) ரோமை ஆண்ட மன்னன் தியோடோசியஸ் (Theodosius 1) ஒரு சட்டமே பிறப்பித்தான்.

யூதர்களாகவும் இல்லாமல், கிறிஸ்துவர்களாகவும் இல்லாமல் பாலஸ்தீனமண்ணின் பழங்குடி இனத்தவர்கள் என்கிற ஒரே அடையாளமுடன் எவ்வித கலாசார வளர்ச்சியும் அற்று, வெறும் மனிதர்களாக வாழ்ந்துகொண்டிருந்த அரேபியர்களின் வாழ்க்கையில் அப்போதுதான் முதல்முறையாக ஒரு மலர்ச்சி ஏற்பட்டது. ரோமானியர்கள் ஆண்டாலும், கிரேக்கர்கள் ஆண்டாலும், வேறு யார் ஆண்டாலும் அதுவரை அவர்கள் வெறும் சுண்டைக்காயாகவே இருந்தார்கள். ஆள்பவர்கள் அவர்களைப் பொருட்படுத்தமாட்டார்கள். யூதர்கள் அவர்களைக் கண்டுகொள்ளமாட்டார்கள். கிறிஸ்துவர்களோ, மதம் மாற்றமுடியுமா என்கிற நோக்கில் மட்டுமே அவர்களைப் பார்ப்பார்கள். இத்தனைக்கும் அவர்கள்தாம் அங்கே பெரும்பான்மை மக்கள்! யூதமதமும் கிறிஸ்துவ மதமும் பண்பட்ட மதங்கள் என்றும், சிறு தெய்வ

வழிபாடுகளில் மூழ்கியிருந்த அரேபியர்களின் நம்பிக்கைகள் எதுவுமே பொருட்படுத்தத்தக்கவையல்ல என்றும் ஒரு கருத்து அங்கே ஆழமாக வேரூன்றியிருந்தது. அரேபிய மண்ணின் ஆதிவாசிகளான அவர்களுக்குக் கல்வி கூடக் கிடையாது. உழைப்பது, சாப்பிடுவது, சந்ததி பெருக்குவது என்கிற மூன்று காரியங்கள் தவிர, வேறு எதற்குமே லாயக்கற்றவர்கள் என்று கருதப்பட்டார்கள். அப்படிப்பட்ட இனத்தில் முதல் முதலாக ஓர் எழுச்சி கி.பி. ஏழாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் ஏற்பட்டது.//

**[3] நிலமெல்லாம் இரத்தம், அத்தியாயம் 54. பிரிட்டனின் திட்டம்)**

ꙮꙮꙮꙮ

# 9) ஹதீஸ்களில் ஆதாரம் இல்லாத ஒரு குட்டிக்கதை, கதையின் ஒருவரி சொல் கிடையாது

## (அத்தியாயம் 12. இறைதூதர் முகம்மது)

**மதிப்பிற்குரிய பாரா அவர்களுக்கு,**

ரமளான் மாதத்தின் வாழ்த்துதல்களை தெரிவித்துக் கொள்கிறேன்.

நிலமெல்லாம் இரத்தம், 12வது அத்தியாயத்தின் முதல் பத்தியில் நீங்கள் எழுதிய வரிகளை முஸ்லிம்கள் கூட ஏற்றுக்கொள்ளமாட்டார்கள். இது எப்படி சாத்தியம்? இவ்விவரங்களை நான் அவர்களிடமிருந்து பெற்று தானே எழுதினேன் என்று நீங்கள் கேட்கலாம். இதில் தான் டிவிஸ்ட் இருக்கிறது. இக்கட்டுரையை நீங்கள் முழுவதுமாக படித்தால் ''ஒரு சொல், ஒரு வரி, ஒரு குட்டிக்கதையல்ல, ஒரு நாவல் அளவிற்கு ஹதீஸ்களில் ஆதாரம் இல்லை'' என்பதை நீங்களே ஒப்புக்கொள்வீர்கள். சஸ்பன்ஸ் வேண்டாம், மேற்கொண்டு படியுங்கள்.

**பாரா அவர்கள் எழுதியது:**

> *// முகம்மது என்கிற மனிதரின் பிறப்பு, அவர் ஓர் இறைத்தூதர் என்று அறியப்பட்ட தருணம் - இந்த இரண்டுமே அரேபியர்களின் சரித்திரத்தில் மிக முக்கியமான அம்சங்கள். ஒரு மனிதரின் பிறப்பே எப்படி முக்கியத் தருணமாகும்? என்கிற கேள்வி எழலாம். மற்ற இறைத்தூதர்களைப் பற்றிய தகவல்களுக்கு நாம் புராணக் கதைகளையே ஆதாரங்களாகக் கொள்ள வேண்டியிருக்கிற நிலையில், இவர் ஒருவரைக் குறித்த விவரங்களை மட்டும்தான் கதைகளிலிருந்து அல்லாமல், சரித்திரத்தின் பக்கங்களிலிருந்தே நாம் பெற முடிகிறது. //*

பாரா அவர்களுக்கு ஒரு முக்கியமான விவரத்தை சொல்லவேண்டி இருக்கிறது. இஸ்லாமை புகழவேண்டுமென்பதற்காக, நீங்கள் கிறிஸ்தவ, யூத வேதங்களை தவறாக விமர்சித்தால், அது உங்களுக்கே பிரச்சனையாக மாறும். ஏனென்றால், குர்-ஆனின் படி, முஹம்மதுவின் படி, ''யூதர்களும், கிறிஸ்தவர்களும்'' முந்தைய வேதங்கள் கொடுக்கப்பட்டவர்கள் ஆவார்கள். மேலும், பைபிளிலிருந்து அனேக விவரங்களை குர்-ஆன் காபி அடித்து மறுபதிவு செய்திருக்கிறது. முஸ்லிம்களை குஷி படுத்துகிறேன் என்றுச் சொல்லி, ஆபிரகாம், மோசே மற்றும் தாவீது போன்ற பழைய ஏற்பாட்டு நபர்களை விமர்சித்தால், உங்களுக்கு முஸ்லிம்களிடமிருந்து அனேக மிரட்டல்கள் வரும் என்பதை மிகவும் தாழ்மையுடன் தெரிவித்துக் கொள்கிறேன்.

## 1) இயேசு சரித்திரம், புராணமல்ல

இயேசு ஒரு சரித்திர புருஷராவார். இயேசு என்பவர் சரித்திரத்தில் பிறக்கவே இல்லை, ராமாயணம், மகாபாரதம் போன்ற புராணங்களில் வரும் கற்பனை கதாபாத்திரங்கள் போல இவரும் ஒருவர் என்று சொல்லவருகிறீர்களா?

புதிய ஏற்பாட்டில் மட்டுமல்ல, அதற்கு வெளியேயும் அதாவது, மதசார்பற்ற சரித்திர ஆசிரியர்கள் எழுதிய சரித்திர புத்தகங்களில் கூட இயேசு பற்றி எழுதப்பட்டுள்ளது. இயேசு என்பவர் முதல் நூற்றாண்டில் வாழ்ந்தார், அவரை சிலுவையில் அறைந்து கொலை செய்தார்கள் என்று சரித்திரம் சொல்கிறது. ''இயேசுவின் அற்புதபிறப்பு மற்றும் அவர் செய்த அற்புதங்கள் என்பவைகள்'' மதநம்பிக்கைகள் ஆகும், ஆனால், இயேசு சரித்திரத்தில் பிறந்தது உண்மை, வாழ்ந்தது உண்மை, அவர் புராணமல்ல, அவர் பரிபூரணம்.

இன்னொரு அன்பான எச்சரிக்கை, இயேசுவின் ''அற்புத பிறப்பு ஒரு பொய்யாகும்'' என்று அடித்துச் சொல்லாதீர்கள், முஸ்லிம்களிடம் அடிபடவேண்டி வரும். ஏனென்றால், முஸ்லிம்கள் கூட இயேசுவின் அற்புத பிறப்பை நம்புகிறார்கள். நீங்கள் அதிகமாக புகழ்ந்துத்தள்ளும் முஹம்மது கூட இதையே நம்பினார். எனவே, கிறிஸ்தவம் பற்றி விமர்சிக்கவேண்டுமென்றால், தயவு செய்து சிறிது இஸ்லாமின் மதநம்பிக்கையை ஆழமாக ஆய்வு செய்து கற்றுக்கொண்டு அதன் பிறகு விமர்சியுங்கள் என்று கேட்டுக்கொள்கிறேன். அடுத்தபடியாக, பழைய ஏற்பாட்டில் சொல்லப்பட்ட அற்புதங்களை நீங்கள் மறுக்கலாம், ஆனால், நபர்களை மறுக்கமுடியாது. தேவைப்பட்டால், இத்தொடர் பதில்களை எழுதும் போது ஆங்காங்கே பழைய ஏற்பாட்டோடு, சரித்திரத்தை ஒப்பிட்டு சில விவரங்களை எழுதுவேன்.

**பாரா அவர்கள் எழுதியது:**

> *// காலத்தால் நமக்கு மிகவும் நெருக்கமானவர் என்பது மட்டுமே இதற்குக் காரணமல்ல. அவரது காலத்தில் வாழ்ந்தவர்கள், அவருடன் நேரில் பழகியவர்கள், அவரது பிரசங்கங்களை, போதனைகளைக் கேட்டவர்கள் எழுதிவைத்த குறிப்புகள் ஏராளமாக இருக்கின்றன. முகம்மது குறித்த ஒவ்வொரு தகவலும் பல்வேறு நிலைகளில் சரிபார்க்கப்பட்டு, ஒப்புநோக்கப்பட்டு, அவருடன் நேரடியாகப் பழகியவர்கள் விவரித்துள்ளவற்றுடன் பொருந்தினால் மட்டுமே அச்சேறின. இதனால், முகம்மது குறித்த விவரங்களின் நம்பகத்தன்மை பற்றிய அத்தனை கேள்விகளும் அடிபட்டுப் போய்விடுகின்றன. ஆதாரம் இல்லாத ஒரு குட்டிக்கதை, கதையின் ஒருவரி... ஒரு சொல் கூடக் கிடையாது. இதன் அடிப்படையில்தான் இப்படியொரு முடிவுக்கு வரவேண்டியிருக்கிறது. //*

பாரா அவர்களே, ஹதீஸ்கள் பற்றி நீங்கள் தவறாக போதிக்கப்பட்டு இருக்கிறீர்கள் அல்லது உங்கள் தொடர்களுக்காக நீங்கள் அதிக அளவில் முஸ்லிம்கள் எழுதிய புத்தகங்கள் மீது சார்ந்து இருந்திருக்கிறீர்கள் என்று தெரிகின்றது. குர்-ஆன், ஹதீஸ்கள் மற்றும் இஸ்லாமிய சரித்திர ஆசிரியர்களின் நூல்கள் பற்றிய சுருக்கத்தை தமிழில் இந்த கட்டுரையில் படிக்கலாம்: **"முஹம்மதுவின் வாழ்க்கை வரலாறு" கருத்தரங்கு - பாகம் 1**

முஹம்மதுவைப் பற்றி அறியவேண்டுமென்றால், உங்களுக்கு குர்-ஆன் உபயோகப்படாது. ஒரு மனிதனிடம் குர்-ஆனை மட்டும் கொடுத்துவிட்டு, நீ இதைப் படித்துவிட்டு, ஒரு முஸ்லிமாக வாழவேண்டும் என்று சொன்னால், அவன் குர்-ஆனை படித்துவிட்டு, குழப்பத்தில் திருதிருவென்று முழிப்பான். அதே போல முஹம்மதுவின் வாழ்க்கையைப் பற்றி அறிய ஹதீஸ்களையும், இதர வாழ்க்கை வரலாற்று நூல்களையும்

சார்ந்து இருக்கவேண்டும். இஸ்லாமின் பெரும்பான்மையான கோட்பாடுகள் மற்றும் சட்டங்கள் ஹதீஸ்களிலிருந்து வருகிறது. உங்களுடைய மேற்கண்ட வர்ணனைகள் ஹதீஸ்கள் பற்றியது என்பதில் சந்தேகமில்லை.

உங்களுடைய சில பத்திகளை படிக்கும் போது எனக்கு என்ன தோன்றியது என்றால், முஸ்லிம்கள் அப்பத்திகளை எழுதி உங்களிடம் கொடுத்து, கருத்தை மாற்றாமல் அதனை உங்கள் பாணியில் எழுதும் படி அவர்கள் உங்களைக் கேட்டுக்கொண்டதாக தெரிகின்றது. அல்லது, நீங்கள் அப்பத்திகளை எழுதி, முஸ்லிம்களிடம் கொடுத்து, கருப்பொருள் சரியாக இருக்கின்றதா? இல்லையென்றால் உங்கள் விருப்பப்படி மாற்றுங்கள் என்று நீங்கள் அவர்களிடம் சொல்லி, அவர்கள் அதனை சரி பார்த்தபிறகு நீங்கள் பதித்தது மாதிரி தெரிகின்றது. அவ்வளவு இஸ்லாமிய வாசனை அப்பத்திகளில் வெளிப்படுகின்றது.

உங்களின் கீழ்கண்ட வரிகள் ஹதீஸ்கள் பற்றியது என்று தெரிகின்றது.

//ஆதாரம் இல்லாத ஒரு குட்டிக்கதை, கதையின் ஒருவரி... ஒரு சொல் கூடக் கிடையாது. இதன் அடிப்படையில்தான் இப்படியொரு முடிவுக்கு வரவேண்டியிருக்கிறது.//

**2) உங்களின் மேற்கண்ட வரிகளை முஸ்லிம்கள் அனைவரும் ஏற்றுக்கொள்ளமாட்டார்கள்:**

அருமை பாரா அவர்களே, நீங்கள் ஆழம் தெரியாமல் காலை விட்டு இருக்கிறீர்கள், புலி மீது சவாரி செய்துக்கொண்டு இருக்கிறீர்கள். புலியைவிட்டு இறங்கினால், அது உங்களை கொன்றுவிடும். ஒருவேளை உங்களுக்கு ஹதீஸ்கள் பற்றியும், முஹம்மது பற்றியும் உண்மைகள் இனி தெரிந்தாலும், அதனை வெளிப்படையாக நீங்கள் சொல்லவோ, எழுதவோ முடியாது.

இப்போது ஹதீஸ்கள் பற்றி தமிழ் முஸ்லிம்கள் என்ன சொல்கிறார்கள் என்பதை காண்போம்.

**நம்பகமற்ற ஹதீஸ்கள்:**

தற்கால சில தமிழ் முஸ்லிம் அறிஞர்களின் படி, உண்மையான ஹதீஸ்கள் என்று கருதப்படும் ''புகாரி மற்றும் முஸ்லிம்'' தொகுப்புக்களில், அனேக தில்லுமுல்லுகள் நடந்தேறியுள்ளது, அனேக பிழைகள் உள்ளது. இன்றும் அந்த பிழைகள் அப்படியே உள்ளது. நடைமுறைக்கும் விஞ்ஞானத்திற்கும், அறிவுடமைக்கும் எதிரான விவரங்களை முஹம்மது சொன்னதாக அவைகளில் பதிவு செய்யப்பட்டுள்ளது. எனவே இப்படிப்பட்ட ஹதீஸ்களை புறக்கணிக்கவேண்டும் என்று அவர்கள் சொல்கிறார்கள். இதையே மேடைகளில் பேசுகின்றார்கள்.

அதாவது, ஆதாரம் இல்லாத ஒரு குட்டிக்கதை, ஒரு வரி ஒரு சொல் கூட கிடையாது என்று நீங்கள் சொன்னீர்களே, அவைகளில் பொய்கள் உள்ளன, தில்லுமுல்லுகள் உள்ளன, ஆதாரமற்ற அனேக விவரங்கள் உள்ளன என்று முஸ்லிம்கள் சொல்கிறார்கள். முக்கியமாக தமிழ் நாடு தவ்ஹித் ஜமாத் என்ற இஸ்லாமிய குழு, இப்படி அனேக ஹதீஸ்களை புறக்கணித்துள்ளது, இன்றும் அதனை செய்துக்கொண்டு இருக்கிறது. இவைகள் பற்றி அறிய கீழ்கண்ட தொடுப்புக்களை படிக்கவும்:

1. கட்டுரை - பொய்யான ஹதீஸ்கள்
2. புத்தகம் - ஹதீஸ்கள் குர்ஆனிற்கு முரண்படுமா? PDF download

3. <u>கட்டுரை - நபிவழியில் இடைச்செருகள்கள்</u>
4. <u>கட்டுரை - ஹதீதுகளின் பாகுபாடுகள்</u>

**3) பாரா அவர்களுக்கு ஒரு அக்னிப் பரிட்சை:**

உங்களுடைய அந்த குட்டிக்கதை வரிகளை நீங்களே மறுத்தால் எப்படி இருக்கும்? ''நான் எழுதிய வரிகளுக்காக மனம் வருந்துகிறேன்'' என்று நீங்கள் சொல்ல நேரிட்டால் என்ன செய்வது? உங்களுக்கு ஒரு சின்ன அக்னிப் பரிட்சை, அதாவது நீங்கள் சிரிக்காமல், முகத்தை சுளிக்காமல் கீழ்கண்ட விவரங்களை (ஹதீஸ்களை) படித்து, உங்கள் கருத்துக்களைச் சொல்லவேண்டும். இந்த பகுதியை படித்துவிட்டு, நீங்கள் எழுதிய வரிகள் சரியானவைகளா? என்பதைச் சொல்லுங்கள்.

**1) 'ஷைத்தான் அவர் காதில் சிறுநீர் கழித்துவிட்டான்'**

இஸ்லாமைப் போன்ற ஒரு மதத்தை ஸ்தாபித்த முஹம்மது இப்படியெல்லாம் சொல்லியிருப்பாரா? நீங்கள் சிந்தித்துப் பாருங்கள்.

ஸஹீஹ் புகாரி எண் **1144.**

> **1144** அப்துல்லாஹ்(ரலி) அறிவித்தார்.
>
> ஒருவர் விடியும் வரை தூங்கி கொண்டே இருக்கிறார். தொழுகைக்கு எழுவதில்லை என்று நபி(ஸல்) அவர்களிடம் கூறப்பட்டது. அதற்கு நபி(ஸல்) அவர்கள் 'ஷைத்தான் அவர் காதில் சிறுநீர் கழித்துவிட்டான்' என்று விடையளித்தார்கள்.

**2) ஷைத்தான் பின் துவாரத்தின் வழியாகக் காற்றுவிட்டவனாக ஓடி விடுகிறான்**

பாரா அவர்களே, உங்கள் பகுதியில் மசூதி இருந்தால், அதிலிருந்து தினமும் ஐந்து வேளை பாங்கு சத்தம் வருகிறது பாருங்கள், அப்போதெல்லாம், ஷாத்தான் தன் பின் துவாரத்தின் வழியாகக் காற்றுவிட்டவனாக ஓடி விடுகின்றானாம். இதனை உலக மகா மார்க்கதின் ஸ்தாபர் முஹம்மது அவர்கள் சொல்லியுள்ளார்கள். இதனை நீங்கள் நம்புகிறீர்களா?

ஸஹீஹ் புகாரி எண் **1231.**

> **1231** 'தொழுகைக்காக பாங்கு சொல்லப்பட்டால் பாங்கு சப்தம் தனக்குக் கேட்காமலிருப்பதற்காக ஷைத்தான் பின் துவாரத்தின் வழியாகக் காற்றுவிட்டவனாக ஓடி விடுகிறான். பாங்கு முடிந்ததும் திரும்பி வந்து இகாமத் கூறப்பட்டதும் மீண்டும் ஓடுகிறான். இகாமத் முடிந்ததும் மீண்டும் வந்து தொழுபவரின் உள்ளத்தில் ஊடுருவி 'இதை இதையெல்லாம் நினைத்துப்பார்' எனக் கூறி, அவர் இதுவரை நினைத்துப் பார்த்திராதவற்றையெல்லாம் நினைவூட்டி அவர் எத்தனை ரக்அத்கள் தொழுதார் என்பதை மறக்கடிக்கிறான். உங்களில் ஒருவருக்குத் தாம் தொழுத ரக்அத்களில் மூன்றா அல்லது நான்கா என்று தெரியவிட்டால் (கடைசி) இருப்பில் இரண்டு ஸஜ்தாச் செய்து கொள்ளட்டும்' இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்: என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

**3) கருப்பு நாய் சாத்தானா? சிவப்பு மற்றும் மஞ்சள் நாய் யார்?**

முஹம்மது நாய்களை கொல்லச் சொன்னார்கள். தொழுகை செய்யும் மனிதர்களுக்கு முன்பு கருப்பு நாய் வந்துவிட்டால், தொழுகை முறித்துவிடுமாம். ஆனால், சிவப்பு நாய் அல்லது மஞ்சம் நிற நாய் வந்தால் தொழுகை முறியாதாம். கருப்பு நாய் தான் சாத்தான் என்று முஹம்மது கூறியுள்ளார். இப்படிப்பட்ட போதனை செய்பவர் எப்படி இறைவானால் அனுப்பப்பட்ட உண்மையான நபியாக இருக்கமுடியும்? உலகில் உள்ள அனைத்து கருப்பு நாய்களும் சாத்தான்களா? பாரா அவர்களே, நீங்கள் இந்த ஹதீஸை படித்துவிட்டு, இது உண்மை என்று நம்புகிறீர்களா?

ஸஹீஹ் முஸ்லிம் எண் **882:**

> **882.** அப்துல்லாஹ் பின் அஸ்ஸாமித் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
>
> அபூதர் அல்கிஃபாரீ (ரலி) அவர்கள், உங்களில் ஒருவர் (திறந்தவெளியில்) தொழ நிற்கும் போது தமக்கு முன்னால் வாகன (ஒட்டக)த்தின் (சேணத்திலுள்ள) சாய்வுக்கட்டை போன்றது இருந்தால் அதுவே அவருக்குத் தடுப்பாக அமைந்துவிடும். சாய்வுக்கட்டை போன்றது இல்லாவிட்டால் கழுதை, பெண் மற்றும் கறுப்புநாய் ஆகியன அவரது (கவனத்தை ஈர்த்து) தொழுகையை முறித்துவிடும் என அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள் என்றார்கள். உடனே நான், அபூதர் (ரலி) அவர்களே! சிவப்பு நிறநாய், மஞ்சள் நிற நாய் ஆகியவற்றை விட்டுவிட்டுக் கறுப்பு நிற நாயை மட்டுமே குறிப்பிடக் காரணம் என்ன? என்று கேட்டேன். அதற்கு அவர்கள், என் சகோதரரின் புதல்வரே! நீங்கள் என்னிடம் கேட்டதைப் போன்றே நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் கேட்டேன். அதற்கு அவர்கள் கறுப்பு நாய் ஷைத்தான் ஆகும் என்று கூறினார்கள் என்றார்கள்.

## 4) விவசாயம் செய்வது பாவமா? கலப்பை வீட்டில் இருந்தால் அல்லாஹ் இழிவைக் கொடுப்பாரா?

ஒரு வீட்டில் ஏர் கலப்பையும், இதர விவசாய கருவிகளும் இருந்தால், அந்த வீட்டில் அல்லாஹ் இழிவைப் புகச் செய்யாமல் இருப்பதில்லை என்று முஹம்மது கூறியுள்ளார். இது என்ன போதனை? இப்படியும் இறைவன் செய்வானா? உழவுத் தொழில் தான் உலக ஆரம்பகாலத்தில் மனிதன் செய்த தொழில். இதில் என்ன பாவம் இருக்கிறது? வாய்க்கு வந்தபடி முஹம்மது போதனை செய்துள்ளார். ஏழை விவசாயி சேற்றில் கால் வைக்கவில்லையானால், முஹம்மது சோற்றில் கைவைக்கமுடியாது என்பதை அவர் அறியவில்லையா? பாரா அவர்களே இவரை நீங்கள் இறைத்தூதர் என்று நம்புகிறீர்களா?

ஸஹீஹ் புகாரி **2321**

> **2321.** முஹம்மத் இப்னு ஸியாத் அல் அல்ஹானீ(ரஹ்) அறிவித்தார்.
>
> அபூ உமாமா அல் பாஹிலீ(ரலி), ஒரு வீட்டில் ஏர் கலப்பையையும் மற்றும் சில விவசாயக் கருவிகளையும் கண்டார்கள். உடனே அவர்கள், 'இந்தக் கருவி ஒரு சமுதாயத்தினரின் வீட்டில் புகும்போது அந்த வீட்டில் அல்லாஹ் இழிவைப் புகச் செய்யாமல் இருப்பதில்லை' என்று நபி(ஸல்) அவர்கள் கூற கேட்டிருக்கிறேன்" என்று கூறினார்கள். **Volume :2 Book :41**

## 5) இதற்காகவும் அல்லாஹ் வசனங்களை முஹம்மதுவிற்கு இறக்குவாரா?

மக்கள் மலம் கழிப்பது, சிறுநீர் போவது, உடலுறவு கொள்வது போன்றவற்றிற்கு அதிக (தேவையில்லாத) முக்கியத்துவத்தை முஹம்மதுவும் அல்லாஹ்வும் கொடுத்துள்ளார்கள். மக்கள் மலஜலம் கழிக்கும்போது, தங்கள் மர்ம உறுப்பு வானத்திற்கு தென்பட்டு விடுகின்றது என்று வெட்கப்படுகிறார்களாம், எனவே அல்லாஹ் இதற்கு ஒரு வெளிப்பாட்டை கொடுக்கிறார் (குர்-ஆன் **11:5**). எந்தெந்த காரணங்களுக்கு அல்லாஹ் காபிரியேல் தூதனை அனுப்பி வசனங்களை இறக்கவேண்டும் என்ற கட்டுப்பாடு, தரம் இல்லாமல் போய்விட்டது. மனிதர்கள் இறைவனுக்கு முன்பாக நிர்வாணிகள் தானே, இதனை விளக்குவதற்கு ஒரு வசனம் தேவையோ! இதிலிருந்து நமக்கு புரிவது என்னவென்றால், மக்கள் கேட்கும் கேள்விகளுக்கெல்லாம் முஹம்மது சொந்தமாக வசனங்களை சொல்லியுள்ளார், இவைகளை காபிரியேல் தூதன் வந்து தனக்கு இறக்கினான் என்றும் பொய்களைச் சொல்லியுள்ளார். இவைகளை உலக மக்கள் படிக்கும் போது சிரிக்கிறார்கள், இவரா இறைத்தூதர்? இவரா தீர்க்கதரிசி? என்று ஆச்சரியப்படுகிறார்கள். அக்காலத்தில் பாலைவனத்தில் மக்கள் நாகரீகம் இல்லாமல், சரியான வசதிகள் இல்லாமல் வாழ்ந்தார்கள். இன்றோ நமக்கு வசதிகள் உள்ளது. இன்று இந்த போதனைகள் எப்படி சரிப்பட்டு வரும்? ஆனால், முஸ்லிம்களோ, முஹம்மது சொன்ன ஒவ்வொரு வார்த்தையையும் இன்றும் குருட்டுத்தனமாக பின்பற்றுகிறார்கள். **[30]**

ஸஹீஹ் புகாரி **4681 & 4682:**

> **4681.** முஹம்மத் இப்னு அப்பாத் இப்னி ஜஅஃபர்(ரஹ்) அறிவித்தார்.
>
> இப்னு அப்பாஸ்(ரலி) இந்த (திருக்குர்ஆன் **11:5** வது) வசனத்தை 'அலா இன்னஹும் தஸ்நவ்னீ ஸுதூருஹும்' என ஓத கேட்டேன். அவர்களிடம் அது குறித்து நான் (விளக்கம்) கேட்டதற்கு அவர்கள் 'மக்கள் சிலர், இயற்கைக் கடனை நிறைவேற்றச் சென்று (ஆடையை நீக்கிடத் தம் பிறவு உறுப்பு) வானத்திற்குத் தெரியும்படி உட்காருவதையும், இவ்வாறே தம் மனைவிமார்களுடன் உறவு கொள்ளும்போது (தம் ஆடையை நீக்கிப் பிறவி உறுப்பு) வானத்திற்குத் தெரிந்து விடுவதையும் எண்ணி வெட்கப்பட்டு (அதை மறைக்க முயன்று தலைகுனிந்து) கொள்வார்கள். அவர்களைக் குறித்தே இந்த வசனம் அருளப்பட்டது' என்று கூறினார்கள். **Volume :5 Book :65**
>
> **4682.** முஹம்மத் இப்னு அப்பாத் இப்னி ஜஅஃபர்(ரஹ்) கூறினார்
>
> இப்னு அப்பாஸ்(ரலி) 'அலா இன்னஹும் தஸ்நவ்னீ ஸுதூருஹும்' என்று இந்த (திருக்குர்ஆன் **11:5** வது) இறைவசனத்தை ஓதினார்கள். நான், 'அபுல் அப்பாஸே! இந்த வசனத்திலுள்ள 'தங்கள் நெஞ்சங்களைத் திருப்பிக் கொள்கிறார்கள்' என்பதன் பொருள் என்ன?' என்று கேட்டேன். அவர்கள், 'சிலர் தம் மனைவியுடன் உடலுறவு கொள்ள விரும்பும்போது, அல்லது (இயற்கைக் கடனை நிறைவேற்ற) தனியே ஒதுங்கச் செல்லும்போது (தம் பிறவி உறுப்பு வெளியே தெரிந்து விடுகிறதே என்று) வெட்கப்பட்டு (குனிந்து தம் நெஞ்சுகளால் அதை மூடி மறைக்க முற்பட்டு) வந்தார்கள். அப்போது இந்த இறை வசனம் அருளப்பட்டது' என்று கூறினார்கள். **Volume :5 Book :65**

**6) கோடை காலத்துக்கும், குளிர் காலத்துக்கும் காரணம் நரகம் தான்**

கோடைக்கும் வாடைக்கும் காரணம் நரகம் என்று முஹம்மது சொல்லியுள்ளார். நரகமும் அல்லாஹ்வும் இவ்வாறு பேசிக்கொண்டார்களாம். நரகம் தனது இறைவனிடம், "என் இறைவா! என்னுடைய ஒருபகுதி மறுபகுதியைத் தின்கிறதே?" என முறையிட்டது. எனவே, இறைவன் அதற்கு (ஓய்வு தரும் வகையில்) ஒரு மூச்சு குளிர் காலத்திலும் மற்றொரு மூச்சு

கோடை காலத்திலுமாக இரு மூச்சுகள் விட்டுக் கொள்ள அனுமதியளித்தான். அவைதாம் நீங்கள் கோடை காலத்தில் அனுபவிக்கும் கடுமையான வெப்பமும் குளிர் காலத்தில் அனுபவிக்கும் கடுமையான குளிரும் ஆகும். இப்படி கற்பனை உரையாடல்களைச் சொல்லி, மக்களை ஏமாற்றியவர் முஹம்மது. பாரா அவர்களே, இப்படியெல்லாம் முஹம்மது சொல்லியிருப்பாரா? இது அவர் மீது சொல்லப்பட்ட கட்டுக்கதையல்லவா?

ஸஹீஹ் முஸ்லிம் எண்: **1087**

> **1087.** அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
>
> நரகம் தனது இறைவனிடம், "என் இறைவா! என்னுடைய ஒருபகுதி மறுபகுதியைத் தின்கிறதே?" என முறையிட்டது. எனவே, இறைவன் அதற்கு (ஓய்வு தரும் வகையில்) ஒரு மூச்சு குளிர் காலத்திலும் மற்றொரு மூச்சு கோடை காலத்திலுமாக இரு மூச்சுகள் விட்டுக் கொள்ள அனுமதியளித்தான். அவைதாம் நீங்கள் கோடை காலத்தில் அனுபவிக்கும் கடுமையான வெப்பமும் குளிர் காலத்தில் அனுபவிக்கும் கடுமையான குளிரும் ஆகும்.

### 7) சிறு நீர் கழிக்கும் போது மறைக்காமல் இருந்ததற்காக கல்லறையில் வேதனையடைந்த மனிதன்

எதற்கு தண்டனை தரவேண்டும் எதற்கு தரக்கூடாது என்ற கட்டுப்பாடு இல்லாமல் இஸ்லாமின் இறைவன் செயல்படுகிறார். ஒரு முறை முஹம்மது ஒரு சுடுகாட்டுக்கு அருகில் சென்றுக்கொண்டு இருக்கும் பொது, இரண்டு மனிதர்கள் கல்லறைக்குள் வேதனைப்பட்டு சத்தமிடுவதை முஹம்மது கேட்டாராம். அதில் ஒருவர் சிறு நீர் கழிக்கும் போது மறைக்காமல் கழித்ததினால், அல்லாஹ் இப்படி கல்லறையில் வேதனையை கொடுத்தாராம். இதற்காக, முஹம்மது பேரிச்ச கிளைகளை அவர்களுக்கு அருகில் நாட்டு வைத்தாராம். இந்த மட்டைகள் காயாமல் இருக்கும் வரை கல்லறையில் உள்ளே வேதனைப்படும் மனிதர்களுக்கு வேதனை இல்லாமல் இருக்குமாம். இது தான் முஹம்மது சொன்ன கதை. அறிவுள்ள மனிதன் எவனாவது இதனை அங்கீகரித்துக்கொள்வானா? இது கட்டுக்கதையில்லையா பாரா அவர்களே? நிலாவில் வடைசுடும் பாட்டியின் கதைப்போல முஹம்மது கதைகளைச் சொல்லியுள்ளார்.

ஸஹீஹ் புகாரி **216 & 218**

> **216.** நபி(ஸல்) அவர்கள் மக்கா அல்லது மதீனாவில் ஒரு தோட்டத்தின் பக்கமாகச் சென்று கொண்டிருந்தபோது, கப்ரில் வேதனை செய்யப்படும் இரண்டு மனிதர்களின் சப்தத்தைச் செவியுற்றார்கள். அப்போது, 'இவர்கள் இருவரும் வேதனை செய்யப்படுகிறார்கள். ஒரு பெரிய விஷயத்திற்காக (பாவத்திற்காக) இவர்கள் இருவரும் வேதனை செய்யப்படவில்லை" என்று சொல்லிவிட்டு, 'இருப்பினும் (அது பெரிய விஷயம்தான்) அவ்விருவரில் ஒருவர், தாம் சிறு நீர் கழிக்கும்போது மறைப்பதில்லை. மற்றொருவர், புறம்பேசித் திரிந்தார்' என்று கூறிவிட்டு ஒரு பேரீச்ச மட்டையைக் கொண்டு வரச் சொல்லி அதை இரண்டாகப் பிளந்து ஒவ்வொரு கப்ரின் மீதும் ஒரு துண்டை வைத்தார்கள். அது பற்றி நபி(ஸல்) அவர்களிடம் 'நீங்கள் ஏன் இவ்வாறு செய்தீர்கள்?' என்று கேட்கப்பட்டதற்கு, 'அந்த இரண்டு மட்டைத் துண்டுகளும் காயாமல் இருக்கும் போதெல்லாம் அவர்கள் இருவரின் வேதனை குறைக்கப்படக் கூடும்' என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்: என இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்.

**218.** 'நபி(ஸல்) அவர்கள் இரண்டு கப்ருகளைக் கடந்து சென்றபோது 'இவர்கள் இருவரும் வேதனை செய்யப்படுகிறார்கள். ஒரு பெரிய விஷயத்திற்காக (பாவத்திற்காக) இவர்கள் இருவரும் வேதனை செய்யப்படவில்லை. அவ்விருவரில் ஒருவர், தாம் சிறுநீர் கழிக்கும்போது மறைப்பதில்லை. மற்றொருவர், புறம்பேசித் திரிந்தார்' என்று கூறிவிட்டு, ஒரு பசுமையான பேரீச்ச மட்டையைக் கொண்டு வரச் சொல்லி அதை இரண்டாகப் பிளந்து ஒவ்வொரு கப்ரின் மீதும் ஒரு துண்டை வைத்தார்கள். அது பற்றி நபி(ஸல்) அவர்களிடம், 'இறைத்தூதர் அவர்களே! நீங்கள் ஏன் இவ்வாறு செய்தீர்கள்?' என கேட்கப்பட்டபோது 'அந்த இரண்டு மட்டைத் துண்டுகளும் காயாமல் இருக்கும் போதெல்லாம் அவர்கள் இருவரின் வேதனை குறைக்கப்படக் கூடும்' என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்: என இப்னுஅப்பாஸ்(ரலி) அறிவித்தார்.

**8) பல்லியை ஏன் கொல்லவேண்டும்? ஆபிரகாம் காலத்தில் வாழ்ந்த பாலஸ்தீன பல்லி செய்த பாவத்திற்கு, 2500 ஆண்டுகளுக்குப் பிறகு அரேபியாவில் வாழும் பல்லிக்கு தண்டனைக் கொடுப்பது நியாயமா?**

ஆபிரகாமை தீக்குண்டத்தில் போட்டபோது, அந்த அக்கினி இன்னும் அதிகமாக எரியவேண்டும் என்றுச்சொல்லி பல்லி ஊதியதாம் எனவே பல்லியை கொல்லவேண்டும் என்று முஹம்மது கூறினார். பாட்டிக்கதை எப்படி உள்ளதென்று பார்த்தீர்களா? பாட்டிகூட இப்படி கற்பனை செய்துச் சொல்லாது, அவ்வளவு பழமைவாதியாக முஹம்மது சொல்லியுள்ளார். இதுமட்டுமா, ஒரே அடியில் பல்லியை கொன்றவருக்கு அதிக நன்மைகளாம், இரண்டு அடியில் கொன்றவருக்கு கொஞ்சம் குறைவான நன்மைகள் கிடைக்குமாம். நெருப்பை பல்லி ஊதி அனலை அதிகமாக்குமா? இப்போது கேள்வி என்னவென்றால், ஆபிரகாம் காலத்தில் வாழ்ந்த பாலஸ்தீன பல்லி செய்த பாவத்திற்கு, 2500 ஆண்டுகளுக்குப் பிறகு அரேபியாவில் வாழும் பல்லிக்கு தண்டனைக் கொடுப்பது எந்த ஊர் நியாயம்?

ஸஹீஹ் புகாரி எண்: 3359 & 4509

**3359.** உம்மு ஷுரைக்(ரலி) அறிவித்தார்

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் பல்லியைக் கொல்லும்படி உத்திரவிட்டார்கள். மேலும், அவர்கள், 'அது இப்ராஹீம்(அலை) அவர்கள் தீக்குண்டத்தில் எறியப்பட்டபோது நெருப்பை) அவர்களுக்கெதிராக ஊதிவிட்டுக் கொண்டிருந்தது" என்றும் கூறினார்கள்.

ஸஹீஹ் முஸ்லிம் எண்: 4509

**4509.** அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:

ஒரு பல்லியை முதலாவது அடியிலேயே கொன்றவருக்கு இவ்வளவு இவ்வளவு நன்மைகள் உண்டு. இரண்டாவது அடியில் கொன்றவருக்கு முதலாவது அடியில் கொன்ற வரைவிடக் குறைவாக இவ்வளவு இவ்வளவு நன்மைகள் உண்டு; மூன்றாவது அடியில் கொன்றவருக்கு இரண்டாவது அடியில் கொன்றவரைவிடக் குறைவாக நன்மை உண்டு.

**9) மரம் அழுததாம், இறைத்தூதர் ஆறுதல் சொன்னாராம்**

முஹம்மது தம் மக்களுக்கு கட்டுக்கதைகளை அதிகமாக சொல்லியுள்ளார். ஒரு பேரிச்ச மரத்தின் அடிப்பகுதியின் மீது சாய்ந்தபடி முஹம்மது உரை நிகழ்த்தினாராம். அதன் பிறகு அதை விட்டுவிட்டு வெறு இடம் மாறி உரை நிகழ்த்தினாராம். அப்போது தன்னை முஹம்மது பயன்படுத்தவில்லை என்றுச்சொல்லி அந்த மரம் அழுததாம். அதனை ஆறுதல் படுத்த முஹம்மது அதனிடம் சென்று அதன் மீது கைவைத்து பரிவுடன் வருடினாராம். இப்படியெல்லாம் கட்டுக்கதைகளைச் சொன்னவர் முஹம்மது ஆவார். மரம் அழுமா? மக்களை எப்படியெல்லாம் ஏமாற்றியுள்ளார் பாருங்கள். இது மட்டுமல்ல, இன்னும் அனேக கட்டுக்கதைகளைச் சொல்லி மக்களை ஏமாற்றியுள்ளார் முஹம்மது. பாரா அவர்களே, இது கட்டுக்கதையில்லையா?

ஸஹீஹ் புகாரி 3583

இப்னு உமர்(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்கள் (பள்ளிவாசலில் தூணாக இருந்த) ஒரு பேரீச்ச மரத்தின் அடிப்பகுதியின் மீது சாய்ந்தபடி உரை நிகழ்த்திக் கொண்டிருந்தார்கள். அவர்கள் (மிம்பர்) உரைமேடையை அமைத்த பின்னால் அதற்கு மாறிவிட்டார்கள். எனவே, (நபி-ஸல்- அவர்கள் தன்னைப் பயன்படுத்தாததால் வருத்தப்பட்டு) அந்த மரம் ஏக்கத்துடன் முனகியது. உடனே, நபி(ஸல்) அவர்கள் அதனிடம் சென்று (அதை அமைதிப்படுத்துவதற்காக) அதன் மீது தன் கையை வைத்து (பரிவுடன்) வருடிக் கொடுத்தார்கள்.

## 10) தீய கனவுகள் கண்டால் இடப்பக்கத்தில் எச்சில் துப்புங்கள், அப்போது தீங்கு வராது

முஸ்லிம்களுக்கு தீய கனவுகள் வந்தால், தங்கள் இடப்பக்கத்தில் எச்சில் துப்பவேண்டுமாம், அதன் பிறகு அல்லாஹ்விடம் பாதுகாப்பு கோரவேண்டுமாம். அப்போது அவர்களுக்கு தீய கனவினால் எந்த ஒரு தீங்கும் வராதாம். எச்சில் துப்பினால், எப்படி தீய சக்திகள் செயலிழக்கும்? அல்லாஹ்விடம் வேண்டிக்கொள்வது நல்லது தான். ஆனால், எச்சில் துப்புவது என்பது மூடப்பழக்கமாகும். கனவுகளுக்கு ஆயிரம் காரணங்கள் இருக்கலாம், நல்ல கனவும் வரும் தீய கனவும் வரும். இடப்பக்கம் எச்சில் துப்பிவிட்டால் தீமை வராதா? இப்படிப்பட்ட மூட நம்பிக்கைகளைச் சொல்லி மக்களை மயக்கிய முஹம்மது எப்படி நபியாக இருக்கமுடியும்? எப்படி மக்களை நல்வழிப்படுத்தும் தீர்க்கதரிசியாக இருக்கமுடியும்? இவர் மக்களை தன் கட்டுக்கதைகளால் மயக்கும் நபராக இருக்கிறார். இவரை நம்பினால், நாமும் நம் படுக்கையின் இடப்பக்கத்தை அவ்வப்போது எச்சிலால் நிரப்பவேண்டியது தான்.

ஸஹீஹ் புகாரி எண் 3292:

3292. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்:

நல்ல கனவு அல்லாஹ்விடமிருந்து வருவதாகும்; கெட்ட (அச்சுறுத்தும்) கனவுகள் ஷைத்தானிடமிருந்து வருவனவாகும். உங்களில் எவரேனும் அச்சுறுத்தும் தீய கனவைக் கண்டால் அவர் தன் இடப் பக்கத்தில் எச்சில் துப்பட்டும்; அல்லாஹ்விடம் அக்கனவின் தீங்கிலிருந்து பாதுகாப்புக் கோராட்டும். ஏனெனில், (இப்படிச் செய்தால்) அது அவருக்குத் தீங்கு செய்ய முடியாது. என கதாதா(ரலி) அறிவித்தார். **Volume :3 Book :59**

## 11) முஹம்மதுவின் சளி, நபித்தோழர்களுக்கு ஃபேர் அண்ட் லௌலி (Fair and Lovely)

முஹம்மது தன் தோழர்களை எந்த அளவிற்கு கீழ்தரமாக நடத்தியுள்ளார் என்று பாருங்கள். முஹம்மது சளியை துப்பினால், அதனை தன் தோழர்கள் கையில் பிடித்துக்கொண்டு, தங்கள் முகத்தில் ஃபேர் அண்ட் லௌலி போல தேய்த்துக்கொள்வார்களாம். தங்கள் உடலில் பூசிக்கொள்வார்களாம். இதனையெல்லாம் கண்டு உள்ளுக்குள் முஹம்மது மகிழ்ந்து இருந்திருப்பார். ஹதீஸ்கள் இப்படி முஹம்மதுவின் சளியை முகத்தில் பூசிக்கொள்வது அவரை கண்ணியப்படுத்துவது ஆகும் என்றுச் சொல்கிறது. அற்ப விஷயங்களுக்கெல்லாம் மக்களை கண்டிக்கும் இவர், இப்படி ஆரோக்கியமற்ற செயலைச் செய்யும் இவர்களை தடை செய்யக்கூடாதா? அய்யோ பரிதாபம், எவ்வளவு கீழ்தரமாக மக்கள் நடத்தப்பட்டுள்ளார்கள். மத விஷயத்தில் மக்கள் எவ்வளவு கீழ்தரமாக இறங்கிவிடுகின்றார்கள். எதற்கு எடுத்தாலும் குர்-ஆனில் விஞ்ஞானம் என்றுச் சொல்லும் முஸ்லிம்கள், முஹம்மதுவின் சளிப் பற்றி என்ன விஞ்ஞான அற்புதத்தைச் சொல்வார்கள்? முஹம்மதுவை பின்பற்றினால், நாமும் இப்படி செய்யவேண்டி வரும் போல இருக்கிறது. நபித்தோழர்களுக்கு எங்கள் பரிதாபங்கள் உரித்தாகுக. பாரா அவர்களே, முஹம்மது இதனை அனுமதித்து இருந்திருப்பாரா? ஆம் என்றுச் சொன்னால், இவர் ஒரு சரியான ஆன்மீக தலைவர் அல்ல. ''இல்லை'' என்றுச் சொன்னால், இது ஒரு கட்டுக்கதையாகும், அப்படியானால், உங்கள் வரிகளின் நிலை என்ன?

ஸஹீஹ் புகாரி எண்கள்: **2731 & 2732**

> . . . .அல்லாஹ்வின் மீதாணையாக! நபி(ஸல்) அவர்கள் எப்போது (தொண்டையைச் செருமி) சளி துப்பினாலும், உடனே அதை அவர்களின் தோழர்களில் ஒருவர், தன் கையில் பிடித்துத் தன் முகத்திலும், மேனியிலும் தேய்த்துக் கொள்வார். நபி(ஸல்) அவர்கள் தம் தோழர்களுக்குக் கட்டளையிட்டால் அவர்கள் உடனே அதை நிறைவேற்றிட போட்டி போட்டுக் கொண்டு ஒருவரையொருவர் முந்திக் கொள்வார்கள். நபியவர்கள் உளூச் செய்யும்போது, அவர்கள் உளூச் செய்து எஞ்சிய தண்ணீரைப் பிடித்து (தங்கள் மேனியில் தேய்த்து)க் கொள்வதற்காக ஒருவரோடொருவர் சண்டை போடுமளவிற்குச் செல்வார்கள். . . . . . அல்லாஹ்வின் மீதாணையாக! முஹம்மதின் தோழர்கள் முஹம்மத்து அளிக்கிற கண்ணியத்தைப் போல் எந்த அரசருக்கும் அவரின் தோழர்கள் கண்ணியம் அளிப்பதை நான் பார்த்ததேயில்லை. அல்லாஹ்வின் மீதாணையாக! அவர் சளியைத் துப்பினால் அதை அவரின் தோழர்களில் ஒருவர் தம் கையில் ஏந்திக் கொள்கிறார். அதை அவர் தம் முகத்திலும், மேனியிலும் தேய்த்துக் கொள்கிறார். . .

## 12) "தற்காலிக திருமணம் (Temporary Marriage) " என்ற சீர்கேட்டை அனுமதித்த முஹம்மது

திருமணத்தின் முக்கியத்துவத்தைக் கருதி, ''திருமணம் சொர்க்கத்தில் நிச்சயிக்கப்படுகின்றது'' என்று நாம் பொதுவாக சொல்லுவோம். ஆனால், முஹம்மதுவோ தற்காலிக திருமணம் என்ற பெயரில் ஒரு சீர்க்கேட்டை சட்டமாக அனுமதித்துள்ளார். அதாவது ஒரு மணி நேரம், அல்லது ஒரு நாள் அல்லது ஒரு மாதம் வரையில் ஒரு ஆணும் பெண்ணும் உடலுறவுக்காக மட்டுமே கணவன் மனைவியாக வாழ்வதை இவர் அனுமதித்துள்ளார். இதனை உலக மக்கள் விபச்சாரம் என்றுச் சொல்வார்கள். இதற்கு ஆதாரமாக குர்-ஆன் 5:87ம் வசனத்தையும் சொல்லியுள்ளார். இவ்வசனம் இதனை பரிசுத்தமான செயல் என்றும் கூறுகிறது. போர் செய்யச் சென்ற போது, முஹம்மதுவோடு இருந்த மக்கள் இவரிடம் வந்து, எங்கள் மனைவிகள் தூரமாக இருக்கிறார்கள், நாங்கள் என்ன செய்ய என்று கேட்டபோது, தற்கால திருமணம் செய்துக்கொள்ளுங்கள் என்று அறிவுரை கூறியுள்ளார். இந்த செயலை இன்றும் ஷியா பிரிவு இஸ்லாமியர்கள் பின்பற்றிக்கொண்டு இருக்கிறார்கள். இன்று இது கேவலமான செயல் என்று எண்ணி சுன்னி முஸ்லிம்கள் பின்பற்றாவிட்டாலும், குர்-ஆன் 5:87 இன்னும் இரத்து

செய்யப்படாமல் இருக்கிறது. விபச்சாரத்திற்கு வேறு ஒருபெயர் சூட்டிவிட்டால், அது நியாயமானதாக மாறிவிடுமா? பாரா அவர்களே, இதைப் பற்றி உங்கள் கருத்தை அறிய விரும்புகிறேன்.

ஸஹீஹ் புகாரி எண் **5075, 5116, 5117, 5118 & 5119 &** குர்-ஆன் **5:87**

**5075.** கைஸ் இப்னு அபீ ஹாஸிம்(ரஹ்) அறிவித்தார்

அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) 'நாங்கள் இறைத்தூதர்(ஸல்) அவர்களுடன் ஓர் அறப்போரில் கலந்து கொண்டிருந்தோம். அப்போது எங்களுடன் (எங்கள் துணைவியரோ, வேறு பெண்களை மணந்துகொள்ளத் தேவையான செல்வமோ) ஏதும் இருக்கவில்லை. எனவே நாங்கள் இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம், '(ஆண்மை நீக்கம் செய்துகொள்ள) நாங்கள் காயடித்துக் கொள்ளலாமா?' என்று கேட்டோம். அவ்வாறு செய்யவேண்டாமென நபி(ஸல்) அவர்கள் எங்களுக்குத் தடை விதித்தார்கள். அதன் பின்னர் ஆடைக்கு பதிலாகப் பெண்களை மணந்துகொள்ள எங்களுக்கு அனுமதியளித்தார்கள்'' என்று கூறிவிட்டு, பின்வரும் வசனத்தை அன்னார் எங்களுக்கு ஓதிக்காட்டினார்கள்:

இறைநம்பிக்கையாளர்களே! அல்லாஹ் உங்களுக்கு அனுமதித்துள்ள தூய்மையான பொருட்களை நீங்கள் விலக்கிக் கொள்ளாதீர்கள். மேலும், நீங்கள் வரம்புமீறாதீர்கள். நிச்சயமாக அல்லாஹ் வரம்பு மீறுவோரை நேசிப்பதில்லை. (திருக்குர்ஆன் **05:87**) **Volume :5 Book :67**

குர்-ஆன் **5:87**

**5:87.** முஃமின்களே! அல்லாஹ் உங்களுக்கு ஹலாலாக்கி (ஆகுமாக்கி)யுள்ள, பரிசுத்தமான பொருட்களை ஹராமானவையாக (விலக்கப்பட்டவையாக) ஆக்கிக் கொள்ளாதீர்கள்; இன்னும் வரம்பு மீறியும் செல்லாதீர்கள்; நிச்சயமாக அல்லாஹ் வரம்பு மீறுபவர்களை நேசிப்பதில்லை.

## 13) நெய்யில் விழுந்த எலி - அல்லாஹ் கொடுத்த வஹி, இறைத்தூதர் கொடுத்த வழி

அக்காலத்து முஸ்லிம்களுக்கு எது ஆரோக்கியம், எது சுகாதாரம் என்ற அடிப்படை அறிவு இல்லை என்றுச் சொல்லத்தோன்றுகிறது. தேவையில்லாத விஷயத்துக்கெல்லாம் முஹம்மதுவிடம் கேள்வி கேட்டு இருக்கிறார்கள். சரி மக்கள் கேட்கிறார்களே! அவர்களை வெறுமனே அனுப்பக்கூடாது என்பதற்காக எதையாவது சொல்லிவிடுவது முஹம்மதுவின் வழக்கமாக இருந்துள்ளது. நெய்யில் எலி விழுந்துவிட்டால் என்ன செய்வது என்று மக்கள் கேட்க, இதற்கு முஹம்மது "அந்த எலியையும் அதைச் சுற்றியுள்ள நெய்யையும் எடுத்து எறிந்துவிட்டு உங்கள் நெய்யை நீங்கள் சாப்பிடுங்கள்" என்று பதில் சொல்லியுள்ளார். செத்த எலியினால் உண்டாகும் வியாதிகள் என்னவென்று முஹம்மதுவிற்கும் தெரியவில்லை, அவரது இறைவன் அல்லாஹ்விற்கும் தெரியவில்லை. இந்த விஷயம் முஸ்லிம்களுக்கும் தெரியவில்லை. ஒருவேளை எலி உயிரோடு இருந்திருந்தாலும் அது எங்கேயெல்லாம் சுற்றி வந்ததோ! முஹம்மது சாதாரணமாகச் சொன்ன விஷயத்தையும் இறைவாக்கு என்று நம்பி முஸ்லிம்கள் வாழுகிறார்கள். இப்படிப்பட்ட மக்களை உருவாக்கியவர் முஹம்மது ஆவார். அவர் சொல்வதெல்லாம் செய்வதெல்லாம் இறைவன் கொடுத்த செயல் என்று நம்பி முஸ்லிம்கள் வாழுகிறார்கள். பாரா அவர்களே, உங்கள் வீட்டில் நெய்யில் எலி விழுந்தால் நீங்கள் என்ன செய்வீர்கள்?

ஸஹீஹ் புகாரி எண்கள் **235 & 236**

**235.** 'நெய்யில் விழுந்துவிட்ட எலியைப் பற்றி நபி(ஸல்) அவர்களிடம் கேட்கப்பட்டதற்கு, 'அந்த எலியையும் அதைச் சுற்றியுள்ள நெய்யையும் எடுத்து எறிந்துவிட்டு உங்கள் நெய்யை நீங்கள் சாப்பிடுங்கள்' என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்: என மைமூனா(ரலி) அறிவித்தார்.

**236.** 'நெய்யில் விழுந்துவிட்ட எலியைப் பற்றி நபி(ஸல்) அவர்களிடம் கேட்கப்பட்டதற்கு 'அந்த எலியையும் அதைச் சுற்றியுள்ள நெய்யையும் எடுத்தெறிந்துவிட்டு உங்கள் நெய்யை நீங்கள் சாப்பிடுங்கள்' என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்: என மைமூனா(ரலி) அறிவித்தார்.

## 14) எலிகளாக மாறிய யூதர்கள், ஆதாரம் என்ன? அவைகள் ஒட்டக பாலை குடிப்பதில்லை

முஹம்மதுவின் ஆன்மீக ஞானத்தைப் பற்றி புகழ்ந்து பேசாமல் இருக்கமுடியாது. ஒரு முறை ஒரு இஸ்ரவேல் குழுவினர் காணாமல் போய்விட்டார்களாம், அவர்கள் எலிகளாக மாற்றப்பட்டு இருப்பார்கள் என்று முஹம்மது நம்புகிறார். இதற்கு ஆதாரம் என்னவென்று கேட்டால், அந்த எலிகளுக்கு முன்னால் ஒட்டக பாலை வைத்தால் அவைகள் அதனை குடிக்காதாம் (யூதர்கள் ஒட்டக மாமிசம், பால் சாப்பிடமாட்டார்கள்). ஆனால், ஆட்டுப்பால் வைத்தால், அவைகள் குடித்துவிடுமாம். இதனால், அந்த எலிகள் நிச்சயமாக காணாமல்போன இஸ்ரவேல் மக்கள் தானாம். என்னே ஞானம், என்னே விளக்கம். யாருடைய காதில் பூவைக்கிறார் முஹம்மது? இப்படியும் ஒரு தீர்க்கதரிசியா? இப்படியும் கட்டுக்கதையா? முஸ்லிம் மதரஸாக்களில் சின்ன பையன்களுக்கு இந்த கதைகளைச் சொல்லி அவர்களை குதூகலமாக்குவார்கள் முஸ்லிம் அறிஞர்கள். அறிவுள்ளவன் இவைகளை நம்பமாட்டான். இப்படி கதைகளை சொந்தமாக அள்ளிவீசிய முஹம்மது எப்படி உண்மை தீர்க்கதரிசியாக இருக்கமுடியும்? இந்த ஹதீஸில் ஒரு வரி, ஒரு சொல் கூட கட்டுக்கதையாக உங்களுக்கு தெரியவில்லையா? பாரா அவர்களே!

ஸஹீஹ் புகாரி எண் **3305**

**3305.** அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

பனூஇஸ்ராயீல்களில் ஒரு குழுவினர் காணாமல் போய்விட்டார்கள். அவர்கள் என்ன ஆனார்கள் என்று தெரியவில்லை. நான் அவர்களை எலிகளாக (உருமாற்றப்பட்டுவிட்டதாக)வே கருதுகிறேன்.

அவற்றுக்கு (முன்னால்) ஒட்டகத்தின் பால் வைக்கப்பட்டால் அவை (அதைக்) குடிப்பதில்லை. அவற்றுக்கு (முன்பாக) ஆடுகளின் பால் வைக்கப்பட்டால் அவை (அதைக் குடித்து விடும்" என்று நபி(ஸல்)

அவர்கள் அவர்கள் சொன்னார்கள். இதை நான் கஅபுல் அஹ்பார்(ரலி) அவர்களுக்கு அறிவித்தேன். உடனே அவர்கள், 'நபி(ஸல்) அவர்கள் இதைச் சொல்ல நீங்கள் கேட்டீர்களா?' என்று வினவினார்கள். நான், 'ஆம் (கேட்டேன்)" என்றேன். அவர்கள் (திரும்பத் திரும்பப்) பலமுறை அதே போன்று கேட்டார்கள். 'நான் தவ்ராத்தையா ஓதுகிறேன்? (அதிலிருந்து சொல்வதற்கு?)" என்று கேட்டேன்.

## 15) தொழுகையில் இமாமை முந்தித் தம் தலையை உயர்த்துபவரின் தலையை கழுதையைப் போல் அல்லாஹ் மற்றிவிடுகின்றார்

சிறுபிள்ளைகள் பேசிக்கொள்ளும் போது, ஏதாவது தவறு செய்தால் சாமி கண்ணை குத்திவிடும் என்று பேசிக்கொள்வதை நாம் காணமுடியும். நம்மில் சிலரும் இப்படி பேசி இருப்போம். ஆனால், உலகத்திற்கே வழிகாட்டியாக வந்தவர் என்று முஸ்லிம்கள் போற்றும் முஹம்மது இப்படி பிள்ளைகளைப் போல போதனை செய்வது ஏற்புடையதாக இருக்குமா? " உங்களில் ஒருவர் தொழுகையில் இமாமை முந்தித் தம் தலையை உயர்த்துவதால் அவரின் தலையைக் கழுதையுடைய தலையாகவோ அல்லது அவரின் உருவத்தைக் கழுதையுடைய உருவமாகவோ அல்லாஹ் ஆக்கி விடுவதை அஞ்ச வேண்டாமா?" என்று முஹம்மது கூறியுள்ளார். தொழுகையில் ஒருவர் தலையை இமாம் உயர்த்துவதற்கு முன்பாக சீக்கிரமாக உயர்த்திவிடுவதினால், அல்லாஹ் இப்படிப்பட்ட கீழ்தரமான தண்டனையை கொடுப்பாரா? உண்மையிலேயே முஹம்மதுவை தீர்க்கதரிசி என்றுச் சொல்பவர்கள் இன்னும் அறியாமையிலேயே இருக்கிறார்கள் என்று அர்த்தம். சிறு பிள்ளைகளைப் போல் போதனை செய்பவரை எப்படி ஒரு நபி என்று கிறிஸ்தவர்கள் நம்புவார்கள்? பாரா அவர்களே, நீங்கள் சொல்லுங்கள்! முஹம்மது இதனை சொல்லியிருக்கமாட்டார் அல்லவா? (ஏன் தான் நிலமெல்லாம் இரத்தம் தொடர்களை எழுதினேனோ! என்று வருத்தப்படுகின்றீர்களா? உங்களுக்கு அந்நாட்களில் இஸ்லாமிய புத்தகங்களைக் கொடுத்து, இஸ்லாமை கற்றுக்கொடுத்தவர்களிடம், ஏனய்யா இப்படிப்பட்ட ஹதீஸ்கள் இருப்பதை எனக்குச் சொல்லவில்லை என்று இன்று கேட்டுப்பாருங்கள், கேட்கும் தைரியமிருந்தால்!)

ஸஹீஹ் புகாரி எண்: 691

> 691. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்:
>
> "உங்களில் ஒருவர் தொழுகையில் இமாமை முந்தித் தம் தலையை உயர்த்துவதால் அவரின் தலையைக் கழுதையுடை தலையாகவோ அல்லது அவரின் உருவத்தைக் கழுதையுடைய உருவமாகவோ அல்லாஹ் ஆக்கி விடுவதை அஞ்ச வேண்டாமா?." என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

## 16) சொர்க்கவாசியான பெண் உலகத்தாரை எட்டிப்பார்த்தால், வானத்திற்கும் பூமிக்குமிடையே உள்ள அனைத்தையும் பிரகாசமாக்கி விடுவாள்

அல்லாஹ்விற்காக ஜிஹாத் போர் புரிந்து அதில் மரித்தால், அவர்களுக்கு அனேக பெண்கள் (72) தருவதாக முஸ்லிம்கள் நம்புகிறார்கள். இது தவிர சாதாரண நல்ல முஸ்லிம்களுக்கும் சொர்க்கத்தில் ஹூருல் ஈன்கள் என்ற பெண்கள் கிடைப்பார்கள் என்று குர்-ஆனும் சொல்கிறது. இந்தப் பெண்களில் ஒருத்தி, உலகத்தாரை எட்டிப்பார்த்தால், வானத்திற்கும் பூமிக்கும் இடையே பிரகாசம் வந்துவிடுமாம். இவ்வளவு மேன்மை அந்த பெண்களின் கண்களில் இருக்கிறது என்று முஹம்மது கூறியுள்ளார். அதாவது சூரியனுக்கு சமமாக அவளின் கண்களில் வெளிச்சம் இருக்கும். இந்த போதனை எப்படிப்பட்டது? ஆண்களுக்கு பெண்களின் மீது ஆசையை உண்டாக்கும் விதமாக பேசுவது சரியா? மேலும், உண்மையிலேயே சொர்க்கத்தில் பெண்களோடு உடலுறவு கொள்ளமுடியும் என்றுச் சொல்லும் ஒரு இறையியல் சரியானதா? பரலோகத்தில் ஆண் பெண் உடலுறவு இருக்காது என்று பைபிள் கூறுகிறது. ஆனால், இப்படிப்பட்ட பெண்களோடு உடலுறவு கொள்ளவே சொர்க்கம் செல்லவேண்டும் என்று முஸ்லிம்கள் போதிக்கப்பட்டு இருக்கிறார்கள். இப்படியெல்லம் தன் தவறான கோட்பாடுகளினால் மக்களை ஏமாற்றிய இவர் ஒரு தீர்க்கதரிசியா? இவரை

கிறிஸ்தவர்கள் தீர்க்கதரிசி என்று ஒரு காலத்திலும் நம்பமாட்டார்கள். இந்த ஹதீஸ்கள் பற்றி உங்கள் கருத்தென்ன பாரா அவர்களே!

குர்-ஆன் 44:54, 55:70, 72, 52:20 & ஸஹீஹ் புகாரி எண் 2799

> **44:54.** இவ்வாறே (அங்கு நடைபெறும்); மேலும் அவர்களுக்கு ஹூருல் ஈன்களை நாம் மண முடித்து வைப்போம்.
>
> **55:70.** அவற்றில், அழகு மிக்க நற் குணமுள்ள கன்னியர் இருக்கின்றனர்.
>
> **55:72.** ஹூர் (என்னும் அக்கன்னியர் அழகிய) கூடாரங்களில் மறைக்கப்பட்டிருப்பர்.
>
> **52:20.** அணி அணியாகப் போடப்பட்ட மஞ்சங்களின் மீது சாய்ந்தவர்களாக அவர்கள் இருப்பார்கள்; மேலும், நாம் அவர்களுக்கு, நீண்ட கண்களையுடைய (ஹூருல் ஈன்களை) மணம் முடித்து வைப்போம்.

ஸஹீஹ் புகாரி எண் 2799

> **2796.** இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்:
>
> இறைவழியில் காலையில் சிறிது நேரம் அல்லது, மாலையில் சிறிது நேரம் (போர் புரியச்) செல்வது உலகத்தையும் அதிலுள்ள பொருட்களையும் விடச் சிறந்தது. உங்களில் ஒருவரின் வில்லின் அளவுக்குச் சமமான, அல்லது ஒரு சாட்டையளவுக்குச் சமமான (ஒரு முழம்) இடம் கிடைப்பது உலகத்தையும் அதிலுள்ளவற்றையும் விடச் சிறந்தது. சொர்க்கவாசிகளில் (ஹூருல் ஈன்களில்) ஒரு பெண், உலகத்தாரை எட்டிப் பார்த்தால் வானத்திற்கும் பூமிக்குமிடையே உள்ள அனைத்தையும் பிரகாசமாக்கி விடுவாள்; பூமியை நறுமணத்தால் நிரப்பி விடுவாள். அவளுடைய தலையிலுள்ள முக்காடோ உலகத்தையும் அதிலுள்ளவற்றையும் விடச் சிறந்ததாகும். என அனஸ்(ரலி) அறிவித்தார். **Volume :3 Book :56**

## 17) 'ஹூருல் ஈன்' எனப்படும் பெண்களின் கால்களின் எலும்பு மஜ்ஜைகள் (காலின்) எலும்புக்கும் சதைக்கும் அப்பாலிருந்து வெளியே தெரியும்

மனிதர்கள் அதிக சிவப்பாக/வெள்ளையாக இருந்தால், அவர்களின் கைகளில், கால்களில் இருக்கும் நரம்புகளை நாம் ஓரளவிற்கு காணமுடியும். இது இயற்கை. ஒரு பெண்ணின் காலில் உள்ள எலுப்புக்குள் இருக்கும் மஜ்ஜை கூட வெளியே தெரியும் அளவிற்கு அவள் வெள்ளை வெளேரென்று இருந்தால் எப்படி இருக்கும்? கிறிஸ்தவ சகோதர சகோதரிகளே, இப்படி எழுதுகிறேன் என்று கோபம் கொள்ளவேண்டாம். இப்படிப்பட்ட பெண்களை அல்லாஹ் முஸ்லிம்களுக்கு சொர்க்கத்தில் தருவதாக, இஸ்லாமிய தீர்க்கதரிசி ஆசை வார்த்தைகள் சொல்லி முஸ்லிம்களை மயக்கியுள்ளார். இப்படிப்பட்ட வர்ணனையை சிறிய வயதிலிருந்து கேட்டுக் கேட்டு முஸ்லிம் ஆண்கள் தற்கொலைத் தாக்குதலில் ஈடுபட்டு, சாகத்துணிந்து, செத்து, மற்றவர்களை சாகடித்து, இஸ்லாமிய சொர்க்கத்தில் நுழைய பயணச்சீட்டு வாங்க முயற்சி எடுக்கிறார்கள். இந்த போதனையைச் செய்யும் வேதமும், தீர்க்கதரிசியும் உண்மையான மார்க்கத்தை பின்பற்றுபவர்களாக இருக்கமுடியுமா? நிச்சயமாக இல்லை. பாரா அவர்களே, சொர்க்கத்தில் அல்லாஹ் கொடுக்க விரும்பும் பெண்களைப் பற்றிய வர்ணனைகளைப் பாருங்கள். எப்படி வசதி! முஸ்லிமாக மாற ஏதாவது

ஊந்துகோள் தெரிகின்றதா? அல்லது இதனை கட்டுக்கதை என்று புறக்கணிக்கப்போகின்றீர்களா?

குர்-ஆன் **44:54, 55:70, 72, 52:20 &** ஸஹீஹ் புகாரி எண் **3254**

> **44:54.** இவ்வாறே (அங்கு நடைபெறும்); மேலும் அவர்களுக்கு ஹூருல் ஈன்களை நாம் மண முடித்து வைப்போம்.
>
> **55:70.** அவற்றில், அழகு மிக்க நற் குணமுள்ள கன்னியர் இருக்கின்றனர்.
>
> **55:72.** ஹூர் (என்னும் அக்கன்னியர் அழகிய) கூடாரங்களில் மறைக்கப்பட்டிருப்பர்.
>
> **52:20.** அணி அணியாகப் போடப்பட்ட மஞ்சங்களின் மீது சாய்ந்தவர்களாக அவர்கள் இருப்பார்கள்; மேலும், நாம் அவர்களுக்கு, நீண்ட கண்களையுடைய (ஹூருல் ஈன்களை) மணம் முடித்து வைப்போம்.

**3254.** இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்:

> சொர்க்கத்தில் முதலாவதாக நுழையும் அணியினர் பௌர்ணமி இரவின் சந்திரனைப் போன்று தோற்றமளிப்பார்கள். (அடுத்து) அவர்களின் சுவடுகளைப் பின்தொடர்ந்து சொர்க்கத்தினுள் நுழைபவர்கள், வானத்தில் நன்கு ஒளி வீசிப் பிரகாசிக்கும் நட்சத்திரத்தைப் போன்று (பிரகாசமாகவும் அழகாகவும்) இருப்பார்கள். அவர்களின் உள்ளங்கள் ஒரே மனிதரின் உள்ளத்தைப் போன்றிருக்கும். அவர்களுக்கிடையே பரஸ்பர வெறுப்போ, பொறாமையோ இருக்காது. ஒவ்வொரு மனிதருக்கும் 'ஹூருல் ஈன்' எனப்படும் அகன்ற (மான் போன்ற) விழிகளையுடைய மங்கையரிலிருந்து இரண்டு மனைவிமார்கள் இருப்பார்கள். அவர்களின் கால்களின் எலும்பு மஜ்ஜைகள் (காலின்) எலும்புக்கும் சதைக்கும் அப்பாலிருந்து வெளியே தெரியும். **Volume :3 Book :59**

## 18) கணவன் உடலுறவு கொள்ள அழைக்கும் போது ஒரு பெண் மறுத்தால், தேவதூதர்கள் காலைவரை அவளை சபித்துக்கொண்டே இருப்பார்கள்.

இஸ்லாம் ஆண்களின் மார்க்கம் என்றுச் சொன்னால் மிகையாகாது. ஆண்களுக்காக, ஆண்களால் உருவாக்கப்பட்ட மதம் இஸ்லாம் என்பது எவ்வளவு உண்மையாக இருக்கிறது. ஒரு பெண்ணை அவளின் கணவன் உடலுறவு கொள்ள அழைக்கும்போது அவள் சம்மதிக்கவில்லையானால், வானத்திலிருந்து தேவதூதன் வந்து அவளை சபித்துக்கொண்டே இருப்பானாம். காடுகளில் வாழும் காட்டுமிராண்டி சமுதாயத்தில் கூட இப்படிப்பட்ட போதனைகள் இருக்காது என்று நம்பலாம். தேவத்தூதர்களுக்கு வேறு வேலையே இல்லையா? உலகில் உள்ள முஸ்லிம் வீடுகளில் இரவில் என்ன நடக்கும் என்று பார்த்துக்கொண்டே இருப்பது தான் அவர்களின் வேலையா? பொதுவாகவே ஆண்கள் தங்கள் மனைவிகள் மீது ஆதிக்கம் செலுத்துபவர்கள், இந்த இலட்சணத்தில், இப்படி மதத்தை சம்மந்தப்படுத்தி தீய போதனைகள் செய்தால், ஆண்களுக்கு சொல்லவா வேண்டும்? இதனால் தான் இஸ்லாமிய சமுதாயம் இன்னும் உருப்படாமல் பிந்தங்கியே இருக்கிறது. ஆண்களில் சரி பாதியாக இருக்கும் பெண்களை இழிவுப்படுத்தினால், நம்மை நாமே அழித்துக் கொள்வதற்கு சமம் ஆகும். மேலும், பலதார திருமணம், அடிமைகளுடன் விபச்சாரம் புரிவது, அல்லாஹ் சொர்க்கத்தில் பெண்களை தயார் படுத்தி வைப்பது என்று முஹம்மது அனேக தீய விஷயங்களை சட்டங்களாக மாற்றி போதனைகள் செய்துள்ளார்.

இப்படி பெண்களுக்கு எதிராக போதனை செய்த முஹம்மது ஒரு கள்ள நபி என்று நம்ப பாரா அவர்களே, இன்னும் என்னென்ன ஆதாரங்கள் உங்களுக்குத் தேவைப்படும்?

ஸஹீஹ் முஸ்லிம் எண்கள்: **2829 & 2830**

**2829.** நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:

ஒரு பெண் (தாம்பத்தியத்தைப் பகிர்ந்து கொள்ள மறுத்து) தன் கணவனின் படுக்கையை வெறுத்து (தனியாக) இரவைக் கழித்தால், பொழுது விடியும்வரை அவளை வானவர்கள் சபித்துக்கொண்டிருக்கின்றனர்.

இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள். இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

- மேற்கண்ட ஹதீஸ் அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

அதில், "அவள்(கணவனின் படுக்கைக்குத்) திரும்பும்வரை (சபிக்கின்றனர்)" என இடம் பெற்றுள்ளது. **Book : 16**

**2830.** அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:

என் உயிர் எவன் கையிலுள்ளதோ அவன்மீது சத்தியமாக! ஒருவர் தம் மனைவியை அவளது படுக்கைக்கு அழைத்து, அவள் அவருக்கு (உடன்பட) மறுத்தால் வானிலுள்ளவன் அவள் மீது கோபம் கொண்டவனாகவே இருக்கிறான்; அவள்மீது கணவன் திருப்தி கொள்ளும்வரை. **Book : 16**

### 19) இறைமறுப்பாளனின் இரண்டு தோள் புஜங்களுக்கிடையே உள்ள தூரம் அனேக கிலோமீட்டர்கள் இருக்கும்

முஹம்மது நரகம், சொர்கம் பற்றிச் சொல்வதை யாரும் உடனே சரி பார்க்கமுடியாது. இந்த தைரியத்தில் நம்பமுடியாத விஷயங்களை சரளமாக முஹம்மது கூறியுள்ளார். "(நரகத்தில்) இறைமறுப்பாளனின் இரண்டு தோள் புஜங்களுக்கிடையே உள்ள தூரம், துரிதமாகப் பயணிப்பவர் மூன்று நாள்கள் கடக்கும் தூரமாகும்" என்று முஹம்மது கூறியுள்ளார். ஒரு மனிதனின் இரண்டு தோள் புஜங்களுக்கு இடையே இருக்கும் தூரம் அனேக கிலோ மீட்டர்கள் இருக்கும் என்று இவர் கூறுகிறார். கடந்த 14 நூற்றாண்டுகளாக இதையும் நம்பிக்கொண்டு இருக்கிறார்கள் முஸ்லிம்கள். ஒரு ஆரோக்கியமுள்ள மனிதன் துரிதமாக நடந்தால், ஒரு மணிக்கு குறைந்த பட்ச வேகமாகிய 5 கிலோமீட்டர் என்று கணக்கிட்டால், 8 மணி நேரம் நடந்தால் அவன் 40 கிலோ மீட்டர் தூரத்தை கடக்கமுடியும். மூன்று நாட்களை கணக்கில் கொண்டால், 40 x 3 = 120 கிலோ மீட்டர். ஒரு மனிதனின் ஒரு புஜத்திற்கும், அடுத்த புஜத்திற்கும் இடையே இருக்கும் தூரம் 120 கிலோ மீட்டர் இருக்குமா? அறிவுள்ளவர்கள் சிந்திக்கட்டும். முஹம்மது குதிரையில் அல்லது ஒட்டகத்தில் பயணிப்பவர் பற்றி சொல்லியிருக்கக்கூடும். இப்படி ஒரு குதிரையில் செல்பவன் கடக்கும் தூரத்தை கணக்கிட்டால், என்னவாகும் இந்த கணக்கு? எங்கேயோ போகும். இப்படியெல்லாம் புதுமையான பொய்களைச் சொல்லி முஹம்மது தன் மார்க்க மக்களை குஷி படுத்தியுள்ளார். பாரா அவர்களே, இப்படிப்பட்ட கட்டுக்கதைகளை அள்ளி வீசிய முஹம்மது பற்றி என்ன நினைக்கிறீர்கள்?

ஸஹீஹ் புகாரி எண் 6551

6551. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்'

(நரகத்தில்) இறைமறுப்பாளனின் இரண்டு தோள் புஜங்களுக்கிடையே உள்ள தூரம், துரிதமாகப் பயணிப்பவர் மூன்று நாள்கள் கடக்கும் தூரமாகும். என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார். **Volume :7 Book :83**

**20) நரகத்தில் பெரும்பாலோர் பெண்களாக இருக்கிறார்கள்**

முஹம்மதுவிற்கு நரகம் காட்டப்பட்டதாம். அதில் பெரும்பாலோர் பெண்களாக இருந்தார்கள் என்று அவர் கூறுகிறார். இதற்கு காரணம் என்னவென்று கேட்டபோது பெண்கள் தங்கள் “'கணவனை நிராகரிக்கிறார்கள். உதவிகளை நிராகரிக்கிறார்கள். அவர்களில் ஒருத்திக்குக் காலம் முழுவதும் நீ நன்மைகளைச் செய்து கொண்டேயிருந்தது, பின்னர் (அவளுக்குப் பிடிக்காத) ஒன்றை உன்னிடம் கண்டுவிட்டாளானால் 'உன்னிடமிருந்து ஒருபோதும் நான் ஒரு நன்மையையும் கண்டதில்லை' என்று பேசிவிடுவாள்” என்று முஹம்மது பதில் அளித்துள்ளார். பெண்கள் பற்றி மிகவும் கேவலமாக முஹம்மது விமர்சித்துள்ளார். முஹம்மதுவிற்கு தெரிந்த ஒரு சில பெண்கள் புரியும் சில செயல்களை அடிப்படையாகக் கொண்டு, உலகில் உள்ள அனைத்து பெண்களும் அப்படியே நடந்துக்கொள்வார்கள் என்று முஹம்மது நினைத்துவிட்டார். இஸ்லாமிய சமுதாயத்தில் பெண்கள் எல்லாவற்றிற்கும் ஆண்கள் மீது ஆதாரப்பட்டு இருப்பார்கள். ஆகையால், இஸ்லாமிய பெண்களை மனதில் வைத்துக்கொண்டு முஹம்மது, ’இது தான் உலக சத்தியம்’ என்பது போல போதித்துவிட்டார். ஆண்களின் நிலை என்ன? ஆண்கள் தங்கள் மனைவிகளை நிராகரிப்பதில்லையா? நோகடிப்பதில்லையா? அடிப்பதில்லையா? ஒரு ஆண் மூன்று முறை “விவாகரத்து” என்று சொல்லிவிட்டால், விவாகரத்து நடந்துவிடும் என்றுச் சொல்லும் முஹம்மது, இதே அனுமதியை பெண்களுக்கு கொடுப்பாரா? நல்லவர்கள் கெட்டவர்கள் இருபாலாரிடமும் உண்டு, முக்கியமாக சொல்லவேண்டுமென்றால், தீய செயல்களைச் செய்வதில் பெண்களை விட ஆண்களின் சதவிகிதம் அதிகமாக இருக்கலாம். இதையெல்லாம் அறிந்துக்கொள்ளாமல், தன் மனதில் தோன்றியபடி போதனைச் செய்து, பெண்களை இழிவுப்படுத்தும் முஹம்மதுவை நீங்கள் தீர்க்கதரிசி என்று நம்புவீர்களா?

ஸஹீஹ் புகாரி எண்: 29

29. 'எனக்கு நரகம் காட்டப்பட்டது. அதில் பெரும்பாலோர் பெண்களாகக் காணப்பட்டனர். ஏனெனில், அவர்கள் நிராகரிப்பவர்களாக இருந்தனர்' என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறியபோது, 'இறைவனையா அவர்கள் நிராகரிக்கிறார்கள்?' எனக் கேட்கப்பட்டதற்கு இறைத்தூதர்(ஸல்) அவர்கள், 'கணவனை நிராகரிக்கிறார்கள். உதவிகளை நிராகரிக்கிறார்கள். அவர்களில் ஒருத்திக்குக் காலம் முழுவதும் நீ நன்மைகளைச் செய்து கொண்டேயிருந்தது, பின்னர் (அவளுக்குப் பிடிக்காத) ஒன்றை உன்னிடம் கண்டுவிட்டாளானால் 'உன்னிடமிருந்து ஒருபோதும் நான் ஒரு நன்மையையும் கண்டதில்லை' என்று பேசிவிடுவாள்' என்றார்கள்" என இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார். **Volume :1 Book :2**

**21) பெண்கள் ஆண்களை விட ஏன் அறிவில் குறைவுள்ளவர்களாக இருக்கிறார்கள்?**

நரகத்தில் பெண்கள் தான் அதிகமாக இருப்பார்களாம். இதற்கு அனேக காரணங்கள் உண்டு, அவைகளில் ஒன்று “பெண்கள் அறிவில் குறைவுள்ளவர்களாம்”, அதாவது ஆண்களை விட

பெண்கள் அறிவில் குறைவுள்ளவர்களாம். இது தான் முஹம்மதுவின் போதனை. ஏன் எங்களுக்கு அறிவு குறைவு என்று பெண்கள் முஹம்மதுவை கேட்டபோது, ''சாட்சி சொல்வதில் ஒரு பெண்ணின் சாட்சி ஒரு ஆணின் சாட்சியில் பாதி'' என்று முஹம்மது கூறியுள்ளார். முஹம்மதுவின் போதனையின் படி, சாட்சி சொல்வதில் ஒரு ஆணுக்கு இரண்டு பெண்கள் சமமாகும். இதற்கு இன்றுள்ள முஸ்லிம்கள் சொல்லும் காரணம், பெண்கள் கோழைகளாக இருக்கிறார்கள் என்பதாகும். இஸ்லாம் ஆண்களுக்கான மதம் என்பதில் இதுவும் ஒரு காரணமாகும். ஆண்களிலும் கோழைகள் இருக்கிறார்கள், பெண்களிலும் வீராங்கனைகள் இருக்கிறார்கள். அறிவு என்பது ஆண் பெண் என்ற பாகுபாடின்றி எல்லாருக்கும் கிடைக்கும் ஒரு வரப்பிரசாதம் ஆகும். அறிவை நாம் வளர்க்கவேண்டும், மூளைக்கு படிப்பு, அனுபவம் என்ற கருவிகளினால் பயிற்சி அளிக்கவேண்டும். இதையெல்லாம் அறியாத ஒரு பாமர மனிதன் சொல்லும் விவரங்களை இறைவன் சொன்னான் என்றுச் சொல்லி, அந்த அறியாமையுள்ள மனிதனை தீர்க்கதரிசி என்று நம்புவது மடமையாகும். இதனை கிறிஸ்தவர்கள் ஒருபோதும் நம்பவே மாட்டார்கள். ஆண்களுக்கு சமமாக பெண்கள் முன்னேறியிருக்கிறார்கள். பெண்களை தவறாக விமர்சிக்கும் ஒரு நபரை கிறிஸ்தவர்கள் ஒரு தீர்க்கதரிசி என்று நம்பமாட்டார்கள். நீங்கள் என்ன நினைக்கிறீர்கள் இவரைப் பற்றி?

குர்-ஆன் **2:282 &** ஸஹீஹ் புகாரி எண் **304**

**2:282.** ஈமான் கொண்டோரே! ஒரு குறித்த தவனையின் மீது உங்களுக்குள் கடன் கொடுக்கல் வாங்கல் செய்து கொண்டால், அதை எழுதி வைத்துக் கொள்ளுங்கள்; எழுதுபவன் உங்களிடையே நீதியுடன் எழுதட்டும்; எழுதுபவன் எழுதுவதற்கு மறுக்கக்கூடாது; (நீதமாக எழுதுமாறு) அல்லாஹ் அவனுக்குக் கற்றுக் கொடுத்தபடி அவன் எழுதட்டும். இன்னும் யார் மீது கடன் (திருப்பிக் கொடுக்க வேண்டிய) பொறுப்பு இருக்கிறதோ அவனே (பத்திரத்தின்) வாசகத்தைச் சொல்லட்டும்; அவன் தன் ரப்பான (அல்லாஹ்வை) அஞ்சிக் கொள்ளட்டும்; மேலும், அ(வன் வாங்கிய)தில் எதையும் குறைத்து விடக் கூடாது; இன்னும், யார் மீது கடன் (திருப்பிக் கொடுக்க வேண்டிய) பொறுப்பு இருக்கிறதோ அவன் அறிவு குறைந்தவனாகவோ, அல்லது (பால்யம், முதுமை போன்ற காரணங்களால்) பலஹீனனாகவோ, அல்லது வாசகத்தைக் கூற இயலாதவனாகவோ இருப்பின் அவனுடைய வலீ(நிர்வாகி) நீதமாக வாசகங்களைச் சொல்லட்டும்; தவிர, (நீங்கள் சாட்சியாக ஏற்கக் கூடிய) உங்கள் ஆண்களில் இருவரை சாட்சியாக்கிக் கொள்ளுங்கள்; ஆண்கள் இருவர் கிடைக்காவிட்டால், சாட்சியங்களில் நீங்கள் பொருந்தக்கூடியவர்களிலிருந்து ஆடவர் ஒருவரையும், பெண்கள் இருவரையும் சாட்சிகளாக எடுத்துக் கொள்ளுங்கள்; (பெண்கள் இருவர்) ஏனென்றால் அவ்விருவரில் ஒருத்தி தவறினால், இருவரில் மற்றவள் நினைவூட்டும் பொருட்டேயாகும்; அன்றியும், (சாட்சியம் கூற) சாட்சிகள் அழைக்கப்பட்டால் அவர்கள் மறுக்கலாகாது; தவிர, (கொடுக்கல் வாங்கல்) சிறிதோ, பெரிதோ அதை, அதன் கால வரையறையுடன் எழுதுவதில் அலட்சியமாக இராதீர்கள்; இதுவே அல்லாஹ்வின் முன்னிலையில் மிகவும் நீதமானதாகவும், சாட்சியத்திற்கு உறுதி உண்டாக்குவதாகவும், இன்னும் இது உங்களுக்கு சந்தேகங்கள் ஏற்படாமல் இருக்க சிறந்த வழியாகவும் இருக்கும்; எனினும் உங்களிடையே சுற்றி வரும் ரொக்க வியாபாரமாக இருப்பின், அதை எழுதிக் கொள்ளாவிட்டலும் உங்கள் மீது குற்றமில்லை; ஆனால் (அவ்வாறு ) நீங்கள் வியாபாரம் செய்யும்போதும் சாட்சிகளை வைத்துக் கொள்ளுங்கள் - அன்றியும் எழுதுபவனையோ, சாட்சியையோ (உங்களுக்கு சாதகமாக இருப்பதற்காகவோ, வேறு காரணத்திற்காகவோ) துன்புறுத்தப்படக் கூடாது; நீங்கள் அப்படிச் செய்வீர்களாயின் அது உங்கள் மீது நிச்சயமாகப் பாவமாகும்; அல்லாஹ்வுக்கு அஞ்சிக் கொள்ளுங்கள்; ஏனெனில்

அல்லாஹ் தான் உங்களுக்கு (நேரிய இவ்விதிமுறைகளைக்) கற்றுக் கொடுக்கின்றான். தவிர,அல்லாஹ்வே எல்லாப் பொருட்களையும் பற்றி நன்கறிபவன்.

ஸஹீஹ் புகாரி எண் **304**

> **304.** 'ஹஜ்ஜுப் பெருநாளன்றோ நோன்புப் பெருநாளன்றோ தொழும் திடலிற்கு நபி(ஸல்) அவர்கள் சென்று கொண்டிருந்தபோது சில பெண்களுக்கு அருகே அவர்கள் சென்று, 'பெண்கள் சமூகமே! தர்மம் செய்யுங்கள்! ஏனெனில், நரக வாசிகளில் அதிகமாக இருப்பது நீங்களே என எனக்குக் காட்டப்பட்டது' என்று கூறினார்கள். 'இறைத்தூதர் அவர்களே! ஏன்' என்று அப்பெண்கள் கேட்டதற்கு, 'நீங்கள் அதிகமாகச் சாபமிடுகிறீர்கள்; கணவனுக்கு நன்றி கெட்டவர்களாக இருக்கிறீர்கள்; மார்க்கக் கடமையும் அறிவும் குறைந்தவர்களாக இருந்து கொண்டு மன உறுதியான கணவனின் புத்தியை மாற்றி விடக்கூடியவர்களாக உங்களை விட வேறு யாரையும் நான் காணவில்லை' என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறியபோது 'இறைத்தூதர் அவர்களே! எங்களுடைய மார்க்கக் கடமையும் எங்களுடைய அறிவும் எந்த அடிப்படையில் குறைவாக உள்ளன' என்று பெண்கள் கேட்டனர். 'ஒரு பெண்ணின் சாட்சி ஓர் ஆணின் சாட்சியில் பாதியாகக் கருதப்படவில்லையா?' என்று நபி(ஸல்) அவர்கள் கேட்டததற்கு, 'ஆம்' என அப்பெண்கள் பதில் கூறினர். 'அதுதான் அவர்கள் அறிவு குன்றியவர்கள் என்பதைக் காட்டுகிறது; ஒரு பெண்ணிற்கு மாதவிடாய் ஏற்பட்டால் அவள் தொழுகையையும் நோன்பையும்விட்டு விடுவதில்லையா?' என்று நபி(ஸல்) அவர்கள் கேட்டதற்கும் 'ஆம்!' எனப் பெண்கள் பதில் கூறினர். 'அதுதான் பெண்கள் மார்க்கக் கடமையில் குறைவானவர்களாக இருக்கின்றனர் என்பதற்கு ஆதாரமாகும்'' என்று நபி(ஸல்) கூறினார்கள்'' என அபூ ஸயீதுல் குத்ரி(ரலி) அறிவித்தார். **Volume :1 Book :6**

**அடிக்குறிப்புக்கள்:**

**[1] <u>''முஹம்மதுவின் வாழ்க்கை வரலாறு'' கருத்தரங்கு - பாகம் 1</u>**

༄༄༄༄

## 10) எத்தனை நபிகளை அல்லாஹ் அனுப்பினான்? (25 vs. 124000)

### (அத்தியாயம் 13. நபியாக நியமிக்கப்படல்)

**மதிப்பிற்குரிய பாரா அவர்களுக்கு,**

நீங்கள் 13ம் அத்தியாயத்தில் ''நபிகள்'' பற்றி எழுதியவைகள் ஆய்விற்கு எடுத்துக்கொள்ளப்படுகின்றது.

**பாரா அவர்கள் எழுதியது:**

> *// முகம்மதுக்கு முன்பு இறைத் தூதர்களாக இவ்வுலகில் அறியப்பட்டவர்கள் மொத்தம் இருபத்தைந்து பேர். //*

அருமையான பாரா அவர்களே, முஹம்மதுவிற்கு முன்பு உலகில் நபிகளாக அறியப்பட்டவர்கள் வெறும் 25 பேர் தானா? உங்களுக்கு யாரோ தவறான விவரங்களை கொடுத்துள்ளார்கள் அல்லது அரைகுறை விவரங்கள் அடங்கிய ஏதோ ஒரு புத்தகத்தை நீங்கள் படித்திருக்கவேண்டும்.

இஸ்லாமின் படி, குர்-ஆனில் பெயர் குறிப்பிடப்பட்டவர்கள் 25 நபிகள் ஆவார்கள். ஆனால், குர்-ஆன் முன்மொழியும் யூத கிறிஸ்தவ வேதங்களில் எத்தனை நபிகளின் பெயர்கள் குறிப்பிடப்பட்டிருக்கின்றன என்று உங்களுக்குத் தெரியுமா? உங்கள் தொடர் கட்டுரைகளுக்காக நீங்கள் குர்-ஆனை மட்டும் ஆதாரமாக எடுத்துக்கொண்டீர்களா? அல்லது இதர யூத கிறிஸ்தவ வேதங்களையும் எடுத்துக்கொண்டீர்களா? மூன்று வேதங்களில் உள்ள விவரங்களை ஒன்று திரட்டி எழுதியிருக்கிறீர்கள் என்று தெரிகின்றது. ஆனால், நபிகளின் எண்ணிக்கையை குறிப்பிடும் போது மட்டும் அரைகுறை விவரங்களை ஏன் எழுதுகிறீர்கள்?

**இஸ்லாமின்படி மொத்தம் எத்தனை இறைத்தூதர்கள்?**

இஸ்லாமின் படி, அல்லாஹ் உலகம் உண்டானது முதற்கொண்டு, எல்லா நாடுகளுக்கும், அவரவர் மொழிகளில் தனித்தனியே இறைத்தூதர்களை அனுப்பியிருக்கிறாராம். அதுவும் எல்லா காலக்கட்டத்துக்கும் இறைத்தூதர்களை அனுப்பியிருக்கிறாராம், பார்க்க குர்-ஆன் **16:36.**

> குர்-ஆன 16:36. **மெய்யாகவே நாம் ஒவ்வொரு சமூகத்தாரிடத்திலும்,** ''அல்லாஹ்வையே நீங்கள் வணங்குங்கள்; ஷைத்தான்களை விட்டும் நீங்கள் விலகிச் செல்லுங்கள்'' என்று (போதிக்குமாறு) நம் தூதர்களை அனுப்பி வைத்தோம்; எனவே அ(ந்த சமூகத்த)வர்களில் அல்லாஹ் நேர்வழி காட்டியோரும் இருக்கிறார்கள்; வழிகேடே விதிக்கப்பெற்றோரும் அவர்களில் இருக்கிறார்கள்; ஆகவே நீங்கள் பூமியில் சுற்றுப்பயணம் செய்து, பொய்யர்களின் முடிவு என்ன ஆயிற்று என்பதைக் கவனியுங்கள். (முஹம்மது ஜான் தமிழாக்கம்)

சில முஸ்லிம்களின் கருத்துபடி ஆதாம் முதற்கொண்டு முஹம்மதுவரை அல்லாஹ் 1,24,000 இறைத்தூதர்களை அனுப்பினாராம் (இது பலவீனமான ஹதீஸின் விவரம் என்று சிலர் சொல்கிறார்கள்). ஒவ்வொரு காலக்கட்டத்திற்கும், ஒவ்வொரு மக்கள் குழுவிற்கும் (நாடுகளுக்கும்) ஒரு தூதரை அல்லாஹ் அனுப்பியிருக்கிறார். அப்படியானால், எத்தனை ஆயிர தூதர்களை அல்லாஹ் அனுப்பியிருக்கவேண்டும் பாருங்கள். இந்தியாவிற்கும் அல்லாஹ் இறைத்தூதர்களை அனுப்பியிருக்கிறார்! (அப்படியா! ஆமாம், குர்-ஆன் அப்படித்தான் சொல்கிறது. இதனை நம்பாதவர்கள் பூமியில் சுற்றுப்பயணம் செய்துப் பாருங்கள் என்றும் சொல்கிறது. முஹம்மது காலத்துக்கு முன்பிலிருந்து மக்கள் இந்தியாவில் வாழ்ந்திருக்கிறார்களே! அப்படியானால், நிச்சயமாக இறைத்தூதர்கள் வந்திருக்கவேண்டுமே!).

**குர்-அனின் படி, மொத்த நபிகள் 25 பேர் மட்டுமல்ல, பார்க்க குர்-ஆன் 40:78, 23:44 & 28:59**

> குர்-ஆன் 40:78. திட்டமாக நாம் **உமக்கு முன்னர் தூதர்களை அனுப்பியிருக்கின்றோம்;** அவர்களில் சிலருடைய வரலாற்றை உமக்குக் கூறியுள்ளோம்; **இன்னும் எவர்களுடைய வரலாற்றை உமக்குக் கூறவில்லையோ** (அவர்களும்) அத்தூதர்களில் இருக்கின்றனர்; (இவ்விருசாராரில்) எந்தத் தூதரும் அல்லாஹ்வின் அனுமதியின்றி எந்த அத்தாட்சியையும் கொண்டு

வருவதற்கு (அதிகாரமும்) இல்லை; ஆகவே அல்லாஹ்வுடைய கட்டளைவரும் போது, (அனைவருக்கும்) நியாயமாகத் தீர்ப்பளிக்கப்படும்; அன்றியும், அந்த இடத்தில் பொய்யர்கள் தாம் நஷ்டமடைவார்கள்.

**23:44.** பின்னரும் நாம் நம்முடைய தூதர்களைத் **தொடர்ச்சியாக அனுப்பி வைத்தோம். ஒரு சமுதாயத்திடம் அதன் தூதர் வந்த போதெல்லாம்,** அவர்கள் அவரைப் பொய்யாக்கவே முற்பட்டார்கள்; ஆகவே நாம் அச்சமூகத்தாரையும் (அழிவில்) ஒருவருக்குப் பின் ஒருவராக்கி நாம் அவர்களை(ப் பின் வருவோர் பேசும் பழங்)கதைகளாகச் செய்தோம். எனவே, நம்பிக்கை கொள்ளாத மக்களுக்கு (அல்லாஹ்வின் ரஹ்மத்) நெடுந்தொலைவேயாகும்.

**28:59.** (நபியே!) நம் வசனங்களை அவர்களுக்கு ஓதிக் காண்பிக்கும் தூதர் ஒருவரை **அவர்களுடைய தலைநகருக்கு அனுப்பி வைக்காத வரையில் எந்த ஊர்களையும்** உம்முடைய இறைவன் அழிப்பவனாக இல்லை; மேலும் ,எந்த ஊரையும் அதன் மக்கள் அக்கிரமக் காரர்களாக இல்லாத வரையில் நாம் அழிப்போராகவும் இல்லை.

சில நபிகளின் விவரங்களை மட்டுமே அல்லாஹ் குர்-ஆனில் சொல்லியுள்ளாராம், இன்னும் சிலருடையதை சொல்லவில்லையாம். இஸ்லாமின் படி, பல நூறு இறைத்தூதர்களாவது இருந்திருக்கவேண்டுமில்லையா? அப்படியானால், ஏன் வெறும் 25 இறைத்தூதர்களைப் பற்றி மட்டுமே குர்-ஆன் பேசுகின்றது? (இதற்கான பதிலை அடுத்த பாகத்தில் எழுதுகிறேன்).

ஆக, இஸ்லாமின் படி, பல ஆயிர இறைத்தூதர்களை அல்லாஹ் அனுப்பியிருக்கிறான்.

**யூத/கிறிஸ்தவ மார்க்கத்தின் படி எத்தனை இறைத்தூதர்கள்?**

முஹம்மதுவிற்கு முன்பு வரை 25 இறைத்தூதர்கள் உலகத்தில் அறியப்பட்டுள்ளார்கள் என்று நீங்கள் சொன்னது எதன் அடிப்படையில்? "இஸ்லாமின் படி" 25 இறைத்தூதர்களின் பெயர் அறியப்பட்டிருக்கின்றன என்று நீங்கள் எழுதியிருக்கவேண்டும். இஸ்லாம் சொல்லும் கோட்பாட்டை மற்ற மார்க்கங்கள் மீது திணிக்க முயலாதீர்கள். இதில் இன்னொரு சிக்கல் என்னவென்றால், இஸ்லாமின் கோட்பாட்டையும் புரிந்துக்கொள்வதிலும் நீங்கள் தவறு செய்திருக்கிறீர்கள்.

யூத மார்க்கத்தின் படி 48 தீர்க்கதரிசிகளை அவர்கள் அடையாளம் காணுகிறார்கள் [1]. இன்னும் கிறிஸ்தவர்களின் எண்ணிக்கையை கணக்கிட்டால், யோவான் ஸ்நானகன் போன்றவர்கள் கூட தீர்க்கதரிசிகளின் பட்டியலில் சேரும் போது எண்ணிக்கை அதிகமாகும். மேலும் "நபிகள் என்றால் யார்?" என்ற வரையறையிலும் இஸ்லாமோடு, கிறிஸ்தவர்கள், யூதர்கள் வேறுபடுகிறார்கள், தேவைப்படும் போது அதனை விளக்குவேன்.

**நபிகள் பற்றிய சுருக்கத்தை இங்கு பாருங்கள்:**

| | |
|---|---|
| இஸ்லாம் | யூத நபிகள் + கிறிஸ்தவ நபிகள் + உலகத்தில் அல்லாஹ் அனுப்பிய இதர அனைத்து நபிகள் + முஹம்மது |
| கிறிஸ்தவம் | யூத நபிகள் + கிறிஸ்தவ நபிகள் - முஹம்மது |

| | |
|---|---|
| இஸ்லாம் | யூத நபிகள் + கிறிஸ்தவ நபிகள் + உலகத்தில் அல்லாஹ் அனுப்பிய இதர அனைத்து நபிகள் + முஹம்மது |
| யூத மதம் | யூத நபிகள் - கிறிஸ்தவ நபிகள்<br><br>(கிறிஸ்தவத்தை ஏற்காத யூதர்கள் கிறிஸ்தவ நபிகளை நம்புவதில்லை.) |

ஒரு முக்கியமான விஷயத்தைச் சொல்லும்போது, ''இஸ்லாமின் நம்பிக்கைப்படி, யூத/கிறிஸ்தவ நம்பிக்கைப் படி இத்தனை பேர்'' என்று தெளிவாகச் சொல்லவேண்டும், அரைகுறையாகச் சொல்லக்கூடாது.

**பாரா அவர்கள் எழுதியது:**

> *// அவர்களுள், முதல் மனிதர் ஆதாம் தொடங்கி, இயேசு வரையிலான பதினேழு பேரைப் பற்றிய விரிவான அறிமுகங்கள் இன்று நமக்குக் கிடைக்கின்றன. //*

இந்த 17 பேருடைய விரிவான அறிமுகங்கள் குர்-ஆனில் கிடைக்குமா? நிச்சயமாக கிடைக்காது. அப்படியானால், எவைகளை ஆதாரமாக வைத்துக்கொண்டு, 17 நபர்களின் விரிவான அறிமுகங்கள் கிடைத்துள்ளன என்று எழுதியுள்ளீர்கள்? நிச்சயமாக நீங்கள் யூத கிறிஸ்தவ வேதங்களின்படித் தான் இதை எழுதியிருப்பீர்கள். அப்படியானால், ஏன் வெறும் 25 நபிகள் அறியப்பட்டுள்ளார்கள் என்று முதலாவது எழுதவேண்டும்? நீங்கள் குர்ஆனிலிருந்து மட்டும் எடுத்து ஏதாவது எழுதினீர்கள் என்றுச் சொன்னால், உங்களுக்கு குழப்பங்கள் தான் மிஞ்சும் என்பதை தெரிவித்துக்கொள்கிறேன்.

**பாரா அவர்கள் எழுதியது:**

> *// இறைவனுடன் நேரடியாகத் தொடர்பு கொண்டு பேசியவர்கள், இறைவனாலேயே நல்வழி காட்டப்பட்டவர்கள் ஒருவகை. இறைவனிடமிருந்து மக்களுக்கு வேதத்தைப் பெற்று அளித்தவர்கள் இன்னொரு வகை. முகம்மதுக்கு முன்னர் இப்படி வேதம் அருளப்பட்ட சம்பவம் மட்டும் மூன்றுமுறை நடந்திருக்கிறது. முதலாவது, மோஸஸுக்கு அருளப்பட்ட "தோரா" (குர்ஆன் இதனை "தவ்ராத்" என்று அழைக்கிறது. யூதர்களின் வேதமாக இருப்பது.) அடுத்தது, தாவீத் என்கிற டேவிடுக்கு அருளப்பட்ட சங்கீதம். (Psalm என்று ஆங்கிலத்திலும் ஸபூர் என்று குர்ஆனிலும் குறிக்கப்படுவது. பைபிளின் பழைய ஏற்பாட்டில் இதனைப் பார்க்கமுடியும்.) மூன்றாவதாக, இயேசுவுக்கு அருளப்பட்ட "இன்ஜீல்" எனப்படும் Gospel). //*

**முஸ்லிம்களும் ஏற்காத வாதம்:**

மறுபடியும் இன்னொரு தவறு. முஹம்மதுவிற்கு முன்பு மூன்று முறைத்தான் வேதங்கள் அருளப்பட்டுள்ளது என்று நீங்கள் எழுதியதை முஸ்லிம்கள் கூட ஒப்புக்கொள்ளமாட்டார்கள். தோரா, ஸபூர், இன்சில் மட்டுமல்ல, இஸ்லாமின்படி இன்னும் அனேக வேதங்களை அல்லாஹ் இறக்கியிருக்கின்றான்.

கீழ்கண்ட வசனங்களில், ஆப்ரஹாமுக்கும் வேதம் (சின்ன புத்தகம்) கொடுத்ததாக குர்-ஆன் சொல்கிறது. ஆனால், பாவம் அந்த வேதத்தையும் ஆபிரகாமும், அவரது பிள்ளைகளும், பிள்ளைகளின் பிள்ளைகளும் பாதுகாக்கவில்லை. சில இஸ்லாமியர்களின் கருத்துப்படி, சின்ன

வேதம் என்றுச் சொன்னால், விரல்விட்டு எண்ணக்கூடிய அளவிற்கு பக்கங்கள் கொண்ட சுருள் போல இருக்குமாம்.

**குர்-ஆன் 87:18-19, 53:36-37**

> **87:18.** நிச்சயமாக இது முந்திய ஆகமங்களிலும்-
>
> **87:19.** இப்ராஹீம், மூஸாவினுடைய ஆகமங்களிலும் (இவ்வாறே அறிவிப்பு) இருக்கிறது.
>
> **53:36.** அல்லது, மூஸாவின் ஸுஹுஃபில் - வேதத்தில் இருப்பது அவனுக்கு அறிவிக்கப்படவில்லையா?
>
> **53:37.** (அல்லாஹ்வின் ஆணையைப் பூரணமாக) நிறைவேற்றிய இப்ராஹீமுடைய (ஆகமங்களிலிருந்து அவனுக்கு அறிவிக்கப்படவில்லையா?)

சில முஸ்லிம்கள் கீழ்கண்ட வசனத்தின் அடிப்படையில், நபி (Prophet) என்றால் அவருக்கு வேதமும் ஞானமும் கொடுக்கப்பட்டு இருக்கும், இறைத்தூதர் (Messenger) என்றால் அவர் முந்தைய வேதங்களை மெய்ப்பிப்பார் என்று பொருள் கொடுக்கிறார்கள். இதற்கு ஆதாரமாக குர்-ஆன் 3:81ஐ குறிப்பிடுவார்கள்.

> **3:81.** (நினைவு கூருங்கள்:) **நபிமார்** (கள் மூலமாக அல்லாஹ் உங்கள் முன்னோர்)களிடம் உறுதிமொழி வாங்கியபோது, "**நான் உங்களுக்கு வேதத்தையும், ஞானத்தையும் கொடுத்திருக்கின்றேன்.** பின்னர் உங்களிடம் இருப்பதை மெய்ப்பிக்கும் **ரஸூல்** (இறைதூதர்) வருவார். நீங்கள் அவர்மீது திடமாக ஈமான் கொண்டு அவருக்கு உறுதியாக உதவி செய்வீர்களாக" (எனக் கூறினான்). "நீங்கள் (இதை) உறுதிப்படுத்துகிறீர்களா? என்னுடைய இந்த உடன்படிக்கைக்குக் கட்டுப்படுகிறீர்களா?" என்றும் கேட்டான்; "நாங்கள் (அதனை ஏற்று) உறுதிப்படுத்துகிறோம்" என்று கூறினார்கள்; (அதற்கு அல்லாஹ்) "நீங்கள் சாட்சியாக இருங்கள்; நானும் உங்களுடன் சாட்சியாளர்களில் (ஒருவனாக) இருக்கிறேன்" என்று கூறினான்.

இதன் படி பார்த்தால், ஆதாம் முதற்கொண்டு, அல்லாஹ் அனுப்பிய ஒவ்வொரு நபிக்கும் ஒரு வேதம் என்று கணக்கிட்டால், பல நூறு வேதங்கள் ஆகிவிடும். நீங்கள் வெறும் குர்-ஆனை மட்டும் மேலோட்டமாக படித்து எழுதியிருக்கிறீர்கள், இனிமேல் நபிகள் பற்றி எழுதும்போது, மேற்கண்ட விவரங்களை கவனத்தில் வைத்துக்கொண்டு எழுதுங்கள்.

**பாரா அவர்கள் எழுதியது:**

> *// இயேசுவுக்குச் சுமார் அறுநூறு ஆண்டுகளுக்குப் பிறகு "இறைத்தூதர்" (நபி) என்று அடையாளம் காட்டப்பட்டவர், முகம்மது. //*

எங்கு அடையாளம் காட்டப்பட்டார்? குர்-ஆனில் மட்டும் தான், யூத கிறிஸ்தவ வேதங்களில் அல்ல. முஹம்மதுவை நபி என்று நீங்கள் எழுதும் போது, "இஸ்லாமின் படி" என்று சேர்த்துக்கொள்ளுங்கள். பைபிளின் படி முஹம்மது ஒரு கள்ளத் தீர்க்கதரிசியாவார். அவர் பைபிளின் தேவன் அனுப்பிய நபி அல்ல. முஹம்மது ஒரு கள்ள நபி என்று கிறிஸ்தவர்கள்

ஏன் கருதுகிறார்கள் என்பதை அறிய இக்கட்டுரையை படிக்கவும்: **முஹம்மது ஒரு கள்ளத்தீர்க்கதரிசி என்று கிறிஸ்தவர்கள் கருதுவது ஏன்? - 101 காரணங்கள்**. இக்கட்டுரைகள் இஸ்லாம் பற்றிய தெளிவு அடைவதற்கு உங்களுக்கு அனேக விவரங்கள் உள்ளன, படிக்க மறவாதீர்கள்.

**பாரா அவர்கள் எழுதியது:**

> *// முகம்மதுக்கும் மற்ற இறைத்தூதர்களுக்குமான வித்தியாசங்கள் பல. வேதம் அருளப்பட்ட விதத்தால் மட்டுமல்ல. தாம் ஓர் இறைத்தூதர் என்பதை உணர்ந்த வகையிலேயே முகம்மது மிகவும் வித்தியாசமானவர். மற்ற தூதர்கள் அனைவரும் எதிர்பாராத ஒரு கணத்தில் ஆசீர்வதிக்கப்பட்டதன்பேரில் தம்மைத்தாமே இனம் கண்டுகொண்டுவிட்டார்கள். முகம்மது மட்டும், வருடக்கணக்கில் போராடி, உள்ளும் புறமும் ஏராளமான வேதனைகளை அனுபவித்து, ஆன்மிகச் சாதனை முயற்சிகளின் விளைவாக எத்தனையோ உடல் மற்றும் மன உபாதைகளை அனுபவித்து, போராடிப் போராடி, இறுதியில்தான் தாம் "அனுப்பப்பட்டிருப்பதன்" காரணத்தைக் கண்டறிந்தார். //*

நீங்கள் ஒரு முக்கியமான விஷயத்தை சொல்லி இருக்கிறீர்கள். மற்ற தீர்க்கதரிசிகள் ஒருவகையாக தெரிவு செய்யப்பட்டார்கள், முஹம்மது மட்டும் வேறு வகையில் தெரிவு செய்யப்பட்டார் என்று நீங்கள் கண்டுபிடித்தது உண்மை தான்.

**முஹம்மதுவிற்கு பிசாசு பிடித்ததா?**

பைபிளில் காணப்படும் தீர்க்கதரிசிகளை கவனியுங்கள். அவர்கள் முதலாவது தேவனை சந்தித்த போது (அ) தேவ தூதரை சந்தித்தபோது, அவர்கள் பயப்பட்டார்கள். ஏனென்றால், கண்ணுக்கு யாரும் தெரியாத போது திடீரென்று ஒரு பெரிய சத்தம் கேட்கப்பட்டாலோ, ஒரு அற்புதத்தைக் கண்டாலோ (மோசே எரியும் புதரை பார்த்ததுபோல), மனிதர்களுக்கு முதலாவது பயமுண்டாகும். மேலும் சிலர் தேவனுடைய மகிமையை கண்ட போது செத்தவர்களை போல பயந்து முகங்குப்புற விழுந்துவிட்டார்கள். ஆனால், தேவன் தன்னை அறிமுகம் செய்துவிட்ட பிறகு, உடனே அவர்கள் தெளிவு அடைந்துவிட்டார்கள். அவர்கள் தொடர்ந்து குழப்பத்தில் இருக்க தேவன் அனுமதிக்கவில்லை. இதனால் அவர்கள் பிசாசு பிடித்தவர்கள் போல நடந்துக்கொள்ளவில்லை. இப்படித் தான் எல்லா நபிகளும் தேவனை சந்தித்தபோது முதலாவது பயந்து, உடனே தெளிவடைந்தார்கள். தற்கொலைக்கு நேராக தேவன் அவர்களை நடத்தவில்லை, அவர்கள் குழப்பத்திலேயே பல நாட்கள்/மாதங்கள் மனச்சோர்வோடு வாழும் படி தேவன் விடவில்லை.

ஆனால், முஹம்மது முதலாவது காபிரியேல் தூதனை சந்தித்த போது என்ன நடந்தது? பாரா அவர்களே, நீங்களை அதனை விளக்கியுள்ளீர்கள். முஹம்மதுவை கட்டிப்பிடித்து, அவரை ஆட்டி குளுக்கி ஒரு வழி செய்துவிட்டார். முஹம்மது தனக்கு பேய் பிடித்துவிட்டது என்று நினைக்கும் அளவிற்கு அந்த சந்திப்பு இருந்தது? அதன் பிறகு, அவரின் மனைவி கதிஜா அவர்களும், வராகா என்பவரும் முஹம்மதுவை கொஞ்சம் தேற்றினார்கள். ஆனாலும், பல மாதங்கள் (2 ஆண்டுகளுக்கு மேலாக) முஹம்மது குழப்பத்தில் இருந்தார், இதனால் தற்கொலை முயற்சிகளையும் செய்தார். இப்படியெல்லாம் பைபிளின் நபிகளுக்கு நேரிடவில்லை. முஹம்மதுவிற்கு நடந்தவைகளை பார்க்கும் போது ஒரு பிசாசு பிடித்தவன் போலவே நடந்துக்கொண்டார். தற்கொலை முயற்சி செய்யும் அளவிற்கு மன அழுத்தத்தை, மன நோயை ஒருபோதும் தன் நபிகளுக்கு தேவன் கொடுக்கமாட்டார். ஆனால், முஹம்மதுவின் வாழ்வில் இது நடந்தது. கிறிஸ்தவர்களும், யுதர்களும் முஹம்மதுவை ஒரு

நபி என்று நம்பாமல் இருப்பதற்கு இதுவும் ஒரு காரணமாகும். பிசாசு பிடித்தவர்கள் எப்படி நடந்துக்கொள்வார்கள் என்பதை அறிய படிக்கவும்: மத்தேயு **8:30-33, 17:14-18.**

**இதைப் பற்றி மேலும் அறிய கீழ்கண்ட ஆய்வுக் கட்டுரைகளை படிக்கவும்:**

1. **முஹம்மது தற்கொலை முயற்சி செய்தாரா?**
2. **"முஹம்மதுவின் வாழ்க்கை வரலாறு" கருத்தரங்கு - பாகம் 2**
3. **Muhammad's Condition in light of the Biblical Description of Demonic Possession**
4. **MUHAMMAD'S SUICIDE ATTEMPTS**
5. **Muhammad and the Arab Criteria of Demon Possession**
6. **Examining Some More Evidence for Muhammad Being Deceived -**
7. **MUHAMMAD AND THE DEMONS**

**பாரா அவர்கள் எழுதியது:**

> *// இந்த ஆன்மிகக் காரணங்கள் மட்டுமல்ல; மற்ற இறைத்தூதர்கள் அனைவரும் ஆன்மிகவாதிகளாக மட்டுமே அடையாளம் காணப்பட்ட நிலையில், முகம்மது ஒருவர்தாம் மக்கள் தலைவராகவும், மத்திய ஆசியாவின் தன்னிகரற்ற அரசியல் வடிவமைப்பாளராகவும் இருந்திருக்கிறார். //*

இன்னொரு திருத்தம் பாரா அவர்களே. எல்லா நபிகளும் வெறும் ஆன்மிக தலைவர்களாகவே இருந்தார்கள், முஹம்மது மட்டும் ஆன்மீக தலைவராகவும், மக்கள் (நாட்டு) தலைவராகவும் இருந்தார்கள் என்று எழுதி இன்னொரு தவறை உங்கள் பாக்கெட்டில் போட்டுக்கொண்டுள்ளீர்கள். முஸ்லிம்கள் சொன்னதை அப்படியே கிளிப் பிள்ளைப்போல எழுதியிருக்கிறீர்கள்.

**உங்கள் இஸ்லாமிய நண்பர்களிடம் கீழ்கண்ட கேள்விகளை கேட்டுப்பாருங்கள்:**

**1) மோசே வெறும் ஆன்மீகத் தலைவரா** அல்லது மக்கள் தலைவரா? பல இலட்ச மக்களை எகிப்திலிருந்து விடுதலை செய்வித்து, 40 ஆண்டுகள் அவர்களை வழி நடத்தி வந்த மக்கள் தலைவர் அவர். அவர்களுக்கு ஆன்மீக சட்டங்களையும், நாட்டுக்கு தேவையான சட்டங்களையும் கொடுத்தவர். அவருக்கு பிறகு யோசுவா கூட மக்கள் தலைவராக இருந்தார். யூதர்களுக்கு ஒவ்வொரு வம்சத்திற்கு தேவையான இடங்களை ஒதுக்கிக்கொடுத்தவர்.

**2) தாவீது வெறும் ஆன்மீகத்தை மட்டும்** போதித்த நபியா அல்லது அதோடுகூட ஒரு நாட்டையும் ஆண்டு, போர்கள்புரிந்த மக்கள் தலைவாரா?

**3) தாவீதின் குமாரன் சாலொமோன் யார்?** வெறும் ஆன்மீகமா? அவர் மக்கள் தலைவராகவும் இருந்து நாட்டை ஆளவில்லையா?

இன்னும் பழைய ஏற்பாட்டில் அனேக நியாயாதிபதிகள் இருந்தார்கள், மேலும் சாமுவேல் போன்ற தீர்க்கதரிசிகளும் இருந்தார்கள், இவர்கள் ஆன்மீகவாதிகளாகவும், மக்கள் தலைவர்களாகவும் இருந்தார்கள்.

பாரா அவர்களே, உங்கள் வரிகளை முஸ்லிம்களே ஏற்றுக்கொள்ளமாட்டார்கள் என்பது தான் கசப்பான உண்மை. ஆனால், அதே முஸ்லிம்கள் சொன்னதைத்தான் நீங்கள் எழுதி இப்படி மாட்டிக்கொண்டீர்கள் என்பது இன்னொரு கசப்பான உண்மை. (இப்படி எடக்கு மடக்கா இஸ்லாம் பற்றிய விவரங்கள் இருந்தால், பாரா போன்ற எழுத்தாளர்களால் என்ன செய்யமுடியும்?)

**முடிவுரை:**

நீங்கள் தொடர்களை எழுதும் போது கொஞ்சம் கவனம் செலுத்தி இருந்திருந்தால் நன்றாக இருந்திருக்கும். இஸ்லாமோடு கூட, யூத கிறிஸ்தவ புத்தகங்களையும் படித்து இருந்திருக்கலாம். உங்கள் தொடர்களுக்கு உதவிய புத்தக பட்டியலைக் கண்டேன், அதில் முதலாவது புத்தகமாக "1. பரிசுத்த வேதாகமம் (பைபிள் சொஸைடி ஆஃப் இந்தியா வெளியீடு)" என்று எழுதியிருக்கிறீர்கள். இப்படி தொடரின் கடைசி பக்கத்தில், முதலாவதாக "பைபிள்" என்று எழுதி என்ன பயன் சொல்லுங்கள்? அதனை நீங்கள் படிக்கவில்லையே! இப்படி இருக்க எப்படி தவறு இல்லாமல் உங்களால் எழுதமுடியும். பானையில் இருந்தால் தானே அகப்பையில் வரும். "இல்லை..இல்லை பானையில் இருந்தபடியினால் தானே நான் அகப்பையில் எடுத்து எழுதினேன் என்று சொல்வீர்களானால்", ஆனால் பானையில் குர்-ஆனின் ஞானம் அல்லாவோ இருந்தது, அகப்பையில் அது தானே வரும், அதைத் தானே நீங்கள் எழுதமுடியும்! முட்செடிகளில் அத்திப்பழங்களை தேடினால் கிடைக்குமா?

உங்களை அடுத்த பதிவில் சந்திக்கிறேன்.

**அடிக்குறிப்புக்கள்:**

**[1] https://en.wikipedia.org/wiki/Prophets_in_Judaism**

**[2] https://en.wikipedia.org/wiki/Prophets_and_messengers_in_Islam**

ꕤꕤꕤꕤ

# 11) யூதர்களுக்கு ஒரு பெரிய 'ஓ' போடுவோமா முஸ்லிம்களே!?!

**மதிப்பிற்குரிய பாரா அவர்களுக்கு,**

நீங்கள் நபிகள் பற்றி கூறிய கருத்துக்களுக்கு என் கேள்விகளை முந்தைய விமர்சனத்தில் முன்வைத்தேன். அதைத் தொடர்ந்து இஸ்லாம் மற்றும் நபிகள் குறித்த ஒரு முக்கியமான விவரத்தை இந்த கட்டுரையில் எழுதிவிட்டு, உங்களின் இதர வரிகளுக்கு நாம் செல்வோம்.

நிலமெல்லாம் இரத்தம் புத்தகத்தில் நீங்கள் இஸ்லாம் பற்றி எழுதியவைகளை கூர்ந்து கவனித்தால், கிட்டத்தட்ட இஸ்லாம் சொல்வதை அப்படியே நீங்கள் அங்கீகரிப்பது போல காணப்படுகின்றது. எனவே தான், முஸ்லிம்களிடம் கேட்கவேண்டிய கேள்வியை உங்களிடம் கேட்டுக்கொண்டு இருக்கிறேன். (இன்னும் 50 ஆண்டுகளுக்கு பிறகு, அதாவது இந்த தற்கால சந்ததி மறைந்த பிறகு, "பாரா அவர்கள் முஸ்லிமாக மாறியிருந்தார், அவருடைய

நிலமெல்லாம் புத்தகத்தை படித்தால் அவர் முஸ்லிம் என்பது புரியும்'' என்று முஸ்லிம்கள் சொன்னாலும் சொல்லக்கூடும்).

## யூதர்களுக்கு ஒரு பெரிய 'ஓ' போடுவோமா முஸ்லிம்களே!?!

யூதர்களுக்கு நாம் ஏன் 'ஓ' போடவேண்டும்? அதாவது ஏன் அவர்களை மெச்சிக்கொள்ளவேண்டும்? அப்படி என்ன உலக மகா காரியத்தை அவர்கள் செய்துவிட்டார்கள்? போன்ற கேள்விகள் உங்களுக்கு எழலாம். அதற்கான பதிலைத் தான் இக்கட்டுரையில் எழுதப்போகிறேன்.

- பல நூறு ஆண்டுகள் சொந்த நாடு இல்லாமல் இருந்த யூதர்களுக்கு திடீரென்று நாடு கிடைத்ததே! அதற்காக ஓ போடவேண்டுமா? - இல்லை இதற்காக இல்லை.

- மத்திய கிழக்கு பகுதியில், பல இஸ்லாமிய நாடுகளுக்கு மத்தியிலே ஒரு சுண்டக்கா போல இருந்துக்கொண்டு, எந்த ஒரு பயமுறுத்தலுக்கும் அடிபணியாமல் இருக்கிறார்களே! இதற்காக ஓ போடவேண்டுமா? - இல்லை இதற்காக இல்லை.

- உலகில் கொஞ்ச ஜனத்தொகையாக இருந்தாலும், பல நோபல் பரிசுகளை அள்ளிச் சென்றுள்ளார்களே, பல விஞ்ஞான கண்டுபிடிப்புக்களை கண்டுபிடித்து இருக்கிறார்களே! அதற்காக ஓ போடவேண்டுமா? - இல்லை இதற்காக இல்லை.

மேற்கண்ட காரணங்களுக்காக இல்லையென்றால், வேறு எதற்காக நாம் யூதர்களுக்கு 'ஓ' போடவேண்டும்?

உலகில் முதல் மனிதன் ஆதாம் உண்டானது முதற்கொண்டு, எந்த ஒரு இனமும், எந்த ஒரு நாட்டு மக்களும் செய்யாத ஒரு காரியத்தை யூதர்கள் மட்டுமே செய்துள்ளார்கள். இஸ்லாமை நம்புகிறவர்கள், அல்லாஹ்வை நம்புகிறவர்கள் மட்டுமே யூதர்களுக்கு ஓ போட வேண்டும், அதாவது அவர்களுடைய மேன்மையை உலகம் அனைத்திலும் பரப்பவேண்டும். ஏன் என்று அறிந்துக்கொள்ள ஆவலாக உள்ளதா? கீழே தரப்பட்ட சில பத்திகளை படியுங்கள்.

### 1) அல்லாஹ் எல்லா நாடுகளுக்கும், இனங்களுக்கும், மொழிவாரியாக நபிகளை அனுப்பினான்

குர்-ஆனின் படி, உலகில் வந்த முதல் மனிதன் ஆதாம் முதற்கொண்டு அல்லாஹ் எல்லா நாடுகளுக்கும், எல்லா மொழி பேசும் மக்களை நல்வழிப்படுத்த பல ஆயிர நபிகளை அனுப்பியுள்ளான். அவன் நபிகளை அனுப்பாத சமுதாயமே இல்லை, எல்லா மக்களுக்கும் நல்வழிக்காட்ட அல்லாஹ்வின் இறைச்செய்தி அனுப்பப்படாத சமுதாயம் இல்லை (குர்-ஆன் 16:36, 40:78, 23:44, 28:59).

முஹம்மதுவின் காலத்துக்கு முன்பு வரை இப்படி அனுப்பிக்கொண்டே இருந்தான். கடைசியாக, கி.பி. 570-632 ஆண்டுகளில் முஹம்மது என்பவரை அனுப்பினான், இவர் தான் அல்லாஹ் அனுப்பிய கடைசி நபி என்று இஸ்லாம் சொல்கிறது.

உலகில் அல்லாஹ் அனுப்பிய அனைத்து நபிகளும் 'அல்லாஹ்' என்ற ஏக இறைவனை வணங்கும் படி போதித்தார்கள். ஒரே இன மக்களுக்கு பல நபிகளை ஒருவருக்கு பின்னாக இன்னொருவரை அனுப்பிக்கொண்டே இருந்தான். இந்த நபிகள் அல்லாஹ் தனக்கு கட்டளையிட்டவைகளைக் கொண்டு மக்களுக்கு போதித்தார்கள், நேர்வழி காட்டினார்கள்.

சில சமுதாய மக்கள் இவர்களை ஏற்றுக்கொள்ளவில்லை. ஆனால், அல்லாஹ் சோர்ந்துப்போகவில்லை, முஹம்மதுவின் காலம் வரை (கி.பி. 570-632), சரமாரியாக அனுப்பிக்கொண்டே இருந்தான். அப்படியானால் எத்தனை நபிகளை அனுப்பியிருக்கவேண்டும் கற்பனை செய்துப்பாருங்கள்? கடைசியாக முஹம்மதுவை அனுப்பி, இவர் தான் கடைசி நபி, இனி நான் எந்த ஒரு நபியையும் அனுப்பப்போவதில்லை என்று அடித்துச் சொல்லிவிட்டான். இதுதான் இஸ்லாம் சொல்லும் நபிகள் பற்றிய இறையியல்.

குர்-ஆனில் 25 நபிகளின் பெயர்கள் மட்டுமே உள்ளது. மேலும், சில இஸ்லாமியர்களின் கணக்குப்படி 1,24,000 நபிகள் மற்றும் இறைத்தூதர்களை அல்லாஹ் உலகில் அனுப்பியுள்ளான். சில இஸ்லாமிய அறிஞர்கள் இந்த எண்ணிக்கை தவறு என்றுச் சொல்கிறார்கள். ஆனால், முஹம்மதுவின் காலம் வரைக்கும் நபிகளை/இறைத்தூதர்களை தொடர்ந்து உலகம் முழுவதும் அல்லாஹ் அனுப்பியது மட்டும் உண்மை என்று எல்லா முஸ்லிம்களும் நம்புகிறார்கள். இது பாயிண்ட் 1 (A). இதனை மனதில் வைக்கவும்.

**2) இந்தியாவிற்கும், தமிழர்களுக்கும் அல்லாஹ் அனுப்பிய நபிகள்**

இஸ்லாமின் மேற்கண்ட இறையியலின் படி பார்த்தால், இந்தியாவிற்கும் (ஆரம்பத்தில் இந்தியா பல சிறு நாடுகளாக பிரிந்திருந்தது) அல்லாஹ் நபிகளை அனுப்பியிருந்திருக்கின்றான், வேதங்களையும், இறைச் செய்திகளையும் கொடுத்திருந்திருக்கின்றான்.

குறிப்பிட்டுச் சொல்வதானால், தமிழ் பேசும் தமிழர்களுக்கும், அல்லாஹ் இறைத்தூதர்களை அனுப்பியிருந்திருக்கின்றான்.

நம் தமிழ் மொழிப் பற்றிச் சொல்லும் போது, "கல் தோன்றி மண் தோன்றா காலத்தே வாளொடு முன்தோன்றிய மூத்த குடி தமிழ்க்குடி" என்றுச் சொல்லுவோம். அப்படியானால், முஹம்மதுவின் காலம் வரைக்கும் பல நூறு தூதர்களை அல்லாஹ் தமிழர்களுக்காகவே அனுப்பியிருக்கிறான்.

இந்த விவரத்தைப் பற்றி முஸ்லிம் அறிஞர்கள் என்ன சொல்கிறார்கள் என்பதை கீழ்கண்ட தொடுப்புக்களில் படிக்கலாம்:

1. **Which prophets were sent to India? Is Ram, Krishna prophets? Dr Zakir Naik** (இந்தியாவிற்கு எத்தனை நபிகள் அனுப்பப்பட்டார்கள்? ராமாவும் கிருஷ்ணாவும் நபிகளா? டாக்டர் ஜாகிர் நாயக் அவர்கள் அளித்த பதில் (ஆங்கிலம்) - யூடியுப் & ஃபேஸ்புக் தொடுப்புக்கள்.
2. **The Honorable Lord Krishna: A Prophet Of Allah** - கிருஷ்ணா - அல்லாஹ்வின் நபி
3. **Lost Prophets of India and Hinduism** (தொலைந்துவிட்ட இந்திய மற்றும் இந்துயிஸத்தின் நபிகள்)
4. **Wikipedia discussion page (Prophets in Islam)**
5. **Indian Muslim cleric calls Hindu deity Shiva the first prophet of Allah** (சிவன் அல்லாஹ் இந்தியாவிற்கு அனுப்பிய முதல் நபியாவார், ஒரு முஸ்லிம் அறிஞரின் ஒப்புதல்)
6. **Prophet foretold in Indian Scriptures** (இந்திய வேதங்களில் முஹம்மது)

கிபி 7ம் நூற்றாண்டு வரை உலகில் இருந்த எல்லா நாடுகளுக்கும், இன மக்களுக்கும், காட்டுவாசிகள் வாழ்ந்த இடங்களுக்கும், பல மொழிகளை பேசும் மக்களிடத்திற்கும், அல்லாஹ் தொடர்ச்சியாக நபிகளை, இறைச்செய்திகளை அனுப்பிக்கொண்டே இருந்தான். இது பாயிண்ட் 2 (B), இதனையும் மனதில் பதித்துக்கொள்ளவும்.

**3) பழைய நாடுகளின் எண்ணிக்கை**

நான் மேற்கொண்டு சொல்லப்போகும் விவரங்களை புரிந்துக்கொள்வதற்கு, பண்டைய காலத்தில் தோராயமாக எத்தனை பெரிய நாடுகள், சிறிய நாடுகள், மாநிலங்கள் போன்ற அமைப்புக்கள் இருந்தன என்ற கணக்கை அறிந்துக்கொள்வது நல்லது. இந்த எண்ணிக்கை தற்காலத்தில் செய்த அகழ்வாராய்ச்சி, மற்றும் இதர தொல்பொருள் ஆய்வுகளின்படி ஆகும். இன்னும் ஆய்வுகளில் அகப்படாத மக்கள் கூட்டம் பல இருந்திருக்கும்.

பெரிய நாடுகள் என்று கருதப்படும் நாடுகள் இவை என்று விக்கிபீடியா சொல்கிறது, மேலும் இந்நாடுகள் இருந்த காலக்கட்டமும் சொல்லப்பட்டுள்ளது.

- மெசபடோமியா - கி.மு. 3700
- எகிப்து - கி.மு. 3300
- இந்து சமவெளி - கி.மு. 2500
- இந்தியா - கி.மு. 1700
- சைனா - கி.மு. 1600

**(The earliest known primary states appeared in Mesopatamia ca. 3700 B.C., in Egypt ca. 3300 B.C., in the Indus Valley ca. 2500 B.C., India ca 1700 B. C.,and in China ca. 1600 B.C.**
**- https://en.wikipedia.org/wiki/List_of_sovereign_states_in_the_7th_century_BC**

விக்கிபீடியாவின் படி, கி.மு. 7ம் நூற்றாண்டில் இருந்ததாக அறியப்பட்ட நாடுகளின் பெயர்கள் மற்றும் அவைகளின் காலங்கள் கொடுக்கப்பட்டுள்ளன. அந்த பட்டியலை இங்கு மறுபதிவு செய்யாமல், இடத்தை மிச்சப்படுத்த விரும்புகிறேன். எனவே, **இந்த தொடுப்பை** சொடுக்கி, ஒவ்வொரு கண்டத்திலும் எத்தனை நாடுகள் இருந்தன என்பதை தெரிந்துக்கொள்ளுங்கள். இந்த பக்கத்தில் கொடுக்கப்பட்ட அக்கால நாடுகள் (States) 140ஐ தாண்டுகின்றது.

இவைகள் போக, கீழ்கண்ட காலங்களிலும்(Bronze Age, Iron Age etc..) இருந்த நாடுகள் பற்றிய கணக்கெடுப்பு கீழே உள்ள தொடுப்புக்களில் கொடுக்கப்பட்டுள்ளது. இவைகளை சொடுக்கி நாடுகளை எண்ணிக்கொள்ளுங்கள்.

- **List of Bronze Age states (3300 - 1200 கி.மு)**
- **List of Iron Age states (1200 கி.மு. - 600 கி.மு.)**
- **List of Classical Age states (600 கி.மு. - 200 கி.பி)**
- **List of states during Antiquity (200 கி.பி - 700 கி.பி)**

ஆக, நூற்றுக்கணக்கான நாடுகளுக்கு, ஒவ்வொரு காலக்கட்டத்திற்கும் ஆயிரக்கணக்கான நபிகள் மூலமாக, இறைவேதங்களை (அ) இறைச்செய்திகளை அல்லாஹ்

அனுப்பிக்கொண்டே இருந்து, கி.பி. ஏழாம் நூற்றாண்டில் பிரேக் போட்டார், கடைசி நபியை (முஹம்மதுவை) அனுப்பினார், கடைசி வேதத்தை (குர்-ஆனை) அனுப்பினார்.

இதுதாங்க, நம்முடைய இக்கட்டுரையின் கருப்பொருளை தெளிவாக புரிந்துக்கொள்வதற்கான அறிமுக விவரங்கள்.

இந்த விவரங்களுக்கும், யூதர்களுக்கு ஓ போடுவதற்கு என்னடா சம்மந்தம் என்று கேட்கத்தோன்றுகிறதா? . . .இதோ வந்துட்டேனுங்கோ....

**4) மூன்று வேதங்கள், 25 நபிகள் பற்றி மட்டுமே குர்-ஆன் சொல்கிறது ஏன்?**

குர்-ஆன் முந்தைய வேதங்கள் என்றுச் சொல்லி மூன்றே வேதங்களை குறிப்பிடுகின்றது. அவைகள் தோரா, ஸபூர், மற்றும் இஞ்ஜில் ஆகும். ஆபிரகாமின் சுருள்கள் என்றும் ஒரு வேதத்தைச் சொல்கிறது, ஆனால், அதன் பெயர் குறிப்பிடவில்லை. மோசேயின் சுருள்கள் என்றுச் சொல்வதை நாம் தோரா என்றும் கருதலாம்.

மேலும் 25 நபிகளின் பெயர்களை குறிப்பிடுகின்றது. இந்த 25 பேர்களில் 20-21 நபர்கள் பைபிளில் காணப்படுபவர்கள் (பழைய/புதிய ஏற்பாட்டில்). மீதமுள்ள நான்கு-ஐந்து நபிகள், அரேபியாவின் வடக்கு பகுதியில் வாழ்ந்த மக்களுக்காக அனுப்பப்பட்டவர்கள் என்று குர்-ஆன் சொல்கிறது (ஆது, தமுத், மீதியான் பகுதிகள்). முஹம்மது ஒட்டு மொத்த மனுக்குலத்துக்கும், ஜின்களுக்கும் நபியாக அனுப்பப்பட்டார் என்று குர்-ஆன் சொல்கிறது, பார்க்க - **https://en.wikipedia.org/wiki/Prophets_and_messengers_in_Islam**

**5) ஏன் யூதர்களுக்கு ஒரு பெரிய ’ஓ’ போடவேண்டும்?**

நன்றாக கூர்ந்து கவனியுங்கள் (சாரி படியுங்கள்), நாம் கிளைமாக்ஸில் இருக்கிறோம்.

இதுவரை கண்ட விவரங்களின் படி, பல நூறு நாடுகள், பல ஆயிர நபிகள், பல வேதங்களை அல்லாஹ் அனுப்பியிருக்கிறான். இந்தியாவில் பேசப்பட்ட ஒவ்வொரு மொழி பேசும் மக்களுக்கும் தனித்தனி நபிகள், வேதங்கள் அல்லது இறைச்செய்திகள் கொடுக்கப்பட்டது.

இப்படி, உலகம் அனைத்தும் பலப்பல வேதங்களை அல்லாஹ் அனுப்பியிருக்கும்போது, எல்லா மக்களும் தங்களுக்காக அல்லாஹ் அனுப்பிய வேதங்களை பாதுகாக்கவில்லை. பல ஆயிர நபிகளை அல்லாஹ் அனுப்பி என்ன பயன்? பல வேதங்களை அனுப்பி என்ன பயன்? அந்த நபிகளும் தங்கள் வேதங்களை பாதுகாக்க வில்லை, அந்த மக்களும் அல்லாஹ் இறக்கிய செய்தியை தூயவடிவில் பாதுகாக்க வில்லை. என்ன கஷ்டகாலம் பாருங்கள்.

தமிழர்களாவது அல்லாஹ்வின் வார்த்தையை பாதுகாத்தார்களா?

**திருக்குறள்:**

கி.மு. 200 — 500 நூற்றாண்டுகளில் வாழ்ந்த திருவள்ளுவர் இயற்றிய நூலை பத்திரமாக பாதுகாத்த தமிழர்கள், அல்லாஹ்வின் இறைச்செய்தியை மட்டும் பாதுகாக்கவில்லை ஏன்?

**சங்க இலக்கியம்**

சங்க இலக்கியம் எனப்படுவது தமிழில் கிறிஸ்துக்கு முற்பட்ட காலப்பகுதியில் எழுதப்பட்ட செவ்வியல் இலக்கியங்கள் ஆகும். சங்க இலக்கியம் தற்போது கண்டுபிடிக்கப்பட்ட வரை 473 புலவர்களால் எழுதப்பட்ட 2381 பாடல்களைக் கொண்டுள்ளது.

அடப்பாவமே, கி.மு. காலத்தில் 473 புலவர்கள் எழுதிய பாடல்களை, பல தெய்வ வழிப்பாட்டு நூல்களை பாதுகாத்த தமிழர்கள், ஏக இறைவன், உண்மை தெய்வம் அல்லாஹ் இறக்கிய ஒரு வேதத்தை பாதுகாக்கவில்லையே! இவர்களை என்னவென்றுச் சொல்வது?

ஆக, தமிழர்கள் அல்லாஹ்வின் இறைச்செய்தியை பாதுகாக்கவே இல்லை (இஸ்லாமின் படி). பல நபிகளை அல்லாஹ் அனுப்பியும் பயனில்லை, எத்தனை இறைச்செய்திகளை இறக்கியும் பயனில்லை, எல்லாம் கடலில் கரைந்த பெருங்காயம் போல காணாமல் போய்விட்டது.

<u>**சமஸ்கிருத வேதங்கள்:**</u>

**ரிக் வேதம்:** இது முந்தைய வேதகாலம் என்றும் அழைக்கப்படுகிறது. இதன் காலம் கி.மு 2200 முதல் கி.மு 1600 வரை ஆகும். ரிக் வேதத்தில் 10600 பாடல்கள் பாடப்பட்டுள்ளன.

**யசுர் வேதம்:** இது பிந்தைய வேதங்களில் ஒன்று ஆகும். இதன் காலம் கி.மு 1400 முதல் கி.மு 1000 வரை ஆகும்.

**சாம வேதம்:** இது கி.மு 1500 க்கும், 500 க்கும் இடையில் எழுத்து வடிவில் உருவாகியிருக்கலாம் எனக் கருதப்படுகின்றது

**அதர்வண வேதம்:** இது கி.மு. 1200 - கி.மு. 1000 வரையிலான காலக்கட்டத்தில் எழுதப்பட்டு இருகலாம்.

சமஸ்கிருத வேதங்களை கி.மு. காலத்திலிருந்தே பாதுகாத்தவர்கள், அல்லாஹ்வின் வேதத்தை மட்டும் பாதுகாக்கவில்லையே!

இதர நாடுகளில் உள்ளவர்களாவது பாதுகாத்தார்களா? சைனா, ஆப்ரிக்கா, எகிப்து என்று பல நாடுகளுக்கு அல்லாஹ் நபிகளை/செய்திகளை அனுப்பியிருந்தும், ஒரு பயனுமில்லை. அல்லாஹ்விற்கு துக்கம் தாங்க முடியவில்லை. இவர்களுக்கு நபிகளை அனுப்பி என்ன பிரயோஜனம் என்று நொந்துக்கொண்டு இருந்தபோது, ஒரு இனம் மட்டும் உலகத்தில் எந்த இனமும், மக்களும், செய்யாத ஒன்றை செய்தது. அந்த ''கல்தோன்றி மண் தோன்றா காலத்தே'' என்று நாம் பெருமைப்பட்டுக்கொள்கிறோமே, நாமும் செய்யாத ஒன்றை ஒரு இனம் செய்தது.

**அது எந்த இனம்? அது தான் யூத இனம்.**

இந்த யூத இனம் மட்டுமே, தங்களுக்கு அல்லாஹ் கொடுத்த வேதத்தை கி.மு. 1500 லிருந்து பாதுகாத்துக்கொண்டு வந்து, கி.பி. ஏழாம் நூற்றாண்டில் முஹம்மதுவின் கையில் கொடுத்தது. கிட்டத்தட்ட இரண்டாயிரம் ஆண்டுகள் இந்த யூத இனம் தங்கள் வேதத்தை பாதுகாத்து வந்து, முஹம்மதுவிடம் கொடுத்தது. இந்த யூதர்களைப் போலவே கிறிஸ்தவர்களும் தங்களுக்கு அல்லாஹ் கொடுத்த வேதத்தை (இஞ்ஜிலை) பாதுகாத்துக்கொண்டு வந்து முஹம்மதுவின் கையில் கொடுத்தார்கள். ஓ.. இந்த ஆரம்பகால கிறிஸ்தவர்களும் யூத

இரத்தமாக இருந்தபடியினால், தங்கள் வேதத்தை காத்துக்கொண்டார்கள் என்று நினைக்கிறேன்.

பல ஆயிர நபிகளை வெவ்வேறு நாடுகளுக்கு அனுப்பி என்ன பயன்? பல வேதங்களை இறக்கி என்ன பயன்? இந்த யூதர்கள் மட்டும் தான் வேதங்களை பாதுகாத்தார்கள். இதனால் தான் குர்-ஆனில் அல்லாஹ் தோரா (மோசே), ஸபூர் (தாவீது) மற்றும் இஞ்ஜில் (இயேசு) பற்றி மட்டுமே பெயர் குறிப்பிட்டு எழுதியுள்ளார். இவைகளில் ஒளியும் நேர்வழியும் இருக்கிறது என்கிறார் (இருந்தது என்றல்ல). (பார்க்க: **WHAT THE QUR'AN SAYS ABOUT THE BIBLE**)

ஆபிரகாமுக்கு இறக்கிய சுருள் என்னவானது? ஆபிரகாமும், அவரது பிள்ளைகளும், அவர்கள் பிள்ளைகளும் எதற்கும் லாயக்கில்லை. தங்கள் தகப்பனுக்கு அல்லாஹ் கொடுத்த வேதத்தை தொலைத்துவிட்டார்கள். ஆனால், அதே ஆபிரகாமின் கொள்ளு, கொள்ளு, கொள்ளுப் பேரன்கள், அதாவது யாக்கோபுக்கு பிறந்த 12 சிங்கக்குட்டிகள், எகிப்தில் அடிமைகளாக இருந்தாலும், அவர்களை விடுவிக்க வந்த மோசேக்கு அல்லாஹ் இறக்கிய வேதத்தை கச்சிதமாக பாதுகாத்தார்கள். அதன் பிறகு தாவீதுக்கு அல்லாஹ் கொடுத்த ஸபூரையும் அதே யூதர்கள் பாதுகாத்தார்கள். அதே யூத ரத்தத்தில் வந்த இயேசுவிற்கு கொடுத்த இன்ஜிலையும் பாதுகாத்தார்கள் யூதர்கள். இயேசுவின் சீடர்களும் யூத இரத்தம் தானே.

எல்லோரும் யூதர்களுக்கு ஒரு பெரிய 'ஓ' போடுங்கள் பார்க்கலாம். போடமாட்டீர்களா? அப்படியானால், மேலே சொன்ன விவரங்கள் உங்களுக்கு புரியவில்லையென்று அர்த்தம், இன்னொரு முறை படித்துப் பாருங்கள், நிச்சயமாக நீங்க யூதர்களுக்கு ஓ போடுவீங்க. பாரா அவர்களே, உங்களுக்கு புரிந்து இருந்திருக்கவேண்டுமே!

**அ) யூத நபிகளை தவிர்த்து,** அரேபியாவைச் சுற்றியுள்ள பகுதிகளில் வாழ்ந்த நபிகளைத் தவிர்த்து வேறு ஒரு நபியின் பெயரையும், வேதத்தையும் ஏன் குர்-ஆன் குறிப்பிடவில்லை?

**ஆ) யூதர்கள் தவிர வேறு** ஒருவரும் ஏன் அல்லாஹ்வின் வேதத்தை பாதுகாக்கவில்லை?

**இ) தமிழர்கள் சங்க கால** இலக்கியங்கள் மற்றும் இதர இலக்கியங்கள் பலவற்றை பத்திரமாக பாதுகாத்தார்கள். ஆனால் தங்களுக்கு அல்லாஹ் கொடுத்த வேதத்தை ஏன் பாதுகாக்கவில்லை?

**ஈ) சமஸ்கிருத மொழியில்** இருக்கும் நான்கு வேதங்களையும், இதர புராணங்களையும் பத்திரமாக பாதுகாத்தவர்கள், அல்லாஹ்வின் வேதத்தை பாதுக்காக்கவில்லை ஏன்?

**உ) இந்தியர்களை விடுங்கள்,** இதர நாட்டு மக்கள் பல நூல்களை பாதுகாத்தார்கள், ஏன் அல்லாஹ்வின் வேதத்தை பாதுகாக்கவில்லை.

**ஊ) உலகமே கோட்டை விட்டபோது,** யூதர்கள் மட்டும் எப்படி தோரா, ஸபூர், இன்ஜிலை பாதுகாத்தார்கள்? இந்த மூன்றை மட்டுமே குர்-ஆன் பெயர் சொல்லி குறிப்பிடுவதிலிருந்து நமக்கு என்ன புரிகின்றது?

**முடிவுரை:**

குர்-ஆன் சொல்வது உண்மையானால், உலக மக்கள் அனைவரும் கோட்டை விட்டதை யூதர்கள் பிடித்துக்கொண்டார்கள், அதாவது குர்-ஆனின் படி, முந்தைய வேதங்களை பாதுகாத்தார்கள். ஆக, முஸ்லிம்கள் அனைவரும் யூதர்களுக்கு ஒரு பெரிய 'ஓ' போடத்தான் வேண்டும். அல்லாஹ்வின் ஆசையை நிறைவேற்றியவர்கள் யூதர்கள் தான்.

இக்கட்டுரையைப் பற்றி யாராவது கருத்து தெரிவித்தால், கேள்விகள் கேட்டால், பதில் சொல்ல நான் தயாராக இருக்கிறேன்.

யூதர்களின் இந்த சாதனையை பாராட்டி, பாரா அவர்களும், முஸ்லிம்களும் அவர்களை மெச்சிகொண்டே ஆகவேண்டும். இதனை முஸ்லிம்கள் அங்கீகரிக்கவில்லையென்றால், இதன் அர்த்தமென்ன? குர்-ஆன் சொல்லும் உலகளாவிய நபிகளை அனுப்பியது, எல்லாம் பொய்யும் பித்தலாட்டம் ஆகும் என்று அர்த்தம்.

**பின் இணைப்பு:**

**1) ஒருவேளை "யூதர்களும், கிறிஸ்தவர்களும் தங்கள் வேதங்களை மாற்றிவிட்டார்கள் அல்லவா?" என்று முஸ்லிம்கள் கேட்கலாம்.**

ஆனால், இதற்கு முஸ்லிம்களிடம் ஆதாரமில்லை. குர்-ஆனில் ஒரே ஒரு வசனத்தை, அதாவது "தோராவையும், ஸபூரையும், இன்ஜிலையும் யூத கிறிஸ்தவர்கள் மாற்றிவிட்டார்கள், ஓ முஹம்மதுவே, இனி அவைகளை பின்பற்றாதீர்கள்" என்று பெயர்கள் குறிப்பிட்டுச் சொல்வதை காட்டுங்கள். அது உங்களால் முடியாது. ஆனால், அதே குர்-ஆனில், இந்த மூன்று வேதங்களை புகழ்ந்துத் தள்ளிய வசனங்களை நான் காட்டமுடியும், இந்த தமிழ் கட்டுரையை பார்க்கவும்: **பரிசுத்த பைபிளை உறுதிப்படுத்தும் குர்-ஆன்.**

**2) உலகில் அல்லாஹ் அனுப்பிய எல்லா வேதங்களின் பெயர்களையும் அல்லாஹ் குர்-ஆனில் குறிப்பிடவேண்டும் என்ற கட்டாயமில்லை.**

உண்மை தான், ஆனால், தன்னுடைய கடைசி வேதமாகிய குர்-ஆனில் ஏன் வெறும் யூதர்களின் வேதங்களை மட்டுமே குறிப்பிடவேண்டும். உலகத்துக்கே குர்-ஆன் வழிகாட்டியென்றால், குறைந்த பட்சம் இந்தியாவிற்காக அனுப்பப்பட்ட நபிகளில் ஒருவரின் பெயர், ஒரு வேதத்தின் பெயரை குறிப்பிட்டு இருந்தால் எப்படி இருந்திருக்கும்? இதே போல, இதர நாடுகளுக்கு அனுப்பப்பட்ட நபிகளில் குறைந்தபட்சம் ஒருவரையாவது குறிப்பிட்டு இருந்திருக்கலாம். எப்போது பார்த்தாலும், ஆபிரகாம், ஈசாக்கு, இஸ்மாயீல், யாக்கோபு, மோசே, தாவீது, இயேசு என்று பாடிய பல்லவியையே ஏன் பல முறை பாடவேண்டும். இந்தியாவிற்கு அனுப்பிய ராமசாமி, கோவிந்தசாமி, அரவிந்தசாமி (நடிகரை குறிப்பிடவில்லை), என்று சிலருடைய பெயரையாவது சொல்லியிருக்கவேண்டாமா? சைனா போன்ற நாடுகளுக்கு அனுப்பிய பெயர்களில் சில "சிங்சாங், கிளிங் கிளாங்" என்ற நபிகள் பற்றி எழுதியிருக்கலாம். இதிலிருந்து என்ன தெரிகின்றது?

இதிலிருந்து எவைகளை அறிகிறோம், முஹம்மதுவிற்கு அல்லது குர்-ஆனின் ஆசிரியருக்கு, மத்திய கிழக்கு நாடுகள் பற்றி மட்டுமே தெரிந்துள்ளது, மேலும் கிபி ஏழாம் நூற்றாண்டில் வாழும் ஒரு நபருக்கு, பல இடங்களுக்குச் சென்று வியாபாரம் புரியும் வியாபாரிகள் போன்றவர்களுக்கு பொது அறிவு எவ்வளவு இருக்குமோ, அது மட்டுமே குர்-ஆனில் நாம் பார்க்கமுடியும். மேலும் ஆய்வு செய்யாத பொதுஅறிவு என்று எடுத்துக்கொண்டால், பல

சரித்திர தவறுகள், விஞ்ஞான தவறுகள் அதில் உள்ளடக்கிவிடுவது சகஜமே. இதைத் தான் நாம் குர்-ஆனில் பார்க்கமுடியும்.

ஆக, குர்-ஆன் ஆக்கியோன் ஒரு மனிதன் என்று நினைக்கவேண்டும், அல்லது யூதர்கள் தான் உலகிலேயே சிறந்தவர்கள் (நபிகளை, வேதங்களை காத்த விஷத்தில்) என்று முஸ்லிம்கள் அங்கீகரிக்கவேண்டும். பாரா அவர்களே, இதைப் பற்றி மேலும் அறிய விரும்பினால், தயவு செய்து என்னிடம் கேளுங்கள், நாம் எழுத்துவிவாதம் செய்வோம்.

**3) இந்த கட்டுரையில் முக்கியமாக நீங்கள் இந்துக்களின் வேதங்களை வம்புக்கு இழுத்துள்ளீர்கள், இது கண்டிக்கப்படத்தக்கது**

முதலாவதாக, நான் இந்துக்களின் வேதங்களை வம்புக்கு இழுக்கவில்லை. இஸ்லாமின் உலகளாவிய இறையியல் உண்மை என்று நம்பும் ஒவ்வொருவருக்கும் இக்கட்டுரையில் கேட்கப்பட்ட கேள்விகள் எழும். எத்தனை இந்துக்களுக்கு நான்கு வேதங்கள் இருப்பதுதெரியும்? சங்க இலக்கியங்களை எழுதிய புலவர்களின் எண்ணிக்கைத் தெரியும்? எந்த காலக்கட்டத்தில் அவைகள் எழுதப்பட்டது என்ற விவரம் தெரியும். ஆனால், அவைகளை இக்கட்டுரையில் சுருக்கமாக மேற்கோள் காட்டியிருக்கிறேன். இந்துக்கள் முதலாவது அவர்களின் வேதங்கள் பற்றி அறிந்துக்கொள்ளவேண்டும், அவைகளை படிக்கவேண்டும், ஆய்வு செய்யவேண்டும். அதன் பிறகு அவைகளின் அருமை பெருமைகளை இதர மக்களுக்குச் சொல்லமுடியும். இப்படியெல்லாம் செய்யாமல் வெறுமனே, இந்துக்களின் வேதங்களை வம்புக்கு இழுத்தீர்களென்றுச் சொன்னால் யாருக்கு என்ன பயன்?

இரண்டாவதாக, பாரா போன்றவர்கள் இதர மக்களின் வேதங்களிலிருந்து விவரங்களை எடுத்து, அவைகளை மாற்றி எழுதுவதினால், அவருக்கு பதில் கொடுக்கவேண்டியது எங்கள் கடமையாகும். இப்படிப்பட்ட பதில் சொல்லப்படும் போது, இதர மக்களின் வேதங்களையும் தொடவேண்டிய அவசியம் உண்டாகும். நான் சொன்னதில் தவறு இருந்தால், இந்துக்கள் தங்கள் பதில்களைத் தரலாம். கருத்துச் சுதந்திரம் எல்லோருக்கும் உண்டு.

**4) இஸ்லாமிய இறையியல் "உலகளாவிய நபி அனுப்பப்படுதல்" என்பதை ஏற்கிறது,** இதனால், உலகில் வாழ்ந்த ஒவ்வொருவரையும் நேர்வழிப்படுத்த அல்லாஹ் வழி காட்டினான் என்று அறியமுடிகின்றது. ஆனால், யூத கிறிஸ்தவ கோட்பாட்டில் உலகளாவிய நபி அனுப்பப்படுதல் இல்லையே, அப்படியானால் உலக மக்கள் அனைவருக்கும் நேர் வழி காட்டவேண்டும் என்று ஏன் பைபிளின் இறைவன் (யெகோவா தேவன்) விரும்பவில்லை? இது சரியானதா? இயேசுவிற்கு முன்பு பல நாடுகளில் வாழ்ந்தவர்கள் பைபிளின் தேவனை அறியவில்லையே, அவர்களின் நிலை என்ன? இன்றும் பல கோடி பேர் இயேசு என்ற பெயரையும் அறியவில்லையே அவர்களின் நிலை என்ன?

இதற்கு தனியாக ஒரு கட்டுரையை எழுதுவேன். இக்கேள்விகு பதில் வேண்டுமென்று ஒரு முஸ்லிமாவது என்னிடம் கேட்டுக்கொண்டால் நான் எழுதுவேன்.

இந்த கட்டுரைக்கு, பின்னூட்டமிடவேண்டும் என்பவர்கள், ஈஸா குர்-ஆன் பிளாக்கரில் பின்னுட்டமிடலாம், அல்லது ஆன்சரிங் இஸ்லாம் தமிழ் தளத்தில், "**தொடர்பு கொள்க**" என்ற மெனுவை க்ளிக் செய்து பின்னூட்டமிடலாம். நான் பதில் எழுதுவேன்.

**இக்கட்டுரையில் பயன்படுத்திய தொடுப்புக்கள்**

**[1] List of sovereign states in the 7th century BC**
**[2] Which prophets were sent to India? Is Ram, Krishna prophets? Dr Zakir Naik (இந்தியாவிற்கு எத்தனை நபிகள் அனுப்பப்பட்டார்கள்? ராமாவும் கிருஷ்ணாவும் நபிகளா? டாக்டர் ஜாகிர் நாயக் அவர்கள் அளித்த பதில் (ஆங்கிலம்) - யூடியுப் & ஃபேஸ்புக் தொடுப்புக்கள்.**
**[3] The Honorable Lord Krishna: A Prophet Of Allah - கிருஷ்ணா - அல்லாஹ்வின் நபி**
**[4] Lost Prophets of India and Hinduism (தொலைந்துவிட்ட இந்திய மற்றும் இந்துயிஸத்தின் நபிகள்)**
**[5] Wikipedia discussion page (Prophets in Islam)**
**[6] Indian Muslim cleric calls Hindu deity Shiva the first prophet of Allah (சிவன் அல்லாஹ் இந்தியாவிற்கு அனுப்பிய முதல் நபியாவார், ஒரு முஸ்லிம் அறிஞரின் ஒப்புதல்)**
**[7] Prophet foretold in Indian Scriptures (இந்திய வேதங்களில் முஹம்மது)**
**[8] List of Bronze Age states (3300 - 1200 கி.மு)**
**[9] List of Iron Age states (1200 கி.மு. - 600 கி.மு.)**
**[10] List of Classical Age states (600 கி.மு. - 200 கி.பி)**
**[11] List of states during Antiquity (200 கி.பி - 700 கி.பி)**
**[12] Prophets and Messengers in Islam**
**[13] திருக்குறள் - விக்கிபீடியா**
**[14] சங்க இலக்கியம் - விக்கிபீடியா**
**[15] சமஸ்கிருத வேதங்கள் - விக்கிபீடியா**
**[16] WHAT THE QUR'AN SAYS ABOUT THE BIBLE**
**[17] பரிசுத்த பைபிளை உறுதிப்படுத்தும் குர்-ஆன்**

ஐஐஐஐ

## 12) குர்ஆனை பொய்யாக்கும் ஹதீஸ்கள் - முஹம்மது அற்புதங்கள் செய்தாரா?

### (15. அந்த மூன்று வினாக்கள்)

**மதிப்பிற்குரிய பாரா அவர்களுக்கு,**

உங்களுடைய தொடர்களை படிக்க படிக்க பல சந்தேகங்கள் எனக்கு எழுகின்றன. நீங்கள் எழுதியவைகள் அனைத்தும் உண்மையிலேயே சரித்திர விவரங்கள் என்று நீங்கள் அறிந்துக்கொண்டு புரிந்துக்கொண்டு எழுதினீர்களா? அல்லது கவிதைக்கு பொய்யழகு என்றுச் சொல்வார்களே, அது போல தொடர் கட்டுரைகளுக்கும் பொய்யழகு என்ற புதிய விவரத்தை உலகிற்கு தெரிவிப்பதற்காக எழுதினீர்களா? என்ற சந்தேகம் வருகின்றது. முஹம்மது செய்த ஒரு அற்புதம் பற்றி நீங்கள் எழுதியவைகளை இந்த கட்டுரையில் ஆய்வு செய்யப்போகிறோம். இதன் அடிப்படையில் பல கேள்விகளை முஸ்லிம்களிடமும் உங்களிடமும் கேட்கவேண்டியுள்ளது.

**பாரா அவர்கள் எழுதியவைகள்:**

> *// ஒரு பவுர்ணமி தினத்தன்று முகம்மதுவிடம் சென்று, "உண்மையிலேயே நீங்கள் ஓர் இறைத்தூதர் என்று நாங்கள் எப்படி நம்புவது? உங்களால் இந்த முழுநிலவைப் பிளந்து காட்ட முடியுமா?" என்று சவால் விட்டார்கள். "பார், இந்த முகம்மது எப்படித் திண்டாடப்போகிறார்!" என்று தம் குலத்தின் இளவல்களைப் பார்த்துப் பெருமிதமாகப் புன்னகை புரிந்தார்கள். ஆனால், முகம்மது கண் மூடி தியானித்த மறுகணம் அந்த அற்புதம் நடக்கத்தான் செய்தது. பவுர்ணமி நிலவு இரண்டாக இரு பிறைகளாகப் பிரிந்து காட்சியளித்தது! உடனே, முகம்மது ஒரு மந்திரவாதி, கண்கட்டு வித்தை செய்கிறார் என்று அலறத் தொடங்கிவிட்டார்கள் குறைஷிகள். ஒன்றல்ல; இதைப்போல் வேறு பல சம்பவங்களும் முகம்மதின் வாழ்க்கையில் நடந்ததற்கான சரித்திரக் குறிப்புகள் இன்றும் வாசிக்கக் கிடைக்கின்றன. (நிலமெல்லாம் இரத்தம், 15. அந்த மூன்று வினாக்கள்) //*

இன்னும் இப்படிப்பட்ட பல அதிசயங்கள் முஹம்மதுவின் வாழ்வில் நடந்ததாக **'சரித்திரக் குறிப்புக்கள்'** சொல்கின்றன என்று எழுதியுள்ளீர்கள். ''ஹதீஸ்கள்'' என்பது சரித்திரம் என்று நினைக்கின்றீர்களா? ஹதீஸ்களில் முஹம்மது சொல்லாத பல கட்டுக்கதைகள் இன்னும் இருக்கின்றது என்பதை நீங்கள் அறியவில்லை, ஆனால் பல இலட்ச முஸ்லிம்கள் அதனை அறிந்துக்கொண்டு ஒவ்வொரு ஹதீஸையும் புறக்கணித்துக்கொண்டு வருகிறார்கள். சரி, விஷயத்துக்கு வருவோம்.

**1) முஹம்மது சந்திரனை பிளந்துக்காட்டி அற்புதம் செய்து, தன் நபித்துவத்தை குறைஷிகளிடம் நிருபித்தது உண்மையா?**

உங்களுடைய மேற்கண்ட வரிகளின்படி, முஹம்மது ஒரு பயங்கரமான அற்புதம் செய்துக்காட்டி, தான் அல்லாஹ்வின் இறைத்தூதர் என்று நிருபித்தார். இதற்கு ஆதாரமாக குர்-ஆன் வசனமும், ஸஹீஹ் முஸ்லிம் ஹதீஸும் உள்ளது. குர்-ஆன் 54:1ம் வசனத்தை நான்கு குர்-ஆன் தமிழாக்கங்களில் காணலாம்.

> **54:1.** (இறுதி) நேரம் நெருங்கி விட்டது; சந்திரனும் பிளந்து விட்டது. (டாக்டர். முஹம்மது ஜான் தமிழாக்கம்)
>
> **54:1.** மறுமை நெருங்கிவிட்டது. (அதற்கு அத்தாட்சியாக) சந்திரனும் பிளந்து விட்டது. (அப்துல் ஹமீது பாகவி தமிழாக்கம்)
>
> **54:1.** மறுமைக்கான நேரம் நெருங்கிவிட்டது. மேலும், சந்திரன் பிளந்து விட்டது. (இஸ்லாமிய நிறுவனம் டிரஸ்ட் (IFT) தமிழாக்கம்)
>
> **54:1** அந்த நேரம்1 நெருங்கிவிட்டது, சந்திரமும் பிளந்துவிட்டது422 (பிஜே தமிழாக்கம்).

**சந்திரன் பிளக்கப்பட்டதைப் பற்றி முஸ்லிம் ஹஹீஸில் பதிவுசெய்யப்பட்டுள்ள விவரங்கள்:**

**5395. அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் கூறியதாவது:**

> அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது காலத்தில் சந்திரன் இரண்டு துண்டுகளாகப் பிளந்தது. அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "(நான் இறைவனின்

தூதர் என்பதற்கு) நீங்கள் சாட்சிகளாக இருங்கள்" என்று சொன்னார்கள். இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

**5396. அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் கூறியதாவது:**

(ஒரு முறை) நாங்கள் (மக்காவிலுள்ள) "மினா" எனுமிடத்தில் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் இருந்தோம். அப்போது சந்திரன் இரண்டு துண்டுகளாகப் பிளந்தது. (பிளவுண்ட சந்திரனின்) ஒரு துண்டு (ஹிரா) மலைக்கு அப்பா(ல் மேற்பகுதியி)லும் மற்றொரு துண்டு மலைக்குக் கீழேயும் சென்றது.

அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எங்களிடம், "(நான் இறைவனின் தூதர் என்பதற்கு) நீங்கள் சாட்சிகளாக இருங்கள்" என்று சொன்னார்கள். இந்த ஹதீஸ் ஐந்து அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

**5397. அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் கூறியதாவது:**

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது காலத்தில் சந்திரன் இரண்டு துண்டுகளாகப் பிளந்தது. அந்த (ஹிரா) மலை, சந்திரனின் ஒரு துண்டை மறைத்தது. மற்றொரு துண்டு, மலைக்கு மேலே இருந்தது. அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இறைவா! நீயே சாட்சியாக இரு" என்று சொன்னார்கள்.

- இப்னு உமர் (ரலி) அவர்கள் வாயிலாகவும் மேற்கண்ட ஹதீஸ் அறிவிக்கப்பட்டுள்ளது. - மேற்கண்ட ஹதீஸ் இப்னு உமர் (ரலி) அவர் களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது. ஆயினும் இப்னு அதீ (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "நீங்கள் சாட்சிகளாக இருங்கள்; நீங்கள் சாட்சிகளாக இருங்கள்" என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (இரண்டு முறை) கூறியதாக இடம்பெற்றுள்ளது.

**5398. அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:**

மக்காவாசிகள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் ஓர் அற்புதச் சான்றைக் காட்டும்படி கேட்டார்கள். ஆகவே, சந்திரன் இரண்டு துண்டுகளாகப் பிளப்பதை (தாம் இறைவனின் தூதர் என்பதற்குச் சான்றாக) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் காட்டினார்கள். இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது. - மேற்கண்ட ஹதீஸ் அனஸ் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

**5399. அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:**

சந்திரன் இரண்டு துண்டுகளாகப் பிளந்தது. இந்த ஹதீஸ் ஐந்து அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது. அபூதாவூத் அத்தயாலிசீ (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது காலத்தில் சந்திரன் பிளந்தது" என்று இடம்பெற்றுள்ளது.

**5400. இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:**

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது காலத்தில் சந்திரன் பிளந்தது.

இப்படி குர்-ஆனும் ஹதீஸ்களும் சந்திரன் பிளந்ததைப் பற்றி சாட்சி சொல்வதினால் தான், முஸ்லிம்களாகிய நாங்கள் இதனை நம்புகிறோம் என்று முஸ்லிம்கள் கூறலாம். அற்புதங்களை நம்புவதில் எனக்கு எந்த ஒரு பிரச்சனையும் இல்லை, ஆனால், இந்த அற்புதம் முஹம்மதுவின் வாழ்வில் நடந்ததா? என்பது தான் என் கேள்வி. இந்த அற்புதத்தை நம்புபவர்கள், குர்-ஆனை பொய்யாக்குபவர்களாக இருக்கிறார்கள் என்பது தான் என் கருத்து. குர்-ஆன் பல இடங்களில் ''முஹம்மது அற்புதங்கள் செய்யமாட்டார், அவரின் நபி என்பதற்கு ஆதாரம் குர்-ஆன் மட்டுமே'' என்றுச் சொல்கிறது.

**2) முஹம்மது அற்புதங்கள் செய்யமாட்டார், அவர் எச்சரிக்கை செய்பவர் மட்டுமே என்று அடித்துச் சொல்லும் குர்-ஆன்:**

முஸ்லிம்களின் நம்பிக்கைப்படி குர்-ஆன் பிழையற்ற வேதமாகும். அடுத்தபடியாகத் தான் ஹதீஸ்கள். இந்த ஹதீஸ்களில் சிலவற்றை இன்றும் முஸ்லிம்கள் மறுக்கிறார்கள் ஏனென்றால், அவைகளில் கட்டுக்கதைகளும், பொய்களும் அதிகமாக இருப்பதினால் தான். முஹம்மது தன் நபித்துவத்தை நிருபிக்க எப்போதாவது அற்புதம் செய்தாரா என்பதை குர்-ஆனிலிருந்து பார்ப்போம்.

**அ) அற்புதங்கள் செய்யாமல் தட்டிக்கழிக்கும் அல்லாஹ்.**

முஹம்மதுவிடம் குறைஷிகள் மற்றும் யூதர்கள் அற்புதங்களைக் கேட்டார்கள். நீங்கள் அற்புதங்களைச் செய்தால், உங்களை ஒரு நபி என்று நம்புவதற்கு வாய்ப்பு உண்டாகும் என்று அவர்கள் சொன்னார்கள். எத்தனை முறை இப்படி கேட்டாலும், அல்லாஹ் ஒரு அற்புதமும் செய்யாமல் எல்லா நேரங்களிலும் தட்டிக்கழித்தார். இதற்கு காரணங்களையும் சொன்னார், அதாவது, முந்தைய கால மக்களைப்போல, இவர்களும் நம் அத்தாட்சிகளை ஏற்கமாட்டார்கள் எனவே, அவைகளைச் செய்வதினால் ஒரு நன்மையும் இல்லை. எனவே, முஹம்மதுவின் மூலமாக ஒரு அற்புதத்தையும் செய்வதில்லை என்று கராராக குர்-ஆனில் அல்லாஹ் சொல்லிக்காட்டுகின்றான். கீழ்கண்ட குர்-ஆன் வசனங்களில் அல்லாஹ் சொல்லும் காரணங்களைக் காணுங்கள். ஒரு பேச்சுக்காகவாவது ஒரே ஒரு அற்புதமும் கூட செய்துக் காட்ட அல்லாஹ் விரும்பவில்லை.

(முஹம்மது ஜான் டிரஸ்ட் தமிழாக்கத்திலிருந்து வசனங்கள்)

**2:118.** இன்னும் அறியாதவர்கள் கூறுகிறார்கள்: "அல்லாஹ் ஏன் நம்மிடம் பேசவில்லை; மேலும், நமக்கு ஏன் அத்தாட்சி வரவில்லை?" என்று; இவர்களுக்கு முன்னர் இருந்தவர்களும் இப்படியே - இவர்களின் சொற்களைப்போலவே - தான் கூறினார்கள். இவர்களின் இதயங்கள் அவர்களுடைய இதயங்களைப் போன்றவையே தான். ஈமானில் உறுதியுடைய மக்களுக்கு நம் அத்தாட்சிகளை (அவர்கள் மனதில் பதியும்படி) நாம் நிச்சயமாகத் தெளிவாய் விவரித்துள்ளோம்.

**2:145.** வேதம் கொடுக்கப்பட்டவர்களிடம் நீர் எல்லாவிதமான அத்தாட்சிகளையும் கொண்டுவந்த போதிலும் அவர்கள் உம் கிப்லாவைப் பின்பற்ற மாட்டார்கள்; நீரும் அவர்களுடைய கிப்லாவைப் பின்பற்றுபவர் அல்லர்; இன்னும் அவர்களில் சிலர் மற்றவர்களின் கிப்லாவைப் பின்பற்றுபவர்களும் அல்லர்; எனவே (இதைப் பற்றிய) ஞானம் உமக்குக் கிடைத்த பின் நீர் அவர்களுடைய விருப்பங்களைப் பின்பற்றி நடப்பீராயின், நிச்சயமாக நீர் அநியாயக்காரர்களில் ஒருவராக இருப்பீர்.

**6:37.** (நமது விருப்பம் போல்) ஓர் அத்தாட்சி அவருடைய இறைவனிடமிருந்து அவர் மீது இறக்கப்பட வேண்டாமா? என்று அவர்கள் கேட்கிறார்கள்; (நபியே!) நீர் கூறும்: ''நிச்சயமாக அல்லாஹ் (அத்தகைய) ஓர் அத்தாட்சியை இறக்கி வைக்க வல்லமையுடையவனே; எனினும் அவர்களில் பெரும்பாலோர் அதை அறிந்து கொள்வதில்லை''

**6:109.** (நிராகரித்துக் கொண்டிருக்கும்) அவர்கள், அல்லாஹ்வின் மீது உறுதியான சத்தியம் செய்து, தங்களுக்கு ஓர் அத்தாட்சி வந்துவிடுமானால் தாம் நிச்சயமாக அதைக் கொண்டு ஈமான் கொள்வதாக கூறுகிறார்கள். (நபியே!) அவர்களிடம்) நீர் கூறும்: அத்தாட்சிகள் யாவும் அல்லாஹ்விடமே இருக்கின்றன. அந்த அத்தாட்சிகள் வரும்பொழுது நிச்சயமாக அவர்கள் ஈமான் கொள்ளமாட்டார்கள் என்பதை உங்களுக்கு எது அறிவித்தது?

முஹம்மது தம்மிடம் அற்புதம் எதிர்ப்பார்க்கும் மக்களிடம் என்ன சொல்லவேண்டும் என்று அல்லாஹ் முஹம்மதுவிற்கு இந்த பத்தாவது ஸூராவில் கட்டளையிடுகின்றான். அதாவது அற்புதங்கள் அல்லாஹ்விடம் உள்ளன, அவைகளுக்காக நீங்களும் காத்திருங்கள், நானும் காத்திருக்கிறேன் என்று முஹம்மது சொல்லவேண்டுமாம்.

**10:20.** ''மேலும் அவர்கள், இவர் மீது இவருடைய இறைவனிடமிருந்து (நாம் கோரும் ஏதேனும்) ஓர் அத்தாட்சி இறக்கப்பட வேண்டாமா?'' என்று கூறுகிறார்கள். அதற்கு ''மறைவான விஷயங்கள் அல்லாஹ்வுக்கு மட்டுமே (தெரியும்). நீங்கள் எதிர்பார்த்திருங்கள். நிச்சயமாக நானும் உங்களுடன் எதிர் பார்த்திருக்கிறேன்'' என்று (நபியே!) நீர் கூறுவீராக.

இரண்டாவது ஸூரா மதினாவில் இறங்கியதாகும் (மதனீ). சந்திரன் பிளந்த அற்புதம் உள்ளது என்றுச் சொல்லும் ஸூரா (54) மக்காவில் இறங்கியதாகும். மக்காவிலேயே ஆரம்ப காலத்தில் (முஹம்மது தம்மை நபியாக காண்பித்துக்கொண்ட நான்கு ஆண்டுகளுக்குள்), முஹம்மது இந்த ஒரு அற்புதம் செய்திருந்தால், ஏன் மதினாவில் இருக்கும் போது இறங்கிய இரண்டாவது ஸூராவில் அற்புதங்கள் எல்லாம் செய்யமுடியாது என்று அல்லாஹ் சொல்லப்போகிறான்? இதிலிருந்து நாம் எவைகளை அறிகிறோம்? முஹம்மது மக்காவில் இருக்கும் போது நடந்ததாகச் சொல்லும் அற்புதம் நடக்கவில்லை என்பதைத் தானே. மக்காவில் செய்த அற்புதத்தை அல்லாஹ் மறந்துவிட்டிருக்கலாம் அல்லவா? என்று முஸ்லிம்கள் சந்தேகப்படமாட்டார்கள் என்று நினைக்கிறேன்.

### ஆ) முஹம்மது வெறும் எச்சரிக்கை செய்பவர், அற்புதங்கள் செய்பவர் அல்ல

குர்-ஆன் 13:7ஐ பாருங்கள், முஹம்மது வெறும் ''அச்சமூட்டி எச்சரிப்பவர் மட்டுமே'' என்றுச் சொல்கிறது. மக்கள் எவ்விதமான அத்தாட்சி, அற்புதங்கள் கேட்டாலும், அதை முஹம்மது மூலமாக செய்துக் காட்ட முடியாது என்று அல்லாஹ் சொல்லிவிடுகின்றான்.

**13:7.** இன்னும் (நபியே! உம்மைப்பற்றி இந் நிராகரிப்போர் ''அவருக்கு அவருடைய இறைவனிடமிருந்து (நாம் விரும்பும்) அத்தாட்சி இறக்கப்பட வேண்டாமா?'' என்று கூறுகிறார்கள்; நீர் அச்சமூட்டி எச்சரிப்பவரே ஆவீர், மேலும், ஒவ்வொரு சமூகத்தவருக்கும் ஒரு நேர்வழி காட்டியுண்டு.

''முஹம்மதுவே, மக்கள் ஓயாமல் அற்புதங்கள் கேட்கிறார்கள், ஆனால், நான் செய்வதில்லை, இதற்காக நீர் துக்கப்படவேண்டாம். ஒன்றை ஞாபகத்தில் வைத்துக்கொள்ளும், உம்மை

அற்புதம் செய்ய நான் அனுப்பவில்லை, வெறும் எச்சரிக்கை செய்யவே அனுப்பினேன் என்பதை மறக்கவேண்டாம்'' என்று அல்லாஹ் முஹம்மதுவிடம் கூறி அவரை ஆறுதல்படுத்துகிறான், பார்க்க குர்-ஆன் **11:12.**

> **11:12.** (நபியே! நம் வசனங்களை அவர்கள் செவிமடுப்பதில்லையே எனச் சடைந்து) வஹீ மூலம் உமக்கு அறிவிக்கப்பட்டவற்றில் சிலவற்றை விட்டுவிட எண்ணவோ, "அவர் மீது ஒரு பொக்கிஷம் இறக்கப்பட வேண்டாமா? அல்லது அவருடன் ஒரு மலக்கு வர வேண்டாமா?" என்று அவர்கள் கூறுவதினால் உம் இதயம் (சஞ்சலத்தால்) இடுங்கியிருக்கவோ கூடும்; நிச்சயமாக நீர் அச்சமூட்டி எச்சரிப்பவரேயன்றி வேறில்லை; அல்லாஹ் எல்லா பொருட்களின் மீதும் பொறுப்பாளனாக இருக்கிறான்.

உம்மிடம் அற்புதங்கள் கேட்பவர்களிடம், '' நிச்சயமாக அல்லாஹ் தான் நாடியவரை வழிகெடச்செய்கிறான்; தன் பால் எவர் திரும்புகிறாரோ அத்தகையோருக்கு நேர் வழிகாட்டுகிறான்'' என்றுச் சொல்லிவிடுங்கள் என்று அல்லாஹ் சொல்கின்றான், பார்க்க **13:27.**

> **13:27.** "இவருக்கு இவருடைய இறைவனிடமிருந்து ஓர் அத்தாட்சி இறக்கி வைக்கப்படக் கூடாதா'' என்று நிராகரிப்போர் கூறுகிறார்கள், (நபியே!) நீர் கூறும்: "நிச்சயமாக அல்லாஹ் தான் நாடியவரை வழிகெடச்செய்கிறான்; தன் பால் எவர் திரும்புகிறாரோ அத்தகையோருக்கு நேர் வழிகாட்டுகிறான்'' என்று

### இ) மக்களை அச்சமூட்டி எச்சரிப்பதற்காகவே அன்றி நாம் (இத்தகைய) அத்தாட்சிகளை அனுப்புவதில்லை:

உம்முடைய நபித்துவத்தை நிருபிக்க நான் அத்தாட்சிகளை அனுப்பமாட்டேன். ஆனால், மக்களை பயமுறுத்தவும், எச்சரிக்கைச் செய்யவுமே அற்புதங்களைச் செய்வேன் என்று தெளிவாக அல்லாஹ் சொல்கின்றான். பார்க்க குர்-ஆன் **17:59**

> **17:59.** (நம்முடைய அத்தாட்சிகளை இவர்களுக்கு) முந்தியவர்களும் பொய்ப்பித்ததைத் தவிர (வேறு எதுவும் இவர்கள் கோரும்) அத்தாட்சிகளை அனுப்ப நம்மைத் தடுக்கவில்லை; (இதற்கு முன்) நாம் "ஸமூது'' கூட்டத்தாருக்கு ஒரு பெண் ஒட்டகத்தைக் கண்கூடான அத்தாட்சியாகக் கொடுத்திருந்தோம்; அவர்களோ (வரம்பு மீறி) அதற்கு அநியாயம் செய்தனர்; (மக்களை) அச்சமூட்டி எச்சரிப்பதற்காவே அன்றி நாம் (இத்தகைய) அத்தாட்சிகளை அனுப்புவதில்லை.

மக்கள் எத்தனை முறை கேட்டலும் சரி, அல்லாஹ் முஹம்மதுவின் நபித்துவத்தை நிருபிக்க அற்புதங்களைச் செய்வதாக இல்லை. இதனை மேற்கண்ட வசனங்கள் தெளிவாகச் சொல்கின்றன. இதனை எந்த ஒரு முஸ்லிமாவது மறுக்கமுடியுமா?

### ஈ) குர்-ஆன் மட்டுமே அற்புதமாகும், இது போதாதா அவர்களுக்கு?

இன்னும் ஒரு இடத்தில் அல்லாஹ் மிகவும் தெளிவாக மறுப்பதைக் காணமுடியும். முஹம்மது வெறும் எச்சரிக்கை செய்பவர், அவர் மூலமாக நான் அற்புதங்கள் செய்யமாட்டேன், அதனால் பயனுமில்லை. ஆனால், குர்-ஆன் என்ற அற்புதத்தை அவர் மூலமாக கொடுத்து இருக்கிறேன். இந்த குர்-ஆன் அவர்களுக்கு போதாதா? என்று நச்சென்று அல்லாஹ் சொல்கிறான்.

**29:50.** ‘‘அவருடைய இறைவனிடமிருந்து அவர் மீது அத்தாட்சிகள் ஏன் இறக்கப்படவில்லை?’’ என்றும் அவர்கள் கேட்கிறார்கள்; ‘‘அத்தாட்சிகளெல்லாம் அல்லாஹ்விடம் உள்ளன; ஏனெனில் நான் வெளிப்படையாக அச்ச மூட்டி எச்சரிக்கை செய்பவன் தான்’’ என்று (நபியே!) நீர் கூறுவீராக.

**29:51.** அவர்களுக்கு ஓதிக்காட்டப்படும் இவ்வேதத்தை நாம் உம் மீது இறக்கியிருக்கிறோம் என்பது அவர்களுக்குப் போதாதா? நிச்சயமாக அ(வ் வேதத்)தில் ரஹ்மத்தும், ஈமான் கொண்ட சமூகத்தாருக்கு (நினைவூட்டும்) நல்லுபதேசமும் இருக்கின்றன. (முஹம்மது ஜான் டிரஸ்ட் தமிழாக்கம்)

**அப்துல் ஹமீது பாகவி தமிழாக்கம்:**

**29:50.** அன்றி ("தாங்கள் விரும்புகிறபடி) சில அத்தாட்சிகள் அவருடைய இறைவனால் அவருக்கு அளிக்கப்பட வேண்டாமா?" என்று இவ்வக்கிரமக்காரர்கள் கூறுகின்றனர். அதற்கு (நபியே!) நீங்கள் கூறுங்கள்: "அத்தாட்சிகள் எல்லாம் அல்லாஹ்விடத்தில்தான் இருக்கின்றன. (என்னிடமில்லை.) நான் பகிரங்கமாக அச்சமூட்டி எச்சரிக்கை செய்கிறவன் மட்டும்தான்."

**29:51.** (நபியே!) இவ்வேதத்தை மெய்யாகவே நாம் உங்கள் மீது இறக்கி வைத்திருக்கிறோம் என்பதற்கு அவர்களுக்கு ஓதிக் காண்பிக்கப்படும் இவ்வேதமே போதுமான அத்தாட்சியல்லவா? ஏனென்றால், இதில் நம்பிக்கை கொண்ட மக்களுக்கு நிச்சயமாக (இறைவனுடைய) அருளும் இருக்கின்றது; (பல) நல்லுபதேசங்களும் இருக்கின்றன.

**இஸ்லாமிய நிறுவனம் டிரஸ்ட் (IFT) தமிழாக்கம்:**

**29:50.** இவர்கள் கேட்கின்றார்கள், ‘‘இவருடைய இறைவனிடமிருந்து இவருக்கு ஏன் சான்றுகள் இறக்கியருளப்படவில்லை’’ என்று! அதற்கு நீர் கூறும்: ‘‘சான்றுகள் அல்லாஹ்விடம் உள்ளன. நானோ தெள்ளத்தெளிவாக எச்சரிக்கை செய்பவனாகவே இருக்கின்றேன்.’’

**29:51.** அவர்களுக்கு ஓதிக் காண்பிக்கப்படுகின்ற வேதத்தை உம் மீது நாம் இறக்கியருளி இருப்பது அவர்களுக்குப் போதுமான சான்றாக இல்லையா? திண்ணமாக, நம்பிக்கை கொள்ளும் சமூகத்தினர்க்கு இதில் கருணையும் நல்லுரையும் இருக்கின்றன.

மேற்கண்ட வசனங்களில், இஸ்லாமை நம்பாதவர்கள் சொல்லும் குற்றச்சாட்டை அல்லாஹ் மறுக்காமல் அதனை ஏற்றுக்கொள்கின்றான். முஹம்மதுவினால் அற்புதங்கள் செய்யமுடியாதது உண்மை தான், ஏனென்றால் அவர் வெறும் எச்சரிக்கை செய்பவர் மட்டுமே, அற்புதங்கள் செய்பவர் அல்ல என்று அல்லாஹ் சொல்கின்றான். மேலும், இதனை அற்புதங்கள் கேட்கும் மக்களிடம் சொல்லும் படி முஹம்மதுவிற்கும் கட்டளையிடுகின்றான்.

### 3) முஹம்மது அற்புதங்கள் செய்பவரல்ல என்றுச் சொல்லும் இஸ்லாமிய அறிஞர் ”முஹம்மது அஸத்’’

முஹம்மது அஸத் என்பவர் எழுதிய விரிவுரையில், முஹம்மது கடைசி மற்றும் பெரிய நபியாக இருக்கலாம், ஆனால், முந்தைய காலத்தில் நபிகள் செய்தது போல அற்புதகங்கள் செய்பவர் அல்ல என்றுச் சொல்கிறார்.

குர்-ஆன் **17:59**க்கு இவர் எழுதிய விளக்கவுரை:

**Note 71 (Quran Ref: 17:59 )**

> **This highly elliptic sentence has a fundamental bearing on the purport of the Qur'an as a whole. In many places the Qur'an stresses the fact that the Prophet Muhammad, despite his being the last and greatest of God's apostles, was not empowered to perform miracles similar to those with which the earlier prophets are said to have reinforced their verbal messages. His only miracle was and is the Qur'an itself - a message perfect in its lucidity and ethical comprehensiveness, destined for all times and all stages of human development, addressed not merely to the feelings but also to the minds of men, open to everyone, whatever his race or social environment, and bound to remain unchanged forever. Since the earlier prophets invariably appealed to their own community and their own time alone, their teachings were, of necessity, circumscribed by the social and intellectual conditions of that particular community and time; and since the people to whom they addressed themselves had not yet reached the stage of independent thinking, those prophets stood in need of symbolic portents or miracles (see surah 6, note 94) in order to make the people concerned realize the inner truth of their mission. The message of the Qur'an, on the other hand, was revealed at a time when mankind (and, in particular, that part of it which inhabited the regions marked by the earlier, Judaeo-Christian religious development) had reached a degree of maturity which henceforth enabled it to grasp an ideology as such without the aid of those persuasive portents and miraculous demonstrations which in the past, as the above verse points out, only too often gave rise to new, grave misconceptions.(Quran Ref: 17:59 )**

மேலும் குர்-ஆன் **54:1**ம் வசனத்துக்கு இவர் கொடுத்த விளக்கவுரையை படிக்கவும். சந்திரனின் பிளவு பற்றி குர்-ஆன் சொல்வது, எதிர்காலத்தில் நடக்கும் நிகழ்ச்சியாகும், அது முஹம்மது காலத்தின் அற்புதமல்ல என்றுச் சொல்கிறார்:

> **1 Most of the commentators see in this verse a reference to a phenomenon said to have been witnessed by several of the Prophet's contemporaries. As described in a number of reports going back to some companions, the moon appeared one night as if split into two distinct parts. While there is no reason to doubt the subjective veracity of these reports, it is possible that what actually happened was an unusual kind of partial lunar eclipse, which produced anequally unusual optical illusion. But whatever the nature of that phenomenon, it is practically certain that the above Qur'an-verse does not refer to it but, rather, to a future event: namely, to what will happen when the Last Hour approaches. (The Qur'an frequently employs the past tense to denote the future, and particularly so in passages which speak of the coming of the Last Hour and of Resurrection Day; this use of the past tense**

**is meant to stress the certainty of the happening to which the verb relates.) Thus, Raghib regards it as fully justifiable to interpret the phrase inshaqqa 'l-qamar ("the moon. is split asunder") as bearing on the cosmic cataclysm - the end of the world as we know it - that will occur before the coming of Resurrection Day (see art. shaqq in the Mufradat). As mentioned by Zamakhshari, this interpretation has the support of some of the earlier commentators; and it is, to my mind, particularly convincing in view of the juxtaposition, in the above Qur'an-verse, of the moon's "splitting asunder" and the approach of the Last Hour. (In this connection we must bear in mind the fact that none of the Qur'anic allusions to the "nearness" of the Last Hour and the Day of Resurrection is based on the human concept of "time".)**

**4) குர்-ஆன் 54:1, சந்திரன் பிளந்ததைச் சொல்கின்றதா? (அ) சந்திரன் பிளக்கப்போவதைச் சொல்கின்றதா?**

முஹம்மது வெறும் எச்சரிக்கை செய்பவர் மட்டுமே, அவர் முந்தைய நபிகளைப்போல அற்புதங்கள் செய்பவர் அல்ல என்று அல்லாஹ் பல முறை சொல்லிவிட்டான். அல்லாஹ் ஒருமுறை சொன்னால், நூறு முறை சொன்னது போல் ஆகாதா? ஆனால், குர்-ஆனில் ஒரு முறை அல்ல பல முறை சொல்லிவிட்டான்.

ஆனால், இந்த முஸ்லிம் ஹதீஸ் ஏன் அல்லாஹ் சொன்னதற்கு மாற்றமாகச் சொல்கிறது? குர்-ஆனில் சொல்லப்பட்டதற்கு எதிராக ஹதீஸ் சொல்கிறது என்று வைத்துக்கொள்வோம். முஸ்லிம்கள் இப்போது என்ன செய்வார்கள்? குர்-ஆனின் பல வசனங்களை மறுப்பார்களா? அல்லது ஹதீஸை மறுப்பார்களா?

நபித்தோழர்கள் இப்படி முஹம்மது மீது இட்டுக்கட்டுவார்களா? என்று முஸ்லிம்கள் கேள்வி கேட்டால், அதற்காக, அல்லாஹ் குர்-ஆனில் இட்டுக்கட்டினான் என்று சொல்வீர்களா? அல்லாஹ்வின் வார்த்தையை புறக்கணித்துவிடுவீர்களா?

முஸ்லிம்களிடம் கேட்கவேண்டிய கேள்விகள்: முஹம்மது அற்புதங்கள் செய்வாரா? என்று கேள்வி கேட்டால், ''அவர் செய்யமாட்டார் என்று குர்-ஆன் சொல்கிறது'', ''அவர் செய்வார் என்று ஹதீஸ்கள்'' சொல்கிறது. இதில் எதனை முஸ்லிம்கள் அங்கீகரிப்பார்கள்? குர்-ஆன் சொல்வதையா? அல்லது ஹதீஸ்கள் சொல்வதையா?

முஸ்லிம் ஹதீஸ் எப்போது தொகுக்கப்பட்டது? ஹிஜ்ரி 200க்கு பிறகு, அதாவது முஹம்மது மரித்த 200 ஆண்டுகளுக்கு பிறகு தொகுக்கப்படுகின்றது. இமாம் முஸ்லிம் ஹிஜ்ரி 204ல் பிறக்கிறார், 261ல் மரிக்கிறார். [1]

முஹம்மதுவிற்கு பிறகு வந்தவர்கள், அவரை நேசிப்பவர்கள் பல கட்டுக்கதைகளை அவர் மீது சொல்லியிருக்கிறார்கள், குர்-ஆனின் 54:1ம் வசனம் சொல்வது எதிர்காலத்தில் நடக்கும் என்பதை அறியாமல், தாங்களாகவே இட்டுக்கட்டியுள்ளார்கள். இந்த கட்டுக்கதைகளுக்கு முஹம்மதுவின் தோழர்களின் பெயர்களையும் பயன்படுத்திக்கொண்டுள்ளார்கள். இப்படிப்பட்ட ஹதீஸ்களுக்கு சரியான சங்கிலித்தொடர் இருக்கத்தான் செய்யும், ஆனால், குர்-ஆனோடு மோதுகின்றது என்பதை முஸ்லிம்கள் கவனிக்கவேண்டாமா? குர்-ஆனின் வசனங்களை கவனிக்கும்போது, முஹம்மது அல்லாஹ்விடம் வேண்டிக்கொண்டு சந்திரனை

பிளந்தார் என்ற அற்புதமானது, ஒரு பொய்யான ஹதீஸாகும், குர்-ஆனோடு மோதும் ஹதீஸாகும்.

**அடுத்தபடியாக, அந்த ஹதீஸ்களை மேலோட்டமாக படிக்கும் போதும், அவைகளில் தவறுகள் இருப்பதை காணமுடியும். இன்னொரு முறை அவ்வதீஸ்களை பதித்து, என் கேள்விகளை முன்வைக்கிறேன்.**

**5395. அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் கூறியதாவது:**

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது காலத்தில் சந்திரன் இரண்டு துண்டுகளாகப் பிளந்தது. அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "(நான் இறைவனின் தூதர் என்பதற்கு) நீங்கள் சாட்சிகளாக இருங்கள்" என்று சொன்னார்கள். இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது. மேலும் பார்க்க ஹதீஸ் எண்கள்: **5399 & 5400**

**கேள்விகள்:** யாரிடம் முஹம்மது "(நான் இறைவனின் தூதர் என்பதற்கு) நீங்கள் சாட்சிகளாக இருங்கள்" என்று கூறினார்? முஹம்மதுவின் தோழர்கள் ஏற்கனவே அவரை நபி என்று நம்பிவிட்டார்களே! அவர்களிடம் ஏன் மறுபடியும் நீங்கள் சாட்சிகளாக இருங்கள் என்று கேட்கிறார்?

**5396. அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் கூறியதாவது:**

(ஒரு முறை) நாங்கள் (மக்காவிலுள்ள) "மினா" எனுமிடத்தில் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் இருந்தோம். அப்போது சந்திரன் இரண்டு துண்டுகளாகப் பிளந்தது. (பிளவுண்ட சந்திரனின்) ஒரு துண்டு (ஹிரா) மலைக்கு அப்பா(ல் மேற்பகுதியி)லும் மற்றொரு துண்டு மலைக்குக் கீழேயும் சென்றது.

அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எங்களிடம், "(நான் இறைவனின் தூதர் என்பதற்கு) நீங்கள் சாட்சிகளாக இருங்கள்" என்று சொன்னார்கள். இந்த ஹதீஸ் ஐந்து அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

**5397. அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் கூறியதாவது:**

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது காலத்தில் சந்திரன் இரண்டு துண்டுகளாகப் பிளந்தது. அந்த (ஹிரா) மலை,சந்திரனின் ஒரு துண்டை மறைத்தது. மற்றொரு துண்டு, மலைக்கு மேலே இருந்தது.

அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இறைவா! நீயே சாட்சியாக இரு" என்று சொன்னார்கள். - இப்னு உமர் (ரலி) அவர்கள் வாயிலாகவும் மேற்கண்ட ஹதீஸ் அறிவிக்கப்பட்டுள்ளது. - மேற்கண்ட ஹதீஸ் இப்னு உமர் (ரலி) அவர் களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

ஆயினும் இப்னு அதீ (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "நீங்கள் சாட்சிகளாக இருங்கள்; நீங்கள் சாட்சிகளாக இருங்கள்" என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (இரண்டு முறை) கூறியதாக இடம்பெற்றுள்ளது.

**கேள்விகள்:**

- சந்திரனின் விட்டம் எவ்வளவு என்று இந்த ஹதீஸை அறிவித்த அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் என்பவருக்குத் தெரியுமா?
- சந்திரன் இரண்டாக பிளந்து ஒரு துண்டு ஹிரா மலைக்கு மேற்பகுதியில் காணப்பட்டதாம், இன்னொரு துண்டு ஹிரா மலைக்கு கீழ்பகுதிக்கு சென்றதாம்.
- பூமியில் அளவில் நான்கில் ஒரு பாகம் சந்திரனின் அளவு ஆகும் (27%).
- சந்திரனின் விட்டம் 1737 கிலோ மீட்டராகும். [2]
- பூமியில் நின்றுக்கொண்டு சந்திரனை பார்ப்பவர்கள் (அக்கால அரேபியர்கள்), சந்திரனின் அளவு நம் இரண்டு கைகளால் பிடிக்கக்கூடிய அளவிற்கு இருக்கும் ஒரு பந்து போல என்று நினைத்துக்கொண்டு மேற்கண்ட ஹதீஸை சொல்லியுள்ளார்கள். ஆனால், 1737 கிமீ விட்டம் கொண்ட ஒரு பந்தை இரண்டாக பிளந்தால், அதன் பின்னால், ஹிரா மலையென்ன, அரேபியாவின் பாதி அப்படியே மறைந்துவிடும்.

மேற்கண்ட ஹதீஸ் ஒரு பொய்யான ஹதீஸ் என்பது இதிலிருந்து நமக்குத் தெரிகின்றது. ஒருவர் கனவு கண்டால், அதில் மேற்கண்ட விதமாக பார்த்தார் என்றுச் சொன்னால், அதனை ஏற்கலாம், ஏனென்றால் கனவில் (கற்பனைப்போன்று) எல்லாம் சாத்தியம். ஆனால், இங்கு நாம் ஆய்வு செய்துக்கொண்டு இருப்பது, உண்மையான நிலவு இரண்டாக பிளந்தது பற்றியதாகும். எனவே, முஹம்மது சந்திரனை பிளந்து அற்புதம் செய்தார் என்பது பொய்யான கூற்று மேலும், குர்-ஆனின் போதனைக்கு எதிராக ஒன்று.

**5398. அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:**

> மக்காவாசிகள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் ஓர் அற்புதச் சான்றைக் காட்டும்படி கேட்டார்கள். ஆகவே, சந்திரன் இரண்டு துண்டுகளாகப் பிளப்பதை (தாம் இறைவனின் தூதர் என்பதற்குச் சான்றாக) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் காட்டினார்கள். இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது. - மேற்கண்ட ஹதீஸ் அனஸ் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

**கேள்விகள்:** மக்காவாசிகள் எந்த அற்புதங்களைக் கண்டாலும் நம்பமாட்டார்கள் என்று பல வசனங்களில் சொல்லிவிட்டு, மறுபடியும், அவர்களுக்கு எப்படி அற்புதம் செய்துக் காட்டினார்? அல்லாஹ் சர்வ ஞானி தானே! அவர்கள் நம்பமாட்டார்கள் என்று அல்லாஹ்விற்கு சந்திரனை பிளப்பதற்கு முன்பு தெரியாதா? சரி, சந்திரனை பிளந்துவிட்ட பின்பு எத்தனை மக்காவாசிகள் முஹம்மது நபி என்று ஏற்றுக்கொண்டார்கள்?

**முடிவுரை:**

**இதுவரை கண்ட விவரங்களின் படி:**

1) முஹம்மது அற்புதங்கள் செய்பவரல்ல என்று குர்-ஆன் தெளிவாகச் சொல்கிறது.

2) முஹம்மது மக்களை வெறும் எச்சரிக்கை செய்பவர் தான் என்றும் அல்லாஹ் அடித்துச் சொல்கிறான்.

3) பல முறை மக்காவாசிகளும், யூதர்களும் அற்புதங்களைக் கேட்டாலும் ஏதோ ஒரு காரணம் சொல்லி அல்லாஹ் தட்டிக்கழித்துள்ளான்.

4) குர்-ஆன் 54:1ல் சொல்லப்பட்டது, எதிர்காலத்தில் நடக்கவிருக்கும் ஒரு நிகழ்வாகும்.

**5)** முஹம்மதுவிற்கு, அவரது தோழர்களுக்கும் பிறகு வந்தவர்கள், இட்டுக்கட்டியது தான் "முஹம்மது சந்திரனை பிளந்த" அற்புதம்.

**6)** இந்த ஒரு அற்புதம் மட்டுமல்ல, ஹதீஸ்களில் காணப்படும் இதர அற்புதங்களும் மற்றவர்கள் இட்டிக்கட்டியவையே, ஏனென்றால், அவைகள் அனைத்தும் குர்-ஆனையும், அல்லாஹ்வையும் பொய்யாக்குகிறது. குர்-ஆனும் அல்லாஹ்வும் பொய்யென்றால், அற்புதங்கள் செய்தார் என்று நம்பப்படும் முஹம்மதும் பொய்யரே!

**7)** ஹதீஸ்களின் படி முஹம்மது அற்புதங்கள் செய்தார் என்றுச் சொல்பவர்கள், குர்-ஆனை புறக்கணித்தவர்களாகிறார்கள். குர்-ஆனை புறக்கணித்தவர்கள் குர்-ஆனின் படியே காஃபிர்களாக கருதப்படுவார்கள்.

பாரா அவர்களே! உங்களுக்கு நான் என்ன எழுதியிருக்கிறேன் என்று புரிகின்றதா? புரியவில்லையென்றால் கவலையை விடுங்கள், இன்னும் நிறைய இஸ்லாமிய விவரங்களை உங்களுக்கு சொல்லவேண்டி இருக்கிறது.

**பீஜே அவர்களுக்கு:**

அருமை தமிழ் முஸ்லிம் அறிஞர் பீஜே அவர்களே! உங்களுடைய தள்ளுபடி ஹதீஸ்களில் மேற்கண்ட சஹீஹ் முஸ்லிம் ஹதீஸ்கள் உள்ளனவா? அப்படி இல்லையென்றால், எப்போது இவைகளை உங்கள் பட்டியலில் சேர்க்கப்போகிறீர்கள்? வாசகர்களே! இந்த தேதியை (22 ஜூன் 2016) குறித்துக்கொள்ளுங்கள். எதிர்காலத்தில் முஸ்லிம்கள் மேற்கண்ட ஹதீஸ்களை தள்ளிவிடும் நாள் வரும்போது, இந்த பத்தியை ஞாபகப்படுத்திக் கொள்ளுங்கள்.

**அடிக்குறிப்புக்கள்:**

[1] https://en.wikipedia.org/wiki/Sahih_Muslim

[2] http://www.space.com/18135-how-big-is-the-moon.html

ஐஐஐஐ

# 13) இஸ்லாமின் மையப்புள்ளியாக ஏன் அற்புதங்கள் இல்லை?

## (15. அந்த மூன்று வினாக்கள்)

**மதிப்பிற்குரிய பாரா அவர்களுக்கு,**

என்னுடைய முந்தைய பதிலில், முஹம்மது அற்புதம் செய்பவரல்ல என்று அல்லாஹ் ஆணித்தரமாகச் சொல்லும் குர்-ஆன் வசனங்களை மேற்கோள் காட்டினேன். குர்-ஆனுக்கு எதிராக ஹதீஸ்கள் போர்க்கொடி தூக்கியதையும் விளக்கினேன். இந்த கட்டுரையில் இஸ்லாத்தின் மையப்புள்ளி என்ன என்பதைப் பற்றி நீங்கள் எழுதியவைகளை ஆய்வு செய்யலாம் என்று விரும்புகின்றேன்.

**பாரா அவர்கள் எழுதியவைகள்:**

*// ஆனால், சித்து வேலைகளையும் அற்புதம் நிகழ்த்துவதையும் முகம்மது நபி, இஸ்லாத்தின் மையப்புள்ளியாக ஒருபோதும் வைத்ததில்லை. //*

அற்புதங்கள் நிகழ்த்துவதை எப்படி இஸ்லாத்தின் மையப்புள்ளியாக முஹம்மது வைக்கமுடியும்? முஹம்மதுவினால் ஒரு அற்புதமும் செய்யமுடியாது என்று அல்லாஹ் குர்-ஆனில் தெளிவாக சொல்லிவிட்ட பிறகு, எப்படி அற்புதங்களை இஸ்லாத்தின் மையப்புள்ளியாக முஹம்மது கருதமுடியும்? கடந்த கட்டுரையில், முஹம்மது செய்ததாகச் சொல்லும் **'சந்திரனை இரண்டாக பிளந்த'** அற்புதம் என்பது குர்-ஆனின் அடிப்படையில் ஒரு பொய் என்பதை விளக்கினேன். பல சூழ்நிலைகளுக்கு ஏற்றவாறு இறக்கப்பட்ட குர்-ஆன் வசனங்களில், முஹம்மது வெறும் எச்சரிக்கை செய்பவர் மட்டுமே என்று அல்லாஹ் சுட்டிக்காட்டுகின்றான். மக்காவில் இறக்கிய குர்-ஆன் வசனங்களிலும், மதினாவில் இறக்கிய வசனங்களிலும் சரி, இதனை அல்லாஹ் தெளிவாகச் சொல்லியுள்ளான்.

முஹம்மது பல அற்புதங்களைச் செய்தார் என்றுச் சொல்லும் ஒவ்வொரு முஸ்லிமும், ''குர்-ஆன் சொல்வது பொய்'' என்று அடித்துச் சொல்கிறார் என்று அர்த்தம். முஹம்மதுவினால் முந்தைய நபிகளைப்போல அற்புதங்களைச் செய்யமுடியவில்லை என்பதால், ''அற்புதங்கள் நிகழ்த்துவதை இஸ்லாத்தின் மையப்புள்ளியாக முஹம்மது வைத்ததில்லை'' என்று சப்பைக் கட்டு கட்டுவார்கள் முஸ்லிம்கள். அதையே நீங்களும் எழுதியுள்ளீர்கள்.

**பாரா அவர்கள் எழுதியவைகள்:**

*// இஸ்லாத்தின் மையம் என்பது குர்ஆன் தான். //*

இஸ்லாத்தின் மையம் குர்-ஆன் என்பதை 100% அங்கீகரிக்கமுடியாது. எதனை மையமாக வைக்கமுடியும்? என்ற கேள்வி எழுப்பப்பட்டால், ''எது முழுமையாக உள்ளதோ, எதைக்கொண்டு ஒரு மார்க்கம் முழுமை அடைகின்றதோ'' அதைத் தான் மையமாக கொள்ளமுடியும். ஆனால், குர்-ஆனை ஒரு போதும் இஸ்லாமின் மையமாக கொள்ளமுடியாது.

உங்களிடம் ஒரு தனிப்பட்ட கேள்வியைக் கேட்கிறேன். இஸ்லாமைத் தொட்டு, 100 தொடர்களைக் கொண்ட ஒரு புத்தகத்தை நீங்கள் எழுதியுள்ளீர்கள். இந்த புத்தகத்தை எழுதுவதற்கு முன்பு, அல்லது கடைசி அத்தியாயத்தை முடிப்பதற்கு முன்பு, ஒரு முறையாவது குர்-ஆனை முழுவதுமாக நீங்கள் படித்தீர்களா? மேலும், குர்-ஆனின் அடிப்படைகளை அறிந்துக்கொள்வதற்கு நீங்கள் அதிகமாக படித்த புத்தகம் எது? குர்-ஆன் கண்டிப்பாக இருக்காது. குர்-ஆனை மட்டுமே படித்து, ஹதீஸ்களையும், இதர இஸ்லாமிய நூல்களையும் படிக்காமல் நீங்கள் நிலமெல்லாம் இரத்தம் எழுத ஆரம்பித்து இருந்திருந்தால், உங்களால் முஹம்மதுவைப் பற்றி ஒரு பக்கம் கூட எழுதியிருக்கமுடியுமா என்பது சந்தேகம் தான்.

இஸ்லாத்தின் மையப்புள்ளி என்று நீங்கள் சொல்லும் குர்-ஆனை மட்டுமே படித்து, ஒருவரால் ஒரு முஸ்லிமாக வாழமுடியாது. முஸ்லிமாக வாழ்வதை விடுங்கள், முதலாவது அவரால் முஸ்லிமாக மாறவே முடியாது. குர்-ஆனை மட்டும் படிப்பவனின் நிலை, கண்ணைக் கட்டி காட்டில் விட்டகதைத்தான்.

இஸ்லாத்தின் மையப்புள்ளியாக குர்-ஆனை கருதுவதைவிட, ஹதீஸ்களை கருதினால் தான் ஓரளவிற்கு சரியாக இருக்கும். இஸ்லாத்திற்கு குர்-ஆன் முக்கியம், ஆனால், அது மட்டுமே போதுமானது அல்ல.

**பாரா அவர்கள் எழுதியவைகள்:**

> *// "குன்" என்கிற ஒரு சொல்லை மரியத்தின் மணிவயிற்றில் வைத்துத்தான் முகம்மதுக்கு முந்தைய நபியான இயேசுவை இறைவன் படைத்தான் என்று இஸ்லாம் சொல்கிறது. அந்தச் சமயம், சொல்லிலிருந்து உதித்தவர், இறைத்தூதர். இம்முறை சொல்லிலிருந்து உதித்தது, குர்ஆன் என்கிற ஒரு வேதம். //*

பாரா அவர்களே, உங்களின் மேற்கண்ட இரண்டு வாக்கியங்களை முஸ்லிம்கள் எப்படி புரிந்துக்கொண்டார்களோ, தெரியவில்லை. அவர்கள் அவைகளை சரியாக புரிந்துக்கொண்டு இருந்திருந்தால், உங்களுக்கு பிரச்சனையாக மாறியிருப்பார்கள்.

கிட்டத்தட்ட, மேற்கண்ட இரண்டு வாக்கியங்களில், இயேசுவின் தெய்வீகத்தன்மையை நீங்கள் மறைமுகமாக சொல்லிவிட்டதாக நான் கருதுகிறேன். இஸ்லாமுக்கும் கிறிஸ்தவத்திற்கும் இடையே இருக்கும் மிகப்பெரிய பிளவு, 'இயேசு யார்' என்பதைப் பற்றியதாகும். பைபிளின் படி, இயேசு தேவனுடைய வார்த்தையாக இருக்கிறார். ஆனால், முஸ்லிம்கள் 'இயேசு அல்லாஹ்வின் வார்த்தை மூலமாக உண்டாக்கப்பட்டவர்' என்றுச் சொல்கிறார்கள்.

உங்களுடைய வரிகளின் படி, 'குன்' என்ற வார்த்தையின் மூலமாக உண்டானவர் இயேசு அல்ல, 'குன்' என்ற வார்த்தையே இயேசுவாக இருக்கிறார். இதைத்தான் கிறிஸ்தவர்ளும் நம்புகிறார்கள்.

'"குன்" என்கிற ஒரு சொல்லை மரியத்தின் மணிவயிற்றில் வைத்துத்தான்' என்ற உங்களின் வரியின் படி, அல்லாஹ் 'குன் (உண்டாகுக)' என்ற வார்த்தையின் மூலமாக இயேசு பிறக்கவில்லை, 'குன்' என்ற வார்த்தையே இயேசுவாக வந்தார் என்பதை புரிந்துக்கொள்ளலாம். இதனை முஸ்லிம்கள் ஒப்புக்கொள்ளமாட்டார்கள். ஆனால், குர்-ஆன் முஸ்லிம்களுக்கு எதிராகத் தான் சாட்சி சொல்கிறது. அதாவது இயேசு அல்லாஹ்வின் வார்த்தை என்று குர்-ஆன் சொல்கிறது.

இயேசு அல்லாஹ்வின் 'குன்' என்ற வார்த்தையின் மூலமாக உண்டானவரா? அல்லது அல்லாஹ்வின் வார்த்தையே இயேசுவா? என்ற கேள்விகளுக்கு கீழ்கண்ட தமிழ் கட்டுரைகள் பதில் அளிக்கும்.

**1) <u>இயேசு இறைவனா? குர்ஆன் இறைவனா?</u>** (ஏன் உமர் தன் தளத்திற்கு ஈஸா குர்-ஆன் என்று பெயரை வைத்தார்?)

**2) <u>யஹ்யா (யோவான்) எப்படி இயேசுவை மெய்ப்படுத்துவார்?</u>**

**பாரா அவர்கள் எழுதியவைகள்:**

*// ஆக, குர்ஆன்தான் முக்கியமே தவிர, நிகழ்த்தப்படும் அற்புதங்களல்ல. நிகழ்த்துபவருமல்ல. இதை, மற்ற யாரையும்விட முகம்மது மிக நன்றாக உணர்ந்திருந்தார். தாம் இறைவனால் இஸ்லாத்தை விளக்கவும் பரப்பவும் நியமிக்கப்பட்டிருக்கும் ஒரு கருவி மட்டுமே என்பதைப் பரிபூரணமாக அறிந்திருந்தார். ஆகவே, தன் மூலமாக நிகழ்த்தப்படும்*

*எதற்கும் தான் உரிமை கொள்வதற்கோ பெருமைப்படுவதற்கோ ஏதுமில்லை என்று மிகத் தெளிவாகச் சொல்லிவிட்டார் அவர். //*

பாரா அவர்களே, ஒரு முக்கியமான விவரத்தை மறந்து நீங்கள் எழுதுகிறீர்கள் அல்லது மறைத்து எழுதுகிறீர்கள். வேதம் என்பது எவ்வளவு முக்கியமோ, அதனை கொண்டு வந்தவரால் செய்யப்படும் அற்புதங்களும் முக்கியம். மதம் என்பது தவறான மனிதனின் கையில் அகப்பட்டுக்கொண்டால், அதிகமாக தீமைகள் நடக்கும் என்பதால், அற்புதங்கள் தேவைப்படுகின்றன. எப்படி என்பதை இப்போது சுருக்கமாக விளக்குகிறேன்.

**அ) மோசேயை தேவன் நபியாக நியமித்து,** எகிப்திலிருந்து இஸ்ரேல் மக்களை விடுவித்துக்கொண்டு வா? என்றுச் சொல்கிறார்.

**ஆ) மோசே சென்று அழைக்கும் போது,** உடனே பல இலட்சங்கள் இருக்கும் இஸ்ரேல் மக்கள் இவரின் பின்னால் கேள்வி கேட்காமல் வந்துவிடுவார்களா?

**இ) எங்களை அழைப்பதற்கு உனக்கு என்ன அதிகாரம் இருக்கிறது?** நீ உண்மையாகவே தேவன் அனுப்பிய நபியா இல்லையா என்பதை நாங்கள் எப்படி அறிந்துக்கொள்வது? என்று இஸ்ரேல் மக்கள் கேள்வி கேட்பார்கள் அல்லவா? இது நியாயமான கேள்வி தானே! எவனோ ஒரு பைத்தியக்காரன் வருவான், அவன் அழைத்தால் கேள்வி கேட்காமல், அவனது தகுதி என்னவென்று சரி பார்க்காமல் அவன் பின்னே போனால், தீமையல்லவா நடக்கும்?

**ஈ) எனவே தான், தன் பொறுப்பை ஏற்றுக்கொள்ளும் போது,** மோசே தேவனிடம் கேட்ட முதலாவது கேள்வி - என்னை அவர்கள் நம்பவில்லையென்றுச் சொன்னால், நீங்கள் என்னை அனுப்பினீர்கள் என்று நான் எப்படி நிருபிப்பது? என்று கேட்டார்.

**உ) 'அற்புதங்கள் செய்யமுடியாது'** என்று தேவன் சொல்லாமல், பல அற்புதங்களோடு மோசேயை அனுப்பினார், பார்க்க யாத்திராகமம் 4: 1-9 .

**ஊ) இதே போலத் தான் இயேசுவும் பல** அற்புதங்கள் செய்து, தான் ஒரு மேசியா என்பதை நிரூபித்தார். ஆகையால், முஹம்மது ஒரு நபி என்று சொல்லிக்கொண்டால், தன்னிடம் அற்புதம் கேட்பவர்களுக்காக சில அற்புதங்கள் செய்தே ஆகவேண்டும். ஆனால், குர்-ஆனின் படி, இப்படி நடக்கவில்லை, எனவே தான், முஹம்மது ஒரு கள்ள நபி என்று அன்றைய கிறிஸ்தவர்களும், யூதர்களும் அவரை நம்பவில்லை. இன்றும் அதே நிலை தான்.

இதைப் பற்றி கீழ்கண்ட தமிழ் கட்டுரையில் நான் தெளிவாக விளக்கியுள்ளேன்:

**பாகம் 4 - கிறிஸ்தவ சபையே! விழிமின் எழுமின்: பழைய ஏற்பாட்டின் வெளிச்சத்தில் முஹம்மதுவின் நபித்துவத்தைப் பற்றிய கேள்வி பதில்களின் தொடர்ச்சி**

**முடிவுரை:**

பாரா அவர்களே, நீங்கள் இஸ்லாமை அறியும் விதத்தில் அறியவில்லை. கிறிஸ்தவத்தை புரிந்துக்கொள்ளும் விதத்தில் புரிந்துக்கொள்ளவில்லை. எனவே தான் உங்களின் ஒவ்வொரு இறையியல் வரிகளுக்கு பதில்கள் சொல்லவேண்டி இருக்கிறது. அரைகுறை அறிவு ஆபத்து என்றுச் சொல்வார்களே, அது போல, முஸ்லிம்கள் சொல்லும் இஸ்லாமை மட்டுமே கற்றுக்கொண்டு தொடர்களை எழுதியுள்ளீர்கள். உண்மையான இஸ்லாமை அறியாமல் இருந்துவிட்டீர்கள். எனவே, நான் எழுதிக்கொண்டு இருக்கும் இத்தொடர் கட்டுரைகளை

படித்தால், நீங்கள் விட்டுவிட்ட சில இஸ்லாமிய விவரங்கள் உங்களுக்கு புரிய ஆரம்பிக்கும். இஸ்லாம் பற்றி எதிர்காலத்தில் எழுதப்போகும் புத்தகங்களுக்கு அடித்தளமாக இவ்விவரங்கள் உங்களுக்கு உதவும். இவைகளை மனதில் பதித்துக்கொண்டு நீங்கள் இஸ்லாம் மற்றும் கிறிஸ்தவம் பற்றிய புத்தங்களை எழுதினால், எதிர்காலத்தில் என்னைப்போன்றவர்கள் உங்களுக்கு இப்படிப்பட்ட பதில்களை கொடுக்க வேண்டிய அவசியம் உண்டாகாது.

உங்களை அடித்த பதிலில் சந்திக்கிறேன்.

ꕥꕥꕥꕥ

# 14) முஹம்மதுவின் அந்த மூன்று பதில்கள் ஒரே சமயத்தில் இறக்கப்பட்டவைகளா?

## (15. அந்த மூன்று வினாக்கள் & 16. அபிசீனிய மன்னன் நஜ்ஜாஷி)

**மதிப்பிற்குரிய பாரா அவர்களுக்கு,**

கடந்த கட்டுரையில் **'**முஹம்மது சந்திரனை பிளந்த அற்புதம் பற்றி எழுதினேன்**'**. குர்-ஆன் சொல்பவைகள் பொய்கள் என்றுச் சொல்லி, அதன் மீது குற்றம் சுமத்தும் வேலையை வேறு யாரும் செய்யவேண்டாம், அதனை ஹதீஸ்கள் செவ்வனே செய்து முடிக்கின்றன என்பதை முந்தைய கட்டுரையை படிக்கும் போது அறிந்துக்கொள்ளலாம். முஹம்மது அற்புதங்கள் செய்யமாட்டார் என்று குர்-ஆன் சொல்லும் போது, அப்படியெல்லாம் ஒன்றுமில்லை, சந்திரனையே பிளந்து காட்டினார் என்று ஹதீஸ்கள் சொல்கின்றன. ஹதீஸ்களில் அதாவது உங்களின் வரிகளின் படி **'**சரித்திரத்தில்**'** பதிவு செய்யப்பட்டுள்ள முஹம்மதுவின் அற்புதங்கள் பற்றி தமிழ் முஸ்லிம் அறிஞர்கள் தான் ஒரு நல்ல முடிவுக்கு வரவேண்டும்.

மக்காவினர் முஹம்மதுவின் நபித்துவத்தை நிருபிக்கும் விதத்தில் மதினாவில் இருந்த யூதர்களின் ஆலோசனையின் படி கேட்ட மூன்று கேள்விகள், அதற்கான பதில்கள் பற்றி நீங்கள் எழுதியவைகளை இந்த கட்டுரையில் ஆய்வு செய்வோம். குர்-ஆனில் உள்ள பிரச்சனைக்குரிய அத்தியாயங்களில் இந்த 18வது அத்தியாயமும் ஒன்று என்பதை சுருக்கமாக காண்போம். முஹம்மதுவிற்கு இறங்கிய அந்த மூன்று கேள்விகளுக்கான பதில்கள் ''மூன்றும்'' ஒரே நேரத்தில் இறங்கியதா? அல்லது பல நாட்கள் இடைவெளியில் இறங்கியதா? என்பதைக் காண்போம். இஸ்லாமின் படி, ஒரே நேரத்தில் இறக்கப்பட்டது, ஆனால் உண்மை வேறு விதமாக உள்ளது. முதலாவது பாரா அவர்கள் எழுதியவைகளை சுருக்கமாக காண்போம்.

**பாரா அவர்கள் எழுதியவைகள்:**

> *// முகம்மது ஓர் இறைத்தூதர்தானா? அவர் சொல்லுவதையெல்லாம் நம்பி, ஏற்பதற்கில்லை. மந்திரவாதியோ என்று சந்தேகப்படுகிறோம். என்ன செய்து அவரை பரீட்சித்தால் சரியாக இருக்கும்? ஆண்டாண்டு காலமாக இருந்துவரும் அரபுகளின் நம்பிக்கைகளை அவர் கேள்விக்குள்ளாக்குகிறார். அடிப்படையே தகர்ந்துவிடும் போலிருக்கிறது. அரபுகளின் வழிபாட்டு உருவங்களை அவர் மதிப்பதில்லை. உருவமற்ற ஒரே இறைவன் என்றொரு புதிய கருத்தை முன்வைத்து மக்களை ஈர்க்கிறார். அவர் உண்மையா, போலியா என்று எங்களுக்குத் தெரிந்தாக வேண்டும். இதற்கு யூத குருமார்கள்தான் ஒரு வழி சொல்ல வேண்டும்.மெக்கா நகரத்து வணிகர்களின் இந்தக் கோரிக்கை, யத்ரிபில் வசித்துவந்த யூத குருமார்களின்*

*சபைக்குப் போய்ச் சேர்ந்தது. அவர்கள், மெக்காவாசிகள் முகம்மது குறித்துச் சொன்ன ஒவ்வொரு தகவலையும் கூர்மையாக கவனித்துக் கேட்டார்கள். தமக்குள் நீண்டநேரம் ஆலோசனை நடத்தினார்கள். இறுதியில், முகம்மதுவைப் பரிசோதிக்க மூன்று வினாக்களை அவரிடம் கேட்கச் சொல்லி அரபுகளிடம் சொல்லி அனுப்பினார்கள்."இதுதான் பரீட்சை. இவைதான் கேள்விகள். இதற்கு மேலான கேள்விகள் என்று எதுவுமில்லை. இந்த மூன்று கேள்விகளுக்கும் அந்த முகம்மது என்ன பதில் தருகிறார் என்று கேட்டு வந்து சொல்லுங்கள். அவர் சொல்லும் பதில்கள் சரியானவையாக இருக்குமானால், சந்தேகத்துக்கு இடமில்லாமல் அவர் இறைத்தூதர்தான் என்று நீங்கள் நம்பலாம். பதில்கள் சரியில்லை என்றால், அவர் பித்தலாட்டக்காரர்தான் என்பதில் சந்தேகமில்லை"" என்று சொன்னார்கள்.யூத மதகுருமார்கள் எழுப்பிய அந்த மூன்று வினாக்களுக்கு சத்தியமாக எந்த அரேபியருக்கும் விடை தெரிய நியாயமில்லை. முகம்மது ஒரு அரேபியர். எழுதப்படிக்கத் தெரியாதவர். யாரிடமும் பாடம் கேட்டவரும் அல்லர். எனவே யூத குருமார்களுக்கு மட்டுமே விடை தெரிந்த அந்த வினாக்களுக்கு அவர் எப்படி பதில் சொல்லுகிறார் பார்க்கலாம் என்று புறப்பட்டார்கள் குறைஷிகள். (**நிலமெல்லாம் இரத்தம், அத்தியாயம் 15 - அந்த மூன்று வினாக்கள்**) //*

*// அதன்பிறகு யூத ரபிக்கள் எழுப்பிய மூன்று வினாக்களுக்கும் விடைகள் வெளிவந்தன.**முதலாவது**, தமது சமூகத்தினரை விட்டுத் தனியே பிரிந்துபோன இளைஞர்களின் கதை. மத்திய ஆசியாவின் பிரசித்திபெற்ற புராணக் கதைகளுள் ஒன்று இது. . . .*

*// . . .யூத ரபிக்களின் **இரண்டாவது வினா,** கிழக்கையும் மேற்கையும் பயணத்தால் அளந்த யாத்ரீகரைப் பற்றியது. அவரது பெயர், துல்கர்னைன். (இச்சொல்லுக்கு இரண்டு கொம்புகள் உடையவர் என்று பொருள்.) **அவர்களது மூன்றாவது கேள்வி**, ஆன்மா குறித்து. அரபு மொழியில் ரூஹ் என்றால் ஆன்மா. இக்கேள்விக்கு முகம்மதுவுக்குக் கிடைத்த பதில்: "அதைப்பற்றி மிகச் சொற்ப ஞானமே உங்களுக்கு அளிக்கப்பட்டிருக்கிறது. ஆதலால், அதன் நுட்பங்களை நீங்கள் அறிந்துகொள்ள முடியாது.""முகம்மது என்ன செய்வார்? இறைவசனம் அப்படித்தான் வந்தது! ஆகவே, தமக்கு வழங்கப்பட்ட இறைவசனங்களை அப்படியே அவர் குறைஷிகளிடம் பதில்களாகத் தெரிவித்துவிட்டார். (**நிலமெல்லாம் இரத்தம், அத்தியாயம் 16 - அபிசீனிய மன்னன் நஜ்ஜாஷி**). //*

**இந்த மூன்று கேள்விகளுக்கு முஹம்மது அளித்த பதிலில் உள்ள பிரச்சனைகளை அடுத்த கட்டுரையில் பார்க்கலாம். ஆனால், இந்த கட்டுரையில், மேற்கண்ட மூன்று கேள்விகளுக்கான பதில் ஒரே நேரத்தில் இறங்கியிருக்குமா? என்ற கேள்வியை முன்வைக்க விரும்புகிறேன். இப்படிப்பட்ட சந்தேகம் ஏன் எனக்கு வருகிறது? இதற்கு காரணம் குர்-ஆனின் 18வது அத்தியாயம் தான்.**

**அத்தியாயம் 18ன் பின்னணி:**

**மேற்கண்ட வரிகளில் பாரா அவர்கள் எழுதியவைகளின் படியும், இப்னு இஷாக்கின் "The Life of Muhammad", 136-139 பக்கங்களில் கொடுக்கப்பட்டதின் படியும், இன்னும் தஃப்ஸீர்களில் சொல்லப்பட்டதின் படியும், அந்தக் குகை என்ற அத்தியாயம், மேற்கண்ட கேள்விகளுக்கான பதிலை ஜிப்ராயீல் கொண்டுவரும் போது இறக்கப்பட்டதாகும்.**

**இப்னு இஷாக்கின் "The Life of Muhammad", 137 பக்கம்:**

**This delay caused the apostle great sorrow, until Gabriel brought him the Chapter of The Cave, in which he reproaches him for his sadness, and told him the answers of their questions, the youths, the mighty traveller, and the spirit.**

**இப்னு கதீர் தஃப்ஸீர்:**

**We have already mentioned how the disbelievers of Makkah sent word to the People of the Book and asked them for some information with which they could test the Prophet . They (the People of the Book) said, `Ask him about a man who traveled extensively throughout the earth, and about some young men who nobody knows what they did, and about the Ruh (the soul),' then Surat Al-Kahf was revealed. Dhul-Qarnayn had great Power** (மூலம்: http://www.qtafsir.com/index.php?option=com_content&task=view&id=2705&Itemid=73)

மேற்கண்ட விவரங்கள் உண்மையானால், நாம் அந்த மூன்று கேள்விகளுக்கான பதிலை குர்-ஆனின் 18ம் அத்தியாயத்தில் காணமுடியும். ஆனால், நம் கைகளில் இருக்கும் குர்-ஆனில் இப்படி உள்ளதா?

**குகை அத்தியாயத்தில் உள்ள 110 வசனங்களின் முக்கிய சுருக்கத்தை கீழே பாருங்கள்:**

| **வசனங்கள்** | **விவரங்கள்** |
|---|---|
| **9 - 22** | **முதல் கேள்வியின் பதில்:** குகையில் இருந்தவர்கள் பற்றிய பதில் சொல்லப்பட்டுள்ளது |
| 23 -24 | எந்த விஷயத்தைப் பற்றியும் “நிச்சயமாக நாம் நாளை அதைச் செய்பவனாக இருக்கிறேன்” என்று நிச்சயமாக கூறாதீர்கள் என்ற எச்சரிக்கை முஹம்மதுவிற்கு கொடுக்கப்படுகின்றது. |
| **25 - 26** | **முதல் கேள்வியின் பதில் தொடர்கிறது:** குகையில் இருந்தவர்கள் பற்றிய மீதமுள்ள விவரங்கள். |
| 32 - 43 | **புதிய உவமை:** இரண்டு நபர்களின் உவமை ஒன்று சொல்லப்பட்டுள்ளது. |
| 60 - 82 | **மோசே கதை:** மோசே மற்றும் இன்னொரு அல்லாஹ்வின் அடியார் பற்றிய கதை கூறப்பட்டுள்ளது. |
| 83 - 98 | **இரண்டாம் கேள்வியின் பதில்:** துல்கர்னைன் பற்றிய பதில் கூறப்பட்டுள்ளது. |
| | குர்-ஆன் 18:1 — 8, 27 -31, 44 — 59 மற்றும் 99 -110 போன்ற வசனங்கள் மேற்கண்ட கதைகள் பற்றி அல்லாமல், இதர பல விவரங்கள் பற்றி பேசுகின்றன. |

இந்த அத்தியாயத்தின் பின்னணியை பார்க்கும்போது, முஹம்மதுவிடம் கேட்கப்பட்ட மூன்று கேள்விகளுக்கான பதில்கள் இவ்வத்தியாயத்தில் கொடுக்கப்பட்டிருக்கவேண்டும்.

**அந்த மூன்று பதில்கள் எங்கே:**

இவ்வத்தியாத்தின் வசனங்களை பார்க்கும் போது, ஒரு கோர்வையாக இவைகள் இருப்பதை காணமுடிவதில்லை. முக்கியமாக, நாம் ஆய்வு செய்துக்கொண்டு இருக்கும் அந்த மூன்று கேள்விகளுக்கான பதில்கள் ஒன்றன் பின் ஒன்றாக இருக்கவேண்டும் என்று எல்லோரும் எதிர்ப்பார்ப்போம். ஏனென்றால், இஸ்லாமிய சரித்திரங்களும், தஃப்ஸீர்களும் இப்படித்தான், இவ்வத்தியாயத்தின் பின்னணியை விவரிக்கின்றன. அப்படியானால், அந்த மூன்று பதில்கள் எங்கே?

முஹம்மதுவிற்கு அல்லாஹ் கொடுத்த பதில்கள் கோர்வையாக கீழ்கண்டவிதமான வரிசையில் சொல்லியிருக்கவேண்டும்.

- முதலாவதாக, முஹம்மதுவை கடிந்துக்கொள்ளும் வசனம் இறங்கி இருக்கவேண்டும் **(18:23-24)**
- இரண்டாவதாக, குகையில் பாதுகாப்பு தேடியவர்களின் விவரங்கள் **(18:9-22** மற்றும் **18:25-26)** இருக்க வேண்டும்.
- மூன்றாவதாக, துல்கர்னைன் பற்றிய பதில் இருந்திருக்கவேண்டும் **(18: 83-98)**
- நான்காவதாக, ஆத்மாவைப் (ரூஹ்) பற்றிய வசனம் **(17:85)** இருந்திருக்கவேண்டும்

ஆனால், இந்த அத்தியாயத்தை பாருங்கள், எப்படி அமைக்கப்பட்டு இருந்திருக்கின்றது என்று? குகை மற்றும் துல்கர்னைன் பற்றிய பதில்களுக்கு இடையே வேறு இரு நிகழ்ச்சிகள் சொல்லப்பட்டுள்ளது. **110** வசனங்கள் அடங்கிய அத்தியாயத்தில், ஆரம்பத்தில் ஒரு பதிலும், கடைசியில் இன்னொரு பதிலும் உள்ளது. மேலும், முஹம்மதுவை கடிந்துக்கொள்ளும் வசனம் முதலாவது இருந்திருக்கவேண்டும், ஆனால், அது குகையில் பதுங்கிய பதில் முக்கால் வாசி முடிந்த பிறகு வருகிறது **(23-24).**

**ரூஹ் (ஆத்துமா) பற்றிய பதில் எங்கே:**

இன்னொரு முக்கியமான விவரம் இந்த அத்தியாயத்தில் இருந்திருக்கவேண்டும், ஆனால், இங்கு அது காணப்படவில்லை. ஆத்துமா பற்றிய பதில் எங்கு சென்றது? வேறு அத்தியாயத்தில் இருக்குமா? ஆம், ரூஹ் பற்றிய பதில் **17**ம் அத்தியாயத்தில் காணப்படுகின்றது.

**குர்-ஆன் 17:85**

> (நபியே!) "உம்மிடம் ரூஹை (ஆத்மாவைப்) பற்றி அவர்கள் கேட்கிறார்கள். "ரூஹு" என் இறைவனுடைய கட்டளையிலிருந்தே உண்டானது; இன்னும் ஞானத்திலிருந்து உங்களுக்கு அளிக்கப்பட்டது மிகச் சொற்பமேயன்றி வேறில்லை" எனக் கூறுவீராக.
>
> ஏன் மூன்றாம் பதில் மட்டும் **17**ம் அத்தியாயத்தில் காணப்படுகின்றது? மேலும், **18:83**ம் வசனத்தை பார்க்கும் போது, "மக்கள் கேள்வி கேட்டதால்" அந்த வரலாறு பற்றி நான் சொல்கிறேன் என்று அல்லாஹ் சொல்கின்றான். ஆனால், குகையில் பதுங்கியவர்கள் பற்றி மக்கள் கேட்டார்கள் என்ற விவரம் குர்-ஆனில் இல்லை.

**குர்-ஆனின் இந்த குழப்பத்திற்கு காரணம் என்னவாக இருக்கும்?**

இஸ்லாமிய நூல்களில் சொல்லப்பட்டது போல **18**ம் அத்தியாயத்தின் பின்னணியோடு, குர்-ஆனில் இந்த அத்தியாயம் பதிக்கப்பட்ட விதம் முரண்படுகின்றது. மேலும், ஒரு பதில் **17**ம் அத்தியாயத்திற்கு சென்றுவிட்டுள்ளது. இது எப்படி நடந்தது?

1. மூன்று சின்ன கேள்விகளுக்கு பதில்களை அல்லாஹ் ஒரே நேரத்தில் கொடுத்த போது, அதனை வரிசையாக முஹம்மது சொல்லவில்லையா?
2. ஒருவேளை, குர்-ஆனை தொகுத்தவர்கள் அவைகளை மாற்றி பதித்துவிட்டார்களா?
3. ஒவ்வொரு ஆண்டும், குர்-ஆனை ஜிப்ராயீல் தூதன் சரிபார்ப்பான் என்று சொல்லப்படுகின்றது, அந்த நேரத்திலாவது முஹம்மது இதனை சரி செய்து இருக்கலாம். (இது சாத்தியமில்லை, ஜிப்ராயீல் தூதன் சரி பார்த்த குர்-ஆன் முஹம்மதுவின் மனதில் மனப்பாடம் செய்யப்பட்டவைகளை மட்டுமே. ஜிப்ராயீல் சென்ற பிறகு, தன் தொழர்களிடம் இருக்கும் எலும்புத்துண்டுகள், இலைகள், தோல்கள் போன்றவற்றில் எழுதப்பட்ட குர்-ஆன் வசனங்களை கொண்டுவரச்சொல்லி முழுவதுமாக முஹம்மது சரி பார்த்ததாக, எனக்கு தெரிந்தவரை ஹதீஸ்கள் இல்லை. இதனை முஹம்மது ஒவ்வொரு ஆண்டும் செய்திருக்கவேண்டும். இப்படி செய்யாத பட்சத்தில், ஜிப்ராயீல் ஒவ்வொரு ஆண்டும் சரி பார்த்த குர்-ஆனினால் என்ன பயன்?).
4. முஹம்மதுவிடம் குறைஷிகள் கேள்விகள் கேட்ட நிகழ்ச்சியை அனைத்து தோழர்களும் அறிந்திருந்தால், ஒருவருக்காவது தங்கள் சொந்த பிரதிகளை படிக்கும் போது, சந்தேகம் வந்திருக்கும்? ஏன் வரிசை மாறுகின்றது என்ற கேள்வி எழும்பியிருந்திருக்கும்? ஆனால், கடைசி வரை ஒருவருக்கும், இந்த எண்ணம் வரவே (பல்பு எரியவே) இல்லை, நம்மிடம் உள்ள குர்-ஆன் தான் இதற்கு சாட்சி.
5. அப்படியானால், நமக்கு என்ன சந்தேகம் வருகிறது? இக்கேள்விகள் ஒரே நேரத்தில் அல்லாமல் வெவ்வேறு வேளைகளில் (பல நாட்கள் இடைவேளையில்) முஹம்மதுவிடம் கேட்கப்பட்டுள்ளது, மேலும், இதைப் பற்றிச் சொல்லப்படும் பின்னணி (குறைஷிகள், யூத ரபிகளிடம் சென்று வந்தது) என்பது பொய் என்று அறிகிறோம்.
6. முதலாவது முறை, இரண்டாவது முறை கலீஃபாக்கள் குர்-ஆனை தொகுக்கும் போது கூட அவர்கள் இதனை சரி செய்யவில்லை, இதன் மூலம் அறிவதென்ன? அவர்கள் அனைவருக்கும் ஞாபக மறதி ஒரே நேரத்தில் வந்திருக்கிறது என்பதாகும் (இதுவும் அல்லாஹ்வின் அற்புதங்களில் ஒன்று என்று முஸ்லிம்கள் சொன்னாலும் சொல்லக்கூடும்). தங்கள் இறைத்தூதர் வாழ்வில் நடந்த நிகழ்ச்சியை மறக்கமுடியுமா? அதுவும், நபித்துவத்துக்கு எதிராக கேள்விகள் கேட்டபோது, 15 நாட்கள் கழித்து பதில் வந்த போது, எவ்வளவு மன உலைச்சளில் முஹம்மது இருந்திருப்பார்? இதனையா எல்லா தோழர்களும் மறந்துவிட்டார்கள்?

**வசனங்கள் ஒரே வரிசையில் இருக்கவேண்டுமென்று அவசியம் இருக்கின்றதா?**

ஒரு நிகழ்ச்சி பற்றிய வேத வசனங்கள் வெவ்வேறு அத்தியாயங்களில், வெவ்வேறு வரிசையில் இருப்பது பெரிய தவறா? என்ற கேள்வியை சிலர் என்னிடம் கேட்கலாம். உண்மையில் இது பெரிய தவறல்ல! என்னுடைய கேள்வி என்னவென்றால் "ஒரு சிறிய விவரம், அதுவும் பெரிய பாதிப்பை உண்டாக்கிய முக்கிய நிகழ்ச்சி பற்றி இறக்கப்பட்ட வசனங்கள் ஏன் இப்படி தாறுமாறாக பதிவு செய்யப்பட்டுள்ளது? என்பது தான். ஒரு சின்ன விஷயத்தில் இவ்வளவு பெரிய அலட்சியம் ஏன்? இந்த அலட்சியத்திற்கு யார் காரணம்? அல்லாஹ்வா? முஹம்மதுவா? அல்லது நபித்தோழர்களா? முஹம்மதுவும், அவரது தோழர்கள் அனைவரும், குர்-ஆனின் வசனங்கள் பற்றி இவ்வளவு அக்கரையற்று இருந்திருக்கிறார்கள் என்று நாம் எண்ணலாமா? மூன்று கேள்விகள், மூன்று பதில்கள் ஆனால் அவைகள் இரண்டு அத்தியாயங்களில் தெரிக்கப்பட்டுள்ளது. ஒரு சிறிய, ஆனால் முக்கியமான நிகழ்ச்சியை கோர்வையாக குர்-ஆனில் தொகுக்க தெரியாத போது, பெரிய விஷயங்களின் நம்பகத்தன்மை எத்தகையது என்பதை புரிந்துக்கொள்ளலாம்.

**முடிவுரை:**

இந்த மூன்று பதில்கள் ஒரே வரிசையில் காணமுடிவதில்லை. சம்மந்தமே இல்லாமல், ஒரு கேள்விக்கான பதில் 17ம் அத்தியாயத்தில் உள்ளது, மீதமுள்ள இரண்டு கேள்விகள் ஒன்று கன்னியாகுமாரியிலும், இன்னொன்று காஷ்மீரிலும் உள்ளது. இவ்வரண்டிற்கும் இடையே வேறு இரண்டு உவமைகள் / நிகழ்ச்சிகள் சொல்லப்பட்டுள்ளது. இப்படி இருந்தால் குர்-ஆன் எப்படி மக்களுக்கு புரியும்?

பாரா அவர்களே, நீங்கள் நிலமெல்லாம் இரத்தம் புத்தகத்தின் 15/16 அத்தியாயங்களை எழுதுவதற்கு முன்பு, 'அந்த மூன்று வினாக்களின்' பதில்கள் குர்-ஆனில் எங்கு இருந்தது என்பதை தேடிப்பார்த்தீர்களா?

ஐஐஐஐ

# 15) பொது அறிவு முஹம்மதுவின் நபித்துவத்தை நிரூபிக்குமா?

## (15. அந்த மூன்று வினாக்கள் & 16. அபிசீனிய மன்னன் நஜ்ஜாஷி)

**மதிப்பிற்குரிய பாரா அவர்களுக்கு,**

முந்தைய **கட்டுரையில்** 'அந்த மூன்று வினாக்களுக்கு' அல்லாஹ் கொடுத்த பதில்கள் குர்ஆனின் ஒரே அத்தியாயத்தில் ஏன் இல்லை? என்ற கேள்வியை முன்வைத்தேன்.

இக்கட்டுரையில் நபித்துவத்தை நிரூபிப்பதற்கு எப்படி அல்லாஹ் பொதுஅறிவு பதில்களை பயன்படுத்தினார் என்பதை விளக்குகிறேன். இந்த விவரத்திற்கு எனக்கு உதவியது உங்களின் வரிகள் என்பதை தாழ்மையுடன் தெரிவித்துக்கொள்கிறேன்.

இந்த கட்டுரையின் மையக்கருத்து சரியாக புரியவேண்டுமென்பதற்காக, உங்களின் (பாராவின்) நிலமெல்லாம் இரத்தம் புத்தகத்தின் 15 மற்றும் 16வது தொடர்களின் சுருக்கத்தை தருகிறேன். இதைப் பற்றிய உங்களின் மேற்கோள்களை இக்கட்டுரையின் அடிக்குறிப்பில் கொடுத்திருக்கிறேன் [1][2][3][4].

1) மக்காவின் குறைஷிகள் 'முஹம்மது ஒரு பொய்யான நபி என நிரூபிக்க விரும்பினர்'.

2) இதற்காக அவர்கள் மதினாவில் இருந்த யூத ரபிகளின் உதவியை நாடினர்.

3) யூத ரபிகள் மூன்று கேள்விகளை கேட்கும் படி குறைஷிகளுக்கு சொல்லி அனுப்பினார்கள்.

4) இம்மூன்று கேள்விகளுக்கு முஹம்மது சரியான பதில் அளித்தால், அவர் ஒரு மெய்யான நபி என்று குறைஷிகள் நம்பலாம், அவர் பதில் அளிக்கவில்லையென்றால், அவர் பொய்யர் என்று குறைஷிகள் கருதலாம் என்று யூத ரபிகள் சொல்லி அனுப்பினார்கள்.

5) குறைஷிகள் முஹம்மதுவிடம் இம்மூன்று கேள்விகளை கேட்டார்கள். அவர் மறுநாள் பதில் தருவதாகச் சொன்னார். ஆனால் 15 நாட்கள் கழித்து அல்லாஹ் ஜிப்ரீல் தூதன் மூலமாக முஹம்மதுவிற்கு பதில்களை அனுப்பினார்.

**(பாரா அவர்கள் எழுதிய தொடர்கள் 15 மற்றும் 16ஐ முழுவதுமாக வாசகர்கள் படித்தால், முழு விவரங்களையும் தெரிந்துக்கொள்ளலாம்).**

**1) முஹம்மதுவின் நபித்துவத்தை நிரூபிக்கும் படி, 'அற்புதங்கள் தேவை' என்று யூதர்கள் கேட்டார்கள்**

முஹம்மது வாழ்ந்த அந்த ஏழாம் நூற்றாண்டில், மக்கா மற்றும் மதினா பகுதிகளில் குறைஷிகள், யூதர்கள், கிறிஸ்தவர்கள் மற்றும் இதர மக்கள் வாழ்ந்தனர். இம்மக்களுக்கு 'தாம் ஒரு நபி' என்று முஹம்மது நிரூபிக்கவேண்டி இருந்தது.

'முஹம்மதுவை நபி' என்று யூதர்கள் நம்பவேண்டுமென்றால், அவர் முந்தைய நபிகளைப்போல அற்புதங்கள் செய்யவேண்டுமென்று அவர்கள் கேட்டனர், இதனை அல்லாஹ் குர்-ஆனில் கீழ்கண்டவாறு சொல்லிக்காட்டுகின்றான். மேலும் 'நான் ஒரு மனிதன் மட்டுமே' இப்படிப்பட்ட அற்புதங்கள் செய்யமுடியாது என்று யூதர்களுக்கு பதிலாகச் சொல்லும் படி முஹம்மதுவிற்கு கட்டளையிடுகின்றான்.

**குர்-ஆன் 17:90-93**

> **17:90.** இன்னும், அவர்கள் கூறுகிறார்கள்: "நீர் எங்களுக்காகப் பூமியிலிருந்து ஒரு நீர் ஊற்றைப் பீறிட்டு வரும்படி செய்யும் வரையில், உம் மீது நாங்கள் நம்பிக்கை கொள்ள மாட்டோம். **17:91.** "அல்லது பேரீச்சை மரங்களும், திராட்சைக் கொடிகளும் (நிரப்பி) உள்ள தோட்டம் ஒன்று உமக்கு இருக்க வேண்டும். அதன் நடுவே ஆறுகளை நீர் ஒலித்தோடச் செய்ய வேண்டும். . . . . . .**17:93.** "அல்லது ஒரு தங்கமாளிகை உமக்கு இருந்தாலன்றி (உம் மீது நம்பிக்கை கொள்ளோம்); அல்லது வானத்தின் மீது நீர் ஏறிச் செல்ல வேண்டும், (அங்கிருந்து) எங்களுக்காக நாங்கள் படிக்கக் கூடிய ஒரு (வேத) நூலை நீர் கொண்டு வந்து தரும் வரையில், நீர் (வானத்தில்) ஏறியதையும் நாங்கள் நம்ப மாட்டோம்" என்று கூறுகின்றனர். "என் இறைவன் மிகத் தூயவன், நான் (இறைவனுடைய) தூதனாகிய ஒரு மனிதனே தவிர வேறெதுவுமாக இருக்கின்றேனா?" என்று (நபியே! நீர் பதில்) கூறுவீராக. (முஹம்மது ஜான் தமிழாக்கம்)

**2) பொதுஅறிவு கேள்விகளை முஹம்மதுவிற்கு பரீட்சையாக வையுங்கள்**

யூதர்கள் ஒருவரை நபியாக கருதவேண்டுமென்றால், அவர்கள் முந்தைய நபிகளைப்போல அற்புதங்கள் செயயவேண்டுமென்று எதிர்ப்பார்த்தனர். ஆனால், குறைஷிகள் அவர்களிடம் வந்த போது, மூன்று கேள்விகளை முஹம்மதுவிடம் கேட்கும் படி சொன்னார்கள். இவற்றில் இரண்டு கேள்விகள் 'அந்த காலக்கட்டத்தில் நிலவிய பொதுஅறிவு கேள்விகள்' மற்றும் மூன்றாம் கேள்வி மதம் சம்மந்தப்பட்டது, முக்கியமாக யூதகிறிஸ்தவ மதம் சம்மந்தப்பட்டது. முஹம்மதுவிடம் அற்புதங்களை கேளுங்கள் என்று குறைஷிகளிடம் யூதரபிகள் அறிவுரை கூறவில்லை. அந்த காலத்தில் படித்தவர்களுக்கு பொதுவாக தெரிந்திருந்த பொதுஅறிவு **(General Knowledge)** கேள்விகளை கேட்கும் படி சொல்லி அனுப்பினார்கள்.

இதை எப்படி பாரா அவர்கள் குறிப்பிடுகிறார் என்பதை படியுங்கள்:

> *// யூத மதகுருமார்கள் எழுப்பிய அந்த மூன்று வினாக்களுக்கு சத்தியமாக எந்த அரேபியருக்கும் விடை தெரிய நியாயமில்லை. முகம்மது ஒரு அரேபியர். எழுதப்படிக்கத் தெரியாதவர். யாரிடமும் பாடம் கேட்டவரும் அல்லர். எனவே யூத*

> *குருமார்களுக்கு மட்டுமே விடை தெரிந்த அந்த வினாக்களுக்கு அவர் எப்படி பதில் சொல்லுகிறார் பார்க்கலாம் என்று புறப்பட்டார்கள் குறைஷிகள் (நிலமெல்லாம் இரத்தம் தொடர் 15. அந்த மூன்று வினாக்கள்) //*

இக்கேள்விக்கான பதில் யூத குருமார்களுக்கு மட்டுமல்ல, அக்காலத்தில் படித்தறிந்த மக்களுக்கும் தெரிந்த விவரம் அது. இதிலிருந்து அறிவதென்ன? யூதர்களுக்கு என்று வரும் போது ஒரு நிலை (அற்புதங்கள் தேவை), குறைஷிகளுக்கு என்று வரும் போது இன்னொரு நிலை (GK கேள்விகள்). இந்த பொதுஅறிவு கேள்விகளுக்கு ஒருவேளை முஹம்மது பதில் அளித்துவிட்டாலும், அது யூதர்களை பாதிக்கப்போவதில்லை, ஏனென்றால், இக்கேள்விகளை யூதர்கள் குறைஷிகளின் பரீட்சைக்காக தயார்படுத்தி அனுப்பிய வினாத்தாள்களாகும்.

**3) பொதுஅறிவு கேள்விகளுக்கு பதில் அளித்தவரை 'நபி' என்று முஸ்லிம்கள் அங்கீகரிப்பார்களா?**

இதுவரை கண்ட விவரங்களின் படி, யூதர்கள் முன்வைத்த பொதுஅறிவு கேள்விகளுக்கு முஹம்மது பதில் அளித்தார் (இந்த பதில்கள் ஒவ்வொன்றைப் பற்றிய என் விமர்சனத்தை அடுத்த கட்டுரையில் எழுதுகிறேன்). இதன் மூலமாக, அல்லாஹ் தன் இறைத்தூதர் முஹம்மதுவின் நபித்துவத்தை நிரூபித்தார். இதைத் தான் முஸ்லிம்கள் இதுவரை நம்பிக்கொண்டு வந்துள்ளார்கள், இதையே பாரா அவர்களும் எழுதியுள்ளார்கள்.

**இப்போது முஸ்லிம்களிடம் கேட்கவேண்டிய கேள்விகள் என்னவென்றால்:**

அ) ஒருவரை நபி என்று நாம் அங்கீகரிக்க அவருக்கு பொது அறிவு பற்றிய கேள்விகளுக்கு பதில் தெரிந்திருந்தால் போதுமா?

ஆ) முஹம்மதுவிற்கு முன்பு பல நூற்றாண்டுகளுக்கு முன்பு நடந்ததாகச் சொல்லும் நிகழ்ச்சிகள் பற்றிய அறிவு ஒருவருக்கு இருந்தால் அவரை நாம் நபி என்று ஏற்கலாமா?

இ) பாராவின் கீழ்கண்ட வரிகளின் படி, படிப்பறிவில்லாத ஒருவர், இரண்டு சரித்திர கேள்விகளுக்கு பதில்களை அளித்துவிட்டால், அவரை நபி என்று முஸ்லிம்கள் 'இன்று' ஏற்றுக்கொள்வார்களா? இது தான் நபித்துவத்தை நிரூபிக்கும் அத்தாட்சிகளா?

> *// யூத மதகுருமார்கள் எழுப்பிய அந்த மூன்று வினாக்களுக்கு சத்தியமாக* ***எந்த அரேபியருக்கும் விடை தெரிய நியாயமில்லை****. முகம்மது ஒரு அரேபியர். எழுதப்படிக்கத் தெரியாதவர். யாரிடமும் பாடம் கேட்டவரும் அல்லர்.* ***எனவே யூத குருமார்களுக்கு மட்டுமே விடை தெரிந்த*** *அந்த வினாக்களுக்கு அவர் எப்படி பதில் சொல்லுகிறார் பார்க்கலாம் என்று புறப்பட்டார்கள் குறைஷிகள் (நிலமெல்லாம் இரத்தம் தொடர் 15. அந்த மூன்று வினாக்கள்) //*

ஈ) தற்காலத்தில் படிப்பறிவில்லாத ஒரு கிராமவாசி, 'தான் ஒரு இஸ்லாமிய நபி' என்று பிரகடனப்படுத்திவிட்டு, பல நூற்றாண்டுகளுக்கு முன்பு நடந்த பல சரித்திர விவரங்கள் பற்றிய பொதுஅறிவு கேள்விகளுக்கு பதில்களை அளித்துவிட்டால், அவரை நபி என்று முஸ்லிம்கள் ஏற்றுக்கொள்வார்களா?

**4) யூத ரபிகளின் வலையில் அல்லாஹ் எப்படி சிக்கினார்?**

முஹம்மதுவை நம்பாத மக்களாகிய யூதர்கள், கிறிஸ்தவர்கள் மற்றும் குறைஷிகள் முஹம்மதுவிடம் 'அற்புதங்களை செய்துக் காட்டி, உங்கள் நபித்துவத்தை

நிரூபித்துக்காட்டுங்கள் அப்போது நாங்கள் நம்புகிறோம்' என்று பல முறை கேட்டாலும், முஹம்மதுவின் மூலமாக ஒரு அற்புதத்தையும் அல்லாஹ் செய்யவில்லை. எல்லா நேரங்களிலும் அல்லாஹ் அற்புதங்கள் செய்யாமல் தட்டிக்கழித்துக்கொண்டே இருந்தார். கீழ்கண்ட வசனங்களை பாருங்கள், ஏதோ ஒரு காரணத்தைச் சொல்லி, அல்லாஹ் அற்புதங்கள் செய்ய மறுத்துள்ளார்:

**முஹம்மது வெறும் எச்சரிக்கை செய்பவர், அற்புதங்கள் செய்பவர் அல்ல**

> குர்-ஆன் **13:7.** இன்னும் (நபியே! உம்மைப்பற்றி இந் நிராகரிப்போர் "அவருக்கு அவருடைய இறைவனிடமிருந்து (நாம் விரும்பும்) அத்தாட்சி இறக்கப்பட வேண்டாமா?" என்று கூறுகிறார்கள்; நீர் அச்சமூட்டி எச்சரிப்பவரே ஆவீர், மேலும், ஒவ்வொரு சமூகத்தவருக்கும் ஒரு நேர்வழி காட்டியுண்டு.

> குர்-ஆன் **11:12.** (நபியே! நம் வசனங்களை அவர்கள் செவிமடுப்பதில்லையே எனச் சடைந்து) வஹீ மூலம் உமக்கு அறிவிக்கப்பட்டவற்றில் சிலவற்றை விட்டுவிட எண்ணவோ, "அவர் மீது ஒரு பொக்கிஷம் இறக்கப்பட வேண்டாமா? அல்லது அவருடன் ஒரு மலக்கு வர வேண்டாமா?" என்று அவர்கள் கூறுவதினால் உம் இதயம் (சஞ்சலத்தால்) இடுங்கியிருக்கவோ கூடும்; நிச்சயமாக நீர் அச்சமூட்டி எச்சரிப்பவரேயன்றி வேறில்லை; அல்லாஹ் எல்லா பொருட்களின் மீதும் பொறுப்பாளனாக இருக்கிறான்.

> குர்-ஆன் **13:27.** "இவருக்கு இவருடைய இறைவனிடமிருந்து ஓர் அத்தாட்சி இறக்கி வைக்கப்படக் கூடாதா" என்று நிராகரிப்போர் கூறுகிறார்கள், (நபியே!) நீர் கூறும்: "நிச்சயமாக அல்லாஹ் தான் நாடியவரை வழிகெடச்செய்கிறான்; தன் பால் எவர் திரும்புகிறாரோ அத்தகையோருக்கு நேர் வழிகாட்டுகிறான்" என்று

> குர்-ஆன் **29:50.** "அவருடைய இறைவனிடமிருந்து அவர் மீது அத்தாட்சிகள் ஏன் இறக்கப்படவில்லை?" என்றும் அவர்கள் கேட்கிறார்கள்; "அத்தாட்சிகளெல்லாம் அல்லாஹ்விடம் உள்ளன; ஏனெனில் நான் வெளிப்படையாக அச்ச மூட்டி எச்சரிக்கை செய்பவன் தான்" என்று (நபியே!) நீர் கூறுவீராக.

> குர்-ஆன் **29:51.** அவர்களுக்கு ஓதிக்காட்டப்படும் இவ்வேதத்தை நாம் உம் மீது இறக்கியிருக்கிறோம் என்பது அவர்களுக்குப் போதாதா? நிச்சயமாக அ(வ் வேதத்)தில் ரஹ்மத்தும், ஈமான் கொண்ட சமூகத்தாருக்கு (நினைவூட்டும்) நல்லுபதேசமும் இருக்கின்றன. (முஹம்மது ஜான் டிரஸ்ட் தமிழாக்கம்)

மேற்கண்டவிதமாக அற்புதங்கள் செய்ய மறுத்துக்கொண்டு இருக்கும் அல்லாஹ், 'பொது அறிவு கேள்விகள்' கேட்கப்பட்டவுடன் பதில் அளிக்கிறார். இதிலிருந்து தெரிவதென்ன? வகுப்பறைகளில் ஆசிரியர் ஒரு கேள்வியை கேட்கும்போது, அதற்கான பதில் நமக்குத் தெரிந்தால், உடனே நாம் கைகளை உயர்த்திக்காட்டுவோம், நம்மை ஆசிரியர் பார்க்கமாட்டாரா என்று துடிப்போம். ஆனால், அதே ஆசிரியர் நமக்குத் தெரியாத கேள்வியை கேட்கும் போது, கைகளை உயர்த்துவை விடுங்கள், அவருடைய கண்களில் நேரடியாக பார்ப்பதற்கு பதிலாக, அங்கும் இங்கும் பார்த்துக்கொண்டும், இதர மாணவர்களின் பின்னால் ஒளிந்துக்கொண்டும் இருப்போம். இதைப் போலவே, அற்புதங்கள் கேட்டபோதெல்லாம் மறுத்த அல்லாஹ், பொது அறிவு கேள்விகள் கேட்டபோது உடனே

பதில் அளித்துள்ளார். இது முஹம்மதுவின் நபித்துவத்திற்கு முன்பாக யார் இருந்துள்ளார்கள் என்பதை உணரமுடிகின்றது.

இது ஒரு புறம் இருக்கட்டும், யூதர்கள் கொடுத்த கேள்விகளை குறைஷிகள் கேட்டபோது, அல்லாஹ் உண்மையான இறைவனாக இருந்திருந்தால் என்ன செய்திருக்கவேண்டும்?

அ) **முதலாவதாக,** குறைஷிகளைப் பார்த்து, நீங்கள் யூதர்களிடமிருந்து கேள்விகள் கேட்டு வந்து, என் இறைத்தூதரிடம் கேட்டு இருக்கிறீர்கள் என்று தெள்ளத்தெளிவாக சொல்லியிருக்கவேண்டும்.

ஆ) **இரண்டாவதாக,** யூதர்களுக்கும் இதர படித்தவர்களுக்கும் தெரிந்திருக்கின்ற இந்த கேள்விகளை என்னிடம் (அல்லாஹ்விடம்) கேட்பதினால் ஒரு பயனுமில்லை. முஹம்மதுவின் நபித்துவம் வெறும் 'பொது அறிவு' கேள்விகளுக்கு பதில் அளிப்பதினால் நிரூபிக்கப்படாது என்று சொல்லியிருக்கவேண்டும். ஒரு சாதாரண யூதனுக்கு அல்லது அரேபியாவிற்கு வெளியே வாழும் படித்த ஒருவனுக்கு தெரிந்த பொதுஅறிவு கேள்விகளுக்கான பதில்களை நான் சொன்னால், அது எனக்கு அவப்பெயர் இல்லையா! என்று சொல்லியிருந்திருக்கவேண்டும். அல்லாஹ்வின் ஞானமும், படித்த ஒரு மனிதனின் (அ) யூதனின் ஞானமும் ஒன்றா? என்று கேள்வி கேட்டு இருந்திருக்கவேண்டும்.

இ) **மூன்றாவதாக,** நான் பதில்களை கொடுக்கிறேன், ஆனால், அதன் பிறகு நீங்கள் முஹம்மதுவை நபி என்று நம்புவோம் என்று ஒப்பந்தம் செய்து கையெழுத்திட்டால் பதில்களைத தருகிறேன் என்று குறைஷிகளிடம் சவால் விட்டு, ஒப்பந்தம் செய்துக்கொண்டு பதில் சொல்லியிருந்திருக்கவேண்டும். அல்லது இக்கேள்விகளுக்கான பதில்களைச் சொல்வதைக் காட்டிலும், ஒரு அற்புதத்தை செய்துக்காட்டியிருந்திருக்கலாம்.

ஆனால், இப்படியெல்லாம் செய்யாமல், இக்கேள்விகளுக்கு பதில்களைக் கொடுத்து, அல்லாஹ் தனக்கு யூதர்களிடம் அவப்பெயரை உண்டாக்கிக்கொண்டார். யூதர்களின் மாயவலையில் சிக்கிக்கொண்டார் அல்லாஹ். நாம் ஆழ்ந்து சிந்தித்தால், இந்த நிகழ்ச்சி அல்லாஹ்வின் இயலாமையையும் அறியாமையையும் வெளிக்காட்டியுள்ளதை அறியலாம்.

### 5) நபித்துவ அத்தாட்சி எப்படி இருக்கவேண்டும்?

இவ்வளவு பெரிய மார்க்கத்திற்காக நியமிக்கப்பட்ட முஹம்மதுவின் நபித்துவம் எப்படி நிரூபிக்கப்பட்டு இருந்திருக்கவேண்டும்? இரண்டு பொதுஅறிவு கேள்வி பதில்களால் அதை நிரூபிக்க முயன்று இருப்பது கீழ்தரமானது. 'குர்-ஆன் தான்' என் அற்புதம் என்றுச் சொல்வதினாலும் எந்த பயனுமில்லை (நல்ல இலக்கிய படைப்பு எப்போதும் தெய்வீகத்தை வெளிக்காட்டுவதாக அமையாது, மேலும் குர்-ஆன் ஒரு நல்ல இலக்கியம் என்று முஸ்லிம்கள் தவிர இதர மக்கள் அங்கீகரிக்கமாட்டார்கள் என்பது வேறு விஷயம்).

ஒரு குறிப்பிட்ட நேரத்தில் சில குறைஷிகளுக்கு, நிலவை பிளந்துக்காட்டியும் பயனில்லை (உண்மையில் நிலவை முஹம்மது பிளந்துக்காட்டவில்லை என்பதை என் முந்தைய கட்டுரையில் குர்-ஆனின் அடிப்படையில் விளக்கினேன்). ஒருவேளை நிலவு பிளவுப்பட்டதைப் பார்ப்பவர்கள் 'இவர் மாஜிக் செய்துவிட்டார்' என்றுச் சொல்லக்கூடும்.

உண்மையில் நபித்துவம் எப்படி நிரூபிக்கப்பட்டு இருந்திருக்கவேண்டும்? சிறிய அற்புதமாக இருந்தாலும், அது நிரந்தரமாக அல்லது பல்லாண்டு காலம் பயன் அளிக்கும் ஒன்றாக இருக்கவேண்டும். அதாவது முஹம்மது குறைஷிகளில் இருந்த ஒரு பிறவி குருடனுக்கு

பார்வை கிடைக்கும் படி அற்புதம் செய்திருந்தால்? ஒரு முடவனை நடக்கும் படி செய்திருந்தால்? ஒரு ஊமையை பேசச்செய்திருந்தால்? கடைசியாக, மரித்த ஒரு சடலத்திற்கு உயிர் கொடுத்திருந்தால் எப்படி இருந்திருக்கும்?

பார்வை அடைந்த அந்த நபர் உயிரோடு இருக்கும் நாட்களெல்லாம், வருடங்களெல்லாம் அல்லாஹ்வின் நபிக்கு சாட்சியாக இருந்திருப்பான் அல்லவா? குறைஷிகளின் வாய்கள் அடைக்கப்பட்டு இருந்திருக்குமல்லவா? ஒரு ஊமையன் பேசியிருந்திருந்தால், அவன் மரிக்கும் வரை பேசும் ஒவ்வொரு வார்த்தையும் முஹம்மதுவின் நபித்துவத்தை நிரூபிக்கும் அத்தாட்சியாக இருந்திருக்கும் அல்லவா? இயேசுவின் அற்புதங்களை கண்டவர்கள், ஏதோ மேஜிக் செய்து இவர் எங்கள் கண்களை கட்டிவிட்டார் என்று சொல்லமுடியாது. ஏனென்றால், இயேசுவால் சுகமாக்கப்பட்டவன் கண்கள் திறக்கப்பட்டவன் யூதர்களுக்க்கு முன்பு நிற்கும் போது, அவர்களால் ஒன்றுமே செய்யமுடியவில்லை. அற்புதங்கள் என்பவைகள் ஒரு நபிக்கு முக்கியம், அதே நேரத்தில் அது ஒரு நாள் மட்டுமல்ல, பல ஆண்டுகள் தொடர்ந்து பேசிக்கொண்டே இருக்கும் அற்புதமாக இருக்கவேண்டும்.

இயேசு மறுரூப மலையில் சீடர்களுக்கு முன்பாக அற்புதமாக காட்சி அளித்து மோசேயுடன் பேசியது அற்புதமாக இருந்தாலும், அது சீடர்களுக்கு மட்டுமே தெரிந்த ஒன்று, இதனால் சீடர்களின் நம்பிக்கை வளரும், ஆனால், இதர மக்களுக்கு எந்த பயனுமில்லை.

முஹம்மது பல அற்புதங்களைச் செய்ததாக ஹதீஸ்கள் சொல்கின்றன என்று சில முஸ்லிம்கள் சொல்லக்கூடும். ஆனால், இப்படி நம்புபவர்கள் குர்-ஆனை மறுதலிக்கிறார்கள் என்று அர்த்தமாகின்றது, அதாவது குர்-ஆனின் படி முஹம்மது வெறும் எச்சரிக்கை செய்பவர் மட்டுமே ஆவார். ஆனால், அந்த ஹதீஸ்கள் குர்-ஆனுக்கு எதிராக சாட்சி இடுகின்றது என்று பொருள்படுகின்றது, மேலும் ஹதீஸ்களில் பொய்களும் கலந்திருக்கின்றது என்று முஸ்லிம்களுக்கும் தெரியும். கடைசியாக, ஹதீஸ்களில் காணப்படும் பெரும்பான்மையான ஹதீஸ்கள் எதிரிகளுக்கு முன்பாக செய்யப்பட்ட அற்புதங்கள் அல்ல, அவைகள் ஏற்கனவே முஸ்லிம்களாக இருப்பவர்களிடம் செய்யப்பட்டவைகள். எனவே வெளி உலகத்துக்கு, இதர மக்களுக்கு இதனால் பயனில்லை.

**முடிவுரை:** இதுவரை கண்ட விவரங்களின் படி, தன் நபியின் நம்பகத்தன்மையை நிரூபிக்க அல்லாஹ் 'பொது அறிவு' கேள்விகளை தெரிந்தெடுத்து அவைகளுக்கு மட்டுமே பதில் அளித்துள்ளார் என்பதை அறியமுடிகின்றது. பல முறை அற்புதங்களை கேட்டாலும் 'நான் செய்யமாட்டேன்' என்று பிடிவாதம் பிடித்துள்ளார். அரேபியாவிற்கு வெளியே வாழும் சாதாரணமாக படித்தவர்களுக்கும், யூதர்களுக்கும் தெரிந்திருந்த பதிலை வானத்திலிருந்து ஜிப்ரீலை அனுப்பி அல்லாஹ் பதில் கொடுத்தது நகைப்பிற்கு உரியது. மேலும், அவர் கொடுத்த பதிலில் காணப்படும் சரித்திர பிழைகள், கட்டுக்கதைகள் போன்றவை அல்லாஹ்வின் நம்பகத்தன்மையை இன்னும் குறைத்துவிடுகின்றது. அந்த மூன்று பதில்கள் முஹம்மதுவின் நபித்துவத்திற்கு எதிராக சாட்சி இடுகின்றது. ஒரு குக்கிராமத்தில் படிப்பறிவில்லாதவனாக வாழும் ஒரு பாமரன் தன் ஞானத்திற்கு எட்டாத சில பொது அறிவு கேள்விகளுக்கு பதில்களை அளித்துவிட்டால், அவரை நபியாக முஸ்லிம்கள் ஏற்றுக்கொள்வார்களா? என்று கேள்வி பதில் சொல்லப்படாமல் நிற்கிறது.

அடுத்த கட்டுரையில் அல்லாஹ் அளித்த அந்த மூன்று பதில்கள் ஆய்விற்காக எடுத்துக்கொள்ளப்படுகின்றது.

**மேலதிக விளக்கங்கள்:**

**சில முஸ்லிம்கள் என்னிடம் இப்படியாக கேட்கலாம்:**

**'சரி, யூதர்களுக்கும் படித்தவர்களுக்கும் தெரிந்த பதிலையே முஹம்மது சொன்னதாகவே இருக்கட்டும். ஆனால், படிப்பறிவில்லாதவர், மற்றவர்களிடம் பாடம் கற்காதவராகிய முஹம்மது எப்படி அந்த சரித்திர விவரங்களுக்கு பதிலை அளித்திருக்கமுடியும்?"**

**முதலாவதாக, முஹம்மது படிப்பறிவில்லாதவர் என்றுச் சொல்வது 100% உண்மையில்லை. குறைந்த பட்சம் கூட்டிகூட்டி எழுதவும், படிக்கவும் தெரியாதவர் எப்படி வெற்றிகரமான ஒரு சிறந்த வியாபாரியாக இருந்தார்? என்ற கேள்வி எழுகின்றது. இவரது வியாபார திறமையைப் பார்த்து தான் கதிஜா அவர்கள் இவரை நம்பி தம் வியாபாரத்தை ஒப்படைத்தார். எழுதப்படும் சில வார்த்தைகளைப் படித்து, எழுதப்படும் எண்களை படிக்கத் தெரியாதவர் எப்படி வியாபாரம் செய்யமுடியும்? முஹம்மதுவிற்கு குறைந்தபட்சம் எழுதவும், படிக்கவும் தெரியும் என்பதற்கு இஸ்லாமிலிருந்து ஆதாரங்கள் உள்ளன.**

**இரண்டாவதாக, பல ஆண்டுகள் இதர நாடுகளுக்கு முக்கியமாக, சிரியா போன்ற பகுதிக்குச் சென்று, வியாபாரம் புரிந்தவர் பல கதைகளையும், யூத கிறிஸ்தவ வேத நிகழ்ச்சிகளையும் வாய்வழியே முஹம்மது கற்று அறிந்திருப்பார் என்பதில் சந்தேகமில்லை. குர்-ஆனில் காணப்படும் பல நிகழ்ச்சிகளை கவனித்தால், பல கட்டுக்கதைகள், பொய்யான கதைகள் நிரம்ப இருப்பதை காணமுடியும்.**

**கடைசியாக, கேள்விகள் கேட்கப்பட்ட 15 நாட்களுக்கு பிறகு பதில்கள் வருகின்றன. அதுவும் கட்டுக்கதைகள் அடங்கிய பதில்கள் வருகின்றன. இந்த 15 நாட்களில் அவருக்கு எப்படி இவ்விவரங்கள் கிடைத்தன? என்பதை சந்தேகிக்க நம் எல்லோருக்கும் உரிமை உண்டு, ஏனென்றால், அந்த பதில்கள் அனைத்தும் கட்டுக்கதைகளாகும். அதனைப் பற்றி அடுத்த பதிவில் எழுதுகிறேன். மேலும், பொது அறிவு கேள்விகள் தான் முஹம்மதுவின் நபித்துவத்தை நிரூபிக்கும் அத்தாட்சிகள் என்று முஸ்லிம்கள் சொன்னால், அவர்கள் மிகப்பெரிய பிரச்சனையில் விழுவார்கள் என்பதையும் ஞாபகத்தில் வைத்துக்கொள்ளவேண்டும்.**

**அடிக்குறிப்புக்கள்:**

**[1] குறைஷிகளின் மாறுபட்ட பரீட்சை, பாரா அவர்கள் எழுதியவைகள்:**

*ஆகவே, சற்றே மாறுபட்ட விதத்தில் முகம்மதை இன்னொரு விதமாகவும் பரீட்சித்து, அவர் ஒரு பொய்யர்தான் என்பதை நிரூபிப்பது என்று முடிவு செய்தார்கள். இங்கேதான் அவர்களுக்கு யூதர்களின் நினைவு வந்தது. படித்த யூதர்கள். பண்டிதர்களான யூதர்கள். அறிவிற் சிறந்த யூதர்கள். யூத ரபிக்கள் (Rabbi). . . . அத்தகைய யூத மதகுருமார்களை அணுகி, தங்கள் பிரச்னைக்கு ஒரு தீர்வு கேட்பது என்று முடிவு செய்தார்கள், மெக்கா நகரத்து குறைஷிகள். (நிலமெல்லாம் இரத்தம் தொடர் 15. அந்த மூன்று வினாக்கள்).*

**[2] யூத ரபிக்கள் உதவி செய்ய முன்வருதல்:**

*ஆனால் அன்றைக்கு மெக்காவில் யூதர்கள் அதிகம் இல்லை. யூத குருமார்கள் ஒருவர்கூட இல்லை. ஆகவே, யத்ரிப் நகரில் (மெதினா நகரின் பண்டையகாலப் பெயர் இதுதான்.) வசித்துவந்த சில யூத ரபிக்களைச் சந்திக்க ஆள் அனுப்பினார்கள்.பிரச்னை இதுதான். முகம்மது ஓர் இறைத்தூதர்தானா? அவர் சொல்லுவதையெல்லாம் நம்பி, ஏற்பதற்கில்லை. மந்திரவாதியோ என்று சந்தேகப்படுகிறோம். என்ன செய்து அவரை பரீட்சித்தால் சரியாக இருக்கும்? ஆண்டாண்டு காலமாக இருந்துவரும் அரபுகளின் நம்பிக்கைகளை அவர்*

*கேள்விக்குள்ளாக்குகிறார். அடிப்படையே தகர்ந்துவிடும் போலிருக்கிறது. அரபுகளின் வழிபாட்டு உருவங்களை அவர் மதிப்பதில்லை. உருவமற்ற ஒரே இறைவன் என்றொரு புதிய கருத்தை முன்வைத்து மக்களை ஈர்க்கிறார். அவர் உண்மையா, போலியா என்று எங்களுக்குத் தெரிந்தாக வேண்டும். இதற்கு யூத குருமார்கள்தான் ஒரு வழி சொல்ல வேண்டும்.மெக்கா நகரத்து வணிகர்களின் இந்தக் கோரிக்கை, யத்ரிபில் வசித்துவந்த யூத குருமார்களின் சபைக்குப் போய்ச் சேர்ந்தது. அவர்கள், மெக்காவாசிகள் முகம்மது குறித்துச் சொன்ன ஒவ்வொரு தகவலையும் கூர்மையாக கவனித்துக் கேட்டார்கள். தமக்குள் நீண்டநேரம் ஆலோசனை நடத்தினார்கள். இறுதியில், முகம்மதுவைப் பரிசோதிக்க மூன்று வினாக்களை அவரிடம் கேட்கச் சொல்லி அரபுகளிடம் சொல்லி அனுப்பினார்கள்."இதுதான் பரீட்சை. இவைதான் கேள்விகள். இதற்கு மேலான கேள்விகள் என்று எதுவுமில்லை. இந்த மூன்று கேள்விகளுக்கும் அந்த முகம்மது என்ன பதில் தருகிறார் என்று கேட்டு வந்து சொல்லுங்கள். அவர் சொல்லும் பதில்கள் சரியானவையாக இருக்குமானால், சந்தேகத்துக்கு இடமில்லாமல் அவர் இறைத்தூதர்தான் என்று நீங்கள் நம்பலாம். பதில்கள் சரியில்லை என்றால், அவர் பித்தலாட்டக்காரர்தான் என்பதில் சந்தேகமில்லை"" என்று சொன்னார்கள்.யூத மதகுருமார்கள் எழுப்பிய அந்த மூன்று வினாக்களுக்கு சத்தியமாக எந்த அரேபியருக்கும் விடை தெரிய நியாயமில்லை. முகம்மது ஒரு அரேபியர். எழுதப்படிக்கத் தெரியாதவர். யாரிடமும் பாடம் கேட்டவரும் அல்லர். எனவே யூத குருமார்களுக்கு மட்டுமே விடை தெரிந்த அந்த வினாக்களுக்கு அவர் எப்படி பதில் சொல்லுகிறார் பார்க்கலாம் என்று புறப்பட்டார்கள் குறைஷிகள். (நிலமெல்லாம் இரத்தம் தொடர் 15. அந்த மூன்று வினாக்கள்).*

**[3] அந்த மூன்று வினாக்கள் எவைகள்?**

*ஆதிகாலத்தில் தமது சமூகத்தினரை விட்டுத் தனியே பிரிந்துபோன இளைஞர்கள் யார்? அவர்களின் பின்னணி என்ன? கிழக்கு, மேற்கு திசையெங்கும் பயணம் செய்து இரு எல்லைகளையும் தொட்ட பயணி யார்? அவரது சிறப்பு என்ன? ஆன்மா என்பது என்ன? (நிலமெல்லாம் இரத்தம் தொடர் 16. அபிசீனிய மன்னன் நஜ்ஜாஷி).*

**[4] அந்த மூன்று கேள்விகளின் தன்மை மற்றும் ஆழம்:**

*யூத மதகுருமார்களின் இந்த மூன்று வினாக்களுக்கு முகம்மது நபி என்ன பதில் சொன்னார் என்பது ஒருபுறம் இருக்கட்டும். இந்தக் கேள்விகளிலிருந்து உங்களுக்கு ஏதாவது புரிகிறதா? மேலோட்டமாகப் பார்த்தால் முதல் இரு வினாக்களும் வெறும் சொற்களால் இட்டு நிரப்பப்பட்டவை போலத் தெரிகிறதல்லவா? உள்ளர்த்தங்கள் ஏதுமின்றி, வெறுமனே வம்புக்குக் கேட்கப்பட்டதுபோல!உண்மையில் யூத மதகுருமார்களுக்கு வம்பு நோக்கம் ஏதுமில்லை. அர்த்தங்கள் பொருந்திய இந்த வினாக்களுக்கான விடைகளை அவர்கள் நிச்சயம் அறிவார்கள். சர்வநிச்சயமாக முகம்மதுவுக்கு விடைகள் தெரிந்திருக்காதென்று அவர்கள் நம்பியதுதான் இதில் முக்கியமாகக் கவனிக்க வேண்டிய விஷயம்.ஏனெனில், முதல் இரு வினாக்களுமே சரித்திரம் தொடர்பானவை. முகம்மது நபியின் காலமான கி.பி. ஏழாம் நூற்றாண்டுக்கு இது சரித்திர வினா என்றால், இக்கேள்விகளின் வயதை யூகித்துப் பார்க்கலாம். ஆதிகாலத்தில் பாதிக்காலம் அது. அதற்கும் முன்னால் பல நூற்றாண்டுகளுக்கு முன்பு நடந்த சங்கதிகளை உள்ளடக்கிய வினாக்கள் அவை. அப்புறம், இருக்கவே இருக்கிறது ஆன்மா. இன்றைக்கு வரை அது என்ன என்கிற வினாவும், அதற்கான விடைதேடும் ஞானியரும் இருக்கவே செய்கிறார்கள்.ஆகவே, எப்படியும் முகம்மது உண்மையான இறைத்தூதர்தானா என்பது இக்கேள்விகளை அவர் எப்படி எதிர்கொள்கிறார் என்பதிலிருந்து தெரிந்துவிடும் என்று குறைஷிகளுக்கு நம்பிக்கை சொல்லி அனுப்பிவைத்தார்கள், யூத ரபிக்கள் (நிலமெல்லாம் இரத்தம் தொடர் 16. அபிசீனிய மன்னன் நஜ்ஜாஷி)*

ஐஐஐஐஐ

# 16) புராணக்கதையின் குகைவாசிகளும் அல்லாஹ்வும்

**மதிப்பிற்குரிய பாரா அவர்களுக்கு,**

உங்களுடைய நிலமெல்லாம் இரத்தம் புத்தகத்தின் **15** மற்றும் **16**வது அத்தியாயத்தில், முஹம்மதுவின் நபித்துவத்தை சோதிப்பதற்காக குறைஷிகள் கேட்ட மூன்று கேள்விகள் பற்றி எழுதியுள்ளீர்கள். அவைகள் பற்றிய அறிமுகத்தை என் முந்தைய இரண்டு கட்டுரைகளில் **(14, 15)** எழுதியிருந்தேன்.

இந்த கட்டுரையில், அல்லாஹ் கொடுத்த பதில்கள் எப்படி குர்-ஆனின் நம்பகத்தன்மையை கெடுத்துப்போடுகின்றது என்பதை சுருக்கமாக காண்போம்.

**முதல் கேள்வி பற்றி பாரா அவர்கள் எழுதியது:**

> *// ஆதிகாலத்தில் தமது சமூகத்தினரை விட்டுத் தனியே பிரிந்துபோன இளைஞர்கள் யார்? அவர்களின் பின்னணி என்ன? . . .மேலோட்டமாகப் பார்த்தால் முதல் இரு வினாக்களும் வெறும் சொற்களால் இட்டு நிரப்பப்பட்டவை போலத் தெரிகிறதல்லவா? உள்ளர்த்தங்கள் ஏதுமின்றி, வெறுமனே வம்புக்குக் கேட்கப்பட்டதுபோல! உண்மையில் யூத மதகுருமார்களுக்கு வம்பு நோக்கம் ஏதுமில்லை. அர்த்தங்கள் பொருந்திய இந்த வினாக்களுக்கான விடைகளை அவர்கள் நிச்சயம் அறிவார்கள்.*
>
> . . .
>
> *அதன்பிறகு யூத ரபிக்கள் எழுப்பிய மூன்று வினாக்களுக்கும் விடைகள் வெளிவந்தன.முதலாவது, தமது சமூகத்தினரை விட்டுத் தனியே பிரிந்துபோன இளைஞர்களின் கதை. மத்திய ஆசியாவின் பிரசித்திபெற்ற புராணக் கதைகளுள் ஒன்று இது.அவர்கள் "இபேஸஸ் நித்திரையாளர்கள்" என்று அழைக்கப்பட்டவர்கள். கி.பி. மூன்றாம் நூற்றாண்டைச் சேர்ந்தவர்கள். அந்தக் காலத்திலேயே உருவமற்ற ஒரே பரம்பொருளை வணங்கிவந்த அந்த இளைஞர்களுக்கு, அவர்களது சமூகத்தினராலேயே பெரும் பிரச்னை உண்டானது. உலகமே சிலை வழிபாட்டில் மூழ்கியிருக்க, இவர்கள் மட்டும் ஒரே இறைவன், உருவமற்ற இறைவன் என்று சொல்வதைப் பொறுக்காத மக்கள், அவர்களுக்குப் பல சங்கடங்களை விளைவிக்கத் தொடங்கினார்கள்.ஆகவே, தமது மக்களை விட்டு விலகி அவர்கள் ஒரு மலைக் குகைக்குள் சென்று வசிக்கத் தொடங்கினார்கள். (மொத்தம் எத்தனைபேர் என்று தெரியவில்லை.) அவர்களை அஸ்ஹாபுல்கஹ்ஃப் (குகைத் தோழர்கள் என்று அர்த்தம்) என்று அழைப்பார்கள். குகைக்குள்ளே போனவர்கள், தம்மை மறந்து உறங்கவும் ஆரம்பித்தார்கள். (குகைக்குள் சென்றவர்களை இறைவனே காதுகளைத் தட்டிக்கொடுத்து உறங்கச் செய்ததாக குர்ஆன் கூறுகிறது. ஆதாரம்: அல் கஹ்ஃப் 18:11) சுமார் முந்நூறு வருட உறக்கம்! பிறகு அவர்களது கண்விழிப்பை, அறியாமையில் மூழ்கிக் கிடந்த மக்களின் விழிப்புணர்வுக்கு உருவகமாக வைத்து நிறைவடையும் கதை அது. //*

**பாராவின் படி குர்-ஆனில் புராணக்கதை (கட்டுக்கதை) உள்ளது:**

பாரா அவர்களே, உங்களின் கீழ்கண்ட வரிகள் என் வேலையை சுலபமாக்கிவிட்டது:

- **யூதர்கள் கேட்ட அந்த வினாக்களுக்கு விடை அவர்களுக்கு தெரிந்திருந்தது.**
- **மத்திய ஆசியாவின் பிரசித்திபெற்ற புராணக் கதைகளுள் ஒன்று இது.**

- அவர்கள் "இபேஸஸ் நித்திரையாளர்கள்" என்று அழைக்கப்பட்டவர்கள். கி.பி. மூன்றாம் நூற்றாண்டைச் சேர்ந்தவர்கள்.
- துன்புறுத்தல்களுக்கு பயந்து குகையில் பதுங்கியவர்கள் 300 ஆண்டுகளுக்கு மேல் தூங்கினார்கள்.

நீங்கள் இந்த கதை ஒரு புராணக்கதை என்று சுட்டிக்காட்டியுள்ளீர்கள். ஒரு கட்டுக்கதையை உண்மையான சரித்திர நிகழ்ச்சியாக குர்-ஆன் சொல்லியுள்ளதை மறைமுகமாக நீங்கள் சுட்டிக்காட்டியுள்ளீர்கள். இதிலிருந்து குர்-ஆன் ஒரு இறைவேதமல்ல என்பதை சொல்லிவிட்டீர்கள்.

குர்-ஆனில் காணப்படும் அனேக கட்டுக்கதைகளில் 'இந்த குகைவாசிகள்' பற்றிய கதையும் ஒன்று.

இந்த நிகழ்ச்சிப் பற்றி குர்-ஆன் 18:9-22, 25-26ல் சொல்லப்பட்டுள்ளது. இந்த வசனங்களை அடிக்குறிப்பு [1]ல் கொடுத்துள்ளேன். இப்போது இந்த கதை குர்-ஆனில் இருப்பதினால் அல்லாஹ்விற்கு உண்டாகும் பிரச்சனைகள் என்னவென்பதை சுருக்கமாக காண்போம்:

### 1) குகையில் ஒதுங்கியவர்கள் எத்தனைப் பேர் என்று அல்லாஹ்விற்கு தெரியவில்லை

ஒரு கட்டுக்கதையை உண்மையான சரித்திரம் என்று அல்லாஹ் பதிவு செய்து இருப்பது குர்-ஆனின் நம்பகத்தன்மையை சிதைக்கும் முதலாவது துப்பாகும். இரண்டாவதாக, அந்த குகையில் ஒதுங்கியவர்கள் எத்தனைப்பேர் என்று அல்லாஹ் சொல்லாமல் விட்டது, குர்-ஆன் மீதான சந்தேகத்தை உறுதிப்படுத்துகிறது. குர்-ஆன் 18:22ம் வசனத்தில் அல்லாஹ் குழப்பும் விதத்தை பாருங்கள்:

> 18:22. (அவர்கள்) மூன்று பேர் தாம்; அவர்களில் நான்காவது அவர்களுடைய நாய் என்று (சிலர்) கூறுகின்றனர், (இல்லை) அவர்கள் ஐந்து பேர் தாம்; - அவர்களில் ஆறாவது அவர்களுடைய நாய்'' என்று மறைவானதை ஊகம் செய்து (சிலர்) கூறுகிறார்கள்; இன்னும் (சிலர்) ''ஏழுபேர் - அவர்களில் எட்டாவது அவர்களுடைய நாய்'' என்று சொல்கிறார்கள் — (நபியே!) அவர்களுடைய எண்ணிக்கையை என்னுடைய இறைவன் தான் நன்கறிவான்; சிலரைத் தவிர, மற்றெவரும் அவர்களைப் பற்றி அறிய மாட்டார்கள்'' என்று கூறுவீராக! ஆகவே, அவர்களைப் பற்றி வெளிரங்கமான விஷயம் தவிர (வேறெது பற்றியும்) நீர் தர்க்கம் செய்ய வேண்டாம்; இன்னும் அவர்களைக் குறித்து இவர்களில் எவரிடமும் நீர் தீர்ப்புக் கேட்கவும் வேண்டாம்.

அந்த குகையில் ஒதுங்கியவர்கள் எத்தனைப் பேர்? என்ற கேள்விக்கு அல்லாஹ் தரும் பதில் இது தான் (இது பதிலா!?). சிலர் மூன்று பேர் என்றுச் சொல்கிறார்களாம், சிலர் ஐந்து பேர் என்றுச் சொல்கிறார்களாம், வேறு சிலர் ஏழு பேர் என்றுச் சொல்கிறார்களாம். கடைசி வரையிலும், எத்தனைப்பேர் என்று அல்லாஹ் கூட சொல்லவே இல்லை!

இதனை, பாரா அவர்கள் சரியாக சுட்டிக்காட்டினார், அதாவது இந்த கதை ஒரு புராணக்கதையாகும் அதாவது கட்டுக்கதையாகும். வாய்வழியாக கதைகள் உலாவும் போது, இப்படி ஒவ்வொரு இடத்திலும் வெவ்வேறான எண்ணிக்கைத் தான் வெளிப்படும்.

அல்லாஹ் இந்த கதையை சரித்திரக்கதை என்றுச் சொல்வதாக இருந்தால், ஏன் அவர் எண்ணிக்கையை சரியாகச் சொல்லவில்லை? மேலும், அந்த வசனத்தில் அல்லாஹ்வோடு

சேர்த்து, இன்னும் சிலருக்குத் தான் அந்த எண்ணிக்கைத் தெரியும் என்று அல்லாஹ் சுட்டிக்காட்டுகின்றான். ஆனால், அது என்ன எண்ணிக்கை என்று சொல்ல மறுத்துவிட்டான். அல்லாஹ்வின் இந்த அரைகுறையான பதில், கேட்ட கேள்விக்கு எப்படி சரியான பதிலாக அமையும்?

> *// (நபியே!) அவர்களுடைய எண்ணிக்கையை என்னுடைய இறைவன் தான் நன்கறிவான்; சிலரைத் தவிர, மற்றெவரும் அவர்களைப் பற்றி அறிய மாட்டார்கள்" என்று கூறுவீராக! //*

அல்லாஹ் சொன்ன இதே பதிலைத் தான், அக்கால பாமர மக்கள் கூட வாய்வழியாக கேட்டு அறிந்து வைத்திருப்பார்கள். முஹம்மதுவைப் போன்ற ஒரு வியாபாரியிடம் சென்று, 'நீ பல நாடுகளுக்குச் சென்று வியாபாரம் செய்து இருக்கிறாய். குகையில் ஒதுங்கிய அந்த வாலிபர்கள் பற்றிய கதையை நீ கேட்டு இருந்திருந்தால் அதைப் பற்றி சிறிது விளக்கமுடியுமா? என்று கேட்கும் போது, அவர் அல்லாஹ் சொன்னது போலத்தான் பதில் சொல்வார், 'சிலர் குகையில் ஒதுங்கியது 3 பேர் என்கிறார்கள், சிலர் 5 அல்லது 7 என்று சொல்பவர்கள் உண்டு, ஆனால், உண்மையான எண்ணிக்கை எனக்குத் தெரியாது என்றுச் சொல்வார்'.

இப்படிப்பட்ட அரைகுறை பதிலைச் சொன்ன அல்லாஹ் எப்படி சர்வ ஞானியாக இருக்கமுடியும்?

ஏதோ தவறான எண்ணிக்கையைச் சொல்லி ஏன் வீணாக மாட்டிக்கொள்ளவேண்டும்? எனவே, சிலர் இப்படிச் சொல்கிறார்கள்! சிலர் அப்படிச் சொல்கிறார்கள்! என்று சொல்லிவிட்டு எண்ணிக்கையைச் சொல்லாமல் அமைதியாக இருந்துவிட்டால் தப்பித்துக்கொள்ளலாம் என்ற தோரணையில் பதிலை கொடுத்துள்ளார் அல்லாஹ். இந்த தவறை சரியாக புரிந்துக்கொண்ட பாரா அவர்கள் கூட, கழுவுற மீனில் நழுவுற மீன் போல, நாஜூக்காக அடைப்பிற்குள் அல்லாஹ்வின் மானத்தை காப்பாற்ற முயன்றுள்ளார். பாரா அவர்களின் அந்த வரிகளை கீழே படியுங்கள்:

> *// ஆகவே, தமது மக்களை விட்டு விலகி அவர்கள் ஒரு மலைக் குகைக்குள் சென்று வசிக்கத் தொடங்கினார்கள். (மொத்தம் எத்தனைபேர் என்று தெரியவில்லை.) அவர்களை அஸ்ஹாபுல்கஹ்ஃப் (குகைத் தோழர்கள் என்று அர்த்தம்) என்று அழைப்பார்கள். //*

அடைப்பிற்குள் "**(மொத்தம் எத்தனைபேர் என்று தெரியவில்லை.)**" என்று எழுதிய பாரா அவர்கள் "யாருக்கு தெரியவில்லை?" என்று தெளிவாகச் சொல்லவில்லை. பாரா அவர்களுக்கு அந்த எண்ணிக்கை தெரியாது என்று எடுத்துக்கொள்வதா? அல்லது அல்லாஹ்விற்கே அதன் பதில் தெரியவில்லை என்று எடுத்துக்கொள்வதா?

முடிவாக, குகை தோழர்கள் பற்றிய குர்-ஆனின் விவரங்களை படிக்கும் போது, சரியான பதில் தெரியாமல் பல நாட்கள் தவித்த முஹம்மது, கடைசியாக இட்டுக்கட்டிய வசனங்கள் தான் இவைகள் என்பதை புரிந்துக்கொள்ளலாம். இதனை மறுப்பவர்கள், அந்த காலத்தில், வேறு யாருக்கும் தெரியாத ஒரு புதிய விவரம் இந்த வசனங்களில் என்ன இருக்கிறது? என்பதை சுட்டிக்காட்டட்டும்.

### 2) "இபேஸஸ் நித்திரையாளர்கள்"(Seven Sleepers of Ephesus):

குகை வாசிகள் பற்றிய விவரம், புகழ் பெற்ற புராணக்கதையாகும், முஹம்மதுவிற்கு வானத்திலிருந்து இறங்கிய அல்லாஹ்விற்கு மட்டும் தெரிந்த விவரமல்ல. பாரா அவர்களின் வரிகளை பாருங்கள்:

அ) யூதர்கள் கேட்ட அந்த வினாக்களுக்கு விடை அவர்களுக்கு (மதினா யூதர்களுக்கு) தெரிந்திருந்தது.

ஆ) மத்திய ஆசியாவின் பிரசித்திபெற்ற புராணக் கதைகளுள் ஒன்று இது.

இ) அவர்கள் "இபேஸஸ் நித்திரையாளர்கள்" என்று அழைக்கப்பட்டவர்கள். கி.பி. மூன்றாம் நூற்றாண்டைச் சேர்ந்தவர்கள்.

யூதர்கள் ஒரு ”பொதுஅறிவுக்” கேள்வியைத்தான் முஹம்மதுவிடம் கேட்கச் சொல்லியுள்ளார்கள். அதுவும், யூதர்கள் எதிரிகளாக கருதும் கிறிஸ்தவர்கள் பற்றிய புராணக்கதையைப் பற்றி கேட்கச்சொல்லியுள்ளார்கள். இந்த கதைக்கும் யூதர்களுக்கும் எந்த ஒரு சம்மந்தமுமில்லை. முஹம்மதுவின் காலத்தில் பாமர மக்கள் முதல், படித்தவர்கள் வரை பெரும்பான்மையானவர்களின் வாய்களில் உலாவிய கதையை முஹம்மது அரைகுறையாக அறிந்திருப்பதில் ஆச்சரியம் ஒன்றுமில்லை. ஆனால், பாரா போன்றவர்கள் தான், ஒன்றுமில்லாதவற்றை பிடித்துக்கொண்டு, ‘இந்த பதிலின் மூலமாக முஹம்மதுவின் நபித்துவம் நிரூபிக்கப்பட்டது’ என்று தம் தொடர் கட்டுரையில் எழுதுகிறார்கள் (பாரா அவர்கள் என்ன செய்யமுடியும்! முஸ்லிம்கள் சொன்னதைத் தானே அவரும் எழுதமுடியும்!).

இதைப் பற்றிய பொதுவான விவரங்களை அறிய இந்த தொடுப்பை சொடுக்கவும்: https://en.wikipedia.org/wiki/Seven_Sleepers

**முடிவுரை:**

ஒரு கட்டுக்கதையை அல்லாஹ் குர்-ஆனில் புகுத்தியுள்ளான், மேலும் அவன் கொடுத்த பதில் கூட அரைகுறையானதாக இருக்கிறது. குகையில் பதுங்கியவர்களின் எண்ணிக்கை எனக்குத் தெரியும் என்று அல்லாஹ் சொல்கிறான், ஆனால் உண்மையான எண்ணிக்கை என்னவென்று அல்லாஹ் கடைசி வரை சொல்லவில்லை. இதிலிருந்து என்ன தெரிகிறது? குகை பற்றிய வசனங்கள் முஹம்மதுவின் சொந்த சரக்கு ஆகும், அவைகள் சொர்க்கத்திலிருந்து இறங்கிய சரக்கு அல்ல. முஹம்மது இந்த பதிலை அளித்தால், நிச்சயமாக மக்கள், ”தூங்கியவர்கள் எத்தனை பேர்?” என்று கேட்பார்கள், அப்போது நீ அவர்களோடு அதிகமாக தர்க்கம் செய்யவேண்டாம் என்று அல்லாஹ் முஹம்மதுவிற்கு கட்டளையிடுகின்றான்.

(நபியே!) அவர்களுடைய எண்ணிக்கையை என்னுடைய இறைவன் தான் நன்கறிவான்; சிலரைத் தவிர, மற்றெவரும் அவர்களைப் பற்றி அறிய மாட்டார்கள்” என்று கூறுவீராக! ஆகவே, அவர்களைப் பற்றி வெளிரங்கமான விஷயம் தவிர (வேறெது பற்றியும்) நீர் தர்க்கம் செய்ய வேண்டாம்; இன்னும் அவர்களைக் குறித்து இவர்களில் எவரிடமும் நீர் தீர்ப்புக் கேட்கவும் வேண்டாம்.

சர்வத்தையும் அறிந்த ஞானியாக அல்லாஹ் இருந்திருந்தால், தூங்கியவர்களின் சரியான எண்ணிக்கையை சொல்லியிருக்கலாம் அல்லவா? மற்றவர்கள் சொல்வதெல்லாம் பொய்யாகும், ”நான் சொல்லும் எண்ணிக்கைத் தான் சரியானது” என்று சொல்லியிருக்கலாம்.

ஆனால், அவன் சொல்லவில்லை, ஏனென்றால், முஹம்மதுவிற்கு சரியான எண்ணிக்கை தெரியாது, எனவே, அல்லாஹ்வினால் சொல்லமுடியவில்லை.

இந்த அரைகுறை விவரத்திற்கு சில இஸ்லாமிய அறிஞர்கள் "எண்ணிக்கை முக்கியமல்ல, அந்த கதையிலிருந்து கற்றுக்கொள்ளும் பாடம் தான் முக்கியம், அதற்காகத் தான் அல்லாஹ் எண்ணிக்கையைச் சொல்லவில்லை" என்று ஒரு சப்பைக் கட்டுக் கட்டுவார்கள். அல்லாஹ் இப்படி அரைகுறை விவரம் சொன்னால் அது எப்படி முழுமையான பதிலாக அமையும்? இதிலிருந்து முஹம்மதுவின் நபித்துவம் எப்படி நிருபிக்கப்படும்?

அடுத்த கட்டுரையில், மீதமுள்ள இரண்டு பதில்களைப் பற்றி காண்போம்.

**அடிக்குறிப்புக்கள்:**

**[1] குர்-ஆன் 18:9-22, 25-26 (முஹம்மது ஜான் தமிழாக்கம்)**

**18:9.** (அஸ்ஹாபுல் கஹ்ஃபு என்ற குகையிலிருந்தோரைப் பற்றி) அந்த குகையிலிருந்தோரும், சாஸனத்தையுடையோரும் நம்முடைய ஆச்சரியமான அத்தாட்சிகளில் நின்றும் உள்ளவர்கள் என எண்ணுகிறீரோ?

**18:10.** அந்த இளைஞர்கள் குகையினுள் தஞ்சம் புகுந்த போது அவர்கள் "எங்கள் இறைவா! நீ உன்னிடமிருந்து எங்களுக்கு ரஹ்மத்தை அருள்வாயாக! இன்னும் நீ எங்களுக்கு எங்கள் காரியத்தை(ப் பலனுள்ள தாக)ச் சீர்திருத்தித் தருவாயாக!" என்று கூறினார்கள்.

**18:11.** ஆகவே நாம் அவர்களை எண்ணப்பட்ட பல ஆண்டுகள் வரை அக்குகையில் (தூங்குமாறு) அவர்களுடைய காதுகளின் மீது (திரையிட்டுத்) தடையேற்படுத்தினோம்.

**18:12.** பின்பு, (அக்குகையில் தங்கியிருந்த) இருபிரிவினர்களில் எப்பிரிவினர், தாங்கள் (குகையில்) தங்கியிருந்த கால அளவை நன்கு அறிந்திருந்தார்கள் என்பதைச் சோதிப்பதற்காக அவர்களை நாம் எழுப்பினோம்.

**18:13.** (நபியே!) நாம் உமக்கு அவர்களுடைய வரலாற்றை உண்மையைக் கொண்டு அறிவிக்கிறோம்; நிச்சயமாக அவர்கள் இளைஞர்கள் - தங்கள் இறைவன் மீது ஈமான் கொண்டார்கள்; இன்னும் நாம் அவர்களை நேர் வழியில் அதிகப்படுத்தினோம்.

**18:14.** அவர்கள் (கொடுமைக்கார அரசன் முன்னிலையில்) எழுந்து நின்று "வானங்களுக்கும், பூமிக்கும் இறைவனாகிய அவனே, எங்களுடைய இறைவன்; எக்காலத்தும் அவனையன்றி வேறு எவரையும் நாயனென்று அழைக்க மாட்டோம்; (அப்படிச் செய்தால் குஃப்ரில் கொண்டு சேர்க்கும்) - வரம்பு மீறியதைச் சொன்னவர்கள் ஆவோம்" என்று அவர்கள் உறுதியாகக் கூறிய நிலையில் அவர்கள் இதயங்களை நாம் வலுப்படுத்தினோம்.

**18:15.** எங்கள் சமூகத்தாராகிய அவர்கள் அவனையன்றி வேறு நாயனை ஏற்றுக் கொண்டிருக்கிறார்கள்; அவர்கள் அவற்றின் மீது தெளிவான அத்தாட்சியைக் கொண்டு வரவேண்டாமா? ஆகவே அல்லாஹ்வின் மீது பொய்யாக இட்டுக் கட்டுபவனை விட அநியாயக்காரன் யார்? (என்றும் கூறினார்கள்).

**18:16.** அவர்களையும், அவர்கள் வணங்கும் அல்லாஹ் அல்லாதவற்றையும் விட்டு விலகி நீங்கள், குகையின்பால் ஒதுங்கிக் கொள்ளுங்கள், உங்களுடைய இறைவன் தன்னுடைய

ரஹ்மத்திலிருந்து உங்களுக்கு விசாலமாகக் கொடுத்து, உங்கள் காரியத்தில் உணவு பிரச்சனையை உங்களுக்கு எளிதாக்கித் தருவான் (என்று அவர்களில் ஓர் இளைஞர் சொன்னார்).

**18:17.** சூரியன் உதயமாகும் போது (அவர்கள் மீது படாமல்) அது அவர்களுடைய குகையின் வலப்புறம் சாய்வதையும், அது அஸ்தமிக்கும் போது அது அவர்களுடைய இடப்புறம் செல்வதையும் நீர் பார்ப்பீர்; அவர்கள் அதில் ஒரு விசாலமான இடத்தில் இருக்கின்றனர் - இது அல்லாஹ்வின் அத்தாட்சிகளில் உள்ளதாகும், எவரை அல்லாஹ் நேர்வழியில் செலுத்துகிறானோ, அவரே நேர் வழிப்பட்டவராவார்; இன்னும், எவனை அவன் வழிகேட்டில் விடுகிறானோ, அவனுக்கு நேர் வழிகாட்டும் உதவியாளர் எவரையும் நீர் காணவே மாட்டீர்.

**18:18.** மேலும், அவர்கள் தூங்கிக் கொண்டிருந்தபோதிலும், நீர் அவர்களை விழித்துக் கொண்டிருப்பவர்களாகவே எண்ணுவீர்; அவர்களை நாம் வலப்புறமும் இடப்புறமுமாக புரட்டுகிறோம்; தவிர, அவர்களுடைய நாய் தன் இரு முன்னங்கால்களையும் வாசற்படியில் விரித்(துப் படுத்)திருக்கிறது; அவர்களை நீர் உற்றுப்பார்த்தால், அவர்களை விட்டும் வெருண்டு ஓடிப் பின்வாங்குவீர்; அவர்களில் நின்றும் உண்டாகும் பயத்தைக் கொண்டு நிரம்பிவிடுவீர்,

**18:19.** இன்னும் அவர்களிடையே ஒருவரையொருவர் கேட்டுக் கொள்வதற்காக நாம் அவர்களை இவ்வாறு எழுப்பினோம்; அவர்களிலிருந்து சொல்பவர் (ஒருவர்) ‘‘நீங்கள் எவ்வளவு நேரம் (நித்திரையில்) இருந்தீர்கள்?’’ எனக் கேட்டார்; ‘‘ஒரு நாள் அல்லது ஒரு நாளின் சிறிது பாகம் தங்கியிருந்தோம்’’ எனக் கூறினார்கள்; (மற்றவர்கள்) ‘‘நீங்கள் (நித்திரையில்) இருந்த காலத்தை உங்கள் இறைவன்தான் நன்கு அறிந்தவன்; ஆகவே, உங்களில் ஒருவரை இந்த வெள்ளிக் காசுடன் பட்டணத்திற்கு அனுப்புங்கள்; அவர்கள் சுத்தமான ஆகாரம் எது என்பதை நன்கு கவனித்து, அதிலிருந்து ஆகாரத்தை உங்களுக்காகக் கொண்டு வரட்டும்; மேலும் அவர் எச்சரிக்கையாக இருக்கட்டும்; உங்களைப் பற்றி எவருக்கும் அவர் அறிவித்து விட வேண்டாம் (என்றனர்).

**18:20.** ஏனென்றால், நிச்சயமாக அவர்கள் உங்களை அறிந்து கொண்டால், உங்களைக் கல்லாலடித்துக் கொன்றுவிடுவார்கள்; அல்லது தங்களுடைய மார்க்கத்தில் உங்களை மீட்டி விடுவார்கள்; அப்புறம், நீங்கள் ஒருபோதும் வெற்றியடைய மாட்டீர்கள்’’ (என்றும் கூறினர்).

**18:21.** இன்னும், நிச்சயமாக அல்லாஹ்வின் வாக்குறுதி உண்மையானது என்றும், நிச்சயமாக கியாம நாளிலும் சந்தேகமில்லை என்றும் அப்பட்டணவாசிகள் அறிந்து கொள்வதற்காகவே, இவ்வாறு அவர்களைப் பற்றிய (விஷயத்)தை வெளியாக்கினோம்; (அப்பட்டணவாசிகளோ) ‘‘இவர்கள் யார் என்பதை பற்றி தர்க்கித்துக் கொண்டதை (நபியே! நினைவு கூறும்) ‘‘இவர்கள் (இருந்த இடத்தின்) மீது ஒரு கட்டடத்தைக் கட்டுங்கள்; இவர்களை(ப் பற்றி) இறைவனே நன்கறிவான் என்றனர்; இ(வ்விவாதத்)தில் எவர்களுடைய கருத்து மிகைத்ததோ அவர்கள்: ‘‘நிச்சயமாக அவர்கள் மீது ஒரு மஸ்ஜிதை அமைப்போம்’’ என்று கூறினார்கள்.

**18:22.** (அவர்கள்) மூன்று பேர் தாம்; அவர்களில் நான்காவது அவர்களுடைய நாய் என்று (சிலர்) கூறுகின்றனர்(இல்லை) அவர்கள் ஐந்து பேர் தாம்; - அவர்களில் ஆறாவது அவர்களுடைய நாய்’’ என்று மறைவானதை ஊகம் செய்து (சிலர்) கூறுகிறார்கள்; இன்னும் (சிலர்) ‘‘ஏழுபேர் - அவர்களில் எட்டாவது அவர்களுடைய நாய்’’ என்று சொல்கிறார்கள் - (நபியே!) அவர்களுடைய எண்ணிக்கையை என்னுடைய இறைவன் தான் நன்கறிவான்; சிலரைத் தவிர, மற்றெவரும் அவர்களைப் பற்றி அறிய மாட்டார்கள்’’ என்று கூறுவீராக! ஆகவே, அவர்களைப் பற்றி வெளிரங்கமான விஷயம் தவிர (வேறெது பற்றியும்) நீர் தர்க்கம்

செய்ய வேண்டாம்; இன்னும் அவர்களைக் குறித்து இவர்களில் எவரிடமும் நீர் தீர்ப்புக் கேட்கவும் வேண்டாம்.

**18:25.** அவர்கள் தங்கள் குகையில் முன்னூறு வருடங்களுடன் மேலும் ஒன்பது அதிகமாக்கி (முன்னூற்றி ஒன்பது வருடங்கள்) தங்கினார்கள்.

**18:26.** "அவர்கள் (அதில்) தரிப்பட்டிருந்த (காலத்)தை அல்லாஹ்வே நன்கறிந்தவன்; வானங்களிலும் பூமியிலும் மறைவாய் இருப்பவை அவனுக்கே உரியனவாகும்; அவற்றை அவனே நன்றாக பார்ப்பவன்; தெளிவாய்க் கேட்பவன் - அவனையன்றி அவர்களுக்கு உதவி செய்வோர் எவருமில்லை, அவன் தன்னுடைய அதிகாரத்தில் வேறு எவரையும் கூட்டாக்கிக் கொள்வதுமில்லை" என்று (நபியே!) நீர் கூறும்.

ꕤꕤꕤꕤ

# 17) மகா அலேக்சாண்டர் தான் துல்கர்னைன் அரசனா?

**இதுவரை:**

கடந்த ஆண்டு (2016) **ரமளான் மாத தொடர் கட்டுரைகளுக்காக**, பா ராகவன் அவர்கள் எழுதிய நிலமெல்லம் இரத்தம் புத்தகத்தை எடுத்து தூசு தட்டினேன். நான் 15வது பதிலை முடிக்கும் போது, பீஜே அவர்களின் குகைவாசிகள் என்ற விளக்கவுரைக்கு பதில் கொடுக்க நேரிட்டது, எனவே அதனை கையில் எடுத்தேன். பீஜே அவர்கள் தம்முடைய விளக்கவுரையில் சவக்கடல் பற்றி தம்முடைய தகுதிக்கும் திறமைக்கும் ஏற்காத விளக்கத்தை கொடுத்தபடியினால், அந்த சவக்கடலில் அவரையும், அவரது கண்மூடித்தனமான வாதங்களையும் கொஞ்சம் முக்கி எடுக்கலாம் என்று எண்ணி, சவக்கடல் பற்றிய **ஒரு சுருக்கமான விளக்கத்தை தொகுத்து எழுதினேன்.** சவக்கடலில் இப்படி முக்கி எடுத்தாலாவது, அந்த அறியாமை அவரை விட்டு அகலும் என்ற ஆசையில் இப்படி செய்தேன். முக்கி எடுக்கும் படலம் முடிந்து திரும்பி பார்க்கும் போது, ரமளானும் முடிந்துவிட்டது, எனவே பாராவை கொஞ்சம் பாராமல் விட்டுவிட்டேன். 2017ம் ஆண்டின் ரமளானும் இதோ வந்துவிட்டது. இவ்வாண்டு, நிலமெல்லாம் இரத்தத்தில் பாராவை முக்கி எடுக்கலாம் என்று எண்ணி, விட்ட இடத்திலிருந்து தொடருகிறேன்.

**துல்கர்னைனும் இஸ்லாமும்**

முஹம்மதுவின் நபித்துவத்தை சோதிப்பதற்காக யூதர்கள் கேட்கச்சொன்ன மூன்று கேள்விகளில், முதலாவது கேள்வி பற்றி **முந்தைய கட்டுரைகளில்** கண்டோம். இப்போது, இரண்டாவது கேள்வி பற்றி பாரா அவர்கள் எழுதிய சில வரிகளை சுருக்கமாக கண்டு, அதன் பிறகு நம் விமர்சனத்தை முன்வைப்போம்.

**பாரா அவர்கள் எழுதியது:**

> *// நிலமெல்லாம் ரத்தம் 16 - அபிசீனிய மன்னன் நஜ்ஜாஷி*
>
> *"ஆதிகாலத்தில் தமது சமூகத்தினரை விட்டுத் தனியே பிரிந்துபோன இளைஞர்கள் யார்? அவர்களின் பின்னணி என்ன? கிழக்கு, மேற்கு திசையெங்கும் பயணம் செய்து*



http://www.answering-islam.org/tamil/authors/umar/ramalan/2016ramalan.html

*இரு எல்லைகளையும் தொட்ட பயணி யார்? அவரது சிறப்பு என்ன? ஆன்மா என்பது என்ன? யூத மதகுருமார்களின் இந்த மூன்று வினாக்களுக்கு முகம்மது நபி என்ன பதில் சொன்னார் என்பது ஒருபுறம் இருக்கட்டும். இந்தக் கேள்விகளிலிருந்து உங்களுக்கு ஏதாவது புரிகிறதா?"*

. . .

*"சர்வநிச்சயமாக முகம்மதுவுக்கு விடைகள் தெரிந்திருக்காதென்று அவர்கள் நம்பியதுதான் இதில் முக்கியமாகக் கவனிக்க வேண்டிய விஷயம். ஏனெனில், முதல் இரு வினாக்களுமே சரித்திரம் தொடர்பானவை. முகம்மது நபியின் காலமான கி.பி. ஏழாம் நூற்றாண்டுக்கு இது சரித்திர வினா என்றால், இக்கேள்விகளின் வயதை யூகித்துப் பார்க்கலாம். ஆதிகாலத்தில் பாதிக்காலம் அது. அதற்கும் முன்னால் பல நூற்றாண்டுகளுக்கு முன்பு நடந்த சங்கதிகளை உள்ளடக்கிய வினாக்கள் அவை."*

. . .

*அதன்பிறகு யூத ரபிக்கள் எழுப்பிய மூன்று வினாக்களுக்கும் விடைகள் வெளிவந்தன.*

. . .

*யூத ரபிக்களின் இரண்டாவது வினா, கிழக்கையும் மேற்கையும் பயணத்தால் அளந்த யாத்ரீகரைப் பற்றியது. அவரது பெயர், துல்கர்னைன். (இச்சொல்லுக்கு இரண்டு கொம்புகள் உடையவர் என்று பொருள்.) //*

**இங்கு கவனிக்கவேண்டிய முக்கியமான விஷயம் என்னவென்றால், துல்கர்னைன் என்பவன் பற்றி பாரா அவர்கள் எழுதியது இரண்டு வரிகள் தான். ஆனால், குர்ஆனில் பல வசனங்கள் துல்கர்னைன் பற்றி சொல்லப்பட்டுள்ளது. குர்-ஆன் விவரித்த துல்கர்னைன் நிகழ்ச்சி ஒரு சரித்திர நிகழ்ச்சி என்று பாரா அவர்கள் கருதியது வருத்தப்படவேண்டிய விஷயம்.**

**துல்கர்னைன் என்பவன் யார்? அவனைப் பற்றி குர்ஆன் சொல்லும் விவரங்கள் என்ன? அவ்விவரங்களில் உள்ள சரித்திர பிழைகள் என்னவென்பதை சுருக்கமாக காண்போம். முஹம்மது சுயமாக தன் பொது அறிவை பயன்படுத்தி பதில் அளித்தார், அதனால் தான் அந்த பதிலில் சரித்திர பிழைகள் உள்ளது என்று சொல்வதற்கு இல்லை. ஏனென்றால், அந்த பதிலை கொடுத்தவன் முக்காலங்களையும் அறிந்தவன் என்று போற்றப்படும் அல்லாஹ். எனவே, கடந்த கால சரித்திர விவரங்களை அல்லாஹ் சொல்லும் போது அவைகளை குர்-ஆன் பதிக்கும் போது, அவைகளில் பிழைகள் இருக்கக்கூடாது.**

**துல்கர்னைன் பற்றி குர்ஆனின் வசனங்கள்:**

**குர்ஆன் பதினேழு வசனங்களில் (குர்ஆன் 18:83-99), துல்கர்னைன் பற்றி விவரிக்கிறது. ஆனால், பாரா அவர்கள் வெறும் இரண்டு வரிகளில் மேலோட்டமாக தொட்டுவிட்டு முடித்துவிட்டார். ஒருவேளை, குர்-ஆனின் இந்த கட்டுக்கதைப் பற்றிய முழுவிவரமும் பாரா அவர்களுக்கு தெரிந்திருக்குமோ!?!**

**குர்ஆனின் மேற்கண்ட பதினேழு வசனங்களை ஆய்வு செய்யும் போது, பல சரித்திர பிழைகளை குர்ஆன் செய்துள்ளதை காணமுடியும்.**

**குர்ஆனில் 17 வசனங்களில் துல்கர்னைன் என்பவரைப் பற்றி சொல்லப்பட்டுள்ளது:**

**குர்ஆன் 18:83-99**

**18:83.** (நபியே!) அவர்கள் துல்கர்னைனை பற்றி உங்களிடம் வினவுகின்றனர்; "அவருடைய வரலாற்றில் சிறிது உங்களுக்கு நான் ஓதிக் காண்பிக்கிறேன்" என்று நீர் கூறுவீராக.

**18:84.** நிச்சயமாக நாம் அவருக்கு பூமியில் (தம் ஆட்சியை நிறுவ) வசதிகள் அளித்தோம்; இன்னும் ஒவ்வொரு பொருளிலிருந்தும் (தக்க பலனடையும்) வழியையும் அவருக்குக் (காண்பித்துக்) கொடுத்தோம்.

**18:85.** ஆகவே (அவர்) ஒரு வழியைப் பின் பற்றினார்.

**18:86.** சூரியன் மறையும் (மேற்குத்) திசைவரை அவர் சென்றடைந்த போது, அது ஒரு சேறு கலந்த நீரில் (மூழ்குவதுபோல்) மறையக் கண்டார்; இன்னும் அவர் அவ்விடத்தில் ஒரு சமூகத்தினரையும் கண்டார்; "துல்கர்னைனே! நீர் இவர்களை(த் தண்டித்து) வேதனை செய்யலாம்; அல்லது அவர்களுக்கு அழகியதான நன்மை செய்யலாம்" என்று நாம் கூறினோம்.

**18:87.** (ஆகவே அம்மக்களிடம் அவர்) கூறினார்: "எவன் ஒருவன் அநியாயம் செய்கிறானோ அவனை நாம் வேதனை செய்வோம்." பின்னர் அ(த்தகைய)வன் தன் இறைவனிடத்தில் மீள்விக்கப்பட்டு, (இறைவனும்) அவனைக் கடுமையான வேதனையைக் கொண்டு வேதனை செய்வான்.

**18:88.** ஆனால், எவன் ஈமான் கொண்டு (ஸாலிஹான) - நல்ல - செயல்களைச் செய்கிறானோ அவனுக்கு அழகான நற்கூலி இருக்கிறது; இன்னும் நம்முடைய கட்டளைகளில் இலகுவானதை அவனுக்கு நாம் கூறுவோம்.

**18:89.** பின்னர், அவர் (மற்றும்) ஒரு வழியைப் பின்பற்றிச் சென்றார்.

**18:90.** அவர் சூரியன் உதயமாகும் (கிழக்குத்) திசையை எத்திய போது, அது ஒரு சமூகத்தாரின் மீது உதயமாகி (அவர்கள் வெயிலில்) இருப்பதைக் கண்டார்; அவர்களுக்கும் சூரியனுக்குமிடையே நாம் ஒரு தடுப்பையும் ஏற்படுத்தவில்லை.

**18:91.** (வெப்பத்திலிருந்து தம்மைக் காத்துக் கொள்ளாத அவர்களுடைய நிலை) அவ்வாறுதான் இருந்தது; இன்னும் என்னென்ன அவருடன் இருந்தது என்பதை நாம் நன்கறிந்திருக்கிறோம்.

**18:92.** பின்னர், அவர் (வேறொரு) வழியைப் பின்பற்றிச் சென்றார்.

**18:93.** இரு மலைகளுக்கிடையே (இருந்த ஓரிடத்தை) அவர் எத்தியபோது, அவ்விரண்டிற்கும் அப்பால் இருந்த ஒரு சமூகத்தாரைக் கண்டார். அவர்கள் எந்தச் சொல்லையும் விளங்கிக் கொள்பவராக இருக்கவில்லை;

**18:94.** அவர்கள் "துல்கர்னைனே! நிச்சயமாக யஃஜூஜும், மஃஜூஜும் பூமியில் ஃபஸாது - குழப்பம் - செய்கிறார்கள்; ஆதலால், எங்களுக்கும், அவர்களுக்குமிடையே ஒரு தடுப்பு(ச் சுவரை) நீர் ஏற்படுத்தித் தரும் பொருட்டு நாங்கள் உமக்கு ஒரு தொகையைத் தரலாமா?" என்று கேட்டார்கள்.

**18:95.** அதற்கவர்: ''என் இறைவன் எனக்கு எதில் (வசதிகள்) அளித்திருக்கிறானோ அது (நீங்கள் கொடுக்க இருப்பதைவிட) மேலானது; ஆகவே, (உங்கள் உடல்) பலம் கொண்டு எனக்கு நீங்கள் உதவி செய்யுங்கள்; நான் உங்களுக்கும், அவர்களுக்குமிடையே ஓர் உறுதியான தடுப்பை ஏற்படுத்தி விடுகிறேன்'' என்று கூறினார்.

**18:96.** ''நீங்கள் இரும்புப் பாளங்களை எனக்குக் கொண்டு வாருங்கள்'' (என்றார்). பிறகு அவை இரு மலைகளின் (இடையே நிரம்பி) உச்சிக்குச் சமமாகும் போது, ஊதுங்கள் என்றார்; அதனை அவர் நெருப்பாக ஆக்கியதும் (பின்னர் ''உருக்கிய) செம்பை என்னிடம் கொண்டு வாருங்கள்; அதன் மேல் ஊற்றுகிறேன்'' (என்றார்).

**18:97.** எனவே, (யஃஜூஜ், மஃஜூஜ் கூட்டத்தார்) அதன் மீது ஏறவும் சக்தி பெறவில்லை, அதில் துவாரமிடவும் அவர்கள் சக்தி பெறவில்லை.

**18:98.** ''இது என் இறைவனிடமிருந்துள்ள ஒரு கிருபையே ஆகும், ஆனால் என் இறைவனுடைய வாக்குறுதி நிறைவேறும்போது, அவன் இதனையும் தூள் தூளாக்கி விடுவான்; மேலும், என் இறைவனுடைய வாக்குறுதி (முற்றிலும்) உண்மையானதே'' என்று கூறினார்.

**18:99.** இன்னும், அந்நாளில் அவர்களில் சிலரைச் சிலருடன் (கடல்) அலைகள் (மோதுவதைப் போல்) மோதுமாறு நாம் விட்டு விடுவோம்; பின்னர், ஸூர் (எக்காளம்) ஊதப்படும்; பிறகு நாம் அவர்களை ஒன்று சேர்ப்போம். (டாக்டர். முஹம்மது ஜான் தமிழாக்கம்)

**மேற்கண்ட வசனங்களிலிருந்து துல்கர்னைன் பற்றி அறியப்படுபவைகள்:**

**1)** அவர் ஒரு நல்ல அல்லாஹ்வின் அடியார், அதாவது அல்லாஹ்வை தொழுதுக்கொள்ளும் முஸ்லிம்.

**2)** அவர் ஒரு மகா அரசன், அல்லாஹ் அவருக்கு விசாலமான ஆட்சி அதிகாரத்தை கொடுத்து இருந்தான்.

**3)** அவருக்கு அல்லாஹ் வெளிப்பாடுகளையும் கொடுத்திருந்தான், அதாவது முஹம்மதுவோடு பேசியது போல, இவரோடும் அல்லாஹ் பேசியுள்ளான். முஹம்மதுவிடம் ஜிப்ரீல் தூதனை அனுப்பி அல்லாஹ் பேசினான், இவரோடு நேரடியாக பேசினானோ அல்லது தூதர்களை அனுப்பி பேசினானோ தெரியாது. ஆனால், இவரோடு அல்லாஹ் பேசியதற்கு குர்ஆனே சாட்சி.

**4)** கடைசி காலத்தில் நடக்கவிருக்கும் நிகழ்ச்சிகளை முன்னறிவிப்புக்களாக (தீர்க்கதரிசனங்களாக) இவர் அல்லாஹ்வின் உதவியுடன் அறிவித்துள்ளார்.

**5)** மொத்தத்தில் இவர் முஹம்மதுவைப் போல ஒரு நபி.

**இந்த துல்கர்னைன் யார்? மகா அலேக்சாண்டரா?**

இப்படிப்பட்ட சிறப்பு குணங்களைப் பெற்ற அல்லாஹ்வின் நல்லடியாராகிய இவர் யார்? துல்கர்னைன் என்பது ஒரு பட்டப்பெயர், அது உண்மையான பெயர் அல்ல.

துல்கர்னைன் என்றுச் சொன்னால், அரபி மொழியில் "இரண்டு கொம்புகளை உடையவர் அல்லது இரண்டு கொம்புகளுக்கு சொந்தக்காரர்" என்று அர்த்தம். இவருடைய சொந்தப்பெயரையும், வாழ்ந்த காலத்தையும் குர்ஆன் குறிப்பிடாததினால், இஸ்லாமிய அறிஞர்கள் குழம்பிப்போய் இருக்கிறார்கள். ஒன்றை மட்டும் நிச்சயமாகச் சொல்லமுடியும், இவர் கி.பி. 7ம் நூற்றாண்டுக்கு முன்பு வாழ்ந்தவராக இருந்திருக்கிறார். ஏனென்றால், முஹம்மதுவின் காலத்துக்கு முன்பு வாழ்ந்த இவரின் சரித்திரத்தை ஓதிக்காண்பிப்பதாக குர்ஆன் வசனம் சொல்கிறது (18:83). பாரா அவர்கள் எழுதும் போது இவரது காலம் பற்றி தம்முடைய சிறப்பான பாணியில் ‘ஆதிகாலத்தில் பாதிக்காலம் அது’ என்று அழகாக குறிப்பிட்டுள்ளார்.

**துல்கர்னைன் மகா அலேக்சாண்டர் தான்:**

பல இஸ்லாமிய சரித்திர ஆசிரியர்கள், குர்ஆனின் விளக்கவுரைகளை எழுதிய அறிஞர்கள் 'இந்த துல்கர்னைன் என்பவர் மகா அலேக்சாண்டர்' என்று குறிப்பிட்டுள்ளார்கள்.

**இப்னு இஷாக் (சீரத் ரஸூலல்லாஹ்):**

இஸ்லாமிய சரித்திர ஆசிரியர் இப்னு இஷாக், இந்த துல்கர்னைன் என்பவர் 'எகிப்து மற்றும் கிரேக்கத்துக்கு சம்மந்தப்பட்டவன்' என்றுச் சொல்கிறார்.

> **A man who used to purvey stories of the foreigners, which were handed down among them, told me that Dhul-Qarnayn was an Egyptian whose name was Marzuban bin Mardhaba, the Greek. (page 139)**

**இப்னு இஷாம்:**

சரித்திர ஆசிரியர் இப்னு இஷாம், துல்கர்னைன் என்பவர் 'மகா அலேக்சாண்டர்' என்று குறிப்பிடுகிறார்.

> **Dhu al-Qarnain is Alexander the Greek, the king of Persia and Greece, or the king of the east and the west, for because of this he was called Dhul-Qarnayn [meaning, 'the two-horned one']**

**இஸ்லாமுக்கு முன்பு எழுதப்பட்ட பாடல்களில் துல்கர்னைன்:**

இஸ்லாமுக்கு முன்பு எழுதப்பட்ட கவிதைகளில் துல்கர்னைன் பற்றி குறிப்பிடப்பட்டுள்ளதை இப்னு இஷாக் தம் சரித்திரத்தில் பதிவு செய்துள்ளார்.

> **Dhu’l-Qarnayn before me was a Muslim**
> **Conquered kings thronged his court,**
> **East and west he ruled, yet he sought**
> **Knowledge true from a learned sage.**
> **He saw where the sun sinks from view**
> **In a pool of mud and fetid slime**
> **Before him Bilqis [Queen of Sheba] my father's sister**
> **Ruled them until the hoopoe came to her. (Page 12).**

**தஃப்ஸீர்கள் (குர்ஆன் விளக்கவுரைகள்)**

**ஜலலைன் தஃப்ஸீர்:**

இஸ்லாமிய அறிஞர் ஜலலைன் தம் குர்ஆன் விளக்கவுரையில், துல்கர்னைன் என்பவர் மகா அலேக்சாண்டர் என்று விளக்கமளித்துள்ளார். ஆனால், அவர் நபி அல்ல என்றுச் சொல்கிறார்.

> **And they the Jews question you concerning Dhū'l-Qarnayn whose name was Alexander; he was not a prophet. Say 'I shall recite relate to you a mention an account of him' of his affair. (Soure)**

அல் ராஜி **(Fakhr al-Din al-Razi - 1149-1209 AD)** என்ற அறிஞர் தம்முடைய அல்கபீர் என்ற தஃப்ஸீரில், துல்கர்னைன் என்பவர் அலேக்சாண்டர் தான் என்று குறிப்பிட்டுள்ளார்.

> **While a survey in the history we do not find anybody other than Macedonian Alexander, therefore, the Dhul Qarnayn is the same Macedonian Alexander. (Razi, Tafsir al-Kabir, commenting on Q. 18:83-98).**

அல்துல்லாஹ் யூசுஃப் அலி **(1872-1953 AD)** என்ற இஸ்லாமிய அறிஞர் (குர்ஆன் ஆங்கில மொழியாக்கம் செய்தவர்) கூட, துல்கர்னைன் என்பவர் அலேக்சாண்டர் என்றே அடையாளப்படுத்துகிறார் **( The Holy Quran, Translation and Commentary by Yusuf Ali, Appendix 7, page 763 (1983)).**

துல்கர்னைன் என்பவன் மகா அலேக்சாண்டர் இல்லை என்றுச் சொல்பவர்கள், இப்பெயரின் பொருள் என்னவென்பதை பார்க்க தவறுகிறார்கள். துல்கர்னைன் என்றால், 'இரண்டு கொம்புகளை உடையவன்' என்று பொருள். இதே பெயர் மகா அலேக்சாண்டருக்கும் இருந்தது என்பது குறிப்பிடத்தக்கது. கி.மு. இரண்டாம் நூற்றாண்டிலே, அலேக்சாண்டரின் பெயரில், அவரது முகம் பதித்த வெள்ளி நாணயம் வெளியிடப்பட்டது, அதில் அலேக்சாண்டர் கொம்புகளை (ஆட்டைப்போல) உடையவராக காணப்படுகிறார். **[1]**

யூத சரித்திர ஆசிரியர், ஜோசபஸ் (கி.பி. **30** விருந்து கி.பி. **100**), தம்முடைய சரித்திரத்தில் அலேக்சாண்டர், ஜெருசலேமை பிடிக்க வந்தது பற்றி குறிப்பிட்டுள்ளார். **[1]**

அலேக்சாண்டர் ஜெருசலேமில் வந்த போது, யூத பிரதான ஆசாரியன், தானியேல் **8:3-8**ல் தீர்க்கதரிசனமாக சொல்லப்பட்ட வசனங்களை எடுத்துக்காட்டி, அங்கு குறிப்பிடப்பட்டுள்ள "இரண்டு கொம்புகளுள்ள ஒரு ஆட்டுக்கடா" என்பது கிரேக்க அரசனாகிய உம்மை குறிக்கும் என்றுச் சொன்னாராம். அவ்வசனங்களின் படி, பெர்சிய அரசனை வெல்லும் அந்த கிரேக்க அரசன் நீர் தான் என்று எடுத்துக்காட்டினாராம். அதனைக் கண்டு, ஜெருசலேமை பிடிக்காமல் அலேக்சாண்டர் சென்றுவிட்டாராம்.

இது மட்டுமல்ல, இஸ்லாமுக்கு முன்பு, பல கட்டுக்கதைகள் அலேக்சாண்டர் பற்றி கிறிஸ்தவ வட்டாரங்களில் உலாவிக்கொண்டு இருந்தன. அவைகளில், இரண்டு கொம்புகள் பற்றிய விவரமும், அவர் அலேக்சாண்டர் என்றும் சொல்லப்பட்டுள்ளது **[1].**

இப்படி பலவிதங்களில், இரண்டு கொம்புகளை உடையவன் (துல்கர்னைன்) என்பவன் அலேக்சாண்டர் தான் என்று பரவலாக அறியப்பட்ட விவரமாக இருந்துள்ளது.

**முடிவுரை:**

இதுவரை பார்த்த விவரங்களின் படி, துல்கர்னைன் என்பவர் யார் என்று அல்லாஹ் குறிப்பிடாதபடியினால், இஸ்லாமிய அறிஞர்கள் தங்கள் புத்திக்கு எட்டிய அளவிற்கு ஆய்வு செய்து, அவர் அலேக்சாண்டர் என்று சொல்லியுள்ளார்கள். துல்கர்னைனுக்கும், மகா அலேக்சாண்டருக்கும் இடையே பல ஒற்றுமைகள் காணப்படுவதினால், இந்த முடிவிற்கு வந்துள்ளார்கள். வேறு சில முஸ்லிம்கள், அவர் அலேக்சாண்டர் அல்ல, அவர் சைரஸ் என்ற அரசர் என்றுச் சொல்கிறார்கள். இதைப் பற்றி இன்னொரு கட்டுரையில் காண்போம்.

அலேக்சாண்டரையும் ஏற்கமாட்டோம், சைரஸையும் ஏற்கமாட்டோம் என்று முஸ்லிம்கள் சொல்ல முடியாது. ஏனென்றால், துல்கர்னைன் பற்றி குர்ஆனில் அது ஒரு சரித்திர நிகழ்ச்சி என்று சொல்லப்பட்டுள்ளது. இதுமட்டுமல்ல, அந்த காலத்தில் பெரும் நிலப்பரப்பை கைப்பற்றி ஆட்சி செய்தவர் என்றுச் சொல்லும் போது, சரித்திரத்தில் அவரைப் பற்றிய விவரங்கள் எழுதப்பட்டு இருந்திருக்கவேண்டும். ஆக, குர்ஆன் சொல்லும் துல்கர்னைன் என்பவர் ஒரு நிஜ சரித்திர நபராக இருக்கவேண்டும். ஆகையால், முஸ்லிம் அறிஞர்கள் கூட்டி கழித்து பார்க்கும் போது, பொதுவாக அலேக்சாண்டர் தான் அவர் என்ற முடிவிற்கு வந்துள்ளார்கள்.

**பாரா அவர்களுக்கு:**

நீங்கள் நிலமெல்லாம் இரத்தம் என்ற புத்தகத்தில் பாலஸ்தீன-இஸ்ரேல் சண்டைகள் பற்றி எழுத விரும்பியிருந்தால், அவைகள் பற்றிய தற்கால நிகழ்வுகளை எழுதியிருக்கவேண்டும். அதை விட்டுவிட்டு, முஹம்மது ஒரு நபி என்று நீங்களே ஒப்புக்கொண்டது போல எழுதியது, உங்களுக்கே தலைவலியாக மாறுகிறது.

- முஹம்மது ஒரு நபி என்று நீங்கள் ஒப்புக்கொள்கிறீர்களா?
- அப்படி ஒப்புக்கொண்டால், எப்போது நீங்கள் முஸ்லிமாக மாறப்போகிறீர்கள்?

கிறிஸ்தவத்திலே ஞானஸ்நானம் (ஞானம் வந்த பிறகு ஸ்நானம் எடுப்பது) இருப்பது போல, இஸ்லாமிலே ஸ்நானம் இல்லை (ஞானமும் இல்லை). ஆனால், ஆண்களுக்கு மட்டும் ஒரு சடங்கு உண்டு, அதாவது விருத்தசேதனம் என்று சொல்லக்கூடிய கத்னா உண்டு. நீங்கள் எப்போது கத்னா செய்துக்கொள்ளப்போகிறீர்கள்? இப்படி நான் எழுதுகிறேன் என்று கோபம் கொள்ளாதீர்கள், முஸ்லிம்களைப் பற்றி உங்களுக்கு அவ்வளவாக தெரியவில்லை. நீங்கள் இப்படிப்பட்ட புத்தகம் எழுதியிருப்பதினால், இன்றிலிருந்து பல ஆண்டுகள் கழித்து, (50 ஆண்டுகள் என்று வைத்துக்கொள்வோமே, இன்றுள்ள நம் வயதை கணக்கில் கொண்டால், நான் இருவரும் இருக்கமாட்டோம்), சில முஸ்லிம்கள் "பா ராகவன் அவர்கள் முஸ்லிமாக மாறியிருந்தார், அவர் எப்படிப்பட்ட புத்தகம் எழுதினார் என்று பாருங்கள் என்று நிச்சயம் சொல்வார்கள்". எனவே, அவர்கள் நம்பிக்கையை நாம் ஏன் கெடுக்கவேண்டும்? அதற்காகத் தான் கேட்டேன், மற்றபடி எந்த ஒரு உள்நோக்கமும் இல்லை.

இந்த தொடரின் அடுத்த பாகத்தில், அலேக்சாண்டர் ஒரு முஸ்லிமா? அல்லது நபியா? என்பதை ஆய்வு செய்வோம்.

**அடிக்குறிப்புக்கள்**

**[1] https://en.wikipedia.org/wiki/Alexander_the_Great_in_the_Quran**

ஐஐஐஐ

# 18) அலேக்சாண்டர் முஸ்லிமா? அல்லாஹ் அனுப்பிய நபியா?

**முன்னுரை:**

முந்தைய கட்டுரையில், துல்கர்னைன் என்பவர் பற்றி குர்ஆன் என்ன சொல்கிறது? முஸ்லிம் அறிஞர்கள் அவரை யார் என்று அடையாளம் காணுகிறார்கள் என்பதை சுட்டிக்காட்டினேன். குர்-ஆன் சொல்லும் விவரங்களுக்கு பொருந்துகின்ற வகையில் யார் இருக்கிறார்கள் என்று பார்த்தால், அலேக்சாண்டர் தான் சரித்திரத்தில் காணப்படுகிறார். இந்த கட்டுரையில், ''அலேக்சாண்டர் தான் துல்கர்னைன்'' என்று பல இஸ்லாமிய அறிஞர்கள் சொல்லும் விவரங்கள் எப்படி குர்-ஆனுக்கு பிரச்சனையாக மாறுகிறது என்பதை காண்போம்.

பாரா அவர்களே, முஹம்மதுவின் நபித்துவத்தை நிருபிக்க அந்த மூன்று கேள்விகளுக்கு கொடுக்கப்பட்ட பதில்கள் பயன்பட்டது என்று இஸ்லாம் சொல்லும் போது, அவைகளை ஆய்வு செய்யாமல் கண்மூடித்தனமாக உங்கள் புத்தகத்தில் நீங்களும் பதித்தபடியினால், இந்த கட்டுரையில் உங்களையும் குறிப்பிடவேண்டியுள்ளது.

**கழுவுற மீனில் நழுவுற மீன் பீஜே: துல்கர்னைன் ஒரு நபி ஆவார்**

பி. ஜைனுல் ஆபீதின் அவர்கள் தம்முடைய குர்ஆன் தமிழாக்கத்தின் விளக்கக்குறிப்பு 374ல், அந்த துல்கர்னைன் என்பவர் ஒரு நபியாகத் தான் இருக்கமுடியும் என்றுச் சொல்கிறார்.

> **374. துல்கர்னைன் நபியா?**
>
> இவ்வசனத்தில் (18:98) துல்கர்னைன் என்ற மன்னரைப் பற்றிக் குறிப்பிடப்படுகிறது. இவர் இறைத்தூதரா? இறைத்தூதராக இல்லாத நல்ல மனிதரா? என்பதில் அறிஞர்களிடையே கருத்து வேறுபாடு உள்ளது.
>
> யஃஜூஜ், மஃஜூஜ் எனும் கூட்டத்தினருக்கும், மக்களுக்கும் மத்தியில் தடுப்பை ஏற்படுத்திய துல்கர்னைன், இத்தடுப்பு யுகமுடிவு நாள் வரை நிலைத்திருக்கும் எனவும், யுகமுடிவு நாள் ஏற்படும்போது தடுப்பு தூள்தூளாக்கப்பட்டு யஃஜூஜ், மஃஜூஜ் கூட்டத்தினர் வெளியே வருவார்கள் என்றும் கூறியதாக இவ்வசனம் கூறுகிறது.
>
> இவ்வாறு இறைத்தூதரால் தான் கூற முடியும். எனவே துல்கர்னைன் இறைத்தூதர் என்று கூறும் அறிஞர்கள் இவ்வசனத்தை அதற்குச் சான்றாகக் கொள்கின்றனர்.

துல்கர்னைன் என்பவர் நபியா? என்று கேட்டதற்கு, ஆம் அல்லது இல்லை என்று நேரடியாக பதில் சொல்லாமல், மழுப்பி பதில் கொடுத்துள்ளார் பீஜே. இவர் நபியாகத் தான் இருக்கவேண்டும் என்று அறிஞர்கள் கருதுகிறார்கள் என்றுச் சொல்கிறார். இந்த பதிலிருந்து நாம் எதனை புரிந்துக்கொள்வது? பிஜே அவர்கள் என்ன சொல்கிறார்? துல்கர்னைன் என்பவர் நபி என்றுச் சொல்கிறாரா? அல்லது இதர அறிஞர்கள் தான் சொல்கிறார்கள், நான் இப்படி சொல்லவில்லை என்றுச் சொல்கிறாரா?

பீஜே அவர்கள் பொதுவாக ஒரு விஷயத்தில் உறுதிகொண்டுவிட்டால், மற்ற அறிஞர்களுக்கு மதிப்பு கொடுக்கமாட்டார். தான் பிடித்த முயலுக்கு மூன்றே கால்கள் என்று அடம்பிடிப்பார், மற்ற அறிஞர்களுக்கு அறிவு இல்லை என்று சொல்லிவிடுவார். ஆனால், இந்த விஷயத்திற்கு வரும் போது மட்டும் ''எனவே துல்கர்னைன் இறைத்தூதர் என்று கூறும் அறிஞர்கள்

இவ்வசனத்தை அதற்குச் சான்றாகக் கொள்கின்றனர்'' என்று சொல்லி தம் விளக்கத்தை முடித்துவிடுகின்றார். இவருக்கே சந்தேகம் இருந்தால், மற்ற அறிஞர்களின் கூட்டத்தோடு கோவிந்தா போடுவார், சந்தேகம் இல்லாமல் இருந்தால் தனியாக 'கோவிந்தா' போடுவார்.

இந்த துல்கர்னைன் யார் என்பதை அடையாளம் கண்டுக்கொள்வதில் சிக்கல்கள் இருப்பதினால், கழுவுற மீனில் நழுவுற மீன் போல, அவர் பதில் அளித்துள்ளார்.

**அலேக்சாண்டர் நபியா அல்லது முஸ்லிமா அல்லது முஷ்ரிகா?**

**1) அலேக்சாண்டர் தனக்கு தெய்வீகத் தன்மை உண்டு என்று கருதினான்**

மகா அலேக்சாண்டர் தனக்கு தெய்வீகத்தன்மை உள்ளது என்று கூறிக்கொண்டான், மேலும் தன்னை மக்கள் வணங்கும்படியும் செய்துள்ளான், இது சரித்திரம் சொல்லும் விவரங்களாகும்.

> **Alexander eagerly assimilated the religious mysticism of the Nile and of Magian Persia. Not only did he protect these religions, but also as a sole ruler, he necessarily assumed the semidivine aspect of an Asian despot, wearing Persian attire at ceremonies and accepting prostration in his presence." (Encyclopaedia Americana, Volume 1, p_540)**

அல்லாஹ்வை வணங்கும் ஒரு முஸ்லிம் எப்படி அலேக்சாண்டர் போல தம்மை மக்கள் வணக்கம் செலுத்தும் படி செய்யமுடியும்? தனக்கு தெய்வீகத்தன்மை உள்ளது என்றுச் சொல்லமுடியும்? இஸ்லாமின் படி இது மிகப்பெரிய பாவம் ஆகும்.

**2) மரிப்பதற்கு முன்பாக தன்னை தெய்வமாக கருதி வணங்கும் படி கட்டளையிட்டான்**

அலேக்சாண்டர் தாம் ''அம்மோன் ரா'' என்ற தெய்வத்தின் மகன் என்று கருதினான், மேலும் தான் மரிப்பதற்கு முன்பாக, தன்னை தெய்வமாக அனைவரும் வணங்கும் படியும் கட்டளையிட்டுள்ளான்.

> **"In the spring of 331 Alexander made a pilgrimage to the great temple and oracle of Amon-Ra, Egyptian god of the sun, whom the Greeks identified with Zeus. The earlier Egyptian pharaohs were believed to be sons of Amon-Ra; and Alexander, the new ruler of Egypt, wanted the god to acknowledge him as his son. The pilgrimage apparently was successful, and it may have confirmed in him a belief in his own divine origin. " (Sources: ancient-macedonia.jimdo.com/alexander-the-great-macedonian/ & Funk & Wagnalls Encyclopaedia, CDROM ver, by future vision multimedia inc., 1995 INFOPEDIA)**
>
> **"Shortly before he died, Alexander ordered the Greek cities to worship him as a god. Although he probably gave the order for political reasons, he was, in his own view and that of his contemporaries, of divine birth." (Sources: www.indirce.com/ei-2134-report_on_alexander_the_great & Funk & Wagnalls Encyclopaedia, CDROM ver, by future vision multimedia inc., 1995 INFOPEDIA)**

கி.மு.332-ல் அலெக்ஸாண்டர் எகிப்தில் நுழைந்தார். அங்கு அலெக்ஸாண்டரை விடுதலையளிக்க வந்த ஒரு போராளியாக தான் மதித்தனர். அங்கு அவர் தன்னை பிரபஞ்சத்தின் தலைவராக உணர்ந்தார். கடவுளின் மகனாக பாவித்தனர். இதற்கு பின்பு தான் அலெக்ஸாண்டர் அடிக்கடி கடவுள் ஜீயஸ்-அம்மோன்-ஐ தனது தந்தையாக சுட்டிக்காட்டினார். மற்றும் தான் மேம்பட்ட உருவம் பொறித்த நாணயங்களையும் வெளியிடலானார். (மூலம்: விக்கீபீடியா - பேரரசர் அலெக்சாந்தர் - **ta.wikipedia.org/s/240k**)

அலேக்சாண்டர் தனக்கு தெய்வீகத்தன்மை உள்ளது என்று நம்பினார், தன்னை மக்கள் வணங்கவேண்டும் என்றும் சொன்னார். கடைசியாக, ''ஜீயஸ்-அம்மோன்'' என்ற அக்கால கடவுள் தான் தன் தந்தை என்றும் சொல்லிக்கொண்டார். ஆனால், குர்-ஆன் சொல்லும் துல்கர்னைன் அல்லாஹ்வை வணங்கியவராக சித்தரிக்கப்பட்டுள்ளார். அலேக்சாண்டர் தான் துல்கர்னைன் என்று குர்-ஆன் சொல்லவில்லையென்றாலும், குர்-ஆன் சொன்ன இதர விவரங்கள் அனைத்தும் அலேக்சாண்டருக்குத் தான் பொருந்துகிறது என்பதை சரித்திரத்திலிருந்து காணலாம்.

**துல்கர்னைன் என்பவன் அலேக்சாண்டர் இல்லை என்றுச் சொன்னால்?**

துல்கர்னைன் என்பவன் அலேக்சாண்டர் என்று நாங்கள் ஒப்புக்கொள்ளமாட்டோம் என்று ''இன்று'' முஸ்லிம்கள் சொல்லக்கூடும். ஏனென்றால், அலெக்சாண்டர் பற்றிய சரித்திர விவரங்கள் நமக்கு தெரிந்துவிட்டது என்பதால், முஸ்லிம்கள் இப்படி பல்டி அடிக்கலாம். ஆனால், ஆரம்பகால இஸ்லாமிய அறிஞர்கள் துல்கர்னைன் என்பவர், அலேக்சாண்டர் என்று தான் அடையாளப்படுத்தினார்கள். துல்கர்னைன் அலேக்சாண்டர் இல்லை என்றுச் சொல்லும் முஸ்லிம்கள் கீழ்கண்ட கேள்விகளுக்கு பதில் சொல்ல கடமைப்பட்டுள்ளார்கள்:

அ) உண்மையில் துல்கர்னைன் யார்? சரித்திரத்திலிருந்து சரியான நபரை அடையாளம் காட்டுங்கள்.

ஆ) குர்-ஆன் சொல்லும் விவரங்களின் படி, மிகப்பெரிய இராஜ்ஜியங்களை ஆண்ட அந்த அரசன் பற்றி ஏன் சரித்திரத்தில் எங்கும் நாம் காண்பதில்லை? மதத்திற்கு வெளியே சரித்திர ஆசிரியர்கள் இப்படிப்பட்ட அரசனைப் பற்றிய விவரங்களை தவரவிட்டு இருக்கவே மாட்டார்கள். மிகப்பெரிய நிலப்பரப்பை ஆண்டவர் என்பது சாதாரண விவரமல்ல.

இ) துல்கர்னைன் ஒரு நல்ல முஸ்லிமாக மேலும் நபியாக இருந்திருந்தால், குறைந்தபட்சம் பைபிளின் பழைய ஏற்பாட்டிலாவது அல்லாஹ் அவனைப் பற்றி குறிப்பிட்டு இருந்திருக்கவேண்டுமல்லவா?

ஈ) பைபிளில் சின்ன சின்ன நபிகளைப் பற்றியெல்லாம் பதிவு செய்த அல்லாஹ் இவ்வளவு பெரிய மனிதனைப் பற்றி ஏன் குறிப்பிடவில்லை? (யெகோவா தேவன் அல்லாஹ் அல்ல என்று கிறிஸ்தவர்களுக்குத் தெரியும், ஆனால், முஸ்லிம்கள் அல்லாஹ் தான் பைபிளின் தேவன் என்பதால் இந்த கேள்வியை கேட்கிறேன்).

உ) நபிகள் பற்றி சொல்லும் போது குர்-ஆன், ஆபிரகாம் முதல் இயேசுவரையுள்ள நபிகள், அரசர்கள் பற்றி குறிப்பிடுகிறது. இவரது நபித்துவம் பற்றி குர்-ஆன் ஏன் ஒன்றுமே சொல்லவில்லை?

ஊ) மத்திய கிழக்கு பகுதியில் ஒரு சிறிய பகுதிய ஆண்ட தாவீது மற்றும் சாலொமோன் போன்ற அரசர்கள் பற்றி பக்கம் பக்கமாக பேசும் குர்-ஆன், அக்கால உலகத்தின் பெரும் நிலப்பரப்பை ஆண்ட துல்கர்னைன் பற்றி இதர இடங்களில் ஏன் மூச்சு விடுவதில்லை?

எ) இஸ்லாமின்படி கடைசி கால தீர்க்கதரிசனத்தைச் சொன்ன துல்கர்னைன் பற்றி குர்-ஆன் இதர இடங்களில் ஒரு குறிப்பு கூட சொல்லாமல் இருப்பது ஆச்சரியமே! ஒருவேளை குறைஷிகள் இவரைப் பற்றி கேட்காமல் இருந்திருந்தால், இப்படிப்பட்டவர் பற்றி ஒரு வசனத்தையும் குர்-ஆனில் நாம் கண்டு இருந்திருக்கமாட்டோம். இஸ்லாமிய அறிஞர்கள் குர்-ஆனில் வரும் 25 நபிகளின் பெயர்களை குறிப்பிடும் போது, ஏன் இவரது பெயரையும் குறிப்பிடுவதில்லை? பீஜே அவர்கள் இவரையும் அந்த நபிகளின் பட்டியலில் சேர்த்துக்கொள்வாரா?

**முடிவுரை:** உண்மையைச் சொல்லவேண்டுமென்றால், முஸ்லிம்களால் துல்கர்னைன் பற்றி குர்-ஆன் சொல்லும் விவரங்களை மெல்லவும் முடியவில்லை, விழுங்கவும் முடியவில்லை. இப்போது பாரா அவர்கள் என் மீது கோபம் கொள்ளலாம், ''வெறும் இரண்டு வரிகள் எழுதியதற்காக இந்த கட்டுரையில் என்னை ஏன் இவன் இழுக்கிறான்''?

பாரா அவர்களே, உம்மை எப்படி மறந்துவிடமுடியும்? இஸ்லாமுக்காக ஆதரவாகப் பேசும் மேசியாக்கள் அவ்வப்போது உலகில் தோன்றுகிறார்கள், இவ்வரிசையில் இந்து மதத்திலிருந்து வந்த இஸ்லாமிய மேசியா நீங்கள் அல்லவா? உங்களை எப்படி மறக்கமுடியும்?

துல்கர்னைன் கட்டிய அந்த பிரமாண்ட சுவர் எங்கே இருக்கிறது? துல்கர்னைன் சொன்ன தீர்க்கதரிசனம் என்ன? உலகத்தின் முடிவில் நடக்கும் விவரங்களில் துல்கர்னைன் கதையில் வரும் இதர பாத்திரங்களின் பங்கு என்ன போன்றவைகளை அடுத்தடுத்த கட்டுரையில் காண்போம்.

**அடிக்குறிப்புக்கள்: [1] answering-islam.org/Authors/Newton/alex.r.html**

ꙮꙮꙮꙮ

## 19) துல்கர்னைன் கட்டிய அந்த பிரமாண்ட சுவர் எங்கே?

பிரமாண்டமான ஒரு நல்ல செயலைச் செய்த ஒருவரைப் பற்றி குர்-ஆன் பிரமிக்கிறது. அந்த நபர் செய்தது ஒரு சரித்திர நிகழ்வு என்கிறது. அந்த வெற்றியில் தனக்கும் பங்கு உண்டு என்று அல்லாஹ் குர்-ஆனில் சொல்கிறான். கடைசியாக, பல நூற்றாண்டுகளுக்குப் பிறகும் நிலை நிற்கும் சைனா பெரும் சுவரைப் போல, அந்த முஸ்லிம் அரசன் செய்த செயல், உலக முடிவு காலம் வரை நிலை நிற்கும் என்றும் குர்-ஆன் சொல்கிறது. அந்த அரசன் மகா அலேக்சாண்டர் என்றும், அவர் ஒரு நபி என்றும் முஸ்லிம்கள் சொல்கிறார்கள். அலேக்சாண்டர் அல்லாஹ்வின் நபியா? என்ற கேள்விக்கு முந்தைய கட்டுரையில் பதில் கொடுக்கப்பட்டுள்ளது.

குர்-ஆன் சொல்லும் அந்த அரசன் துல்கர்னைன் என்பவராவார். இவரைப் பற்றி குர்-ஆன் சொல்லும் விவரங்களில் உள்ள சரித்திர பிழையை இந்த கட்டுரையில் சுருக்கமாக காண்போம்.

**1) துல்கர்னைன் கட்டிய பிரமாண்ட சுவர்:**

துல்கர்னைன் என்ற மன்னர், ஒரு பிரமாண்டமான இரும்புச்சுவரை இரு மலைகளுக்கு இடையே கட்டி, ஒரு குறிப்பிட்ட மக்களை காப்பாற்றினாராம். இதனை குர்-ஆன் எப்படி விவரிக்கிறது என்பதை படிப்போம்.

**குர்-ஆன் 18:92-98**

**18:92.** பின்னர், அவர் (வேறொரு) வழியைப் பின்பற்றிச் சென்றார்.

**18:93.** இரு மலைகளுக்கிடையே (இருந்த ஓரிடத்தை) அவர் எத்தியபோது, அவ்விரண்டிற்கும் அப்பால் இருந்த ஒரு சமூகத்தாரைக் கண்டார். அவர்கள் எந்தச் சொல்லையும் விளங்கிக் கொள்பவராக இருக்கவில்லை;

**18:94.** அவர்கள் “துல்கர்னைனே! நிச்சயமாக யஃஜூஜும், மஃஜூஜும் பூமியில் ஃபஸாது - குழப்பம் - செய்கிறார்கள்; ஆதலால், எங்களுக்கும், அவர்களுக்குமிடையே ஒரு தடுப்பு(ச் சுவரை) நீர் ஏற்படுத்தித் தரும் பொருட்டு நாங்கள் உமக்கு ஒரு தொகையைத் தரலாமா?” என்று கேட்டார்கள்.

**18:95.** அதற்கவர்: “என் இறைவன் எனக்கு எதில் (வசதிகள்) அளித்திருக்கிறானோ அது (நீங்கள் கொடுக்க இருப்பதைவிட) மேலானது; ஆகவே, (உங்கள் உடல்) பலம் கொண்டு எனக்கு நீங்கள் உதவி செய்யுங்கள்; நான் உங்களுக்கும், அவர்களுக்குமிடையே ஓர் உறுதியான தடுப்பை ஏற்படுத்தி விடுகிறேன்”என்றுகூறினார்.

**18:96.** “நீங்கள் இரும்புப் பாளங்களை எனக்குக் கொண்டு வாருங்கள்” (என்றார்). பிறகு அவை இரு மலைகளின் (இடையே நிரம்பி) உச்சிக்குச் சமமாகும் போது, ஊதுங்கள் என்றார்; அதனை அவர் நெருப்பாக ஆக்கியதும் (பின்னர் “உருக்கிய) செம்பை என்னிடம் கொண்டு வாருங்கள்; அதன் மேல் ஊற்றுகிறேன்” (என்றார்).

**18:97.** எனவே, (யஃஜூஜ், மஃஜூஜ் கூட்டத்தார்) அதன் மீது ஏறவும் சக்தி பெறவில்லை, அதில் துவாரமிடவும் அவர்கள் சக்தி பெறவில்லை.

**18:98.** “இது என் இறைவனிடமிருந்துள்ள ஒரு கிருபையே ஆகும், ஆனால் என் இறைவனுடைய வாக்குறுதி நிறைவேறும்போது, அவன் இதனையும் தூள் தூளாக்கி விடுவான்; மேலும், என் இறைவனுடைய வாக்குறுதி (முற்றிலும்) உண்மையானதே” என்று கூறினார். (முஹம்மது ஜான் தமிழாக்கம்)

**இவ்வசனங்களின் சுருக்கம் இது தான்:**

- யஃஜூஜ், மஃஜூஜ் என்ற ஒரு கூட்டத்தாரிடமிருந்து ஒரு குறிப்பிட்ட மக்களை காக்க, துல்கர்னைன் ஒரு பிரமாண்டமான சுவரை இரு மலைகளுக்கு இடையே கட்டினாராம்.
- இந்த சுவர் எப்படிப்பட்டதென்றால், அந்த யஃஜூஜ் மஃஜூஜ் மக்களால், அச்சுவரை இடிக்கவோ, அதை தாண்டி வரவோ முடியாது.
- உலக முடிவுவரையில் அவர்கள் அந்த இரு மலைகளுக்கும், சுவருக்கும் பின்னால் அடைக்கப்பட்டு இருக்கவேண்டியது தான். ஆனால் அந்த யஃஜூஜ்,

மஃஜூஜ் மக்கள் சாகாமல் உலக முடிவுவரை பெருகிக்கொண்டே இருப்பார்கள் என்பது இஸ்லாம் சொல்லும் விவரமாகும்.

- உலக முடிவின் போது, அல்லாஹ் அந்த சுவரை தூள் தூளாக்கும் போது, அம்மக்கள் வெளிப்படுவார்களாம். அதன் பிறகு நடக்கும் விவரங்களை இஸ்லாம் விவரிக்கிறது.

மேற்கண்ட விவரங்களை அறியும் போது, ஏதோ ஹாலிவுட் படத்தை பார்ப்பதைப் போன்ற ஒரு பிரமை உண்டாகிறது அல்லவா? இன்னும் பல ஆச்சரியங்கள் காத்துக்கொண்டு இருக்கிறது.

## 2) அந்த பிரமாண்ட சுவர் கற்பனையா அல்லது உண்மையானதா?

குர்-ஆனின் படி, முஹம்மதுவின் காலத்துக்கு பல நூற்றாண்டுகளுக்கு முன்பு அக்கால உலகை ஆண்ட துல்கர்னைன் ஒரு பிரமாண்டமான சுவரைக் கட்டி, யஃஜூஜ் மற்றும் மஃஜூஜ் கூட்டத்தினரை வெளியே வரமுடியாதபடி அங்கேயே அடைத்துவிட்டான். அல்லாஹ் இதனை சரித்திர கூற்றாக கூறியிருப்பதால், இது கற்பனைக் கதையல்ல என்று முஸ்லிம்கள் நம்பவேண்டும்.

இந்த சுவர் முஹம்மதுவின் காலத்திலும் (7ம் நூற்றாண்டில்) உண்மையாகவே இருந்திருக்கிறது என்பதை முஹம்மதுவின் கூற்றிலிருந்து அறியலாம். குர்-ஆனுக்கு அடுத்தபடியாக அல்லாஹ்வின் வஹி என்று கருதப்படும், புகாரி மற்றும் முஸ்லிம் ஹதீஸ்கள் இதனை உறுதிச் செய்கின்றது.

### அ) அந்த பிரமாண்ட சுவரில் ஒரு சிறிய ஓட்டை விழுந்துள்ளதாம்.

முஹம்மதுவிற்கு அல்லாஹ் ஒரு வஹியை (வெளிப்பாட்டை) கொடுத்தார், அதாவது, துல்கர்னைன் கட்டிய அந்த பிரமாண்ட சுவரில் ஒரு சிறிய ஓட்டை விழுந்துள்ளது. அந்த தீய மக்கள் வெளியே வந்தால், அரபியர்களுக்கும் ஆபத்து வரும் என்று முஹம்மது அறிவித்துள்ளார்.

புகாரி எண்: 3346 (மேலும் பார்க்க புகாரி எண்கள்: 3347, 3598, 5293, 7059, 7135 & 7136)

3346. நபி(ஸல்) அவர்களின் துணைவியார்) ஸைனப் பின்த்து ஜஹ்ஷ்(ரலி) அறிவித்தார்

> நபி(ஸல்) அவர்கள் (ஒருமுறை) என்னிடம் நடுக்கத்துடன் வந்து, 'வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறெவருமில்லை. நெருங்கிவிட்ட ஒரு தீமையின் காரணத்தால் அரபுகளுக்குக் கேடு நேரவிருக்கிறது. **இன்று யஃஜூஜ் மஃஜூஜ் கூட்டத்தாரின் தடைச் சுவர் இதைப் போல் திறக்கப்பட்டுவிட்டது' என்று தம் கட்டை விரலையும் அதற்கடுததுள்ள விரலையும் இணைத்து வளையமிட்டுக் காட்டியபடி கூறினார்கள்.** உடனே, நான் 'இறைத்தூதர் அவர்களே! நம்மிடையே நல்லவர்கள் இருக்க, நாம் அழிந்துவிடுவோமா?' என்று கேட்டேன். அதற்கு நபி(ஸல்) அவர்கள் 'ஆம்; தீமை பெருகிவிட்டால்..' என்று பதிலளித்தார்கள்.

இதே ஹதீஸ் முஸ்லிமிலும் பதிவு செய்யப்பட்டுள்ளது - பார்க்க முஸ்லிம் எண்கள்: 5520, 5521 & 5522

மேற்கண்ட ஹதீஸ்களிலிருந்து அறிவது என்னவென்றால், துல்கர்னைன் கட்டிய சுவர் முஹம்மதுவின் காலத்திலும் இருந்துள்ளது, அதில் ஒரு ஓட்டை விழுந்ததை அல்லாஹ் முஹம்மதுவிற்கு வஹியாக அறிவித்துள்ளான், இதனால் வரும் ஆபத்தை முஹம்மது தம் மக்களுக்குச் சொல்லி எச்சரித்துள்ளார் என்பதாகும்.

### ஆ) யஃஜூம் மஃஜூம் கூட்டத்தின் ஜனத்தொகை எவ்வளவு இருக்கும்?

வாசகர்கள் கூர்ந்து கவனிக்கவேண்டும். குர்-ஆனின் படி, ஒரு கூட்ட மக்கள் இரு மலைகளுக்கு இடையே மாட்டிக்கொண்டுள்ளார்கள். அவர்கள் வெளியே வராமல் இருப்பதற்கு காரணம், அல்லாஹ்வின் அடியான் துல்கர்னைன் கட்டிய அந்த மகா சுவர் ஆகும். அந்த யஃஜூஜ்/மஃஜூஜ் மக்களால், அச்சுவரை துளைக்கவோ இடித்துப்போடவோ முடியாது. மேலும் அந்த மலைகளை தாண்டியும் வரமுடியாது, இது அல்லாஹ்வின் ஏற்பாடாகும்.

ஆனால், அந்த மக்கள் பலுகி பெருகிக்கொண்டே வருகிறார்கள். அம்மக்களுக்கு உலகத்தின் இதர நாடுகளோடு எந்த ஒரு தொடர்பு இல்லையென்றாலும், அவர்கள் அன்றிலிருந்து இன்று வரையும் வாழ்ந்து வந்துக்கொண்டு இருக்கிறார்கள், உலகத்தின் கடைசி காலம் வரை இன்னும் பல நூற்றாண்டுகள் அல்லது ஆயிரம் ஆண்டுகள் வாழுவார்கள். இதனை எப்படி நாம் அறிந்துக்கொள்வது? இதையும் முஹம்மதுவே கூறியுள்ளார், முஹம்மதுவிற்கு அல்லாஹ் கூறியுள்ளான். புகாரியில் இவ்விவரம் பதிவு செய்யப்பட்டுள்ளது.

### ஒரு முஸ்லிம் நரகம் சென்றால், யஃஜூஜ்/மஃஜூஜ் மக்கள் ஆயிரம் பேர் செல்வார்கள்:

இந்த ஹதீஸின் படி, ஒரு முஸ்லிமுக்கு ஆயிரம் யஃஜூஜ் மஃஜூஜ் மக்கள் நரகத்திற்குச் செல்வார்கள். அதாவது **1:1000** என்பது கணக்கு. இங்கு கவனிக்கவேண்டிய விவரம் என்னவென்றால், அந்த யஃஜூஜ் மஃஜூஜ் மக்கள் அபரிதமாக பெருகுகிறார்கள் என்பதாகும். ஆனால், அவர்கள் நம்மைப் போல வாழவில்லை, இரண்டு மலைகளுக்கு இடையே வாழுகிறார்கள். உலகிற்கு தங்களை காட்டமுடியாத நிலையில் உள்ளார்கள்.

**புகாரி எண் 6530**

> இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்' . . .
>
> இவ்வாறு நபியவர்கள் கூறியது மக்களுக்குச் சிரமமாக இருந்தது. எனவே, அவர்கள் 'இறைத்தூதர் அவர்களே! (ஒவ்வோர் ஆயிரத்திலும் நரகத்திற்குச் செல்லாமல் எஞ்சியிருக்கும்) அந்த ஒரு நபர் எங்களில் யார்?' என்று கேட்டார்கள். நபி(ஸல்) அவர்கள் '(பயப்படாதீர்கள்;) நற்செய்தி பெறுங்கள். யஃஜூஜ் மஃஜூஜ் கூட்டத்தாரில் ஆயிரம் பேர் என்றால், உங்களில் ஒருவர் (நரகத்திற்குச் செல்ல தனியாக பிரிக்கப்பட்டோரில்) இருப்பார்' . . .

கீழ்கண்ட முஸ்லிம் ஹதீஸின் படி, கடைசி நாட்களில் அவர்களின் ஒரு அணியினர், ஒரு ஏரியில் உள்ள நீர் அனைத்தையும் குடித்துவிடுவார்களாம். அதாவது ஒரு ஏரியை காலி செய்யும் அளவிற்கு அவர்களின் ஒரு அணியில் மக்கள் இருப்பார்கள் என்றுச் சொன்னால், பார்த்துக்கொள்ளுங்கள், அவர்களின் ஜனத்தொகை எவ்வளவு இருக்கும் என்று.

**முஸ்லிம் எண்: 5629**

**5629.** நவ்வாஸ் பின் சம்ஆன் (ரலி) அவர்கள் கூறியதாவது: . . .

எனவே, (முஸ்லிமான) என் அடியார்களை (சினாயிலுள்ள) "தூர்" மலைக்கு அழைத்துச் சென்று பாதுகாப்பாக வையுங்கள்" என்று (வஹீ) அறிவிப்பான்.

பின்னர், அல்லாஹ் **"யஃஜூஜ்" "மஃஜூஜ்"** கூட்டத்தாரை அனுப்புவான். அவர்கள் ஒவ்வோர் உயரமான பகுதியிலிருந்தும் வேகமாக(க் கீழே இறங்கி) வருவார்கள். **அவர்களில் முதல் அணியினர் (ஜோர்தானில் உள்ள) "தபரிய்யா" ஏரியைக் கடந்து செல்லும்போது, அதிலுள்ள மொத்த நீரையும் குடித்துவிடுவார்கள்.** அவர்களின் இறுதி அணியினர் அதைக் கடந்து செல்லும்போது. "முன்னொரு காலத்தில் இந்த ஏரியில் தண்ணீர் இருந்திருக்கும்" என்று பேசிக்கொள்வார்கள்.

. . .

பின்னர் இறைத்தூதர் ஈசா (அலை) அவர்களும் அவர்களுடன் இருப்போரும் (அல்லாஹ்விடம் உதவி கேட்டுப்) பணிந்து வேண்டுவார்கள். அப்போது யஃஜூஜ், மஃஜூஜ் கூட்டத்தாரின் பிடரிகளில் புழுக்களை அல்லாஹ் அனுப்புவான். அதனால் அவர்கள் அனைவரும் ஒரே நேரத்தில் பலியாவார்கள். பின்னர் இறைத்தூதர் ஈசா (அலை) அவர்களும் அவர்களுடன் இருப்போரும் (மலையிலிருந்து) தரைக்கு இறங்கி வருவார்கள். **அப்போது பூமியின் எந்தவொரு சாண் அளவு இடமும், யஃஜூஜ், மஃஜூஜ் கூட்டத்தாரின் (சடலங்களிலிருந்து வெளிவரும்) கொழுப்பாலும் துர்நாற்றத்தாலும் நிரம்பியிருப்பதையே காண்பார்கள்.** உடனே இறைத்தூதர் ஈசா (அலை) அவர்களும் அவர்களுடன் இருப்போரும் அல்லாஹ்விடம் (அவற்றை அகற்றக்கோரிப்) பணிந்து வேண்டுவார்கள். அப்போது அல்லாஹ் ஒட்டகங்களின் கழுத்துகளைப் போன்று (பெரியதாக உள்ள) பறவைகளை அனுப்புவான். அவை அந்தப் பிணங்களைத் தூக்கிச் சென்று அல்லாஹ் நாடிய இடத்தில் வீசியெறியும். . . .

இதுவரை கண்ட குர்-ஆன் மற்றும் ஹதீஸ்களின் அடிப்படையில் பார்க்கும் போது, பல கோடி மக்களாகிய அந்த யஃஜூஜ் மஃஜூஜ் மக்கள் இன்றும் (2017ம் ஆண்டு மே மாதம்) உலகில் வாழ்ந்துக்கொண்டு இருக்கிறார்கள்.

இது ஒரு சுவாரசியமான கதையாக இருக்கிறதல்லவா? ஆம், இந்த சுவாரசியத்தோடு சரித்திர பிழையும் இக்கதையில் உள்ளது. இனி சொல்லப்போகும் விவரங்களை முஸ்லிம்கள் உட்பட கூர்ந்து படியுங்கள், இன்று நடைமுறைக்கும், அறிவுடமைக்கும் இவ்விவரங்கள் எட்டுகின்றதா? என்பதை கவனியுங்கள். குர்-ஆன் இறைவேதமல்ல என்பதற்கு இப்படிப்பட்ட சரித்திர விஞ்ஞான பிழைகள் அதில் இருப்பது ஒரு காரணமாகும்.

**நடைமுறைக்கு ஏற்காத குர்-ஆனின் சரித்திர விஞ்ஞான பிழைகள்**

துல்கர்னைன் விஷயத்தில் குர்-ஆன் மிகப்பெரிய அடிமட்ட பிழைகளைச் செய்துள்ளது. துல்கர்னைன் கட்டியதாகச் சொல்லும் பிரமாண்டமான சுவர் பற்றி குர்-ஆன் சொல்லும் விவரங்களில் கீழ்கண்ட பிழைகள் பளிச்சென்று தெரிகிறது.

## குர்-ஆனின் பிழை 1: துல்கர்னைன் கட்டிய அந்த பிரமாண்ட சுவர் எங்கே இப்போது உள்ளது?

இந்த சுவர் ஏதோ ஒரு மூலையில் கட்டிய சின்ன சுவர் அல்ல. பல கோடி மக்களை மறைத்துவிடும் அளவிற்கு உயரமாகவும், அகலமாகவும் கட்டப்பட்ட சுவர். இதுவரை இப்படிப்பட்ட சுவரை யாரும் உலகில் கண்டுபிடிக்கவில்லை. சாட்லைட் மற்றும் தொலைத்தொடர்பு கருவிகள், விஞ்ஞான கண்டுபிடிப்புக்கள் உச்சத்தில் இருக்கும் இக்காலத்தில் கூட, இந்த பிரமாண்ட சுவரை இதுவரை உலக விஞ்ஞானிகள் கண்டுபிடிக்கவில்லை (இருந்தால் தானே கண்டுப்பிடிப்பதற்கு?).

இதிலிருந்து அறிவது என்னவென்றால், துல்கர்னைன் கட்டியதாக குர்-ஆன் சொல்லும் நிகழ்ச்சி ஒரு கட்டுக்கதையாகும். முஹம்மதுவின் காலத்தில் நிலவிய பல கட்டுக்கதைகளை கேட்டு, சரித்திரம் என்ற பெயரில் முஹம்மது குர்-ஆனில் புகுத்தியுள்ளார். இக்கதை ஒரு கட்டுக்கதை என்பதற்கு இன்னொரு வலுவூட்டும் காரணம் கீழே கொடுக்கப்பட்டுள்ளது.

**குர்-ஆனின் பிழை 2: பல கோடி மக்கள் 2000க்கும் அதிகமான ஆண்டுகள், எப்படி அழியாமல் இரண்டு மலைகளுக்கு இடையே இன்று வரை வாழமுடியும்?**

இந்த கட்டுக்கதையை படித்த முஸ்லிம்கள் எப்படி ஏற்றுக்கொண்டு இருக்கிறார்கள் என்று நினைக்கும் போது ஆச்சரியம் கலந்த வேதனையாக உள்ளது.

குர்-ஆனின் துல்கர்னைன் கதை கீழ்கண்ட கேள்விகளை எழுப்புகிறது. முஸ்லிம்கள் இவைகளுக்கு பதில்களை கொடுக்கவேண்டும்.

அ) கிட்டத்தட்ட 2000 ஆண்டுகளுக்கு முன்பு இரண்டு மலைகளுக்கு இடையே சிக்கிய மக்கள், இன்று வரை எப்படி அங்கேயே உலகத்தின் கண்களில் படாமல் இருக்கமுடியும்? சிந்துபாத் கதையில் மட்டுமே இது சாத்தியம் நிஜ வாழ்க்கையில் அல்ல.

ஆ) ஒருவேளை துல்கர்னைன் அச்சுவரை கட்டினது உண்மையென்று கருதினாலும், இப்போது அம்மக்கள் பலகோடி பேராக பெருகியிருப்பார்கள். மக்கள் பெருகும் போது, அவர்களோடு கூட போட்டி போட்டுக்கொண்டு அவ்விரு மலைகளுமா அபரித வளர்ச்சி அடையும்? இது விஞ்ஞானத்தின் படி சாத்தியமா?

இ) பல ஆயிரம் அல்லது பல இலட்ச மக்கள் அன்று இருந்திருக்கக்கூடும் என்று எண்ணிக்கொண்டாலும், இன்று பல நூறு அல்லது ஆயிரம் கோடி மக்களாக அவர்கள் பெருகியிருப்பார்கள். அப்படியானால், அதே இரண்டு மலைகளுக்கு இடையே இத்தனை கோடிமக்கள் எப்படி மறைந்திருக்கமுடியும்? இது கனவில் மட்டுமே சாத்தியமாகும்.

ஈ) மக்கள் பெருகுவது போல மலைகள் கூட வளர்ந்துக்கொண்டுச் செல்லும், இதன் பின்னே பல கோடி மக்கள் மறைந்திருக்க முடியும் என்று சிறுபிள்ளைத் தனத்தோடு சில முஸ்லிம்கள் சொல்லக்கூடும். ஆனால், மலைகள் ஒரு ஆண்டுக்கு ஒரு செண்டிமீட்டருக்கும் குறைவாகவே வளருகிறது என்பதை கவனிக்க வேண்டும். மக்கள் பிள்ளைகளை பெற்றெடுப்பது போல, காம்பிளான் குடித்த பிள்ளைகள் போல வளருவதும் இல்லை.

உ) மலைகள் ஆண்டுக்கு மில்லிமீட்டர் அளவிற்கு பெருகினாலும், இரும்பு மற்றும் செம்புவினால் கட்டப்பட்ட பிரமாண்ட சுவர் எப்படி ஆண்டாண்டுக்கு உயர்ந்துக்கொண்டே போகும்? இரண்டு மலைகளுக்கு இடையே துல்கர்னைன் கட்டியதாகச் சொல்லும் சுவர் ஒரு மாயையான சுவராகும், அது கட்டுக்கதையாகும். இல்லை என்றுச் சொல்பவர்கள், இக்கேள்விகளுக்கு பதில்களைச் சொல்லலாம்.

ஊ) 2000 ஆண்டுகளுக்கு மேலாக, பல கோடி மக்கள், இரண்டு மலைகளை தாண்டி வரமுடியாத அளவிற்கு உலகில் பெரிய மலை ஒன்றும் இல்லை. இமயமலைகளில் 'எவரெஸ்ட்' தான் உலகிலேயே மிகவும் உயரமான சிகரம் (கவனிக்கவும் சிகரம் மலை அல்ல). இந்த சிகரம் 8848 மீட்டர் உயரம் உள்ளது. கவனிக்கவும், கடல் மட்டத்திலிருந்து 8848 மீட்டர் என்று கணக்கெடுக்கப்பட்டுள்ளதே தவிர மலையின் அடிவாரத்திலிருந்து அல்ல.

எ) எவரெஸ்ட் சிகரம் அளவிற்கு உயர்வான சிகரம் உலகில் வேறு எதுவும் இல்லை. கவனிக்கவும், இங்கு உயரம் தான் கணக்கில் கொள்ளப்படுகிறது, அகலம் அல்ல. பல கோடி மக்களை பல ஆயிர ஆண்டுகள் மறைக்கும் அளவிற்கு உலகில் இரு மலைகள் இதுவரை கண்டுபிடிக்கப்படவில்லை. அதாவது, உலகில் இல்லை என்பது தான் உண்மை. கூகுள் யர்த்தை பயன்படுத்தி உலகின் அனைத்து மலைகளையும் துள்ளியமாக பார்க்கமுடியும்.

ஏ) உலகில் உள்ள அனைத்து பெரிய மலைகளை விஞ்ஞானிகள் கண்டுபிடித்துவிட்டார்கள். முக்கியமாக ஐரோப்பா, ஆசியா, ஆஃப்ரிக்கா, அமெரிகக போன்ற கண்டங்களில் உள்ள பெரிய மலைகள் கணக்கெடுக்கப்பட்டுள்ளது. இவைகளை ஒப்பிட்டு பார்த்தபோது தான் இமயமலைகளில் உள்ள எவரெஸ்ட் உயரமானதாக கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. எனவே, குர்-ஆனின் கட்டுக்கதையில் உள்ள பொய் அம்பளத்துக்கு வந்துவிட்டது.

ஐ) இன்னொரு விஷயத்தை கவனிக்கவேண்டும், முஹம்மது சொன்ன ஹதீஸின் படி, அந்த சுவரில் 7ம் நூற்றாண்டில் ஓட்டை விழுந்துள்ளது. அப்படியானால், கடந்த 14 நூற்றாண்டுகளில் இன்னும் எத்தனை ஓட்டைகள் விழுந்துள்ளதோ நமக்குத் தெரியாது? முஹம்மது போல ஒரு இஸ்லாமிய நபி இன்று இருந்திருந்தால், உலகிற்கு அதனை சொல்லியிருந்திருப்பார். ஒருவேளை அந்த ஓட்டையை பயன்படுத்தி, அந்த மக்கள் இன்னும் பெரிய ஓட்டைகளை போட்டு, வெளியே வந்திருந்தால்?

ஒ) உலகின் மிக உயரமான சிகரத்தையே மனிதன் தொட்டுவிட்டான், ஆனால், இந்த இரண்டு மலைகளைத் தாண்டி 2000 ஆண்டுகளாக மக்கள் வெளியே வராமல் இருப்பது ஆச்சரியமே! குர்-ஆன் சொல்வது ஒரு மோசடியே அல்லாமல் வேறு எதுவாக இருக்கமுடியும்?

மேற்கண்டவைகளை விருப்பு வெறுப்பு இன்றி முஸ்லிம்கள் சிந்தித்துப் பார்த்தால், குர்-ஆன் சொல்வது எவ்வளவு பெரிய பொய் என்பது அவர்களுக்கு விளங்கும்.

இந்த கட்டுரையை முடிக்கும் நேரத்தில், நம் அருமை இஸ்லாமிய அறிஞர் பீஜே அவர்கள் இந்த விஷயத்தைப் பற்றி என்ன சொல்லியுள்ளார் என்பதை படியுங்கள். இவர் சொல்லும் காரணங்களில் முட்டாள்தனம் பளிச்சென்று தெரிவதை காணமுடியும். இவரது வரிகளுக்கு என் பதிலை கீழே கொடுத்துள்ளேன்.

**மூலம்: www.onlinepj.com/egathuvam/2012-ega/ega_aug_2012/archive**

**தொடர்: 11, திருக்குர்ஆன் விளக்கவுரை - யஃஜூஜ், மஃஜூஜ் கூட்டத்தினரின் வருகை**

**பி. ஜைனுல் ஆபிதீன்**

**பீஜே அவர்கள் எழுதியவைகள்:**

அவர்கள் எந்த நாட்டில் இவ்வாறு அடைக்கப்பட்டுள்ளனர் என்பதை அல்லாஹ்வும், அவனது தூதரும் நமக்குக் கூறவில்லை. யுகமுடிவு நாளின் நெருக்கத்தில் அவர்கள் வெளிப்பட வேண்டுமானால் மற்ற மனிதர்கள் அவர்களை அறிந்து கொள்ளாமலிருப்பது அவசியம். அதற்காகக் கூட இறைவன் மறைத்து வைத்திருக்கலாம்.

**நம் கேள்விகள்:**

அந்த யஃஜூஜ் மஃஜூஜ் மக்கள் எந்த பகுதியில் அல்லது எந்த நாட்டில் இருந்திருக்கமுடியும் என்று நாம் யூகிக்கலாம். குர்-ஆனின் (18:90-93) படி, கிழக்கு பகுதிக்குச் சென்று, அதன் பிறகு அவர் இன்னொரு வழியில் சென்றுள்ளார். குர்-ஆன் சொல்வது உண்மை என்று நம்பினால், துல்கர்னைன் சைனா/ஜப்பான் பகுதிக்கு (கிழக்கு) சென்று அதன் பிறகு இன்னொரு வழியில் சென்றார் என்றால் அது வடக்கு சைனாவாக, அல்லது தெற்கு இந்திய பகுதியாகவே இருக்கவேண்டும். அதிகபட்சமாக அவர் மறுபடியும் ஆசியாவின் மத்திய கிழக்கு பகுதிக்கு வந்தாகவேண்டும், அல்லது ஐரோப்பாவில் ஒரு இடத்தில் தான் இருந்திருக்கவேண்டும். குர்-ஆன் சொல்வது கட்டுக்கதை என்பதால் தான் பீஜே போன்ற இஸ்லாமிய அறிஞர்களுக்கு அந்த இடம் என்னவென்று தெரிவதில்லை.

இரண்டாவதாக, எதற்காக அல்லாஹ் அந்த மக்களை மறைக்கவேண்டும்? கடைசி காலத்தில் மறுபடியும் அழிப்பதற்காகவா? அல்லாஹ் அந்த மக்களை மறைத்துள்ளான் என்று குர்-ஆனோ, ஹதீஸ்களோ சொல்லவில்லையே! மேலும், முஹம்மதுவிற்கு அல்லாஹ் இறக்கிய வஹியின் படி, அச்சுவரில் ஓட்டை 7ம் நூற்றாண்டிலேயே விழுந்துள்ளது, அப்படியானால், அந்த சுவர் மக்கள் காணும் ஒன்றாக இருந்திருக்கவெண்டும் மேலும் அம்மக்கள் ஒரு ஓட்டையை வெற்றிகரமாக போட்டு இருந்திருக்கவேண்டும்.

**பீஜே அவர்கள் எழுதியவைகள்:**

நவீன கருவிகளையும், ஆகாய விமானங்களையும், தொலை நோக்கிக் கருவிகளையும் கண்டுபிடித்துள்ள காலகட்டத்தில் அப்படி ஒரு கூட்டம் அடைக்கப்பட்டிருந்தால் உலகத்திற்குத் தெரியாமல் இருக்குமா? செம்பு உருக்கி ஊற்றப்பட்டால் அதன்பளபளப்பை வைத்து இனம் காணலாமே என்றெல்லாம் சிலர் கேட்கின்றனர். அந்தக்கேள்வி தவறானதாகும்.

மனிதனிடம் இத்தகைய நவீன சாதனங்கள் இருந்தாலும் அவை முழு அளவுக்கு இன்னமும் பயன்படுத்தப்படவில்லை. மிக உயரத்திலிருந்து கொண்டு பூமியைப் படம்பிடித்திருக்கிறார்கள், பார்த்திருக்கிறார்களே தவிர பூமியின் ஒவ்வொரு அங்குலத்தையும் ஏன் ஒவ்வொரு ஏக்கரையும் கூட மனிதன் இந்தக் கருவிகள் மூலம் இதுவரை ஆராயவில்லை. பூமியிலேயே இருக்கும் சில பகுதிகளை இப்போதும் கூடகண்டுபிடித்ததாகச் செய்திகள் வருவதிலிருந்து இதை உணரலாம்.

இந்த மண்ணுலகில் மனிதனின் கால் படாத நிலப்பரப்புகள் ஏராளம் உள்ளன. ஆகாயத்தில் வட்டமடித்து சக்தி வாய்ந்த தொலைநோக்கிக் கருவிகள் மூலம் ஒவ்வொருஏக்கராக ஆராய முற்பட்டாலும் மரங்கள், காடுகள் போன்ற தடைகள் இல்லாவிட்டால்தான் பூமியில் உள்ளவர்களைப் பார்க்க முடியும். தடைகள் இருந்தால் அந்தக்காடுகளைத் தான் பார்க்க முடியும்.

**நம் கேள்விகள்:**

பீஜே அவர்கள் சொல்வது முஸ்லிம்களுக்கு சீரியஸான விவரமாக தென்படும், ஆனால் இதர மக்களுக்கு வேடிக்கையாகவும், முட்டாள்தனமானதாகவும் தென்படுகின்றது. பீஜே போன்ற முஸ்லிம் அறிஞர்கள் சாதாரண முஸ்லிம்களை இன்னும் முட்டாள்தனத்திலேயே வைத்திருக்க விரும்புகிறார்கள். ஏழாம் நூற்றாண்டின் நாகரீகமற்ற மனிதன் சிந்திப்பது போலவே சிந்திக்க இப்படிப்பட்டவர்கள் முயலுகிறார்கள்.

பீஜே கவனிக்கவேண்டும், இங்கு நாம் ஏதோ ஒரு ஏக்கர் அல்லது 100 ஏக்கர் காடு பற்றி பேசவில்லை. நாம் இங்கு சுட்டிக்காட்ட விரும்புவது, பல கோடி மக்கள் மறைந்து வாழ்ந்துக்கொண்டு இருக்கின்ற இரண்டு பெரிய மலைகளும், அந்த மலைகளுக்கு இடையே கட்டப்பட்ட பிரமாண்ட சுவர் பற்றியதாகும்.

ஆக, இப்படிப்பட்ட பிரமாண்ட மலைகள் மற்றும் அணைக்கட்டு போன்ற சுவர், தற்கால விஞ்ஞான கருவிகளின் கண்களில் படாமல் இருப்பதில்லை. பீஜே அவர்களே, எத்தனை நாட்கள் தான் இப்படி மக்களின் (முஸ்லிம்களின்) காதுகளில் பூவை வைப்பீர்கள்?

**பீஜே அவர்கள் எழுதியவைகள்:**

> குறிப்பிட்ட காட்டில் தான் வீரப்பன் இருக்கிறான் என்று தெளிவாகத் தெரிந்தும் வெகுநாட்களாக அவனது இருப்பிடத்தைத் துல்லியமாகக் கண்டுபிடிக்க முடியாததற்கு இதுதான் காரணம். காடுகளும், குகைகளும், தொலைநோக்கிக் கருவிகள் மூலம்பார்ப்பதைத் தடுத்து விடுகின்றன.
>
> இலங்கையில் பிரபாகரனும், புலிகளும் இந்திய, இலங்கை இராணுவத்தினரால் நீண்டநாட்களாகப் பிடிக்கப்பட முடியாமல் போனதற்குக் கூட அடர்த்தியானகாட்டுப்பகுதியை அவர்கள் தேர்வு செய்தது தான் காரணம்.

**நம் கேள்விகள்:**

காடுகள் மற்றும் மலைகளுக்குள்ளே 100 பேர், 1000 பேர் அல்லது அதிக பட்சமாக ஒரு லட்சம் பேர் மறைந்து வாழலாம் ஆனால் பல நூறு கோடி பேர் இப்படி மறைந்து வாழ்ந்துக்கொண்டு இருக்கிறார்கள் என்றுச் சொல்வது தற்காலத்தின் விஞ்ஞான உலகில் ஏற்பதற்கில்லை.

வீரப்பன் மற்றும் பிரபாகரன் விஷயத்தில், அந்த மக்கள் கூட்டம் யாருடைய கண்களிலும் தென்பட்டுவிடக்கூடாது என்று வேண்டுமென்றே மறைந்து வாழ்ந்தவர்கள், மேலும் அவர்களின் எண்ணிக்கை ஆயிரங்களில் இருக்கும், பல நூறு கோடி பேர் இருக்கமாட்டார்கள். அதுவும் இந்த மக்கள் உலக மக்களிடமிருந்து மறைந்து இருக்கவேண்டும் என்று விரும்புபவர்கள் அல்ல. இவர்கள் இரண்டு ஆயிர ஆண்டுகளுக்கு மேலாக வெளியே வர முயற்சி செய்துக்கொண்டு இருக்கின்ற மக்களாவார்கள்.

**பீஜே அவர்கள் எழுதியவைகள்:**

> மலைகளால் சூழப்பட்ட காடுகளிலோ, அல்லது குகைகளிலோ யஃஜூஜ், மஃஜூஜ்கூட்டத்தினர் இருந்தால் எந்தச் சாதனங்கள் மூலமும் அவர்கள் இருப்பதை அறிந்துகொள்ள முடியாது.
>
> செம்பு எனும் உலோகம் விரைவில் பாசி படிந்து பச்சை நிறத்துக்கு மாறி விடுவதால் அதன் பளபளப்பை வைத்தும் கண்டுபிடிக்க முடியாது. தொலைவிலிருந்து

பார்க்கும்போதும், அருகிலிருந்து பார்க்கும் போதும் கூட மலைகளில் புல் வளர்ந்திருப்பது போன்றதோற்றமே தென்படும்.

எனவே எவரது கண்களுக்கும் புலப்படாமல் இந்தக் கூட்டத்தினர் இந்தப் பூமியின் ஒரு பகுதியில் வாழ்ந்து வருவது சந்தேகப்பட வேண்டியதன்று.

இனி வருங்காலத்தில் மனிதன் முயன்று நெருங்கலாம். அந்த நேரம் அவர்கள் வெளியேவர வேண்டிய காலமாக, அதாவது யுகமுடிவு நாளின் நெருக்கமாகத் தான் இருக்கமுடியும்.

**நம் கேள்விகள்:**

இங்கு நாம் ஆய்வு செய்துக்கொண்டு இருப்பது, அட்டைப்பெட்டியினால் பிள்ளைகள் பள்ளிக்கூட பிராஜெக்டுகளுக்காக செய்யும் மலைகளோ, சுவரோ அல்ல, இவைகள் பிரமாண்ட மலைகள், பிரமாண்டமான சுவர் அதுவும் பல ஆயிரம் கோடி மக்களை மூடிமறைக்கும் அளவிற்கு உள்ள பிரமாண்டமான மலையாகும். எனவே, இவைகள் விஞ்ஞான கருவிகளின் கண்களில் படாமல் இருக்கமுடியாது.

யாராவது பீஜே அவர்களுக்கு உலகை சுற்றிக்காட்டுங்களய்யா? குறைந்தபட்சம் டிஸ்கவரி சானல், நாஷனல் ஜியாகிரபி சானலை காட்டுங்களைய்யா? இவருடைய தொல்லை தாங்க முடியலே!

இரும்பினால், செம்பினால் செய்த ஒரு சுவரை பல கோடி மக்கள் சேர்ந்து, பல நூற்றாண்டுகளாக துளைக்கமுடியவில்லை என்றுச் சொல்வது அறிவுடமையாகாது. பல கோடி மக்கள் இரண்டு மலைகளை ஏறமுடியாது என்றுச் சொல்வது வேடிக்கையானது.

ஒரு கால் இல்லாத ஒரு இந்தியப்பெண், தன் ஊனமான காலைக்கொண்டு உலகின் உயரமான சிகரமாகிய எவரெஸ்டை ஏறி தன் கொடியை நாட்டிவிட்டார் (பார்க்க - அருனிமா சின்ஹா - **en.wikipedia.org/wiki/Arunima_Sinha** & **indiatoday.intoday.in/story/arunima-sinha-inspiring-story-first-indian-female-amputee-mount-everest-proud-mountain-climb-lifest/1/692252.html** ). ஊனமுற்று இருந்தாலும், எவரெஸ்ட் சிகரத்தைத் தொட்ட உலகின் முதல் பெண்மணி.

இதோ இன்னொரு நிஜத்தைப் பாருங்கள், ஊனமுற்றவர்களுக்கு இனி எவரெஸ்ட் ஏற அனுமதி கொடுக்கமாட்டோம் என்று நேபால் அரசாங்கம் சொல்லியுள்ளது, ஊனமுற்றவர்களால் ஏறமுடியாது என்று அவ்வரசாங்கம் நினைத்தது. ஆனால், இதோ இந்த பட்டியலில் ஏழு ஊனமுற்றவர்கள் எவரெஸ்ட்டை தொட்டுவிட்டார்கள். அவர்களைப் பற்றி படிக்க சொடுக்கவும்: **metro.co.uk/2015/09/29/nepal-is-banning-disabled-climbers-from-everest-so-here-are-seven-people-that-totally-nailed-it-5413581/**

பீஜே அவர்களே, அந்த பலகோடி மக்கள் தாண்டமுடியாத அளவிற்கு அந்த மலைகள் என்ன எவரெஸ்ட் சிகரங்களா? முயன்றால் சிகரமும் காலுக்கடியில் வந்துவிடும்.

**முடிவுரை:**

இதுவரை நாம் துல்கர்னைன் கட்டிய அந்த பிரமாண்ட சுவர் பற்றி ஆய்வு செய்தோம்.

**1)** குர்-ஆன் சொல்லும் அந்த நிகழ்ச்சி ஒரு பொய்யாகும்.

**2)** துல்கர்னைன் கட்டியதாகச் சொல்லும் அந்த பிரமாண்ட சுவர் உலகில் இதுவரை கண்டுபிடிக்கப்படவில்லை. இதற்கு காரணம் அப்படிப்பட்ட சுவர் உலகில் இல்லை என்பதாகும்.

**3)** பல நூறு கோடி மக்கள் இரண்டு மலைகளுக்கும், ஒரு சுவருக்கும் பின்னால் மறைந்துக்கொண்டு 2000 ஆண்டுகளுக்கும் மேலாக இன்றும் வாழ்ந்துக்கொண்டு இருக்கிறார்கள் என்றுச் சொல்வது, அடிமட்ட முட்டாள் தனமான கூற்றாகும்.

**4)** தற்கால விஞ்ஞான முன்னேற்றத்தின் அடிப்படையில் இப்படிப்பட்ட பிரமாண்ட மலையும், சுவரும் கண்களுக்கு தெரியாமல் இருக்கிறது என்றுச் சொல்வது, விஞ்ஞான உலகில் வாழ தகுதியில்லாதவர்கள் சொல்லும் பேச்சாகும்.

**5)** அந்த செம்புச்சுவர், பாசி படிந்து பச்சை நிறமாக மாறிவிட்டு இருப்பதினால் தான், விஞ்ஞான கருவிகளின் கண்களில் படாமல் இருக்கிறது என்று பீஜே சொல்வது அறிவுடமைக்கு ஏற்காத ஒன்றாகும்.

**6)** பலகோடி மக்கள் இரண்டு மலைகளுக்கு இடையே வாழும்படியான நிலப்பரப்பு கிடைக்குமா? என்று பார்த்தால், அது முடியாத ஒன்றாகத் தெரியும். அதுவும், நவீன கருவிகள், மருந்துகள், வசதிகள் இல்லாமல், பல கோடி பேர் இன்றும் வாழ்ந்துக்கொண்டு இருக்கிறார்கள் என்பது ஏற்கத்தக்கதல்ல, இது விஞ்ஞானத்துக்கு எதிரானதாகும், மேலும் நடைமுறையில் நடக்காத ஒன்றாகும்.

இப்படிப்பட்ட விஞ்ஞான மற்றும் சரித்திர பிழைகளுள்ள இந்த விவரம் முஹம்மதுவிற்கு எங்கேயிருந்து கிடைத்தது? என்ற சந்தேகம் வாசகர்களுக்கு வந்திருக்கும். நெருப்பில்லாமல் புகையாது அல்லவா, எல்லாவற்றிற்கும் ஒரு காரணமுண்டு. இந்த மலைகள், சுவர் மற்றும் கடைசி கால நிகழ்ச்சி இவைகள் எல்லாம் எங்கேயிருந்து எடுக்கப்பட்டது என்பதை அடுத்த கட்டுரையில் பார்ப்போம்.

**பாரா அவர்களுக்கு:**

பாரா அவர்களே! மகாபாரதத்தில் வரும் கர்ணனைப் போலத்தான் இந்த குர்-ஆனின் துல்கர்னைனும் இருப்பான் என்று நினைத்து மேலோட்டமாக நீங்கள் எழுதிவிட்டீர்கள். இது எப்படிப்பட்ட விஞ்ஞான மற்றும் சரித்திர பிழையென்று பார்த்தீர்களா? உங்களுக்கு என்ன! புத்தகம் விற்றுவிட்டது! தொடர்களையும் நன்றாக மக்கள் ரசித்து படித்துவிட்டார்கள்! ஆனால், ஆழம் தெரியாமல் காலை விட்டுவிட்டீர்களே!

ஐஐஐஐ

# 20) அலேக்சாண்டர் ரொமான்ஸும் குர்-ஆனும்

குர்-ஆனில் துல்கர்னைன் என்ற மகா அரசன் பற்றிய சரித்திரம்! பதிவு செய்யப்பட்டுள்ளது. இதைப் பற்றி முந்தைய கட்டுரைகளில் கீழ்கண்ட தொடர்களில் (17,18, & 19) படித்தோம்:

- **17) மகா அலேக்சாண்டர் தான் துல்கர்னைன் அரசனா?**
- **18) அலேக்சாண்டர் முஸ்லிமா? அல்லாஹ் அனுப்பிய நபியா?**
- **19) துல்கர்னைன் கட்டிய அந்த பிரமாண்ட சுவர் எங்கே?**

**இரவல் வாங்கிய இறைவேதம் குர்-ஆன்:**

குர்-ஆனில் பல நிகழ்ச்சிகள் இரவல் வாங்கி பதிக்கப்பட்டவைகளாகும். அந்த காலத்தில் புத்தகங்களுக்கு காபிரைட் உரிமைகள் (copyright) இல்லை, எனவே, இஸ்லாமுக்கு முன்பு இருந்த பல கதைகள் குர்-ஆனில் காணலாம். குர்-ஆன் 18ம் அத்தியாயத்தில் வரும் துல்கர்னைன் நிகழ்ச்சி இரவல் வாங்கப்பட்ட நிகழ்ச்சியாகும். இந்த நிகழ்ச்சி உண்மை சரித்திரமாக இருந்திருந்தால், பிரச்சனை இல்லை, ஆனால் அவைகள் கட்டுக்கதைகளாக இருப்பது தான் நம் முன் இருக்கும் கேள்வி.

**துல்கர்னைன் கதை இரவல் வாங்கியது:**

துல்கர்னைன் விஷயத்தில் குர்-ஆன் சரித்திர மற்றும் விஞ்ஞான பிழைகளைச் செய்துள்ளது. நடைமுறைக்கு ஏற்காத விவரங்களைச் சொல்கிறது. துல்கர்னைன் பற்றிய நிகழ்ச்சியை முழுவதுமாக அறிந்துக்கொள்ள மேலே கொடுக்கப்பட்ட முந்தைய மூன்று கட்டுரைகளை படித்துக்கொள்ளவும். உலகத்துக்கே வழிகாட்டியாக குர்-ஆன் இருக்கிறது என்று முஸ்லிம்கள் சொல்லும் போது, அதில் துல்கர்னைன் போன்ற கட்டுக்கதைகள் எப்படி இடம் பிடிக்கமுடியும்? இதனை அறிந்துக்கொள்ள நாம் ஏழாம் நூற்றாண்டில் நிலவிய கட்டுக்கதைகள் பற்றி சுருக்கமாக அறிந்துக்கொள்ளவேண்டும்.

**அலேக்சாண்ட ரொமன்ஸ் (Alexander Romance) புத்தகம்:**

மகா அலேக்சாண்டரின் காலக்கட்டம் கி.மு. 356 லிருந்து கி.மு. 323 வரையாகும். இவர் அக்கால உலகம் முழுவதும் ஆளவேண்டும் என்ற ஆர்வத்தினால், கிழக்கே கிட்டத்தட்ட இந்தியா வரைக்கும் வந்துள்ளார். இவர் மரித்த கி.மு. 323ம் ஆண்டுக்கு பிறகு, இவர் மீது பல கட்டுக்கதைகள் பரவ ஆரம்பித்தன. இவர் செய்யாத பல சாதனைகளை செய்தது போல, கற்பனைக் கதைகள் எழுதப்பட்டன. இப்படி எழுதப்பட்ட கதைகளின் தொகுப்பை 'அலேக்சாண்டர் ரொமான்ஸ்' என்று அழைக்கிறார்கள்.

> **The Romance of Alexander is any of several collections of legends concerning the mythical exploits of Alexander the Great. The earliest version is in the Greek language, dating to the 3rd century. Several late manuscripts attribute the work to Alexander's court historian Callisthenes, but the historical person died before Alexander and could not have written a full account of his life. The unknown author is still sometimes known as Pseudo-Callisthenes.**
>
> **The text was transformed into various versions between the 4th and the 16th centuries, in Medieval Greek, Latin, Armenian, Syriac, Hebrew and**

most medieval European vernaculars. (Source - https://en.wikipedia.org/wiki/Alexander_romance)

**24 மொழிகளில், 80 வித்தியாசமான பதிப்புக்களில் எழுதப்பட்ட புத்தகம்:**

கி.பி. மூன்றாம் நூற்றாண்டிலிருந்து இந்த கட்டுக்கதை புத்தகத்தை பலர் தங்கள் சொந்த விவரங்களைச் சேர்த்து எழுத ஆரம்பித்தனர், மொத்தம் 24 மொழிகளில், 80 வகையான வெவ்வேறு பதிப்புகளாக எழுதப்பட்டன.

> **The earliest Greek manuscripts of the Alexander romance, as they have survived, indicate that it was composed at Alexandria in the 3rd century. The original text was lost but was the source of some eighty different versions written in twenty-four different languages. (Source - en.wikipedia.org/wiki/Alexander_the_Great_in_the_Quran)**

**கிறிஸ்தவ யூத வட்டாரங்களில் - அலேக்சாண்டர் ரொமான்ஸ்:**

யூத மற்றும் கிறிஸ்தவ வட்டாரங்களில் கூட அலேக்சாண்டர் பற்றிய கட்டுக்கதைகள் எழுதப்பட்டன. இவற்றில் அலேக்சாண்டர் ஒரு நல்ல அரசன் போல சித்தரிக்கப்பட்டார்.

> **Eventually Jewish writers would almost completely co-opt Alexander, depicting him as a righteous gentile or even a believing monotheist.[5]**
>
> **The Christianized peoples of the Near East, inheritors of both the Hellenic as well as Judaic strands of the Alexander romance, further theologized Alexander until in some stories he was depicted as a saint. The Christian legends turned the ancient Greek conqueror Alexander III into Alexander "the Believing King", implying that he was a believer in monotheism. Eventually elements of the Alexander romance were combined with Biblical legends such as Gog and Magog. (Source - en.wikipedia.org/wiki/Alexander_the_Great_in_the_Quran)**

**மறுமலர்ச்சி காலம் (1300-1600 கி.பி) வரை — இந்த நிலை நீடித்தது:**

அலேக்சாண்டரின் உண்மையான சரித்திரம் மக்களுக்கு கிடைக்காத காரணத்தினால், அவர் பற்றி எழுதப்பட்ட கட்டுக்கதைகளை மக்கள் உண்மையென்று எண்ணி நம்பி வந்தனர். அலேக்சாண்டரின் உண்மை சரித்திரம் **(The Anabasis of Alexander)** கிறிஸ்தவ மறுமலர்ச்சி காலம் என்று சொல்லப்படும் கிபி. 1300-1600 காலக்கட்டத்தில் கண்டுபிடிக்கப்பட்டது.

> **During the period of history during which the Alexander romance was written, little was known about the true historical Alexander the Great as most of the history of his conquests had been preserved in the form of folklore and legends. It was not until the Renaissance (1300—1600 AD) that the true history of Alexander III was rediscovered: (Source - en.wikipedia.org/wiki/Alexander_the_Great_in_the_Quran)**

**அரபி மொழியை தாக்கிய சீரியக் மொழியின் ரொமான்ஸ்:**

சீரியக் மொழியிலும், இந்த அலேக்சாண்டர் ரொமான்ஸ் புழக்கத்தில் இருந்தது. மேலும், அரபி மொழியிலும் ‘கிஸாஸ் துல்கர்னைன்’ என்ற பெயரில் இந்த கட்டுக்கதைகள் எழுதப்படுவதற்கு, இந்த சீரியக் மொழியின் புத்தகம் வழிகாட்டியது.

இங்கு கவனிக்கவேண்டிய முக்கியமான விவரம் என்னவென்றால், குர்-ஆன் எழுதப்பட்டுக்கொண்டு இருந்த காலத்தில், இந்த சீரியக் மொழியின் ரொமான்ஸ் புழக்கத்தில் இருந்துள்ளது என்பதாகும்.

> **The Syriac legend was the source of an Arabic variant called the Qisas Dhul-Qarnayn (Tales of Dhul-Qarnayn)[10] and a Persian variant called the Iskandarnamah (Book of Alexander), as well as Armenian and Ethiopic translations.[11]**
>
> **The version recorded in Syriac is of particular importance because it was current in the Middle East during the time of the Quran's writing and is regarded as being closely related to the literary and linguistic origins of the story of Dhul-Qarnayn in the Quran. The Syriac legend, as it has survived, consists of five distinct manuscripts, including a Syriac Christian religious legend concerning Alexander and a sermon about Alexander attributed to the Syriac poet-theologian Jacob of Serugh (451—521 AD, also called Mar Jacob). The Syriac Christian legend concentrates on Alexander's journey to the end of the World, where he constructs the Gates of Alexander to enclose the evil nations of Gog and Magog, while the sermon describes his journey to the Land of Darkness to discover the Water of Life (Fountain of Youth). These legends concerning Alexander are remarkably similar to the story of Dhul-Qarnayn found in the Quran.[12] (Source - en.wikipedia.org/wiki/Alexander_the_Great_in_the_Quran)**

**குர்-ஆனில் துல்கர்னைன் பற்றி விவரங்கள்:**

1) அவர் உலகின் கடைசி பாகம் வரை (மேற்கு கிழக்கு) பயணம் செய்தார்.

2) யஃஜூஜ்/மஃஜூஜ் மக்களை தடை செய்ய பெரிய தடுப்பு சுவரை எழுப்பினார்.

இவ்விரு விவரங்கள் அப்படியே, சீரியக் கட்டுக்கதைகளில் வருகிறது. இது குர்-ஆனுக்கு ஒத்து இருக்கிறது, மன்னிக்கவும் குர்-ஆன் இவைகளுக்கு ஒத்து இருக்கிறது.

**இஸ்லாமுக்கு முன்பிலிருந்தே அரபியில் ரொமான்ஸ் இருந்தது:**

தோல் சுருள்களை ஆய்வு செய்ததில், இஸ்லாம் தோன்றியதற்கு முன்பே அரபியில் அலேக்சாண்டர் ரொமான்ஸ் இருந்ததற்கான சாத்திய கூறுகள் தென்படுகின்றன. எத்தியோப்பிய மொழியில் ரொமான்ஸ் மொழியாக்கம் செய்வதற்கு சீரியக் மொழியாக்கம் பயன்பட்டது என்று சொல்லப்படுகின்றது. அதே நேரத்தில் இவ்விரு மொழியாக்கங்களுக்கு இடையில் அழிந்துவிட்ட அரபி மொழி ரொமான்ஸ் இருந்திருக்கிறது என்று ஆதாரங்கள் காட்டுகின்றன. மேலும், இஸ்லாமுக்கு முன்பு, பெர்சிய மொழியிலும் ரொமான்ஸ் இருந்துள்ளது.

**The manuscripts also contain evidence of lost texts. For example, there is some evidence of a lost pre-Islamic Arabic version of the translation that is thought to have been an intermediary between the Syriac Christian and the Ethiopic Christian translations.[15] There is also evidence that the Syriac translation was not directly based on the Greek recensions but was based on a lost Pahlavi (pre-Islamic Persian) intermediary.[8] (Source - en.wikipedia.org/wiki/Alexander_the_Great_in_the_Quran)**

**யூதர்கள், கிறிஸ்தவர்கள் எவ்வழியோ, அல்லாஹ்வும் அவ்வழியே:**

இஸ்லாம் தோன்றிய காலத்துக்கு முன்பிலிருந்தே, யூத கிறிஸ்தவ வட்டாரங்களிலும், அலேக்சாண்டர் ரொமான்ஸ் கட்டுக்கதைகள் புழக்கத்தில் இருந்தன. அலேக்சாண்டரை ஒரு நல்ல மனிதர் என்று இம்மக்கள் நம்பியதினால், குர்-ஆனும் அலேக்சாண்டர் ஒரு நல்ல அல்லாஹ்வின் அடியார் என்று சொல்லிவிட்டது. ஆனால், ஒன்றை அல்லாஹ் மறந்துவிட்டான், அது என்னவென்றால், அலேக்சாண்டர் ரொமான்ஸ் என்பது யூத கிறிஸ்தவர்களின் வேதமல்ல, அது ஒரு கட்டுக்கதை புத்தகம். ஆனால், அல்லாஹ் அந்த கட்டுக்கதையை உண்மை என்று எண்ணி தன் வேதத்தில் சரித்திரம் என்றுச் சொல்லி புகுத்திவிட்டான். ஆனால், விதி விளையாடிவிட்டது, இஸ்லாம் உருவாகி 600 ஆண்டுகளுக்கு பிறகு, மகா அலேக்சாண்டரின் உண்மை சரித்திரத்தை கண்டுபிடித்துவிட்டார்கள். இனி முஸ்லிம்கள் என்ன செய்யமுடியும்? குர்-ஆனை மாற்றமுடியுமா? முடியாதே!

## Theological controversy

**The identity of Dhul-Qarnayn has been a matter of theological controversy amongst Muslim scholars for centuries. Dhul-Qarnayn was equated with Alexander by the majority of classical Islamic scholars during a period when Christians and Jews had themselves co-opted Alexander the Great as a religious figure. However, it is clear that the historical Alexander the Great was a Greek pagan (for example, Alexander's mother Olympias is said to have been a devout member of the orgiastic snake-worshiping cult of Dionysus, and may have slept with snakes[16]). Such historical facts about Alexander the Great became well known only after the Renaissance period (1300—1600 AD) when the Anabasis Alexandri of Arrian (AD 86—160) was rediscovered. In light of the modern view of Alexander the Great, his identity as Dhul-Qarnayn has become a matter of great controversy for Muslims. In reaction, alternative theories about the identity of Dhul-Qarnayn have been advanced by some Muslim scholars. For example, it has been suggested that Dhul-Qarnayn could be Cyrus the Great (see Cyrus the Great in the Quran). The Muslim sentiment against Alexander is reflected in Islamic textbooks (e.g. "Some [Muslim Scholars] say it was Alexander the Great, who lived from 356 BCE to 323 BCE, but that is highly unlikely, given that Alexander was an idol-worshipper."[17]), often with references to his polytheistic religious beliefs and (more recently) his personal relationships. (Source - en.wikipedia.org/wiki/Alexander_the_Great_in_the_Quran)**

இதுவரை பார்த்த ஆதாரங்களின் படி, இஸ்லாமுக்கு முன்புலிருந்து உலா வந்த கட்டுக்கதைகள் குர்-ஆனிலும் புகுந்துவிட்டது. யூதர்கள் அந்த மூன்று கேள்விகளை முஹம்மதுவிடம் கேளுங்கள் என்று சொன்னபோதே, அல்லாஹ் சுதாரித்து

இருந்திருக்கவேண்டும். அல்லாஹ் உண்மையான இறைவனாக இருந்திருந்தால், எது கட்டுக்கதை? எது சரித்திரம்? என்பதை அறிந்துக்கொண்டு இருந்திருப்பான். குறைஷிகள் கேள்வி கேட்ட போது, அல்லாஹ் 15 நாட்களை எடுத்துக்கொண்டும், கடைசியாக ஒரு கட்டுக்கதையை முஹம்மதுவிற்கு வஹியாக இறக்கிவிட்டார், அந்தோ பரிதாபம்.

மேலே மூல நூல்கள் பற்றிய விவரங்களை மட்டுமே கண்டோம். இப்போது, குர்-ஆனில் பதிக்கப்பட்ட விவரங்களும், அலேக்சாண்டர் ரொமான்ஸில் உள்ள விவரங்களும் எப்படி ஒத்துப்போகிறது என்பதை சுருக்கமாக காண்போம்.

**1) சீரியக் ரொமான்ஸ் - இரண்டு கொம்புகளை உடையவன்**

குர்-ஆனில் துல்கர்னைன் என்பது இரண்டு கொம்புகளுடையவன் என்று அர்த்தம். அந்த இரண்டு கொம்புகளை இறைவன் தான் தனக்கு கொடுத்தான், என்று அலேக்சாண்டர் ஜெபம் செய்வதாக, சீரியக் மொழியில் உள்ள ரொமான்ஸ் குறிப்பிடுகிறது:

> **The Christian Syriac version of the Alexander romance, in the sermon by Jacob of Serugh, describes Alexander as having been given two horns of iron by God. The legend describes Alexander (as a Christian king) bowing himself in prayer, saying:**
>
> **O God ... I know in my mind that thou hast exalted me above all kings, and thou hast made me horns upon my head, wherewith I might thrust down the kingdoms of the world...I will magnify thy name, O Lord, forever ... And if the Messiah, who is the Son of God [Jesus], comes in my days, I and my troops will worship Him...[35] (Source - en.wikipedia.org/wiki/Alexander_the_Great_in_the_Quran)**

**2) பிரமாண்ட சுவர் கட்டியதாக தன் தாய்க்கு கடிதம் எழுதினார் அலேக்சாண்டர் (குர்-ஆனுக்கு 300 ஆண்டுகளுக்கு முன்பே)**

இந்த கட்டுக்கதையில் வரும் அலேக்சாண்டர், குர்-ஆனில் வருவது போல, ஒரு பிரமாண்டமான சுவரைக் கட்டி மக்களை காப்பாற்றியதாக தன் தாய்க்கு ஒரு கடிதம் எழுதுகிறார். இரண்டு மலைகளுக்கு இடையே அந்த சுவரை கட்டினார் என்று குறிப்பிடுகிறார். இந்த கடிதம், கி.பி. 4ம் நூற்றாண்டில் உலா வந்த 'அலேக்சாண்டர் ரொமான்ஸ்'ல் வருகிறது. அதாவது குர்-ஆன் எழுதப்படுவதற்கு 300 ஆண்டுகளுக்கு முன்பு இந்த கதை வருகிறது.

இதிலிருந்து அறிவது என்னவென்றால், யூதர்களும் குறைஷிகளும் ஒரு புகழ்பெற்ற கதையைப் பற்றித் தான் முஹம்மதுவிடம் கேட்டு இருக்கிறார்கள், ஆனால், அது ஒரு கட்டுக்கதையென்று, யூதர்களுக்கும், குறைஷிகளுக்கும் தெரியாமல் போனது ஆச்சரியமல்ல, அல்லாஹ்விற்கும் தெரியாமல் போனது தான் ஆச்சரியம்.

**Alexander's Wall in Christian legends**

> **Christian legends speak of the Caspian Gates (Gates of Alexander), also known as Alexander's wall, built by Alexander the Great in the Caucasus mountains. Several variations of the legend can be found. In the story, Alexander the Great built a gate of iron between two mountains, at the end**

**of the Earth, to prevent the armies of Gog and Magog from ravaging the plains. The Christian legend was written in Syria shortly before the Quran's writing and closely parallels the story of Dhul-Qarnayn.[41] The legend describes an apocryphal letter from Alexander to his mother, wherein he writes:**

**I petitioned the exalted Deity, and he heard my prayer. And the exalted Deity commanded the two mountains and they moved and approached each other to a distance of twelve ells, and there I made ... copper gates 12 ells broad, and 60 ells high, and smeared them over within and without with copper ... so that neither fire nor iron, nor any other means should be able to loosen the copper; ... Within these gates, I made another construction of stones ... And having done this I finished the construction by putting mixed tin and lead over the stones, and smearing .... over the whole, so that no one might be able to do anything against the gates. I called them the Caspian Gates. Twenty and two Kings did I shut up therein.[42]**

**These pseudepigraphic letters from Alexander to his mother Olympias and his tutor Aristotle, describing his marvellous adventures at the end of the World, date back to the original Greek recension α written in the 4th century in Alexandria. The letters are "the literary expression of a living popular tradition" that had been evolving for at least three centuries before the Quran was written.[6] (Source - en.wikipedia.org/wiki/Alexander_the_Great_in_the_Quran)**

**3) கடைசி காலத்தில் தகர்ப்படும் - பிரமாண்ட தடுப்பு**

கிறிஸ்தவ வட்டாரங்களில் உலாவந்த ரொமான்ஸில், அந்த தடுப்பு சுவரை இறைவன் கடைசி காலத்தில் தகர்ந்துப்போகும் படி செய்வார், அப்பொழுது மிகுந்த அழிவு உண்டாகும் என்றும் சொல்லப்பட்டது. இதையே குர்-ஆனும் அப்படியே மொழிந்துள்ளது என்பது குறிப்பிடத்தக்கது. பார்க்க குர்-ஆன் **18:98-99**

**18:98.** "இது என் இறைவனிடமிருந்துள்ள ஒரு கிருபையே ஆகும், ஆனால் என் இறைவனுடைய வாக்குறுதி நிறைவேறும்போது, அவன் இதனையும் தூள் தூளாக்கி விடுவான்; மேலும், என் இறைவனுடைய வாக்குறுதி (முற்றிலும்) உண்மையானதே" என்று கூறினார்.

**18:99.** இன்னும், அந்நாளில் அவர்களில் சிலரைச் சிலருடன் (கடல்) அலைகள் (மோதுவதைப் போல்) மோதுமாறு நாம் விட்டு விடுவோம்; பின்னர், ஸூர் (எக்காளம்) ஊதப்படும்; பிறகு நாம் அவர்களை ஒன்று சேர்ப்போம். (டாக்டர். முஹம்மது ஜான் தமிழாக்கம்)

**Gog and Magog in Christian legends**

**In the Syriac Christian legends, Alexander the Great encloses the Gog and Magog horde behind a mighty gate between two mountains, preventing Gog and Magog from invading the Earth. In addition, it is written in the Christian legend that in the end times God will cause the Gate of Gog and**

> **Magog to be destroyed, allowing the Gog and Magog horde to ravage the Earth;**
>
> **The Lord spake by the hand of the angel, [saying] ...The gate of the north shall be opened on the day of the end of the world, and on that day shall evil go forth on the wicked ... The earth shall quake and this door [gate] which thou [Alexander] hast made be opened ... and anger with fierce wrath shall rise up on mankind and the earth ... shall be laid waste ... And the nations that is within this gate shall be roused up, and also the host of Agog and the peoples of Magog [Gog and Magog] shall be gathered together. These peoples, the fiercest of all creatures.[42]**

**முடிவுரை:**

இந்த கட்டுரையின் விவரங்களுக்காக நான் முழுவதுமாக விக்கீபீடியா ஆங்கில தொடுப்புக்களை பயன்படுத்தியுள்ளேன். தேவையான விவரங்களின் சுருக்கத்தை மட்டுமே இங்கு பதித்தேன். விருப்பமுள்ளவர்கள் கீழ்கண்ட தொடுப்புக்களை ஆங்கிலத்தில் படித்துக்கொள்ளலாம்.

**en.wikipedia.org/wiki/Alexander_the_Great_in_the_Quran**

**en.wikipedia.org/wiki/Alexander_romance**

**en.wikipedia.org/wiki/The_Anabasis_of_Alexander**

**இவைகளிலிருந்து அறிவதென்ன?**

அ) குர்-ஆன் துல்கர்னைன் விஷயத்தில் சரித்திர, விஞ்ஞான பிழையை செய்துள்ளது.

ஆ) பல நூற்றாண்டுகளாக வாய்வழியாகவும், கட்டுக்கதை புத்தகங்களாகவும் உலாவிக்கொண்டு இருந்த அலேக்சாண்டர் ரொமான்ஸ் புத்தகத்தின் விவரங்களை சரித்திரம் என்று சொல்லி அல்லாஹ் மிகப்பெரிய தவறை செய்துள்ளான். 14 நூற்றாண்டுகளாக முஸ்லிம்களை ஏமாற்றிக்கொண்டு வந்துள்ளான்.

இ) அலேக்சாண்டரின் உண்மை சரித்திரம் மத்திய காலக்கட்டத்தில் (கி.பி. 1300-1600) கிடைத்தபோது, அந்த அலேக்சாண்டர் பல தெய்வ வழிப்பாட்டாளர் என்பதை அறிந்த இஸ்லாமிய உலகம் திகைத்துவிட்டது. இனி, முஸ்லிம்களால் என்ன செய்யமுடியும், ''அந்த துல்கர்னைன் அலேக்சாண்டர் அல்ல'' என்றுச் சொல்வதைத் தவிர!

ஈ) அலேக்சாண்டர் பற்றி உலகம் கட்டுக்கதைகளை நம்பிக்கொண்டு இருந்தால், அல்லாஹ்வும் அதேயே நம்பிவிட்டான். எது சரித்திரம் எது கட்டுக்கதை என்ற ஞானம் இறைவனுக்கு இருக்கவேண்டுமல்லவா?

அடுத்த கட்டுரையில், அதே குர்-ஆன் 18ம் அத்தியாயத்தில் உள்ள இன்னொரு விவரத்தை அதாவது கட்டுக்கதையை சுட்டிக்காட்ட விரும்புகிறேன். அதன் பிறகு பாரா அவர்களின் நிலமெல்லாம் இரத்தம் புத்தகத்தின் அடுத்தடுத்த அத்தியாயத்திற்கு தாவுவோம். பாரா அவர்கள் எழுதிய இரண்டு வரிகளுக்கு இப்படி நான்கு கட்டுரைகள் எழுதியதற்கு, அவர்

என்னை மன்னிக்கவேண்டும். என்ன செய்வது? குத்த குத்த இரத்தம் பீறிட்டுக்கொண்டு வருகிறது, அதனால் நிலமெல்லாம் இரத்தமயமாக மாறிவிட்டது.

ஐஞஐஞஐஞஐஞ

# 21) மூஸா ஹில்று கதை (18:60-82) யூதகட்டுக்கதையா?

குர்-ஆனின் 18வது அத்தியாயத்தின் துல்கர்னைன் வசனங்களை (18:83-99) நாம் இதுவரை ஆய்வு செய்துக்கொண்டு இருக்கிறோம். இவ்வசனங்களுக்கு முன்பு இன்னொரு கதையை அல்லாஹ் சுட்டிக்காட்டுகின்றான். அதாவது குர்-ஆனின் 18:60-82 வரையிலான வசனங்களில் மூஸா நபி, ஹில்று(கிள்று) என்பவரிடம் பாடம் கற்றுக்கொண்ட நிகழ்ச்சியை அல்லாஹ் சுட்டிக்காட்டுகின்றான்.

இந்த கதைக்கு என்ன வந்தது? இதில் என்ன பிரச்சனை? என்று பார்த்தால், இந்த விவரமும் இஸ்லாமுக்கு முன்பு பல நூல்களில் இருந்தவைகள் தாம். அவைகளை அப்படியே கொஞ்சம் மாற்றி குர்-ஆனில் அல்லாஹ்வின் வசனங்களாக, உண்மை சரித்திரங்களாக பதிக்கப்பட்டுள்ளது.

**இந்த கட்டுரையை கீழ்கண்ட தலைப்புக்களில் ஆய்வு செய்வோம்:**

1) குர்-ஆன் 18:60-82 வசனங்களின் சுருக்கம்

2) பீஜே அவர்களின் விளக்கம் - 273. மெஞ்ஞானமும் அஞ்ஞானமும்

3) மூஸாவும் காணாமல் போன மீனும், அலேக்சாண்டரும் ஜீவத்தண்ணீரும்

4) மூஸாவும் ஹில்றுவும், எலியாவும் ஜோஸுவா பென் லேவியும்

5) முடிவுரை

---

### 1. குர்-ஆன் 18:60-82 வசனங்களின் சுருக்கம்

இக்கட்டுரையின் அடிக்குறிப்பு [1]ல் இவ்வசனங்களை பதித்துள்ளேன், அவைகளை ஒரு முறை படித்துக்கொள்ளுங்கள். இவ்வசனங்களின் சுருக்கம் இது தான்:

**கதை 1 - வசனங்கள் 18:60-64**

> மூஸாவும், அவரது பணியாளரும் உணவுக்காக ஒரு மீனை வைத்துக்கொண்டு நீண்ட பயணம் செய்தார்கள். ஒரு குறிப்பிட்ட இடத்தில், அந்த மீன் எப்படியோ தப்பித்துக் கொண்டு கடலில் நீந்திச் சென்றுவிட்டது. பணியாளனிடம் காலை ஆகாரத்துக்கு அந்த மீனை கொண்டுவா! என்று சொன்னபோது, பணியாளர் மீன் தப்பித்துவிட்டது என்று கூறுகின்றார். நான் தேடி வந்த இடம் இது தான் என்று மூஸா கூறுகிறார்.

**கதை 2 - வசனங்கள் 18:65-82**

> அந்த மீன் தொலைந்த இடத்தில் மூஸா ''ஹில்று'' என்ற ஒரு அல்லாஹ்வின் அடியாரை சந்திக்கிறார், அவரோடு கூட இருக்க அனுமதி கேட்கிறார். ஹில்று மூஸாவிடம் நீ என்னோடு பொறுமையாக இருக்கமுடியாது. நான் உனக்கு விவரிக்கும் வரைக்கும், என்னுடைய எந்த செயலைப் பற்றியும் நீ கேள்வி கேட்கமாட்டாய் என்று உறுதி அளித்தால், என்னோடு வரலாம் என்று கூற, மூஸாவும் ஒப்புக்கொள்கிறார். ஹில்று மூன்று செயல்களைச் செய்கிறார், அம்மூன்று செயல்களின் பின்னணியை புரிந்துக்கொள்ளாமல், மூஸா மூன்று முறையும் ஹில்றுவிடம் கேள்வி கேட்கிறார். கடைசியாக, ஹில்று மூஸாவிற்கு அவரது செயல்களின் விளக்கத்தை தெரிவிக்கிறார்.

இது தான் குர்-ஆன் 18:62-82 வரையுள்ள வசனங்களில் வரும் இரண்டு கதைகளின் சுருக்கம்.

## 2. பீஜே அவர்களின் விளக்கம் - 273. மெஞ்ஞானமும் அஞ்ஞானமும்

மேற்கண்ட குர்-ஆன் வசனங்களுக்கு பீஜே அவர்கள் தம்முடைய குர்-ஆன் தமிழாக்கத்தில் விளக்கம்(எண் 273) அளித்துள்ளார். மேலும் இவ்வசனங்களின் பின்னணியைச் சொல்லும் கீழ்கண்ட ஹதீஸ்களையும் குறிப்பிட்டுள்ளார்.

> இந்த நிகழ்ச்சியின் பின்னணியை நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் விளக்கியுள்ளனர்.
>
> மூஸா நபியவர்கள் இஸ்ரவேலர்கள் மத்தியில் உரை நிகழ்த்துவதற்காக எழுந்தார்கள். "மனிதர்களில் மிகவும் அறிந்தவர் யார்?" என்று அவர்களிடம் கேட்கப்பட்டது. "இதுபற்றி அல்லாஹ்வே நன்கறிந்தவன்" எனக் கூறாமல், "நானே மிக அறிந்தவன்" எனக் கூறி விட்டார்கள். இதனால் அல்லாஹ் அவர்கள் மீது கோபமடைந்தான். "இரண்டு கடல்கள் சங்கமிக்கும் இடத்தில் எனது அடியார் ஒருவர் இருக்கிறார். அவர் உம்மை விட அதிகம் அறிந்தவர்" என்று அல்லாஹ் அறிவித்தான். அதற்கு மூஸா நபியவர்கள், "அவரை நான் எப்படி அடைவது?" என்று கேட்டார்கள். "ஒரு பாத்திரத்தில் ஒரு மீனைப் போட்டுக் கொள்! அந்த மீனை எங்கே தவற விடுகிறாயோ அந்த இடத்தில் தான் அவர் இருக்கிறார்" என்று அவர்களுக்குக் கூறப்பட்டது.
>
> மூஸா நபியவர்களும், (அவர்களின் உதவியாளர்) யூஷஃ பின் நூன் அவர்களும் பாத்திரத்தில் மீனை எடுத்துக் கொண்டு புறப்பட்டனர். ஒரு பாறையைக் கண்டு அங்கே தலைசாய்த்து தூங்கி விட்டார்கள். அந்த நேரத்தில் பாத்திரத்திலிருந்த மீன் நழுவி கடலில் சென்று விட்டது.
>
> ......இவ்வாறு நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் விளக்கியுள்ளனர். (புகாரீ 122, 3401, 4725, 4726)

## 3. மூஸாவும் காணாமல் போன மீனும், அலேக்சாண்டரும் ஜீவத்தண்ணீரும்

அலேக்சாண்டர் ரொமான்ஸ் என்ற கட்டுக்கதை புத்தகங்களில் 'இஸ்லாமில் வரும் மூஸாவும் மீனும்' என்ற கதைப்போன்ற ஒரு கதை வருகிறது. அந்த கட்டுக்கதையில் அலேக்சாண்டர் 'ஜீவத்தண்ணீரை' தேடிச்சென்ற கதை வருகிறது. அந்த தண்ணீரை குடிப்பவர் மரிக்கமாட்டாராம். அந்த இடத்தை எப்படி அறிந்துக்கொள்வது என்று கேட்க, ஒரு ஞானி அவருக்கு, ஒரு மரித்த மீனை கொண்டு போய், ஒவ்வொரு ஊற்றிலும் கழுவு, எந்த ஊற்றில்

கழுவும் போது, அது உயிர்பெருகின்றதோ, அந்த ஊற்று தான் 'ஜீவத்தண்ணீர் உள்ள ஊற்று' என்று அவருக்கு சொல்கிறார்.

> **One similarity between the Quran story and the Alexander romance concerns the fish that miraculously comes to life. This motif is found in the Syriac sermon by Jacob of Serugh, where Alexander travels in search of the Water of Life (Fountain of Youth). A shorter version of the story in also found in the Greek β-recension of the Alexander romance. In the Syriac legend, Alexander finds a wise man who tells Alexander to take a salted fish and wash it in the fountains in the Land of Darkness, and if the fish comes to life then he will have found the Water of Life:**
>
> **The king [Alexander] said, "I have heard that therein [in the Land of Darkness] is the fountain of life, And I desire greatly to go forth and see if, of a truth, it is [there]. The old man said, ... "Command thy cook take with him a salt fish, and wherever he sees a fountain of water let him wash the fish; And if it be that it comes to life in his hands when he washes it, That is the fountain of the water of life which thou askest for, O King."**
>
> **Source - en.wikipedia.org/wiki/Alexander_the_Great_in_the_Quran**

குர்-ஆன் ஆக்கியோன் இந்த கதையை அறிந்திருக்கிறார், எனவே மூஸா, ஹில்றுவை தேடிச்சென்றபோது, எப்படி அந்த இடத்தை அடையாளம் கண்டுபிடிப்பது என்று கேட்கும் போது, மேற்கண்ட மீன் கதை போன்ற ஒரு மீன் கதையை சொல்லியுள்ளார்.

**4. மூஸாவும் ஹில்றுவும், எலியாவும் ஜோஸுவா பென் லேவியும்**

யூதர்கள் தல்முத் என்ற நூல்களை எழுதினார்கள். அதோடு கூட பல கட்டுக்கதைகள் யூத வட்டாரங்களில் இஸ்லாமுக்கு முன்பு உலாவிக்கொண்டு இருந்தன.

ஜோஸுவா பென் லேவி (**Joshua ben Levi**) என்பவர் கி.பி. மூன்றாம் நூற்றாண்டுக்கு சம்மந்தப்பட்ட யூத ரபி ஆவார். இவரது காலத்துக்கு பின்பு, இவர் பெயரில் பல கட்டுக்கதைகள் வந்தன. இவர் எலியாவின் தோழராக அவரோடு கூட சென்றவராக கதைகள் எழுதப்பட்டன. அப்படிப்பட்ட ஒரு கதை தான் இப்போது நாம் பார்க்கப்போகிறோம். அந்த கதையை அப்படியே அல்லாஹ் உல்டா செய்து, குர்-ஆனிலும் புகுத்திவிட்டான்.

**Rabbi Joshua ben Levi**

> **References to Elijah in Jewish folklore range from short observations (e. g. It is said that when dogs are happy for no reason, it is because Elijah is in the neighborhood)[62] to lengthy parables on the nature of God's justice.**
>
> **One such story is that of Rabbi Joshua ben Levi. The rabbi, a friend of Elijah's, was asked what favor he might wish. The rabbi answered only that he be able to join Elijah in his wanderings. Elijah granted his wish only if he refrained from asking any questions about any of the prophet's actions. He agreed and they began their journey. The first place they came to was**

**the house of an elderly couple who were so poor they had only one old cow. The old couple gave of their hospitality as best they could. The next morning, as the travelers left, Elijah prayed that the old cow would die and it did. The second place they came to was the home of a wealthy man. He had no patience for his visitors and chased them away with the admonition that they should get jobs and not beg from honest people. As they were leaving, they passed the man's wall and saw that it was crumbling. Elijah prayed that the wall be repaired and it was so. Next, they came to a wealthy synagogue. They were allowed to spend the night with only the smallest of provisions. When they left, Elijah prayed that every member of the synagogue might become a leader.**

**Finally, they came to a very poor synagogue. Here they were treated with great courtesy and hospitality. When they left, Elijah prayed that God might give them a single wise leader. At this Rabbi Joshua could no longer hold back. He demanded of Elijah an explanation of his actions. At the house of the old couple, Elijah knew that the Angel of Death was coming for the old woman. So he prayed that God might have the angel take the cow instead. At the house of the wealthy man, there was a great treasure hidden in the crumbling wall. Elijah prayed that the wall be restored thus keeping the treasure away from the miser. The story ends with a moral: A synagogue with many leaders will be ruined by many arguments. A town with a single wise leader will be guided to success and prosperity. "Know then, that if thou seest an evil-doer prosper, it is not always unto his advantage, and if a righteous man suffers need and distress, think not God is unjust."[63]**

**Source - en.wikipedia.org/wiki/Elijah**

**இந்த கட்டுக்கதையின் சுருக்கம் இது தான், வாசகர்கள் கூர்ந்து படிக்கவும்.**

**1)** எலியாவோடு தானும் வருவதாக ஜோஸுவா பென் லேவி அனுமதி கேட்டார்.

**2)** தான் எது செய்தாலும், கேள்வி கேட்காமல் வந்தால், அனுமதி கொடுப்பேன் என்று எலியா சொல்ல, ஜோஸுவா ஒப்புக்கொண்டார்.

**3) நிகழ்ச்சி 1:** இவ்விருவரும் ஒரு வயது முதிர்ந்த தம்பதியினரிடம் வந்து தங்குகிறார்கள். அவ்வேழை தம்பதியினர் இவர்களை நல்ல விதமாக உபசரிக்கிறார்கள். மறுநாள் கிளம்பும் போது, அந்த தம்பதியினருக்கு இருந்த ஒரு கிழட்டு மாடு சாகும்படி எலியா ஜெபம் செய்கிறார், அது அப்படியே செத்துவிடுகிறது. இது ஜோஸுவாவிற்கு பிடிக்கவில்லை. நம்மை நன்றாக கவனித்துக்கொண்ட இந்த ஏழை குடும்பத்திற்கு எலியா அநியாயம் செய்துவிட்டதாக ஜோஸுவா கோபம் கொள்கிறார்.

**4) நிகழ்ச்சி 2:** அடுத்ததாக, இவ்விருவர் ஒரு செல்வந்தர் வீட்டுக்கு வருகிறார்கள். நீங்கள் உழைத்து சாப்பிடுங்கள் என்றுச் சொல்லி, அவர் இவர்களை உபசரிக்காமல் துரத்துகிறார். இவ்விருவர் அங்கிருந்து கிளம்பும்போது, அந்த மனிதனுக்கு சொந்தமான ஒரு சுவர் விழும்நிலையில் இருந்ததை பார்த்து, எலியா உடனே அதை சரி செய்துவிடுகிறார். இந்த முறையும் ஜோஸுவாவிற்கு கோபம் வருகிறது.

**5) நிகழ்ச்சி 3:** அடுத்தபடியாக இவ்விருவரும் செழிப்பாக உள்ள ஒரு யூத தேவாலயத்துக்கு செல்கிறார்கள். ஆனால் அங்கு அவர்களுக்கு சரியான உபசரிப்பு கொடுக்கப்படவில்லை. அதை விட்டு புறப்படும் போது, எலியா, அந்த தேவாலயத்தின் அங்கத்தினர்கள் அனைவரும் தலைவர்கள் ஆகவேண்டும் என்று ஜெபம் செய்கிறார். இதனால் ஜோஸுவாவின் கோபம் உச்சத்தை அடைகிறது.

**6) நிகழ்ச்சி 4:** கடைசியாக இவர்கள் ஒரு ஏழை ஜெப ஆலயத்திற்கு செல்கிறார்கள், அவர்கள் இவர்களை நன்றாக உபசரிக்கிறார்கள். அங்கிருந்து இவர்கள் கிளம்பும் போது, எலியா இந்த ஆலயத்திற்கு ஒரே ஒரு நல்ல தலைவர் கொடுக்கப்படவேண்டும் என்று ஜெபம் செய்கிறார். இப்படிப்பட்ட நல்ல ஜெப ஆலயத்திற்கு ஒரு தலைவர் தானா என்றுச் சொல்லி, ஜோஸுவா கோபம் கொண்டு, எலியாவிடம் 'நீங்கள் செய்த அனைத்து செயல்களுக்கும் விளக்கம் தாருங்கள் என்று கேட்டார்'.

7) எலியா நான்கு செயல்களுக்கும் விளக்கம் அளித்தார். அந்த ஏழை தம்பதியர்களில், அந்த மூதாட்டி அன்று மரிக்கவேண்டி இருந்தது, எனவே, எலியா ஜெபம் செய்து, அப்பெண்மணிக்கு பதிலாக அவர்களின் மாடு மரிக்கும்படி ஜெபம் செய்தார், அப்பெண் பிழைத்துவிட்டார்.

8) இரண்டாவதாக, தங்களை உபசரிக்காமல் விரட்டியவருக்கு சொந்தமான சுவரை ஏன் பழுதுபார்த்தார் என்பதை எலியா விளக்கினார். அந்த சுவருக்கு அடியில் பொக்கிஷம் உள்ளது, அதனை அந்த கஞ்சனாகிய மனிதன் பெறக்கூடாது என்பதற்காக அச்சுவர் பழுதுபார்க்கப்பட்டது. எதிர்காலத்தில் அந்த பொக்கிஷம் மற்றவர்களுக்கு கிடைக்கும்.

9) மூன்றாவதாக, அனேக தலைவர்கள் உண்டானால், ஒருவரின் பேச்சை இன்னொருவர் கேட்காமல், அவர்கள் முழுவதுமாக அழிந்துப்போவார்கள். அதே போல, ஒரே ஒரு தலைவன் மட்டும் எழும்பினால், அவனது வழியில் அந்த ஏழை தேவாலயம் நன்றாக செழிக்கும். இது தான் எலியா சொன்ன பதில்.

இதுவரை பார்த்த விவரங்களிலிருந்து அறிவது என்ன? இஸ்லாமுக்கு முன்னால் நிலவிய யூத வட்டார கட்டுக்கதைகளையும், அலேக்சாண்டர் ரொமான்ஸ் புத்தகங்களில் உள்ள கதைகளையும் சிறிது மாற்றி, முஹம்மது குர்-ஆனில் புகுத்தியுள்ளார். இதனை சுலபமாக புரிந்துக்கொள்ள கீழ்கண்ட அட்டவணை உதவிபுரியும்.

குர்-ஆன் மற்றும் யூத கட்டுக்கதை ஒப்பீடு:

| **விவரம்** | **குர்-ஆன் (18:60-82)** | **யூத கட்டுக்கதை** |
|---|---|---|
| ஞானியாக இருப்பவர் | ஹில்று | எலியா |
| கற்க வந்தவர் | மோசே (மூஸா) | ஜோஸுவா பென் லேவி |
| நிகழ்ச்சி 1 | ஏழைகளின் கப்பலில் ஓட்டை போடப்பட்டது | ஏழை தம்பதியினரின் மாடு சாகடிக்கப்பட்டது |
| நிகழ்ச்சி 2 | பையன் கொல்லப்படுகிறான் | உபசரிக்காத செல்வந்தர் - சுவரை சரி செய்தல் |

| விவரம் | குர்-ஆன் (18:60-82) | யூத கட்டுக்கதை |
| --- | --- | --- |
| நிகழ்ச்சி 3 | இவர்களை உபசரிக்காத கிராமம் - சுவரை சரி செய்தல் | செல்வ செழிப்பான் தேவாலயம் |
| நிகழ்ச்சி 4 | குர்-ஆனில் 4வது நிகழ்ச்சி இல்லை | ஏழை தேவாலயம் |

குர்-ஆனின் மூன்றாம் நிகழ்ச்சியும், யூதகட்டுக்கதையின் இரண்டாம் நிகழ்ச்சியும் ஒரே மாதிரியானது - பழுதான சுவர் சரி செய்யப்பட்டது.

**முடிவுரை:**

மேற்கண்ட பட்டியலை கூர்ந்து கவனியுங்கள். குர்-ஆனில் (18:60-82) மூன்று நிகழ்ச்சிகள், யூத கட்டுக்கதைகளில் நான்கு கதைகள் இருக்கின்றன. ஆனால் ஒரே மாதிரியான நிகழ்ச்சி தான். யூத கதைகளை கொஞ்சம் மாற்றி குர்-ஆனில் புகுத்தப்பட்டுள்ளது. குர்-ஆனின் ஒவ்வொரு வார்த்தையும், உலகம் உண்டாவவதற்கு முன்பாக அல்லாஹ்வால் எழுதப்பட்டது என்று முஸ்லிம்கள் சொல்வதை எப்படி நம்பமுடியும்?

அடுத்த கட்டுரையில் பாரா அவர்களின் இதர அத்தியாயங்களில் உள்ள விவரங்களை ஆய்வு செய்வோம். தேவைப்பட்டால் துல்கர்னைன் பற்றிய இதர விவரங்களை தனி கட்டுரைகளாக காண்போம்.

**அடிக்குறிப்புக்கள்:**

[1] குர்-ஆன் 18:60-82 வசனங்கள்

**18:60.** இன்னும் மூஸா தம் பணியாளிடம், ''இரு கடல்களும் சேரும் இடத்தை அடையும் வரை நீங்காது நடப்பேன்; அல்லது வருடக் கணக்கில் நான் போய்க்கொண்டிருப்பேன்'' என்று கூறியதை நீர் நினைவு படுத்துவீராக.

**18:61.** அவர்கள் இருவரும் அவ்விரணடு (கடல்களு)க்கும் இடையே ஒன்று சேரும் இடத்தை அடைந்த போது; அவ்விருவருடைய மீனை அவ்விருவரும் மறந்து விட்டனர்; அது கடலில் தன்னுடைய வழியைச் சுரங்கம் போல் அமைத்துக்கொண்டு (நீந்திப் போய்) விட்டது.

**18:62.** அவ்விருவரும், அப்புறம் அந்த இடத்தைக் கடந்த போது, தம் பணியாளை நோக்கி, ''நம்முடைய காலை ஆகாரத்தைக் கொண்டுவா; இந்த நம் பிரயாணத்தில் நிச்சயமாக நாம் களைப்பைச் சந்திக்கிறோம்'' என்று (மூஸா) கூறினார்.

**18:63.** அதற்கு ''அக்கற்பாறையில் நாம் தங்கிய சமயத்தில் நீங்கள் பார்த்தீர்களா? நிச்சயமாக நான் மீனை மறந்து விட்டேன்.'' மேலும், அதை (உங்களிடம்) சொல்வதை ஷைத்தானையன்றி (வேறு எவனும்) என்னை மறக்கடிக்கவில்லை; மேலும் அது கடலுக்குள் தன் வழியை ஆச்சரியமாக அமைத்துக் கொண்டது!'' என்று பணியாள் கூறினார்.

**18:64.** (அப்போது) மூஸா, ''நாம் தேடிவந்த (இடம் அ)துதான்'' என்று கூறி, இருவரும் தம் காலடிச் சுவடுகளைப் பின்பற்றி (வந்தவழியே) திரும்பிச் சென்றார்கள்.

**18:65.** (இவ்வாறு) அவ்விருவரும் நம் அடியார்களில் ஒருவரைக் கண்டார்கள்; நாம் அவருக்கு நம்மிடமிருந்து கிருபை அருளியிருந்தோம்; இன்னும் நாம் அவருக்கு நம்மிடமிருந்து கல்வி ஞானத்தையும் கற்றுக் கொடுத்திருந்தோம்.

**18:66.** "உங்களுக்குக் கற்றுக் கொடுக்கப்பட்ட நன்மையானவற்றை நீங்கள் எனக்குக் கற்பிக்கும் பொருட்டு, உங்களை நான் பின் தொடரட்டுமா? என்று அவரிடம் மூஸா கேட்டார்.

**18:67.** (அதற்கவர்,) "நிச்சயமாக நீர் என்னுடன் பொறுமையாக இருக்க இயலமாட்டீர்!" என்று கூறினார்.

**18:68.** "(ஏனெனில்) எதைப் பற்றி உமக்கு முழுமையான ஞானம் இல்லையோ, அதில் நீர் எவ்வாறு பொறுமையாயிருப்பீர்!" (என்று கேட்டார்.)

**18:69.** (அதற்கு) மூஸா, "இன்ஷா அல்லாஹ்! நான் பொறுமையுள்ளவனாகவும், எவ்விஷயத்திலும் உமக்கு மாறு செய்யாதவனாகவும் நான் இருப்பதை நீங்கள் விரைவில் காண்பீர்கள்" என்று (மூஸா) சொன்னார்.

**18:70.** (அதற்கு அவர்) "நீர் என்னைப்பின் தொடர்வதாயின், எந்த ஒரு விஷயத்தைப் பற்றியும் - நானாகவே அதைப்பற்றி உமக்கு அறிவிக்கும் வரை - நீர் என்னிடம் கேட்கக் கூடாது" என்று சொன்னார்.

**18:71.** பின்னர் இருவரும் ஒரு மரக்கலத்தில் ஏறும் வரையில் நடந்து சென்றனர், (மரக்கலம் கடலில் செல்லலானதும்;) அவர் அதில் ஓர் ஓட்டையைப் போட்டார்; "இதிலுள்ளவர்களை மூழ்கடிக்கவா நீங்கள் இதில் ஓர் ஓட்டையைப் போட்டீர்கள்? நிச்சயமாக நீங்கள் ஓர் (அபாயகரமான) பெருங் காரியத்தைச் செய்துவிட்டீர்கள்" என்று (மூஸா) கூறினார்.

**18:72.** (அதற்கு அவர்,) "நிச்சயமாக நீர் என்னுடன் பொறுமையைக் கடைப்பிடிக்க முடியாது என்று உமக்கு நான் சொல்லவில்லையா? என்றார்.

**18:73.** "நான் மறந்து விட்டதைப் பற்றி நீங்கள் என்னை(க் குற்றம்) பிடிக்க வேண்டாம்; இன்னும் என் காரியத்தைச் சிரமமுடையதாக ஆக்கி விடாதீர்கள்" என்று (மூஸா) கூறினார்.

**18:74.** பின்னர் (மரக்கலத்திலிருந்து இறங்கி) இருவரும் வழி நடக்கலானார்கள்; (வழியில்) ஒரு பையனை அவ்விருவரும் சந்தித்த போது, அவர் அவனைக் கொன்று விட்டார். (உடனே மூஸா) "கொலைக்குற்றமின்றி, பரிசுத்தமான ஜீவனைக் கொன்றுவிட்டீர்களே? நிச்சயமாக நீங்கள் பெருத்தக் கேடான ஒருகாரியத்தையே செய்து விட்டீர்கள்!" என்று (மூஸா) கூறினார்.

**18:75.** (அதற்கு அவர்) "நிச்சயமாக நீர் என்னுடன் பொறுமையாக இருக்க இயலாது என்று உமக்கு நாம் சொல்லவில்லையா?" என்று கூறினார்.

**18:76.** இதன் பின்னர் நான் எந்த விஷயத்தைப் பற்றியாவது உங்களிடம் கேட்பேனாயின் நீங்கள் உங்கள் தோழனாக வைத்துக் கொள்ள வேண்டாம் - நிச்சயமாக நீங்கள் என்னிடமிருந்து தக்க மன்னிப்புக் கோருதலைப் பெற்றுக் கொண்டீர்கள்" என்று கூறினார்.

**18:77.** பின்னர் அவ்விருவரும் வழி நடந்து, இருவரும் ஒரு கிராமத்தாரிடம் வந்து சேர்ந்தார்கள்; தங்களிருவருக்கும் உணவு தருமாறு அந்த கிராமத்தாரிடம் கேட்டார்கள்;

ஆனால் அவ்விருவருக்கும் விருந்தளிக்க அவர்கள் மறுத்து விட்டார்கள்; அப்போது அங்கே இடிந்து அடியோடு விழும் நிலையிலிருந்த ஒரு சுவரை அவ்விருவரும் கண்டனர்; ஆகவே, அவர் (சரிசெய்து) நிமிர்த்து வைத்தார். (இதைக் கண்ட மூஸா) "நீங்கள் நாடியிருந்தால் இதற்கென ஒரு கூலியை பெற்றிருக்கலாமே" என்று (மூஸா) கூறினார்.

**18:78.** "இது தான் எனக்கும், உமக்குமிடையே பிரிவு(க்குரிய நேரம்) ஆகும்; எதைப் பற்றி நீர் பொறுமையாக இருக்க முடியவில்லையோ, அதன் விளக்கத்தையும் (இப்பொழுதே) உமக்குத் திட்டமாக அறிவித்து விடுகிறேன்" என்று அவர் கூறினார்.

**18:79.** "அம்மரக்கலம் கடலில் வேலை செய்யும் ஏழைகள் சிலருக்குச் சொந்தமானது; எனவே நான் அதை (ஓட்டையிட்டு)ப் பழுதாக்க விரும்பினேன்; (ஏனெனில்) அவர்களுக்குப் பின்னால் (கொடுங்கோலனான) ஓர் அரசன் இருந்தான்; அவன் (பழுதில்லா) மரக்கலங்களையெல்லாம் பலவந்தமாக எடுத்துக் கொள்கிறான்.

**18:80.** "(அடுத்து) அந்த சிறுவனுடைய தாய், தந்தையர் இருவரும் முஃமின்களாக இருக்கிறார்கள்; அவன் (வாலிபனாகி) அவ்விருவரையும் வழிகேட்டிலும், குஃப்ரிலும் சேர்த்து விடுவான் என்று நாம் பயந்தோம்.

**18:81.** "இன்னும், அவ்விருவருக்கும், பரிசுத்தத்திலும் (பெற்றோரிடம்) அன்பு செலுத்துவதிலும் சிறந்திருக்க கூடிய (ஒரு மகனை) அவ்விருவருடைய இறைவன் (கொலையுண்டவனுக்குப்) பதிலாக கொடுப்பதை நாம் விரும்பினோம்.

**18:82.** "இனி: (நான் நிமிர்த்து வைத்த) அந்த சுவர் அந்தப் பட்டிணத்திலுள்ள அநாதைச் சிறுவர் இருவருக்குரியது; அதன் அடியில் அவ்விருவருக்கும் சொந்தமான புதையல் உள்ளது; அவ்விருவருடைய தந்தை (ஸாலிஹான) நல்ல மனிதராக இருந்தார்; எனவே, அவ்விருவரும் தக்க பிராயமடைந்த தம்மிருவரின் புதையலையும் வெளிப்படுத்தி (எடுத்துக்) கொள்ள வேண்டும் என உம்முடைய இறைவன் நாடினான். (இவையெல்லாம்) உம் இறைவனுடைய ரஹ்மத்தில் நின்றும் உள்ளவை; என் விருப்பு, வெறுப்பின்படி எந்தக் காரியத்தையும் செய்யவில்லை; எதைப் பற்றி நீர் பொறுமையாக இருக்க முடியவில்லையோ அதன் விளக்கம் இது தான்" என்று கூறினார். (முஹம்மது ஜான் தமிழாக்கம்)

ຮ໙ຮ໙ຮ໙ຮ໙

## 22) அரேபியாவிற்கு வெளியே இஸ்லாம் எப்படி வெகுவேகமாக பரவியது? - பாராவின் சாட்சி

**முன்னுரை:**

தற்போதைய பதிவில், பா. ராகவன் அவர்களின் நிலமெல்லாம் இரத்தம் புத்தகத்தின் 17வது அத்தியாயத்திலிருந்து இரண்டு விவரங்களை ஆய்வு செய்யப்போகிறோம். முதலாவதாக, ஹதீஸ்கள் பற்றி அவர் எழுதிய வரிகள் முஸ்லிம்களுக்கு வருத்தம் உண்டாக்கும் என்பதை அவருக்கு தெரிவிக்கவேண்டும். இரண்டாவதாக, இஸ்லாமின் இரண்டாம் கலிஃபா உமர் அவர்களின் ஆட்சியின் போது, இஸ்லாம் அரேபியாவிற்கு வெளியே வெகு வேகமாக பரவியது என்று பாரா அவர்கள் எழுதியுள்ளதை ஆய்வு செய்வோம்.

### 1) ஹதீஸ்கள் முஹம்மதுவுடையதா?

பாரா அவர்கள் கீழ்கண்ட விதமாக ஹதிஸ்கள் பற்றி எழுதியுள்ளார்கள்.

> *// 17) **உமரின் மனமாற்றம்***
>
> *நிலமெல்லாம் ரத்தம் - பா. ராகவன் 17*
>
> *ஆயிரக்கணக்கான பக்கங்கள் உள்ள குர்ஆன், பல்லாயிரக்கணக்கான பக்கங்கள் வரும் ஹதீஸ்கள் (முகம்மது நபியின் வாழ்க்கையில் நடைபெற்ற சம்பவங்களும் அவரது போதனைகளும் அடங்கிய பிரதிகளுக்கு ஹதீஸ் என்று பெயர். சிலர் ஹதீத் என்றும் இதனை அழைப்பார்கள். குர்ஆனையும் ஹதீஸையும் போட்டுக் குழப்பிக்கொள்ளக் கூடாது. குர் ஆன் என்பது இறைவனால் அருளப்பட்டது. ஹதீஸ், முகம்மது நபியினுடையது.), //*

பாரா அவர்களின் படி, குர்-ஆன் என்பது இறைவனால் அருளப்பட்டது, ஹதீஸ் என்பது இறைவனால் அருளப்படவில்லை, அது முஹம்மதுவுடையது. அதாவது முஹம்மதுவின் வாழ்க்கையில் நடைப்பெற்ற சம்பவங்கள் மற்றும் போதனைகள் அடங்கியது ஹதீஸ்கள் என்று குறிப்பிடுகிறார்.

இங்கு பாரா அவர்களுக்கும் இஸ்லாம் பற்றி எழுதும் மற்றவர்களுக்கும் தெரிவித்துக்கொள்வது என்னவென்றால், இஸ்லாமின் படி ஹதீஸ்கள் கூட அல்லாஹ் முஹம்மதுவிற்கு கொடுத்த வஹியே ஆகும். ஹதீஸ்களில் முஹம்மதுவின் சொல் மற்றும் செயல்களைக் காணலாம் என்பது உண்மையே! ஆனால், அவ்விரண்டும் முஹம்மதுவின் சொந்த செயல்பாடுகள் அல்ல, அவர் அல்லாஹ்வின் வஹியின்படியே பேசினார், அவரது செயல்களும் அல்லாஹ்வின் கட்டளையின்படியே அமைந்தது என்று முஸ்லிம்கள் நம்புகிறார்கள்.

**இரண்டு வகையான வஹிக்கள்:**

முஸ்லிம்களின் படி வஹிகள் (வெளிப்பாடுகள்) இரண்டு வகைப்படும். முதலாவது வகை வஹி, ஜிப்ரீல் தூதன் மூலமாக அல்லாஹ் முஹம்மதுவிற்கு இறக்கியது, அதனை குர்-ஆன் என்று அழைப்பார்கள். இரண்டாவது வஹி, பல சந்தர்பங்களில் தேவைக்கு ஏற்ப, அல்லாஹ் முஹம்மதுவிற்கு வஹியை கொடுத்துள்ளான். அது எப்படி கொடுத்தான் என்று முஹம்மதுவிற்கு மட்டுமே தெரியும். முஸ்லிம்கள் முஹம்மதுவிடம் கேள்விகள் சந்தேகங்கள் கேட்கும் போது, முஹம்மது பதில் கொடுப்பார். இந்த பதில்கள் கூட, அல்லாஹ் முஹம்மதுவிற்கு கொடுத்த வஹி என்று முஸ்லிம்கள் நம்புகிறார்கள்.

ஹதீஸ்கள் முஹம்மதுவுடையது என்றுச் சொன்னால், முஸ்லிம்கள் அதனை பின்பற்றலாம் அல்லது விட்டுவிடலாம். ஆனால், ஹதிஸ்கள் பற்றிய முஸ்லிம்களின் நிலைப்பாடு வேறுவிதமாக உள்ளது. குர்-ஆனும் வஹி தான், ஹதீஸ்களும் வஹி தான். எனவே, இரண்டையும் பின்பற்றவேண்டும்.

முஸ்லிம்களிடையே இந்த ஹதீஸ் பிரச்சனை தீராத பிரச்சனையாக உள்ளது. ஹதீஸ்களை வைத்துக்கொண்டு, முஸ்லிம்கள் பிளவுப்பட்டுக்கொண்டு இருக்கிறார்கள். பல ஆயிர ஹதீஸ்கள் இருப்பதினால், சில முஸ்லிம் அறிஞர்கள் (பீ. ஜைனுல் ஆபிதீன் போன்றவர்கள்) சில ஹதீஸ்களை மறுக்கும் போது, மற்ற முஸ்லிம்கள் இவரை எதிர்க்கிறார்கள். இவர்கள் ஒருவரை ஒருவர் காஃபிர் (முஸ்லிமல்லாதவன்) என்று சொல்லி திட்டிக்கொண்டு இருக்கிறார்கள். எனவே, பாரா அவர்களே, இனி முஸ்லிம்கள் பற்றி எழுதும் போது கொஞ்சம் பார்த்து எழுதுங்கள். நிலமெல்லாம் இரத்தம் புத்தகத்தில் நீங்கள் இஸ்லாம் பற்றி உயர்த்தி

எழுதிவிட்டீர்கள், எனவே பிழைத்துவிட்டீர்கள், உண்மையை நீங்கள் எழுதியிருந்தால் உங்களை அவர்கள் உங்கள் தொடர் வந்துக்கொண்டு இருக்கும் போதே உயர்த்திவிட்டு இருந்திருப்பார்கள். இனி எச்சரிக்கையாக இருக்கும் படி கேட்டுக்கொள்கிறேன்.

## 2) அரேபியாவிற்கு வெளியே இஸ்லாம் எப்படி வெகுவேகமாக பரவியது?

திரு பாரா அவர்களே, இதே 17வது அத்தியாயத்தில், கீழ்கண்டவிதமாக நீங்கள் எழுதியுள்ளீர்கள்.

**பாரா அவர்கள் எழுதியவைகள்:**

> *// இரண்டாவது கலீஃபாவாக முடிசூடி அமர்ந்தவர். (முதலாவது கலீஃபா, அபூபக்ர். இவர் அப்புறம் வருவார்.)* ***உமரின் ஆட்சிக்காலத்தின் போதுதான் அரேபியாவுக்கு வெளியிலும் இஸ்லாம் வெகு வேகமாகப் பரவத் தொடங்கியது.*** *உமர், கலீஃபாவாக இருந்த காலத்தில் ஜெருசலேம் எகிப்தின் ஆதிக்கத்துக்கு உட்பட்டிருந்தது. ஒரு பெரும் படையெடுப்பின் இறுதியில் எகிப்தை அப்போது ஆண்டுகொண்டிருந்த (கிறிஸ்துவர்களான) பைசாந்தியர்கள் என்கிற இனத்தவரை வீழ்த்தி, ஜெருசலேத்தில் காலெடுத்து வைத்தார் உமர். அப்போது ஜெருசலேத்தின் ஆர்ச் பிஷப்பாக இருந்தவர், நகரின் சாவியை (அடையாளச் சாவிதான்!) தாமே மனமுவந்து உமரிடம் அளித்து, ஆளவரும்படி அழைப்பு விடுத்தது வினோதமான ஆச்சர்யம்! //*

### அ) அரேபியாவுக்கு வெளியிலும் இஸ்லாம் வெகு வேகமாகப் பரவத் தொடங்கியது

பாரா அவர்களே, உங்களுடைய மேற்கண்ட பத்தியின் முதல் வரியை முதலாவது கவனிப்போம். உமரின் காலத்தில் அரேபியாவிற்கு வெளியே "இஸ்லாம் வெகு வேகமாகப் பரவத்தொடங்கியது" என்று எழுதியுள்ளீர்கள்.

"இஸ்லாம் வெகு வேகமாகப் பரவத்தொடங்கியது" - இதன் அர்த்தமென்ன?

வாசகர்கள் கூர்ந்து கவனிக்கவேண்டும், இந்த நான்கு வார்த்தைகள் அடங்கிய வரியில் இரண்டு முக்கியமான விவரங்கள் அடங்கியுள்ளது.

**கேள்வி 1:** எது வேகமாக பரவியது?

**பதில் 1:** இஸ்லாம் வேகமாக பரவியது

**கேள்வி 2:** எங்கே வேகமாக இஸ்லாம் பரவியது?

**பதில் 2:** அரேபியாவிற்கு வெளியே உள்ள நாடுகளில்

**இப்போது தான் முக்கியமான கேள்விக்கு வருகிறோம்:**

**கேள்வி 3:** எப்படி இஸ்லாம் அரேபியாவிற்கு வெளியே வெகு வேகமாக பரவத்தொடங்கியது?

இந்த கேள்விக்கு பாரா அவர்கள் தான் பதில் சொல்லவேண்டும், அல்லது முஸ்லிம்கள் அவருக்கு பதில் சொல்ல உதவலாம். வாசகர்களுக்கு உதவும் என்பதற்காக நான் சில ஆப்ஷன்களை தருகிறேன், அதில் எது சரியாக இருக்கும் என்று நீங்கள் தெரிவு செய்யுங்கள்.

**பதில் 3:**

**Option A) இஸ்லாமிய தாவா ஊழியம்:**

மதினாவில் இருந்த இஸ்லாமிய தலைவர் கலிஃபா உமர் அவர்கள், பல முஸ்லிம்களை அரேபியாவிற்கு வெளியே இருக்கும் நாடுகளுக்கு அனுப்பி, புத்த பிட்சுக்களைப்போல, கிறிஸ்தவ மிஷனரிகளைப் போல, இஸ்லாமை அமைதியான முறையில் பரப்பும்படி அனுப்பினார். இதன் மூலமாக அந்நாடுகளில் இஸ்லாம் வேகமாக பரவியது.

**Option B) இஸ்லாமிய கல்வி ஊழியம்**

மதினாவில் இருந்த இஸ்லாமிய தலைவர் கலிஃபா உமர் அவர்கள், அரேபியாவிற்கு வெளியே இருக்கும் நாடுகளில் பல இஸ்லாமிய பல்கலைக்கழகங்களை, பள்ளிக்கூடங்களை அதாவது மதரஸாக்களை அமைத்து, இஸ்லாமை கற்றுக் கொடுத்தார். இஸ்லாமின் கோட்பாடுகளில், குர்-ஆனில் மயங்கிய அந்நாடுகள் இஸ்லாமை ஏற்றுக்கொண்டார்கள். இதனால் இஸ்லாம் அரேபியாவிற்கு வெளியே வெகு வேகமாக பரவியது.

**Option C) இஸ்லாம் ஒரு இனிய மார்க்கம் ஊழியம்**

கலிஃபா உமர் அவர்கள், அரேபியாவிற்கு சுற்றியிருந்த நாடுகளுக்கு கடிதங்கள் எழுதி, எங்கள் நாட்டுக்கு (மதினாவிற்கு) எங்கள் இஸ்லாம் மார்க்கத்தை அறிந்துக்கொள்ள உங்கள் அறிஞர்களை அனுப்புங்கள். அவர்கள் இஸ்லாமை கற்றுக்கொண்டு, உங்களுக்கு அதனை விளக்குவார்கள். நீங்கள் விரும்பினால் இஸ்லாமை ஏற்றுக்கொள்ளலாம் என்று அன்பான அழைப்புவிடுத்தார். இப்படி வந்த அறிஞர்கள் இஸ்லாமினால் ஈர்க்கப்பட்டு தங்கள் நாடுகளுக்குச் சென்று இஸ்லாமை பரப்பினார்கள். இதனால் தான் அரேபியாவிற்கு வெளியே இஸ்லாம் வெகு வேகமாக பரவியது.

**பாரா அவர்களுக்கு கேள்விகள்:**

அன்பான பாரா அவர்களே, உமர் காலத்திலே அரேபியாவிற்கு வெளியே "இஸ்லாம் வெகு வேகமாகப் பரவத்தொடங்கியது" என்று எழுதினீர்களே, உங்கள் ஆராய்ச்சியில் நீங்கள் கண்டுபிடித்த உண்மை என்ன? நான் கொடுத்த மூன்று தெரிவுகளில் நீங்கள் எதனை தெரிவு செய்யப்போகிறீர்கள்?

**Option A) இஸ்லாமிய தாவா ஊழியம்?**

**Option B) இஸ்லாமிய கல்வி ஊழியம்?**

**Option C) இஸ்லாம் ஒரு இனிய மார்க்கம் ஊழியம்?**

என்ன! வாசகர்களுக்கு சிரிப்பு வருகிறதா?

இஸ்லாம் ஒரு அமைதி மார்க்கம் என்றுச் சொல்கிறீர்கள், மேலும் இஸ்லாமை தோற்றுவித்த முஹம்மதுவை பார்த்தவர்கள், அவரை தொட்டவர்கள், அவரது போதனைகளை தங்கள் சுய காதுகளால் கேட்ட அவரது தோழர்கள் வேறு எப்படி இஸ்லாமை பரப்பியிருக்கமுடியும்?

புத்தரின் சீடர்கள் இப்படித்தான் உலகமெல்லாம் சென்று புத்தரின் போதனைகளை பரப்பினார்கள். இயேசுவின் சீடர்கள் கூட இதே போலத்தான், உலகமெல்லாம் மிஷனரிகளாகச் சென்று, இயேசுவின் நற்செய்தியைப் பரப்பினார்கள்.

இயேசுவின் வழியில் தானும் வந்தேன் என்று பெருமைப்பட்டுக்கொண்ட முஹம்மதுவின் தோழர்கள் வேறு எப்படி இஸ்லாமை பரப்பியிருக்கமுடியும் என்று நினைக்கிறீர்கள்?

**பாரா அவர்களே, உங்கள் வரியில் 'இஸ்லாம்' என்றால் என்ன?**

நீங்கள் எழுதிய கீழ்கண்ட வரியில் "இஸ்லாம்" என்று எதைச் சொல்கிறீர்கள்?

**பாரா அவர்கள் எழுதியது:**

> // "உமரின் ஆட்சிக்காலத்தின் போதுதான் அரேபியாவுக்கு
> வெளியிலும் **இஸ்லாம்** வெகு வேகமாகப் பரவத் தொடங்கியது." //

இஸ்லாம் என்றால் --> குர்-ஆன் மற்றும் முஹம்மது காட்டிய ஆன்மீக போதனைகளை மக்கள் தங்கள் மனதளவில் ஏற்றுக்கொள்வதா?

**அல்லது**

இஸ்லாம் என்றால் --> மதினாவின் ஆட்சி பீடத்தில் அமர்ந்திருக்கும் இஸ்லாமிய தலைவர் மற்ற நாடுகளில் மீது போர் புரிந்து, நாடுகளை பிடித்து, அங்கு ஒரு முஸ்லிமை நாட்டு தலைவராக நியமித்து, அந்நாடுகளில் வாழும் முஸ்லிமல்லாதவர்களிடம் "உங்கள் மார்க்கங்களை பின்பற்றிக்கொண்டு ஜிஸ்யா வரி கட்டுகிறீர்களா? அல்லது இஸ்லாமை ஏற்றுக்கொண்டு முஸ்லிமாக மாறுகிறீர்களா?" என்று கேட்பதா?

பாரா அவர்களே, உங்கள் அகராதியில் மேற்கண்ட உம்முடைய தமிழ் வரியில், இஸ்லாம் என்ற வார்த்தைக்கு என்ன அர்த்தம்? மனதளவில் இஸ்லாமா? அல்லது இஸ்லாமிய தலைவர் ஆட்சி செய்வதா?

**இப்போது தான் நான்காவது ஆப்ஷன் வருகிறது...**

## Option D) போர் புரிந்து இஸ்லாமை பரப்புதல்

முஸ்லிம்கள் தலைவர்கள் போர் புரிந்து இஸ்லாமை பரப்பினார்களே தவிர, மக்களுக்கு ஊழியம் செய்து, இஸ்லாமை கற்றுக்கொடுத்து பரப்பவில்லை. இதனை எப்படி பாரா அவர்கள் எழுதுகிறார் என்பதை கீழே படியுங்கள்.

**பாரா அவர்கள் எழுதியவைகள்:**

> // இரண்டாவது கலீஃபாவாக முடிசூடி அமர்ந்தவர். (முதலாவது கலீஃபா, அபூபக்ர். இவர் அப்புறம் வருவார்.) உமரின் ஆட்சிக்காலத்தின் போதுதான் அரேபியாவுக்கு

வெளியிலும் இஸ்லாம் வெகு வேகமாகப் பரவத் தொடங்கியது. உமர், கலீஃபாவாக இருந்த காலத்தில் ஜெருசலேம் எகிப்தின் ஆதிக்கத்துக்கு உட்பட்டிருந்தது. ஒரு பெரும் படையெடுப்பின் இறுதியில் எகிப்தை அப்போது **ஆண்டுகொண்டிருந்த (கிறிஸ்துவர்களான) பைசாந்தியர்கள் என்கிற இனத்தவரை வீழ்த்தி, ஜெருசலேத்தில் காலெடுத்து வைத்தார் உமர்.**அப்போது ஜெருசலேத்தின் ஆர்ச் பிஷப்பாக இருந்தவர், நகரின் சாவியை (அடையாளச் சாவிதான்!) தாமே மனமுவந்து உமரிடம் அளித்து, ஆளவரும்படி அழைப்பு விடுத்தது வினோதமான ஆச்சர்யம்! //

உமர் எப்படி ஜெருசலேமில் கால் எடுத்து வைத்தார்? யாராவது ஜெருசலேமிலிருந்து இவருக்கு அழைப்பு விடுத்தார்களா? அல்லது இவரது தாவா பணியாளர்கள் ஜெருசலேமில் ஊழியம் செய்து, இஸ்லாமை கற்றுகொடுத்தார்களா?

இவர் படையெடுத்துச் சென்றார் (தன் தளபதிகளை அனுப்பினார்), இதர நாடுகளை பிடித்தார். இப்படித்தான் இஸ்லாம் அரேபியாவிற்கு வெளியே வெகு வேகமாக பரவியது. அரேபியாவிற்கு வெளியே இஸ்லாம் பரவியது என்றுச் சொல்லாமல், இஸ்லாம் என்ற மதத்தை பின்பற்றிக்கொண்டு இருந்த உமர், இதர நாடுகளை பிடித்தார் என்றுச் சொல்லவேண்டும். இஸ்லாமுக்கு இங்கு என்ன வேலை இருக்கிறது? நாடுகள் மீது ஆசை கொண்டு, மதினாவில் சும்மா இருக்காமல், நாடுகளை பிடித்து, மக்களைக் கொன்று, அடிமைகளாக பிடித்துக்கொண்டு, அவர்களை விற்று, அடிமைப்பெண்களை வைப்பாட்டிகளாக வைத்துக்கொண்டு இருந்தார்கள். இங்கு இஸ்லாமின் ஆன்மீகம் எங்கே இருக்கிறது? வெறும் ஆண்மீகம் தான் இருந்தது (நான் எழுத்துப்பிழை செய்யவில்லை).

இதனை யாராவது இல்லையென்று சொல்லமுடியுமா? பாரா அவர்கள் நிச்சயமாக இதனை மறுக்கமுடியாது, ஏனென்றால், அவரது வரிகளைத் தானே நாம் ஆய்வு செய்துக்கொண்டு இருக்கிறோம்.

**முடிவுரை:**

இஸ்லாம் ஒரு அமைதி மார்க்கம் என்பது முஸ்லிம்களின் வாதம். இதே வாதத்தை பாரா போன்ற எழுத்தாளர்கள் கூட கடன் வாங்கியாவது எழுதிவிடுகிறார்கள். ஆனால், உண்மையை மறைக்கமுடியுமா? ஆங்காங்கே சில உண்மை முத்துக்கள் எழுத்தாளர்களுக்கே தெரியாமல் தெறித்துவிடுகின்றன. அப்படி தெறிக்கப்பட்ட ஒரு வரியைத் தான் நாம் இந்த பதிவில் கண்டோம்.

அடுத்த பதிவில் இதே 17வது அத்தியாயத்தில், பாரா அவர்கள் "கலிஃபா உமர் அவர்களிடம், அப்போது ஜெருசலேமின் ஆர்ச் பிஷப்பாக இருந்தவர் மனமுவந்து நகர சாவியை கொடுத்தார்" எழுதிய வரிகளை சாவி கொண்டு திறந்து ஆய்வு செய்யப்போகிறோம். இவரது இவ்வரிகளை படிக்கும் போது, ஜெருசலேமின் ஆர்ச் பிஷப் ஏழாம் நூற்றாண்டில், உமருக்கு ஒரு கடிதம் எழுதி, "வாங்கய்யா பழகலாம்" என்று சொன்னது போலவும், உமர் ஜெருசலேமுக்குச் சென்ற போது, ஆர்ச் பிஷம் நகரத்தின் சாவியை (முழு ஆட்சி செய்யும் பொறுப்பை) எடுத்து இவரிடம் சிரித்துக்கொண்டே கொடுத்தது மாதிரியும் தெரிகிறது. இது உண்மையா? வாங்க அடுத்த பதிவில் ஆய்வு செய்யலாம்.



# 23) ஜெருசலேமின் ஆர்ச் பிஷப் மனமுவந்து நகர சாவியை உமரிடம் கொடுத்தாரா?

**முன்னுரை:**

பாரா அவர்கள் தம்முடைய நிலமெல்லாம் இரத்தம் தொடரின் 17வது அத்தியாயத்தில், ஜெருசலேம் உமரால் கைப்பற்றப்பட்ட விதத்தை விளக்கியுள்ளார். அவர் எழுதிய அந்த ஒரு வரியை இக்கட்டுரையில் ஆய்வு செய்யப்போகிறோம். இதன் மூலம், பாரா அவர்களின் (இஸ்லாமிய) ஆய்வு எந்த இலட்சனத்தில் இருக்கிறது என்பது நமக்கு விளங்கும்.

## 1) ஜெருசலேமின் ஆர்ச் பிஷப் மனமுவந்து நகர சாவியை உமரிடம் கொடுத்தார்

முதலாவதாக, பாரா அவர்கள் எழுதியவைகளை படிப்போம்.

**பாரா அவர்கள் எழுதியவைகள்:**

> *// 17) உமரின் மனமாற்றம்*
>
> *நிலமெல்லாம் ரத்தம் - பா. ராகவன் 17*
>
> *இரண்டாவது கலீஃபாவாக முடிசூடி அமர்ந்தவர். (முதலாவது கலீஃபா, அபூபக்ர். இவர் அப்புறம் வருவார்.) உமரின் ஆட்சிக்காலத்தின் போதுதான் அரேபியாவுக்கு வெளியிலும் இஸ்லாம் வெகு வேகமாகப் பரவத் தொடங்கியது. உமர், கலீஃபாவாக இருந்த காலத்தில் ஜெருசலேம் எகிப்தின் ஆதிக்கத்துக்கு உட்பட்டிருந்தது. ஒரு பெரும் படையெடுப்பின் இறுதியில் எகிப்தை அப்போது ஆண்டுகொண்டிருந்த (கிறிஸ்துவர்களான) பைசாந்தியர்கள் என்கிற இனத்தவரை வீழ்த்தி, ஜெருசலேத்தில் காலெடுத்து வைத்தார் உமர். அப்போது ஜெருசலேத்தின் ஆர்ச் பிஷப்பாக இருந்தவர், நகரின் சாவியை (அடையாளச் சாவிதான்!) தாமே மனமுவந்து உமரிடம் அளித்து, ஆளவரும்படி அழைப்பு விடுத்தது வினோதமான ஆச்சர்யம்! //*

**மேற்கண்ட விளக்கத்தின் கடைசி வாக்கியத்தை கூர்ந்து படியுங்கள்.**

- அப்போது ஜெருசலேத்தின் ஆர்ச் பிஷப்பாக இருந்தவர், நகரின் சாவியை தாமே மனமுவந்து உமரிடம் அளித்தார்
- உமரை ஆளவரும்படி அழைப்பு விடுத்தார்
- இந்த செயல் பாரா அவர்களுக்கு ஒரு வினோதமான ஆச்சர்யமாக தெரிந்துள்ளது.

**பாரா அவர்களின் வரிகளை படிக்கும் போது வாசகர்களுக்கு என்ன தோன்றும்?**

ஜெருசலேமின் ஆர்ச் பிஷம் (நகர தலைவர்) மனமுவந்து, மதினாவில் இருந்த உமரை அழைத்து, நகரத்தின் ஆட்சி அதிகாரத்தை எந்த ஒரு கட்டாயமும் இல்லாமல், உமரிடம் ஒப்படைத்தார் என்று வாசகர்கள் நினைக்கவேண்டும் என்று பாரா நினைத்தார். அந்த ஆர்ச் பிஷப் ஆளவரும் படி உமரை அழைக்கவில்லையென்றால், உமர் ஜெருசலேமுக்கு வந்தே இருக்கமாட்டார் என்று வாசகர்கள் புரிந்துக்கொள்ளவேண்டும் என்று பாரா விரும்புகிறார்.

பா. ராகவன் போன்ற எழுத்தாளர், இப்படி சரித்திர விவரங்களை மாற்றி எழுதுவார் என்று நான் நினைக்கவில்லை. ஒருவேளை, இவரது இவ்வரிகளுக்கு பின்னால் முஸ்லிம்களின்

கைவரிசை இருக்குமா? என்ற சந்தேகம் வருகிறது. சரி வாருங்கள், உண்மையில் உமர் ஜெருசலேமை பிடித்த அந்த கதையை சுருக்கமாக காண்போம்.

**ஜெருசலேம் முற்றுகை (637)**

இந்த நிகழ்ச்சி பற்றி விக்கீபீடியா கீழ்கண்டவாறு விவரிக்கிறது. மொத்த விவரத்தை இந்த ஒரு பத்தியில் அடக்கிவிடலாம்.

> **Siege of Jerusalem (636 - 637)**
>
> **The Siege of Jerusalem was part of a military conflict which took place in the year 637 between the Byzantine Empire and the Rashidun Caliphate. It began when the Rashidun army, under the command of Abu Ubaidah, besieged Jerusalem in November 636. After six months, the Patriarch Sophronius agreed to surrender, on condition that he submit only to the Rashidun caliph. In April 637, Caliph Umar traveled to Jerusalem in person to receive the submission of the city. The Patriarch thus surrendered to him.**
>
> மூலம்: **en.wikipedia.org/wiki/Siege_of_Jerusalem_(636%E2%80%93637)**

**தமிழில் விக்கீபீடியாவில் உள்ளவைகளையும் பார்த்துவிடுவோம்:**

**எருசலேம் முற்றுகை** :

> பைசாந்தியப் பேரரசிற்கும் ராசிதீன் கலீபாக்களுக்கும் இடையில் இடம் பெற்ற படை முரண்பாட்டின் ஒரு பகுதியாக 637 இல் இடம்பெற்றது. இது ராசிதீன் படை 636 நவம்பரில் எருசலேமை சூழ்ந்து கொண்டதுடன் ஆரம்பமாகியது. ஆறு மாதங்களுக்குப் பின், நகரத் தலைவர் சரணடைய உடன்பட்டார். 637 ஏப்ரல், கலிப்பா உமர் எருசலேமிற்கு பயணம் சென்று, நகரின் சரணடைவை ஏற்றுக் கொண்டார். நகரத் தலைவர் உமரிடம் சரணடைந்தார்.
>
> மூலம்: **ta.wikipedia.org/s/5eql**

பாரா அவர்கள் இந்த சரித்திர விவரங்களை படித்து இருந்திருப்பார் என்று நாம் கருதலாம், அவர் படித்தது ஒன்று, எழுதியது இன்னொன்று.

உண்மையில் என்ன நடந்தது என்பதை சுருக்கமாக பார்ப்போம், அதன் பிறகு பாரா அவர்கள் எழுதியவைகளுக்கு இவ்விவரங்கள் ஒத்து இருக்கின்றனவா என்பதை பார்க்கலாம்.

1) முஹம்மது மரித்த பிறகு (632), அபூ பக்கர் அவரது ஸ்தானத்தில் முதல் கலிஃபாவாக மதினாவில் பதவியில் உட்காருகிறார்.

2) அபூ பக்கர் இரண்டாண்டுகள் ரித்த போர்கள் புரிந்து, அதன் பிறகு மரித்துவிடுகிறார்.

3) இரண்டாம் கலிஃபாவாக, பதவியில் அமருகிறார் உமர். இவரும் இஸ்லாமிய பாணியில் அரேபியாவிற்கு சுற்றியுள்ள நாடுகளை தாக்கி அவைகளை பிடிக்கிறார். இதனை பாரா

அவர்கள் அழகாக, ''உமரின் காலத்தில் இஸ்லாம் அரேபியாவிற்கு வெளியே வெகு வேகமாக பரவியது'' என்று எழுதி இருக்கிறார். இதைப் பற்றி என் முந்தைய கட்டுரையில் எழுதினேன்.

**4)** ஏற்கனவே முஸ்லிம்களிடம் இழந்த தன் இராஜ்ஜியங்களை திரும்ப பிடிக்க, பைசாந்திய அரசர் ஹெரகுலிஸ் யர்முக் என்ற இடத்தில் முஸ்லிம்களின் இராணுவத்தை சந்திக்கிறார், ஆனால் படுதோல்வி அடைகிறார். இது நடந்தது ஆகஸ்ட் **636**ம் ஆண்டு.

**5)** இந்த யர்முக் போரில் இஸ்லாமிய இராணுவத்துக்கு தளபதியாக இருந்த அபூ உபைதா, அக்டோபரில் இனி எந்த பட்டணத்தை பிடிக்கலாம் என்று ஆலோசிக்கிறார். செசரியா பட்டணமா? ஜெருசலேம் பட்டணமா? என்ற முடிவை எடுக்கமுடியாமல், மதினாவில் இருந்த இஸ்லாமிய இரண்டாம் கலிஃபா உமருக்கு கடிதம் எழுதி கேட்கும் போது, முதலாவது ஜெருசலேம் என்று உமர் பதில் தருகிறார்.

**6)** இஸ்லாமிய இராணுவம், தளபதி அபூ உபைதாவின் தலைமையில் ஜெருசலேம் நகரை நவம்பர் **636**ல் முற்றுகையிட்டது. ஜெருசலேம் மக்கள் நகரைவிட்டு வெளியே வராமல் திகைத்தார்கள். இதற்கு முன்பாகவே, பெர்சியாவிடமிருந்து ஜெருசலேமை கைப்பற்றியிருந்த ஹெரகுலிஸ் நகரைச் சுற்றி பலத்த சுவரைக் கட்டி அதிகமாக பாதுகாத்து வைத்திருந்தார்.

**7)** ஜெருசலேமுக்குள் இருக்கும் மக்களின் உணவுப்பண்டங்கள் குறையத்தொடங்கின. இது ஒரு போர் யுக்தியாகும். ஒரு நகரைச் சுற்றி முற்றுகையிட்டால், பல நாட்கள் அந்நகர மக்கள் உணவு பற்றாக்குறையில் வாடி, கடைசியாக சரணடைந்துவிடுவார்கள். நகருக்குள் வெளியேயிருந்து உணவுப் பண்டங்கள் இதர பொருட்கள் செல்லாமல் தடுத்துவிடுவது, ஒரு போர் யுக்தி.

**8)** முஸ்லிம்களின் இந்த முற்றுகை ஆறு மாதங்கள் தொடர்ந்தது. யாராவது இறங்கிவந்தால் தவிர, இப்படிப்பட்ட முற்றுகை ஒரு முடிவுக்கு வராது.

**9)** கடைசியாக, ஜெருசலேமில் இருந்த ஆர்ச் பிஷப், அதாவது நகரத்தின் தலைவர், சரணடைவது என்று முடிவுக்கு வந்தார். இவர் இப்படிப்பட்ட முடிவு எடுக்கவில்லையென்றால், நகர மக்கள் பசியாலேயே செத்து மடிந்து இருந்திருப்பார்கள்.

**10)** ஜெருசலேம் நகர தலைவர், இஸ்லாமிய இராணுவத்தோடு பேசினார். நாங்கள் சரணடைகிறோம், ஜிஸ்யா வரி கட்டுகிறோம் ஆனால், உங்கள் தலைவர் உமர் வரவேண்டும், அவர் எங்களோடு ஒரு ஒப்பந்தம் செய்யவேண்டும், அவரிடம் தான் நாங்கள் சரணடைவோம் என்று நிபந்தனை விதித்தார்.

**11)** உமர் மதினாவிலிருந்து வரவேண்டுமென்றால் நாட்கள் செல்லும், எனவே, கலித் இப்னு வலித் என்பவரை காட்டி, இவர் தான் 'உமர்' என்றுச் சொல்லுவோம் என்று இஸ்லாமிய இராணுவத்தில் ஆலோசனை கூறப்பட்டது. ஆனால், கலித் இப்னு வலித் என்பவர் சிரியாவில் ரொம்ப பிரபலமானவர், எனவே கிறிஸ்தவர்கள் அவரை அறிந்திருப்பார்கள் என்பதால், இந்த ஆலோசனை கைவிடப்பட்டது.

**12)** எனவே, தளபதி அபூ உபைதா, உமருக்கு கடிதம் எழுத, மதினாவிலிருந்து உமர் ஜெருசலேமுக்கு வர ஒப்புக்கொண்டார்.

**13)** ஜெருசலேம் முற்றுகையிட்டு ஆறுமாதம் கழித்து, ஏப்ரில் மாதம் **637**ம் ஆண்டு, உமர் ஜெருசலேமுக்கு வந்தார். ஜெருசலேமின் ஆர்ச் பிஷப்பும் உமரும் உடன்படிக்கை செய்தார்கள், ஜெருசலேம் சரணடைகிறது என்று ஆர்ச் பிஷப் அறிவித்தார் (அவரால் வேறு என்ன முடியும், சரணடையத்தான் முடியும்). உமருக்கு ஊரெல்லாம் சுற்றிக்காண்பித்தார்.

**14)** ஒரு வேடிக்கையான நிகழ்வை இங்கு குறிப்பிடவேண்டும். ஊரை சுற்றிக்காண்பிக்கும் போது, ஆர்ச் பிஷம் உமரிடம் உங்களுடைய மதிய தொழுகையை இதோ இந்த புதுப்பித்துள்ள சர்சில் செய்யுங்கள் என்று அழைப்பு விடுத்தார். இதனை உமர் மறுத்தார். இதற்கு என்ன காரணம் என்று கேட்ட போது. இது கிறிஸ்தவர்களின் சர்ச், இங்கு நான் தொழுகை நடத்தினால், எங்கள் முஸ்லிம்கள் நான் போட்ட உடன்படிக்கையை தள்ளிவிட்டு, **'**எங்கள் தலைவர் தொழுகை நடத்திய இடம், மசூதி ஆகும், சர்ச் அல்ல என்றுச் சொல்லி, சர்சை மசூதியாக மாற்றிவிடுவார்கள்**'**. எனவே, நான் இங்கு தொழுகை செய்யமாட்டேன் என்று மறுத்துவிட்டார். எப்படிப்பட்ட தலைவர், எப்படிப்பட்ட மார்க்கம் பாருங்கள். காலம் உருண்டோடிய போது அது தான் நடந்தது.

**15)** ஜெருசலேமில் **10** நாட்கள் இருந்து, உமர் மதினா சென்றார். இது தான் ஜெருசலேம் பிடிக்கப்பட்ட சரித்திரம். அதன் பிறகு செக்சரியா பட்டணம் பக்கம் இஸ்லாமிய இராணுவம் சென்றது. மூலம்: **en.wikipedia.org/wiki/Siege_of_Jerusalem_(636%E2%80%93637)**

**இப்போது பாரா அவர்கள் எழுதிய வரிகளை ஒருமுறை படித்துப்பாருங்கள்.**

**பாரா அவர்கள் எழுதியது:**

> *// ஒரு பெரும் படையெடுப்பின் இறுதியில் எகிப்தை அப்போது ஆண்டுகொண்டிருந்த (கிறிஸ்துவர்களான) பைசாந்தியர்கள் என்கிற இனத்தவரை வீழ்த்தி, ஜெருசலேத்தில் காலெடுத்து வைத்தார் உமர். அப்போது ஜெருசலேத்தின் ஆர்ச் பிஷப்பாக இருந்தவர், நகரின் சாவியை (அடையாளச் சாவிதான்!) தாமே மனமுவந்து உமரிடம் அளித்து, ஆளவரும்படி அழைப்பு விடுத்தது வினோதமான ஆச்சர்யம்! //*

பாரா அவர்கள் தம்முடைய எழுத்துக்களில் எவ்வளவு பெரிய ஏமாற்றுக்காரராக இருக்கிறார் என்பதை பாருங்கள். ஜெருசலேம் ஆர்ச் பிஷம் மனமுவந்து, சந்தோஷமாக ஆடல் பாடல் கொண்டாட்டங்களோடு உமரிடம் சாவியை கொடுத்தாரா?

அ) ஆறு மாதங்களாக நகரம் முற்றுகை இடப்பட்டுள்ளது. மக்கள் உணவுக்கட்டுப்பாட்டினால் சாகும் நிலைக்கு தள்ளப்பட்டார்கள்.

ஆ) நகரத்துக்கு வெளியே சென்றால் தானே உணவு கிடைக்கும், பொருளாதாரம் வியாபாரம் உயரும்.

இ) வேறு எந்த ஒரு அரசனின் உதவியும் இல்லை. முஸ்லிம்கள் ஏற்கனவே இதர சுற்றுவட்டாரங்களை பிடித்துவிட்டார்கள்.

ஈ) நகரத்துக்குள்ளேயே இன்னும் சில மாதங்கள் இருந்தால், மக்கள் பசியாலேயே செத்துமடிவார்கள்.

உ) பணக்காரன் பணம் அதிகம் கொடுத்து உணவுப் பொருட்களை வாங்குவான், ஏழை என்ன செய்வான்? அதுவும் எத்தனை நாட்கள் பணம் உதவி செய்யும்? உணவு நகரத்தில் இருந்தால் தானே!

ஊ) நகரத்துக்குள் இருந்து அனைவரும் செத்துமடிவதா? அல்லது முஸ்லிம்கள் ஆண்டுக்கொண்டு போகட்டும், அவர்களுக்கு வரிகளைக் கட்டுவோம். குறைந்தபட்சம் மக்களின் உயிர் பிழைக்குமே என்பதால் தான் 'சரணடைவது' என்று ஆர்ச் பிஷப் முடிவு எடுத்தார். என்னைக் கேட்டால், மக்களை காப்பாற்ற இதைவிட அந்த நேரத்தில் வேறு நல்ல முடிவு இல்லை.

எ) மக்களின் உயிரை காக்கவேண்டும் என்பதால், உமரிடம் சரணடைவதை பாரா அவர்கள் 'ஆர்ச் பிஷப் மனமுவந்து, வந்து ஆட்சி பண்ணுங்கையா, எங்களையெல்லாம் ஆளுங்கையா?' என்று கேட்டுக்கொண்டாராம், இது ஒரு வினோத ஆச்சரியமாம். பாராவின் ஆய்வு எவ்வளவு தாழ்த்தப்பட்டுவிட்டது என்பதை வாசகர்கள் கவனிக்கவேண்டும்.

ஏ) அந்த நாளில் நாங்கள் சரண்டையமாட்டோம் என்று சொல்லியிருந்தால், மக்கள் அனைவரும் நகருக்குள் பசியால் செத்து மடிந்து இருந்திருப்பார்கள், அல்லது முஸ்லிம்கள் சுவரை உடைத்து உள்ளே வந்து நகர மக்களை சாகடித்து இருந்திருப்பார்கள். தோல்வி அடைவோம் என்று தெரிந்து இருந்தும், சண்டை போடுவது முட்டாள்தனமானது. அன்று ஆர்ச் பிஷப் செய்த காரியம் வரவேற்கத்தக்கது.

ஐ) உமர் நினைத்து இருந்திருந்தால், நான் வரமாட்டேன். இதோ இன்னும் அதிக இராணுவத்தை அனுப்புகிறேன், நகர சுவரை இடித்து உள்ளே போய் அழித்துவிடுங்கள் என்று கட்டளை கொடுத்திருந்தால், மக்கள் முழுவதுமாக கூண்டோடு அழிந்து இருந்திருப்பார்கள். ஏதோ! உமருக்கு ஜெருசலேம் என்றுச் சொன்னதுமே, அடடே! எங்கள் இறைத்தூதர் முஹம்மது இரவுப்பயணம் செய்த இடமாச்சுதே என்ற நல்லெண்ணத்தில், இதை நோக்கியல்லவா நாம் பத்தாண்டுகள் தொழுகை நடத்தினோம் என்ற நல்லெண்ணத்தில், மதினாவிலிருந்து ஜெருசலேமுக்கு வந்து, ஜெருசலேம் சரணடைவதை ஏற்றுக்கொண்டுச் சென்றார்.

**பாரா அவர்களே எச்சரிக்கையாக எழுதுங்கள்:**

சரித்திரத்தை எப்படி நீங்கள் மாற்றி எழுதுவீர்கள்? சரித்திரம் எழுதப்படும் காலத்தில் அரசர்கள் சரித்திரத்தை மாற்றி எழுதுவார்கள். ஆனால், இத்தனை ஆண்டுகள் கழித்து, நீங்கள் மாற்றிச் சொன்னால், அதனை அப்படியே கேட்டுவிடவேண்டுமா?

தெரியாமல் தான் கேட்கிறேன், அப்படி என்ன முஸ்லிம்கள் உங்களுக்கு பொன்னும் பொருளும் கொடுத்துவிட்டார்கள் என்று இப்படி தப்புத்தப்பாக எழுதுகிறீர்கள்? ஏதோ, முஸ்லிம் தலைவர் உமர் நல்லவர் மாதிரியும், ஜெருசலேம் ஆர்ச் பிஷம், 'வாங்கைய்யா! வந்து எங்களை ஆளுங்கைய்யா!' என்று காலில் விழுந்து கேட்டுக்கொண்டது போல அல்லவா எழுதியிருக்கிறீர்கள்! எனக்கு என்ன தோன்றுகிறது என்றால் ,' மேற்கண்ட வரிகளை முஸ்லிம்களே எழுதி உங்களிடம் கொடுத்ததுபோல உள்ளது'.

உங்களைப் போன்றவர்களால் தான் எழுத்தாளர்கள் சமூகத்துக்கு இழுக்கு. கொஞ்சம் பார்த்து எழுதுங்கள், நியாயமானவைகளை எழுதுங்கள். பெண்களை வர்ணிக்க, இயற்கையை வர்ணிக்க கவிதைகள் எழுதும் போது கற்பனையைச் சேர்ப்பதில் தவறில்லை, சரித்திரத்தை எழுதும் போது, கற்பனை வளத்தை கொஞ்சம் அடக்கி வையுங்கள். உண்மையையும்

பொய்யையும் ரொம்ப நாள் மூடி மறைத்து வைக்கமுடியாது என்பதை அறியாதவரா நீங்கள்? சத்தியமேவ ஜெயதே என்பதை நீங்கள் நம்புகிறீர்கள் என்று நம்புகிறேன்.

இன்னும் உங்கள் வரிகளின் நரம்புகளில் ஓடும் இரத்தம் உறுஞ்சி எடுக்கப்பட்டும்...

**அடிக்குறிப்புக்கள்:**

**[1] en.wikipedia.org/wiki/Siege_of_Jerusalem_(636%E2%80%93637)**

**[2] en.wikipedia.org/wiki/Battle_of_Yarmouk**

**[3]** எருசலேம் முற்றுகை **(637) - ta.wikipedia.org/s/5eql**

**[4]** ஜெருசலேம் பிடிக்கப்பட்ட போது, அங்கு **12000** கிரேக்கர்கள், **50000** குடிமக்கள் (ஜெருசலேம் நகரத்தார்கள்) வாழ்ந்துக்கொண்டு இருந்தார்கள். மூன்று நாளுக்குள்ளே, அந்த **12000** கிரேக்கர்கள் ஜெருசலேமை விட்டுச் செல்லவேண்டும் என்று உமர் கட்டளையிட்டார். ஜெருசலேமில் இருந்த கிறிஸ்தவர்கள் ஜிஸ்யா வரி கட்டும்போது, கணக்கு வைப்பதற்கு சரியாக இருக்கும் என்று உமர் நினைத்தார். ஜிஸ்யா வரி கட்டுவது யூதர்களுக்கும், கிறிஸ்தவர்களுக்கும் இஸ்லாம் இட்ட கட்டளை. இதர மக்கள் முஸ்லிம்களாக மாறவேண்டும், அல்லது முஸ்லிம்களின் கைகளில் சாகவேண்டும்.

**Was there justice in Umar?**

**From the "Hughes Dictionary of Islam, page 228, it says that "There were within the city 12,000 Greeks and 50,000 natives, and the Khalifah Umar insisted that all the Greeks depart within 3 days and that the natives should pay tribute. Where was the justice in expelling the citizens of Jerusalem?** மூலம்: **http://www.answering-islam.org/Responses/Al-Kadhi/r06.14.html**

ജ്ഞജ്ഞജ്ഞജ്ഞ

# 24) இஸ்லாமுக்கு முஹம்மதுவை விட பா. ராகவன் அதிக நன்மையை செய்துள்ளார்கள்

இது என்ன விசித்திர தலைப்பாக இருக்கிறது என்ற சந்தேகம் வருகிறதா? ஆம், பா. ராகவன் அவர்களின் நிலமெல்லாம் இரத்தம் தொடரின் 20வது அத்தியாயத்தை படித்தால், இப்படித் தான் நமக்கு தோன்றும். நம்முடைய அடுத்த சில கட்டுரைகள் இந்த அத்தியாயத்தின் விமர்சனமாக வெளிவரபோகிறது. வாசகர்கள் கீழே கொடுக்கப்பட்ட தொடுப்பை சொடுக்கி, பாரா அவர்களின் இவ்வத்தியாயத்தை முழுவதுமாக படித்துக் கொள்ளவும்.

**பா.ராகவன் - நிலமெல்லாம் இரத்தம்**

**அத்தியாயம் 20 -** இஸ்லாம் வாள்முனையில் பரவியதா?

தொடுப்பு: **nilamellam.blogspot.in/2005/01/20.html**

## 1) ஒரு ஹிந்து (பிராமணர்) சொன்னால் உண்மையாக இருக்கும்!

**பாரா அவர்களின் நிலமெல்லாம் இரத்தம் புத்தகத்தை மெச்சிக்கொள்ளாத தமிழ் முஸ்லிம்கள் இருக்கமாட்டார்கள் என்றுச் சொல்லலாம். இணையம் வந்த பிறகு முஸ்லிம்கள் அவரது புத்தகத்தை பாராட்டி தங்கள் தளங்களில் எழுதியுள்ளார்கள்.**

**அ) மேலே மேற்கோள் காட்டப்பட்ட "நிலமெல்லாம் பிளாக்ஸ்பாட்" தளத்தில் கீழ்கண்டவாறு குறிப்பிடப்பட்டுள்ளது:**

> *// பா.ராகவனின் குமுதம் ரிப்போர்ட்டர் தொடர் (பாலஸ்தீனம் பிரச்சினை சம்பந்தமான யூத, கிருஸ்துவ, முஸ்லிமல்லாத ஒருவரின் ஆய்வு) //*

**முஸ்லிமல்லாதவரின் ஆய்வு முஸ்லிம்களுக்கு சாதகமாக இருந்தால், அவரை புகழுவார்கள், அதே ஆய்வு, முஸ்லிம்களுக்கு எதிராக இருந்தால், அதே நேர்மையுடன் முஸ்லிம்கள் அவரது ஆய்வை ஏற்றுக்கொள்வார்களா? இஸ்லாமை அவமானப்படுத்திவிட்டான், அவன் சாகவேண்டும் என்று சொல்வார்கள் அல்லவா?**

**ஆ) தருல் இஸ்லாம் தளத்தில் - பாராவிற்கு புகழாரம்**

> ***// நிலமெல்லாம் ரத்தம் - ஒரு விமர்சனம்***
>
> *பா.ரா. ''என்னுரையில்'' பாலஸ்தீன் அராபியர்கள் தொடர்ந்து சரித்திரத்தால் ஏமாற்றப்பட்டு வந்திருப்பவர்கள், என்று ஆரம்பிக்கிறார். ''நான் ஒரு கிருத்தவனாகவோ, யூதனாகவோ, இஸ்லாமியனாகவோ இல்லை என்பது ஒரு சௌகரியம் தான்'' என்று அவரே குறிப்பிட்டிருப்பதனால் இந்த புத்தகம் ஒரு குறிப்பிட்ட சார்பு எடுத்திருப்பதாகத் தோன்றினாலும் அது நியாயத்தின் வெளிப்பாடே என்பதை எந்த நடுநிலை வாசகனும் உணரலாம்.*
>
> *மேலும், ''முத்தரப்பினரும் ஒற்றுமையுடன் அங்கே வாழ்ந்திருக்கமுடியும். அதற்கான சாத்தியங்கள் கலீஃபா உமரின் காலத்திலேயே உருவானது. கிருத்தவர்களுடனான உமரின் அமைதி ஒப்பந்தத்தை இன்று வாசித்தாலும் சிலிர்ப்பு ஏற்படுகிறது. உமருக்குப் பின்னால் ஆட்சிக்கு வந்தவர்களில், கி.பி. பன்னிரண்டாம் நூற்றாண்டில் வாழ்ந்த சுல்தான் சலாவுதீன் அய்யூபியின் காலம் வரையிலும் கூட இதற்கான சாத்தியங்களை இஸ்லாமிய மன்னர்கள் மிக வெளிப்படையாகவே தெரிவித்து வந்திருக்கிறார்கள்'' என சிலாகிக்கும் ஆசிரியர் பிரிட்டனின் நயவஞ்சகத்தால் எப்படி வந்தேறிகளான யூதர்கள் மண்ணின் மைந்தர்களான பாலஸ்தீனியர்களை வெளியேற்றி நிலத்தை அபகரித்தார்கள் என்பதை மிகவும் அற்புதமாய் விவரிக்கிறார்.*
>
> *இந்த பிரச்சனையை மேலோட்டமாய் பார்க்காமல், மூன்று மதங்களுக்கும் பொதுவான நபி இப்ராஹீமின் காலத்திலிருந்து தொடங்கியுள்ளது ஆசிரியரின் நேர்மையை பகர்கிறது. மிகவும் பாராட்டத்தக்க விஷயம்.*
>
> *. . .*
>
> *தமிழ் வாசிக்கத் தெரிந்தவர்கள் அவசியம் படிக்க வேண்டிய புத்தகம் இது. தொடர்ந்து இனி வரும் பாலஸ்தீன் செய்திகளை முறையாய் அறிந்து உண்மையுணர நிச்சயம் அது உதவும்.*

மூலம்: darulislamfamily.com/reviews-t/our-reviews/81-nilamellam-ratham-book-review.html //

பாரா அவர்கள் ஒரு இந்து என்பதால், இந்த புத்தகம் யூத, [கிறிஸ்தவ] மற்றும் முஸ்லிம்கள் சம்மந்தப்பட்ட இஸ்ரேல்-பாலஸ்தீன பிரச்சனை பற்றி பேசுவதால், இந்த புத்தகத்தில் நேர்மை இருக்கும் என்று மேற்கண்ட விமர்சனத்தில் அந்த முஸ்லிம் குறிப்பிடுகிறார். ஆனால், யூத/கிறிஸ்தவ/இஸ்லாமிய சரித்திரம் அறிந்த ஒரு நடுநிலையாளர் இப்புத்தகத்தை படித்தால், நிச்சயமாக இது முஸ்லிம்களின் சார்பாக, முஸ்லிம்களுக்காக முஸ்லிம்களின் உற்சாகத்தால் எழுதப்பட்ட புத்தகம் என்பதை அறிந்துக் கொள்வார்கள்.

"இந்த புத்தகத்தை நான் படித்துள்ளேனே, நீங்கள் சொல்வது போல, பாரா அவர்கள் இஸ்லாமுக்கு ஆதரவாக எழுதியதாக எனக்கு தெரியவில்லையே" என்று நீங்கள் சொல்வதாக இருந்தால், இதற்கு ஒரு காரணமுண்டு. அதாவது, நீங்கள் முஸ்லிமாக இருக்கவேண்டும், அல்லது உங்களுக்கு குறைந்தபட்ச யூத/கிறிஸ்தவ/இஸ்லாமிய சரித்திரம் தெரியாமல் இருந்திருக்கவேண்டும்.

இப்புத்தகத்தின் சில பாராக்களை படிக்கும்போது, பாரா அவர்கள் எழுதியதாக தெரியவில்லை. முஸ்லிம்கள் எழுதிக்கொடுத்ததை இவர் அப்படியே பதித்துள்ளார் என்று தெரிகிறது. முக்கியமாக 20ம் அத்தியாயத்தை நடுநிலையாக ஒரு நபர் படித்தால், அதனை எழுதியவர் ஒரு முஸ்லிம் தான் என்று அடித்துச் சொல்வார். ஏனென்றால், இந்த அத்தியாயத்தில் முஸ்லிம்களின் வாசனை அளவிற்கு அதிகமாகவே அடிக்கிறது. பாரா அவர்களுக்கு நெருக்கமானவர்கள் அல்லது தெரிந்தவர்கள் யாராவது இந்த பாராவை படித்தால், எப்போதாவது நீங்கள் பாராவை நேரில் கண்டால் இந்த கேள்வியை கேட்டுப்பாருங்கள் - "நிலமெல்லாம் இரத்தம் 20ம் அத்தியாயத்தை யார் எழுதியது?"

## 2) எப்படி பாரா முஹம்மதுவைவிட பெரிய தொண்டு ஆற்றிவிட்டார்?

குர்-ஆனிலும், ஹதீஸ்களிலும், ஆரம்ப கால இஸ்லாமிய அறிஞர்கள் எழுதிய விரிவுரைகளிலும், இன்னும் இஸ்லாமிய சரித்திர நூல்களிலும், இஸ்லாம் வாளால் தான் பரவியது என்பதற்கு அடுக்கடுக்கான ஆதாரங்களை காணமுடியும். இவைகளை யாரும் மறுக்கமுடியாது. ஆனால், பாரா அவர்கள் தம்முடைய நிலமெல்லாம் இரத்தத்தில் ஒரு மிகப்பெரிய வெடிகுண்டை முஸ்லிம்கள் மீதே தூக்கிபோடுகிறார். பாரா அவர்கள் கொடுத்த இந்த சுகமான அதிர்ச்சியை முஸ்லிம்களே தாங்கிக்கொள்ள மாட்டார்கள் என்பது உண்மை.

புரியவில்லையா!?! புரியும் படி விளக்குகிறேன்.

இஸ்லாமின் ஆதார நூல்களான குர்-ஆன், ஹதீஸ்கள் மற்றும் இஸ்லாமிய விரிவுரைகள் அனைத்தும், முஹம்மது பல யுத்தங்களை புரிந்துள்ளார் என்றுச் சொல்கின்றன. அப்போர்களுக்கு பல நியாயமான காரணங்கள் இருக்கின்றன என்றும் சொல்கின்றன. அவைகள் நியாயமான காரணங்களா இல்லையா என்பது வேறு விஷயம். ஆனால், நம்முடைய தமிழ் எழுத்தாளர் பாரா அவர்கள், ஒரு பெரிய இஸ்லாமிய புரட்சியை துவக்கியுள்ளார் என்றே சொல்லவேண்டும். அதாவது, இந்த நிலமெல்லாம் இரத்தம் புத்தகத்தின் 20வது அத்தியாயத்தில், "முஹம்மது புரிந்த போர்கள் அனைத்தும் வெறும் மூன்று தான்" என்று அடித்துச் சொல்கிறார். இஸ்லாமிய சரித்திரத்தில் இந்த மூன்று போர்கள் தான் பதிக்கப்பட்டுள்ளது, இந்த எண்ணிக்கைத் தான் சரியானது, இதைவிட அதிக எண்ணிக்கையைச் சொல்கிறவர்கள் மேற்கத்திய சரித்திர ஆய்வாளர்கள் ஆவார்கள்,

அவர்கள் யூதர்கள் ஆவார்கள், அவர்கள் சொல்வது பொய் என்றுச் சொல்கிறார். பாராவின் படி, முஹம்மது மூன்றுக்கு மேல் போர் புரிந்துள்ளார் (அது நியாயமான போராக இருந்தாலும் சரி) என்றுச் சொல்பவன் பொய்யனாவான்.

முஸ்லிம்கள் இப்போது ஒரு தர்மசங்கடத்தில் உள்ளார்கள். ஒரு முஸ்லிமல்லாதவர் சொல்லும் இந்த மூன்று போர்கள் என்ற எண்ணிக்கையை எடுத்துக்கொள்வதா? அல்லது குர்-ஆன் ஹதிஸ்கள் மற்றும் இஸ்லாமிய விரிவுரையாளர்கள் சொல்வதை ஏற்றுக்கொள்வதா? ஒருவகையில் பார்த்தால், இஸ்லாமுக்கு சாதகமாக அல்(ல)வா இவர் எழுதியுள்ளார்?

முஹம்மது இஸ்லாமுக்காக பல போர்களைச் செய்தார், ஆனால், பாரா அவர்கள் மூன்றே என்றுச் சொல்கிறார். யார் இஸ்லாமுக்காக அதிக சேவை செய்தவர் ஆகிறார்கள்? முஹம்மதுவா அல்லது பாராவா? எது எப்படியோ, தற்காலத்தில் இஸ்லாமுக்கு உண்டாகியிருக்கின்ற அவப்பெயர் பாரா அவர்கள் மூலமாக கொஞ்சமாவது துடைக்கப்பட்டால் நல்லது என்ற நிலையில் முஸ்லிம்கள் இருக்கிறார்கள்.

இந்த தலைப்பு பற்றி பாரா அவர்கள் எழுதிய சில வரிகளை 20ம் அத்தியாயத்திலிருந்து பார்ப்போம்.

**பாரா அவர்கள் எழுதியவை:**

> *// . . . மாறாக, ஒட்டுமொத்த மத்திய ஆசியாவிலும் மிகக்குறுகிய காலத்தில் செல்வாக்குப் பெற்று, முகம்மது நபியின் மறைவுக்குப் பின்* ***மிகச்சில ஆண்டுகளிலேயே ஐரோப்பாவுக்கும் கிழக்காசியாவுக்கும் பரவி****, உலகின் இரண்டாவது பெரிய மதமாக இஸ்லாம் காலூன்றி நிற்க முடிந்திருக்கிறதென்றால், அது எவ்வாறு பரவியது என்பதைத் தெரிந்துகொள்வது மிகவும் அவசியமானது.*
>
> *இதை ஆராய்வதற்கு முதல் தடையாக இருப்பது, "அது அச்சுறுத்தலால் பரப்பப்பட்ட மதம்" என்கிற முன் அபிப்பிராயம், அல்லது முன் முடிவு அல்லது முன் தீர்மானம். இந்த முன் தீர்மானம் அல்லது முன் அபிப்பிராயத்தை இஸ்லாத்தைக் காட்டிலும் வேகமாகப் பரப்பி வேரூன்றச் செய்தவர்கள்* ***மேற்கத்திய சரித்திர ஆசிரியர்கள். பெரும்பாலும் யூதர்கள். சிறுபான்மை கிறிஸ்துவ சரித்திர ஆய்வாளர்கள்.***
>
> *மிகவும் அற்பமானதொரு உதாரணத்தை மட்டும் பார்க்கலாம். முகம்மது நபியின் காலத்தில் இஸ்லாத்தை முன்னிட்டு* ***மொத்தம் சுமார் எழுபத்தைந்து அல்லது எண்பது யுத்தங்கள் நிகழ்த்தப்பட்டதாக அனைத்து மேற்கத்திய சரித்திர ஆய்வாளர்களும் சொல்கிறார்கள்.*** *அத்தனை யுத்தங்களிலும் ரத்த ஆறு பெருகியதென்றும் யுத்தக் கைதிகளை வாள்முனையில் மிரட்டி இஸ்லாத்தில் இணைத்ததாகவும் ஏராளமான சம்பவங்களை இந்தச் சரித்திர ஆய்வாளர்கள் பட்டியலிடுகிறார்கள்.*
>
> *உண்மையில் முகம்மது நபியின் காலத்தில் நடைபெற்ற யுத்தங்களாக ஆதாரங்களுடன் கிடைப்பது* ***மொத்தம் மூன்றுதான். பத்ரு, உஹைத், ஹுனைன்*** *என்கிற மூன்று இடங்களில் முஸ்லிம்கள் நேரடியாக யுத்தத்தில் ஈடுபட்டிருக்கிறார்கள். இஸ்லாம் குறித்து அல்லாமல், முகம்மது நபியின் வாழ்க்கை குறித்து ஆராய்ச்சி செய்திருக்கும் மேற்கத்திய ஆய்வாளர்களின் நூல்களில் இந்த யுத்தங்கள் பற்றிய குறிப்புகள் இருக்கின்றன. உண்மையில் எண்பது யுத்தங்கள் அவர் காலத்தில் நடந்திருக்குமானால், இந்த வாழ்க்கை வரலாற்றாசிரியர்கள் அவற்றையும் அவசியம் பதிவு செய்திருப்பார்கள். மாறாக, மேற்சொன்ன மூன்று யுத்தங்கள் பற்றி மட்டுமே அவர்கள் பேசுகிறார்கள்.*

*இதைக்கொண்டே, இஸ்லாத்தை முன்னிட்டு* ***முகம்மது நபியின் காலத்தில் நிகழ்த்தப்பட்ட யுத்தங்கள் மூன்றுதான் என்கிற*** *முடிவுக்கு வரவேண்டியதாகிறது.*

*ஆக, முகம்மது நபியின் காலத்தில் யுத்தங்களின் மூலம் இஸ்லாம் பரப்பப்படவில்லை என்கிற முடிவுக்கே வரவேண்டியதாகிறது.* ***ஆதாரங்களுடன் உள்ள மூன்று யுத்தங்கள் கூட*** *ஒரே தினத்தில் ஆரம்பித்து, நடந்து, முடிந்தவையாகவே இருக்கின்றன. அதாவது, ஒருநாள் கலவரம்.*

*கட்டக்கடைசி வினாடி வரை அவர் யுத்தங்களைத் தவிர்ப்பதற்கான முயற்சிகளையே மேற்கொண்டிருப்பதாகச் சரித்திரம் சுட்டிக்காட்டுகிறது.* ***தவிர்க்கவே முடியாத மூன்று சந்தர்ப்பங்களில்தான் முகம்மது, யுத்தத்துக்கான உத்தரவு அளித்திருக்கிறார்.*** *//*

இதுவரை காட்டிய மேற்கோள்கள் போதும் என்று எண்ணுகின்றேன். பாரா அவர்களின் முழு கட்டுரையையும் மேலே கொடுத்துள்ள தொடுப்பை சொடுக்கி படித்துக்கொள்ளுங்கள்.

**பாரா அவர்களின் படி மொத்தச் சுருக்கம்:**

அ) மேற்கத்திய ஆய்வாளர்களின் ஆய்வு தவறானவது, அவர்கள் ஆய்வு என்ற பெயரில் இஸ்லாம் மீது பொய்களைச் சொல்லியுள்ளார்கள். அவர்கள் யூதர்கள் அதனால் இஸ்லாம் மீது பொய்களை கூறுகிறார்கள். (பாராவின் வரிகள் - மேற்கத்திய சரித்திர ஆசிரியர்கள். பெரும்பாலும் யூதர்கள். சிறுபான்மை கிறிஸ்துவ சரித்திர ஆய்வாளர்கள்.)

ஆ) முத்தான மூன்று போர்களை மட்டுமே முஹம்மது புரிந்துள்ளார். அதுவும் நியாயமான காரணங்களுக்காக மட்டுமே போர் புரிந்தார்.

இ) மூன்று போர்கள் என்றுச் சொல்லும் சரித்திரம் தான் உண்மை, மற்றவையெல்லாம் பொய்யான நூல்கள்.

ஈ) ''பாவம் இஸ்லாம்'', அது வாளால் பரப்பப்பட்டது என்றுச் சொல்வது பொய்.

பாராவின் படி, இஸ்லாமின் உண்மையான சரித்திரத்தின்படி, முஹம்மது மூன்றே யுத்தங்களை மட்டுமே புரிந்துள்ளார் என்பதாகும். இப்போது சொல்லுங்கள்? யார் இஸ்லாமுக்கு அதிக நன்மை செய்தவர்கள்? பல போர்களை புரிந்த முஹம்மதுவா? அல்லது வெறும் மூன்று யுத்தங்கள் தான் என்றுச் சொல்லும் பாராவா?

### 3) அடுத்து நாம் என்ன செய்யவேண்டும்?

முஹம்மது புரிந்தது மூன்றே போர்கள் என்று பாராவே சொல்லிவிட்டார், இனி நாம் சும்மா இருக்கமுடியுமா? அவர் சொன்னது உண்மையா என்று சோதித்து பார்க்கவேண்டுமல்லவா? இராமனின் மனைவியாக இருந்தாலும், அக்னி பரிட்சை சீதைக்கு தப்பவில்லையே! பாராவிற்கு ஒரு அக்கினி பரிட்சை வைக்கவேண்டாமா?

முஹம்மது பல போர்களை புரிந்தார் என்று ஒரு பக்கம் இஸ்லாம் சொல்கிறது. ''இல்லை, அவர் மூன்றே போர்கள் தான் புரிந்தார்'' என்று பாரா சொல்கிறார். நாம் என்ன செய்யப்போகிறோம் என்றால், குர்-ஆன், ஹதீஸ்கள் மற்றும் இஸ்லாமிய விரிவுரைகள், ஆரம்பகால இஸ்லாமிய சரித்திர ஆசிரியர்கள் எழுதிய நூல்களிலிருந்து எத்தனை யுத்தங்களை முஹம்மது புரிந்தார் என்பதை பட்டியலிடப்போகிறோம்.

பாரா அவர்கள் கருதியதுபோல, மேற்கத்திய அறிஞர்களின் ஆய்வுகளை நாம் மேற்கோள் காட்டமாட்டோம் ஏனென்றால், அவர்கள் யூதர்கள் மேலும் சிறும்பான்மை கிறிஸ்தவர்கள் எனவே அவர்கள் பொய் சொல்லவர்கள்.

இந்த தொடர் பதில் கட்டுரைகளுக்கு பிறகு, உண்மையுள்ள முஸ்லிம், பாரா அவர்கள் இந்த அத்தியாயத்தில் எழுதியவைகள் பொய்யாகும் என்றுச் சொல்லுவான் என்பது நிச்சயம். அப்படி அவன் செய்யவில்லையென்றால், அல்லாஹ் குர்-ஆனிலும் ஹதீஸ்களிலும் சொன்னது பொய் என்று அவன் ஒப்புக்கொள்கிறான் என்று அர்த்தம்.

பாராவா அல்லது பரமனா? முஸ்லிம்கள் முடிவு செய்வார்கள்

ဢဢဢဢဢဢဢဢ

# 25) பாராவை புரட்டிப்போட்ட நூல்கள்

(பாரா புரட்டிய நூல்கள் - ஓர் ஆய்வு)

கடந்த ஆண்டு, நிலமெல்லாம் இரத்தம் புத்தகத்தை படிக்க ஆரம்பித்த போது, ஒவ்வொரு அத்தியாயத்திலும் பாரா அவர்களின் சில வரிகள் என்னை மேற்கொண்டு தொடரமுடியாதபடிச் செய்தது. அவ்வரிகளுக்கு அவருக்கு பதில் எழுதவேண்டும் என்பதற்காக நான் குறிப்பு எடுத்துக் கொண்டேன். புத்தகம் முழுவதையும் படித்துவிட்டு பதில் எழுதலாம் என்று நினைத்திருந்தேன். ஆனால், அவரது 20வது அத்தியாயத்தை படித்து முடித்த போது, குறிப்புக்கள் அதிகமாகிக்கொண்டுச் செல்வதை உணர்ந்தேன். அவருக்கு உடனே பதில் எழுதவேண்டும் என்று முடிவு செய்துவிட்டேன். ஏனென்றால், இந்த 20வது அத்தியாயத்தில் நான் "ஒரு பாராவிலும்" பாராவை பார்க்க முடியவில்லை. முஹம்மது வாயிலிருந்து குர்-ஆன் வசனங்கள் வந்தாலும், அது முஹம்மதுவின் வார்த்தைகள் அல்ல என்று முஸ்லிம்கள் சொல்வது போல, இந்த 20வது அத்தியாயம் முழுவதிலும் பாராவையோ அவரது கருத்துக்களையோ பார்க்கமுடியவில்லை. அவரது பேனாவிலிருந்து அவ்வரிகள் எழுதப்பட்டு இருந்தாலும், அவர் அதன் கர்த்தா என்று சொல்லமுடியாத அளவிற்கு அது அமைந்துள்ளது. பேனா அவருடையது, மையும் அவருடையது, ஆனால் எழுதிய வரிகள் அவருடையது அல்ல. அதனை அவர் ஆய்வு செய்து எழுதியதாக தெரியவில்லை, யாரோ எழுதிக் கொடுத்தவைகளை அப்படியே எழுதியது போல தெரிகிறது.

அவ்வத்தியாயத்தை படிக்க சொடுக்கவும்:

பா.ராகவன் - நிலமெல்லாம் இரத்தம்

அத்தியாயம் 20 - இஸ்லாம் வாள்முனையில் பரவியதா?

தொடுப்பு: **nilamellam.blogspot.in/2005/01/20.html**

**பாரா புரட்டிய நூல்கள்**

தற்கால இஸ்ரேல் பாலஸ்தீன பிரச்சனையைப் பற்றி மட்டுமே அவர் எழுதியிருந்தால், பிரச்சனையில்லை, ஆனால் பல நூற்றாண்டுகளுக்கு முன்பு நடந்து முடிந்த இஸ்லாமிய

சரித்திரத்தையும் அவர் தொட்டு எழுதியதால், அவர் படித்த சரித்திர நூல்கள் எவை என்று பார்க்கவேண்டியுள்ளது.

அவரது 20வது அத்தியாயத்தில் சொல்லப்பட்ட விவரங்கள் சரித்திரத்திலிருந்து வந்தவைகள் அல்ல. தற்கால முஸ்லிம்கள் சத்திரத்தில் உட்கார்ந்துக்கொண்டு எழுதிய நூல்களிலிருந்து வந்தவைகள் என்பது போல தெரிகிறது.

பாரா அவர்கள் கடைசியாக தம்முடைய தொடர்களை முடித்த போது, தாம் படித்து (ஆய்வு செய்த) கற்றுக்கொண்ட புத்தகங்களின் பட்டியலை கொடுத்திருக்கிறார். அப்புத்தக பட்டியலை ஆவலாக நான் தேடிப்பார்த்த போது, ஒரு பெருத்த ஏமாற்றம் மிஞ்சியது. கீழ்கண்ட நூல்கள் தவிர இதர செய்திகளையும், குறுஞ்செய்திகளையும், இந்த ஆய்விற்காக படித்து கற்றுக்கொண்டதாக அவர் கூறுகிறார். ஆனால், அவைகளில் இந்த பட்டியலில் உள்ள நூல்கள் முக்கியமானவைகளாகும்.

பாரா அவர்களுக்கு நிலமெல்லாம் இரத்தம் புத்தகம் எழுத உதவிய நூல்களின் பட்டியல்:

**உதவிய நூல்களின் பட்டியல்:**


1. பரிசுத்த வேதாகமம் (பைபிள் சொஸைடி ஆஃப் இந்தியா வெளியீடு)

2. **The Holy Qur - An - English Translation of the Meanings and commentary - The Presidency of Islamic Researches, IFTA, Soudi Arabia** வெளியீடு.

3. **'The 5000 Year History of the Jewish People and Their Faith.** (மார்ட்டின் கில்பர்ட், **Phoenix** வெளியீடு)

4. **A Historey of the Middle East - Peter Mansfield,** பெங்குயின் வெளியீடு.

5. **The Politics of Dispossession - Edward Said**

6. **Peace and its Discontents - Edward Said**

7. **Muhammad: His life based on the earliest sources - Martin Lings**

8. ரஹீக், ஸஃபிய்யுர் ரஹ்மான் (மொழிபெயர்ப்பு: ஏ. ஓமர் ஷெரீஃப், தாருல் ஹுதா, சென்னை 1 வெளியீடு.)

9. **O, Jerusalem - Larry Collins, Dominique Lapierre**

10. **The Middle East : Yesterday and Today - Edited by David W. Miller, Clark D. Moore (Bantom Books)**

11. **Umar The Great - Allamah Shibli Nu'mani (Muhammad Ashraf, Pakistan)**

12. மத்தியக் கிழக்கின் சிறப்பு வரலாறு - அ. உஸ்மான் ஷெரீப், தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்

13. **Israel and the Arabs - Israel Communications, Jerusalem**

**14. 90 Minutes at Entebbe, William Stevenson (Bantam Books, New York)**

**15.** நபிகள் நாயகம், அப்துற் றஹீம் (யூனிவர்ஸல் பப்ளிஷர்ஸ், சென்னை)

**16.** இஸ்லாம் ஓர் எளிய அறிமுகம் - நாகூர் ரூமி (கிழக்கு பதிப்பகம், சென்னை)

**17.** ஃபலஸ்தீன முஸ்லிம்கள் அகதிகளான வரலாறு, மு. குலாம் முஹம்மது (இலக்கியச் சோலை, சென்னை 600 003)

**18.** பாலஸ்தீன வரலாறு (பாகம் 1), எம்.ஹெச். ஜவாஹிருல்லாஹ் (புத்தொளிப்பதிப்பகம், சென்னை 600 001)

**19. Cross Roads to Israel, Christopher Sykes (collins, UK)**

**20. State of Palestine, Esam Shashaa**

**21. Palestine Refugees, Esam Shashaa**

**22. In the arms of a Father, Haneen al - Far**

**23. UN Report, Intifada, United Nations Publication**

**24. Ancient History of Palestine, Abu Sharar**

மூலத்தொடுப்பு: **<u>நிலமெல்லாம் ரத்தம் - நிறைவுரை</u>**

**இந்த பட்டியல் தெரிவிக்கும் உண்மைகள் என்ன?**

இந்த பட்டியலைக் கண்டவுடன் எனக்கு ஆச்சரியமாக இருந்தது. இஸ்லாமிய சரித்திரத்தை எழுதியுள்ளார், ஆனால், முக்கியமான புத்தகங்களை விட்டுவிட்டாரே, அதனால் தான் அவரது நிலமெல்லாம் இரத்தம் புத்தகத்தில் உண்மைக்கு பற்றாக்குறை வந்துவிட்டது என்பது புரிந்தது.

இந்த பட்டியலை சிறிது ஆய்வு செய்வோம்.

**1) இஸ்லாம் பற்றி எழுதுயிருக்கிறீர்கள், பட்டியலில் தமிழ் குர்-ஆன் எங்கே?**

பாரா அவர்களுக்கு உதவிய மேற்கண்ட நூல்களைப் பாருங்கள் ஒரு விஷயம் பளிச்சென்று தெரியும். கண்டுபிடித்தீர்களா? ஆம், தமிழ் குர்-ஆன் இல்லை. ஆங்கில குர்-ஆன் உள்ளதல்லவா என்று வாசகர்கள் கேட்கலாம். ஆனால், தமிழில் 100 தொடர்களை எழுதியவருக்கு குறைந்தபட்சம், தமிழில் குர்-ஆனை படிக்கவேண்டும் என்ற ஆர்வம் இருந்திருக்காதா? இஸ்லாமிய பெயர்களை, குர்-ஆன் அத்தியாயப் பெயர்களை சரி பார்க்க அவரிடம் ஒரு தமிழ் குர்-ஆன் இருந்திருக்கவேண்டுமல்லவா?

தமிழில் குர்-ஆனை படிக்காமலா, குர்-ஆனைப் பற்றி ஆஹா, ஓஹோ என்று எழுதினார்? சில இடங்களில் குர்-ஆன் வசனங்களையும் குறிப்பிட்டுள்ளாரே, ஆங்கில குர்-ஆனை பார்த்தா அந்த வசனங்களை எழுதினார்?

இஸ்லாம் பற்றிய ஒரு மிகப்பெரிய நல்ல விமர்சனத்தை தமிழ் மக்களுக்காக, தமிழில் முன்வைத்த இவர் தமிழில் குர்-ஆனை படிக்காதது ஆச்சரியமே! வாழ்க பாராவின் ஆய்வு.

[தமிழில் குர்-ஆனை படிக்காத இவருக்கு, பிறகு எப்படி குர்-ஆன் விவரங்கள் கிடைத்தது? என்ற சந்தேகம் சிலருக்கு எழலாம். முஸ்லிம்கள் எழுதிய இதர புத்தகங்களை படித்தார் அல்லவா! அது போதாதா இவருக்கு இஸ்லாமின் சரித்திரம் பற்றி எழுத!]

**2) புகாரி முஸ்லிம் போன்ற ஹதிஸ்களின் தொகுப்பு எங்கே?**

குர்-ஆன் இஸ்லாமுக்கு உடல் என்றால், ஹதீஸ்கள் இஸ்லாமின் உயிர் ஆகும். ஹதீஸ்கள் இல்லாமல், முஹம்மது என்பவர் யார் என்று நாலு வரிகளில் முஸ்லிம்களால் விவரிக்க முடியாது. பாரா அவர்கள் புரட்டிய நூல்களைப் பாருங்கள், ஹதீஸ்களின் தொகுப்புக்கள் உள்ளனவா?

இஸ்லாமின் சரித்திரத்தை தொட்டு எழுதும் போது, முஹம்மதுவைப் பற்றிய முக்கியமான விவரங்களை புத்தகமாக எழுதும் போது, ஹதீஸ்களை படிக்கவேண்டும் என்ற கட்டாயம் உள்ளதா என்று கேட்டால்? இந்த கேள்வியை முஸ்லிம்களிடம் கேட்டுப் பாருங்கள். ஹதீஸ்கள் இல்லாமல் இஸ்லாம் இல்லை. ஹதீஸ்களில் உள்ளவைகள் தான் உண்மையான சரித்திர விவரங்கள், மனிதன் எழுதும் புத்தகங்கள் அல்ல என்று முஸ்லிம்கள் நம்புகிறார்கள். ஹதீஸிகள் கூட அல்லாஹ்வின் வஹியாகும்.

பாரா அவர்களின் பட்டியலில் ஒரு ஹதீஸின் பெயரையும் நான் பார்க்காத போது, எனக்கு ஒரு மாதிரியாக ஆகிவிட்டது. குறைந்த பட்சம் தான் தொடும் தலைப்புக்கள் பற்றி ஹதீஸ்கள் என்ன சொல்கிறன என்பதை அறியாத இவருக்கா நான் பதில்களை எழுதிக்கொண்டு இருக்கிறேன் என்று என் மீதே எனக்கு கோபம் வந்துவிட்டது. இதனால் தான் பாரா அவர்கள் கீழ்கண்டவாறு தம்முடைய 17வது அத்தியாயத்தில் எழுதியுள்ளார்:

**17) உமரின் மனமாற்றம்**

> *// நிலமெல்லாம் ரத்தம் - பா. ராகவன் 17*
>
> *ஆயிரக்கணக்கான பக்கங்கள் உள்ள குர்ஆன், பல்லாயிரக்கணக்கான பக்கங்கள் வரும் ஹதீஸ்கள் (முகம்மது நபியின் வாழ்க்கையில் நடைபெற்ற சம்பவங்களும் அவரது போதனைகளும் அடங்கிய பிரதிகளுக்கு ஹதீஸ் என்று பெயர். சிலர் ஹதீத் என்றும் இதனை அழைப்பார்கள்.* ***குர்ஆனையும் ஹதீஸையும் போட்டுக் குழப்பிக்கொள்ளக் கூடாது. குர் ஆன் என்பது இறைவனால் அருளப்பட்டது. ஹதீஸ், முகம்மது நபியினுடையது.****), //*

குர்-ஆனையும் ஹதீஸையும் சேர்த்தால் குழப்பம் வரும் என்பதால், இவரே அவைகளை படிக்கவில்லை என்று தெரிகிறது! என்னே ஆய்வு! அதனால் தான் தனக்கு உதவிய நூல்களின் பட்டியலில் "தமிழ் குர்-ஆனையும், ஹதீஸ்களையும்" ஒதுக்கிவிட்டார் என்று தெரிகிறது. மேற்கண்ட வரிகளில் அவர் "ஹதீஸ் முகம்மது நபியினுடையது" என்று எழுதியதிலிருந்தே, பாரா இஸ்லாமில் அரைகுறை என்று தெள்ளத்தெளிவாக தெரிகிறது.

வாசகர்கள் கவனத்துக்கு: யாராவது இஸ்லாம் பற்றி புத்தகம் எழுதினாலோ, அல்லது உங்களிடம் பேசினாலோ, அவருக்கு ஹதீஸ்கள் பற்றி ஒன்றுமே தெரியவில்லை என்று உங்களுக்கு புரிந்தால், அதற்கு மேல் அவரிடம் பேசுவது வீணாகும். ஒரு நயா பைசாவிற்கு

பயன்படாத பேச்சாகவே அது இருக்கும். இதிலிருந்து பாரா அவர்களின் இஸ்லாமிய அறிவு மூல நூல்களிலிருந்து வந்தவைகள் அல்ல என்று தெரிகிறது.

**3) ஆரம்ப கால இஸ்லாமிய சரித்திர நூல்கள், விரிவுரைகள் எங்கே?**

இஸ்லாமின் சரித்திரம் பற்றி எழுதுபவர்கள் முக்கியமாக ஆரம்ப கால முஸ்லிம்கள் எழுதிய சரித்திர நூல்களையும், விரிவுரைகளையும் படிக்கவேண்டும். இவைகளை படிக்காதவர்கள் சொல்லும் விவரங்கள் அனைத்திலும் உண்மை சரித்திரம் இருக்காது.

ஒரு நபர் இஸ்லாமிய ஆரம்ப கால சரித்திர நூல்களை படிக்காமல், தற்காலத்தில் முஸ்லிம்கள் எழுதிய புத்தகங்களை மட்டுமே படித்தால், அவரிடம் உண்மையான சரித்திரத்தை எதிர்ப்பார்க்கமுடியாது. பாரா அவர்களின் பட்டியலில் இஸ்லாமின் ஆரம்பகால முஸ்லிம்கள் எழுதிய சரித்திர நூல்களின் பெயர்கள் இல்லை. எனவே, அவர் சொல்வதில் எவ்வளவு கிலோ உண்மை இருக்கும்?

**ஆரம்ப கால முஸ்லிம்கள் எழுதிய முஹம்மதுவின் வாழ்க்கை சரித்திர புத்தகங்களில் சில:**

**1) Ibn Ishaq, "Sirat Rasulallah" The most authentic biography of Muhammad extant today. Translated as, "The Life of Muhammad" by A. Guillaume.**

**2) Ibn Sa'd, "Kitab al-Tabaqat al-Kabir", "Book of the Major Classes".**

**3) Tabari's History, 39 volumes.**

இந்த பட்டியலிலிருந்து ஒரு புத்தகமாவது பாராவின் நூல்களின் பட்டியலில் இருந்திருக்கவேண்டும். இன்னும் குர்-ஆன் விளக்கவுரைகளில் இப்னு கதீர் போன்ற ஒரு விளக்கவுரையாவது பட்டியலில் இருந்திருக்கவேண்டும்.

பாரா இஸ்லாமிய சரித்திரத்தை எழுதவில்லை, அவர் இன்று நடந்துக்கொண்டு இருக்கின்ற இஸ்ரேல் பாலஸ்தீன பிரச்சனைப் பற்றித் தான் எழுதினார் என்று யாராவது சொல்லக்கூடும். அப்படி அவர் எழுதுவதாக இருந்திருந்தால், 1947க்கு பிறகு என்ன நடந்தது என்று எழுத ஆரம்பித்து இருந்திருக்க வேண்டும், அவர் கி.மு. 2000 காலத்துக்குச் சென்று ஆபிரகாம் முதல் கொண்டு எழுதியிருந்திருக்கக்கூடாது. கி.பி. 7ம் நூற்றாண்டிற்குச் சென்று முஹம்மது பற்றி, குர்-ஆன் பற்றி எழுதி இருந்திருக்கக்கூடாது.

பாரா அவர்கள் குர்-ஆன், ஹதீஸ்கள், மற்றும் ஆரம்ப கால இஸ்லாமிய சரித்திர நூல்கள் மற்றும் விளக்கவுரைகளை கரைத்துகுடித்து இருந்திருக்கவேண்டும் என்றுச் சொல்லவில்லை. இஸ்லாமிய சரித்திரத்தின் குறைந்தபட்ச உண்மையை சரி பார்க்க இப்புத்தகங்கள் தேவைப்படுகின்றன என்றுச் சொல்கிறேன்.

**4) உண்மையில் பட்டியலில் இருப்பது என்ன?**

மேற்கண்ட பட்டியலில் இஸ்லாமை சரியான வகையில் அறிந்துக்கொள்ள உதவும் புத்தகங்கள் இல்லை. இஸ்லாமின் ஆரம்பகால சரித்திரத்தைச் சொல்லும் புத்தகங்கள் இல்லை.

**அந்த பட்டியலில் நாம் காண்பது:**

- **50%க்கும் அதிகமான புத்தகங்கள் முஸ்லிம்கள் எழுதியவைகள்.**
- **இதர புத்தகங்கள் 20-21ம் நூற்றாண்டில் வாழ்ந்த ஆசிரியர்கள் எழுதியவைகள் ஆகும். கிட்டத்தட்ட 1947க்கு பிறகு எழுதப்பட்ட புத்தகங்கள் ஆகும். அமேஜான், கூகுள் புக்ஸ் மற்றும் விக்கிபீடியாவில் இவர்களைப் பற்றிய குறிப்புக்கள் உள்ளன.**

**1947க்கு பிறகு முஸ்லிம்கள் ''இஸ்ரேல்-பாலஸ்தீனம்'' பற்றி எழுதினால் ''என்ன எழுதுவார்கள்'' என்று நமக்குத் தெரியாதா? அவைகளை படித்து, இஸ்லாம் சரித்திரத்தை தொட்டதால் தான் பாரா இப்படிப்பட்ட பல தவறுகளை தம் புத்தகத்தில் எழுதவேண்டி இருந்திருக்கின்றது.**

**அடிப்படை மூல நூல்களை படிப்பதை விட்டுவிட்டு, நூற்றுக்கணக்கான இதர நூல்களை, குறுஞ்செய்திகளை நான் படித்து இதனை எழுதினேன் என்றுச் சொல்வதில் அர்த்தமில்லை.**

### 5) நாகூர் ரூமியும் - நிலமெல்லாம் இரத்தமும்

**பாரா அவர்கள் முஸ்லிமுமில்லை கிறிஸ்தவருமில்லை. அவருக்கு பாரதம் தெரியும் பாஷா பாய் படிக்கும் குர்-ஆன் தெரியுமா? அவருக்கு பகவத்கீதை தெரியும், ஆனால் பைபிளின் சங்கீதம் தெரியுமா? நிச்சயமாக இல்லை. ஆகையால் இஸ்லாம் மற்றும் யூத கிறிஸ்தவம் பற்றிய நுணுக்கமான சரித்திரங்கள் பற்றி எழுதும் போது ஒரு இஸ்லாமிய அறிஞரின் உதவியும், ஒரு கிறிஸ்தவ அறிஞரின் உதவியும் அவருக்கு தேவை. இப்படி அவருக்கு யாராவது உதவினார்களா? என்று தேடியபோது, அவருடைய முடிவுரைத் தொடரில், அவருக்கு உதவி செய்த ஒரு இஸ்லாமிய அறிஞர் பற்றி எழுதியிருப்பதைக் கண்டேன் (ஆனால், பாரா அவர்கள் ஒரு கிறிஸ்தவ அல்லது யூத அறிஞரின் உதவியை நாடவில்லை என்பது அந்த முடிவுரையை படிக்கும் போது தெரிகிறது, இதில் நியாயம் இல்லாமல் இல்லை. ஒருவருக்கு எதிராக எழுதும் போது, அதனை சரி பார்க்க அவரிடமே கொடுக்கமுடியுமா என்ன?)**

**பாரா அவர்கள் நாகூர் ரூமி அவர்களுக்குச் சொன்ன நன்றி:**

> *// நிலமெல்லாம் ரத்தம் தொடரை எழுத ஆரம்பித்ததிலிருந்து,* ***அத்தியாயம் தோறும் இதன் தகவல்களைச் சரிபார்த்து, உரிய திருத்தங்கள் செய்துதந்ததோடு*** *மட்டுமல்லாமல், எனக்கு மிகவும் தேவைப்பட்ட பல அபூர்வமான நூல்களையும் அளித்து உதவியவர் பேராசிரியர், எழுத்தாளர் நாகூர் ரூமி. (மஸ்ஹரூல் உலூம் கல்லூரி, ஆம்பூர்.)* ***இந்தத் தொடருக்காக அவருக்குப் பல தூக்கமில்லாத இரவுகளை வழங்கியிருக்கிறேன்.*** *பொறுமையுடன் உதவிகள் புரிந்த அவருக்கு என் நன்றி. //*

**இதனை படித்து நான் மகிழ்ந்தேன், மேலும் திரு நாகூர் ரூமி அவர்களின் புத்தகத்தையும் பாரா அவர்கள் 'உதவிய நூல்களின் பட்டியலில்' குறிப்பிட்டுள்ளார் [16. இஸ்லாம் ஓர் எளிய அறிமுகம் - நாகூர் ரூமி (கிழக்கு பதிப்பகம், சென்னை]). இந்த புத்தகத்தை கிழக்கு பதிப்பகம் பதித்ததுள்ளது என்பது ஒரு சிறிய குறிப்பு.**

**ஆக, ஒரு இஸ்லாமிய அறிஞரின் உதவி பாரா அவர்களுக்கு கிடைத்துள்ளது மிக்க மகிழ்ச்சி தரும் விவரம்.**

**திரு நாகூர் ரூமி அவர்களுக்கு கேள்விகள்:**

அருமையான இஸ்லாமிய அறிஞரே, பாரா அவர்களின் 20வது அத்தியாயத்தை நீங்கள் சரி பார்த்தீர்களா? நீங்கள் ஒவ்வொரு அத்தியாயத்தையும் சரி பார்த்ததாக அவர் மேலே கூறியுள்ளாரே! நீங்கள் உங்கள் வேலையை சரியாகச் செய்தீர்களா? இல்லையா?

20வது அத்தியாயத்தில் குர்-ஆனும், ஹதீஸ்களும் பொய்யானவை என்று சொல்லும் விதத்தில், ''உண்மையான இஸ்லாமிய சரித்திரத்தின் படி மூன்றே போர்கள் தான் நடந்தது'' என்று பாரா அவர்கள் குறிப்பிட்டுள்ளாரே! நீங்கள் இதனை சரி பார்க்கவில்லையா? உங்களை நம்பி அவர் மாட்டிக்கொண்டாரே! இது உங்களுக்கு அடுக்குமா? நம்ப வைத்து கழுத்தை அறுத்துவிட்டீரே!

இஸ்லாம் ஒரு எளிய அறிமுகம் என்ற புத்தகத்தையும் நீங்கள் எழுதி வெளியிட்டுள்ளீர்கள், ஆனால் இஸ்லாமையும் பாராவையும் இப்படி கோர்த்துவிட்டீர்களே! உங்களுக்கு பல தூக்கமில்லா இரவுகளை பாரா அவர்கள் கொடுத்ததாகச் சொல்கிறாரே! நீங்கள் தூங்காமல் அவரது அத்தியாயங்களை வைத்துக்கொண்டு அப்படி என்னதான் செய்தீர்கள்? அவரது அத்தியாயங்களை படித்துக்கொண்டே தூங்கிவிட்டீர்களா? [பாரா அவர்களுக்கு ஒரு வேண்டுகோள்: இனி யாருக்காவது அத்தியாயங்களை சரி பார்க்க அனுப்பும் போது, பகல் நேரத்தில் சரி பாருங்கள் என்று கேட்டுக் கொள்ளுங்கள், பிளீஸ்].

பாவம் பாரா! ''ஒன்று! ஆரம்பத்திலேயே அவர் சரியாக எழுதவேண்டும், இல்லையென்றால் சரியாக சரிபார்ப்பவரிடம் சரிபார்த்துக் கொள்ளவேண்டும்'', இரண்டும் இல்லாமல் பாரா படும் பாடு உள்ளதே! யாரிடம் சொல்ல?

**முடிவுரை:**

பாரா அவர்களின் அனைத்து தொடர்களையும் படித்துவிட்டு, அதன் பிறகு ''உதவிய நூல்கள்'' பட்டியலுக்கு வரலாம் என்று எண்ணியிருந்தேன். ஆனால், நிலமெல்லாம் இரத்தம் 20வது அத்தியாயம் அதனை இப்போதே செய்யச் செய்துவிட்டது. இதுவரை நாம் பார்த்தது தான் பாரா அவர்களின் ஆய்வின் இலட்சனம் (20 அத்தியாயங்கள் தான் இதுவரை நான் ஆய்வு செய்துள்ளேன்). இந்த இலட்சனத்தில் அவர் மேற்கத்திய ஆய்வாளர்களை விமர்சிக்கிறார் [அவர் எங்கே விமர்சித்தார்? முஸ்லிம்கள் எழுதிக் கொடுத்ததை தானே அவர் எழுதினார்! என்பது வேறு விஷயம்].

அடுத்தடுத்த கட்டுரைகளில், அவரது 20வது அத்தியாயத்தின் ஒவ்வொரு 'பாரா'வையும் நாம் ஆராயப்போகிறோம். மேலும் இந்த அத்தியாயம் எப்படி குர்-ஆனையும், ஹதீஸ்களையும் குற்றப்படுத்துகிறது என்பதையும் பார்ப்போம்.



# 26) முஹம்மது எத்தனை போர்கள் புரிந்தார் என்று அல்லாஹ்வை விட பாரா நன்கு அறிவார்

பாரா அவர்களின் நிலமெல்லாம் இரத்தம் புத்தகத்தின் 20ம் அத்தியாயத்திற்கு அறிமுக பதில்களாக மேற்கண்ட இரண்டு கட்டுரைகள் பதிக்கப்பட்டது. தற்போதைய கட்டுரையில் பாரா அவர்கள், 20ம் அத்தியாயத்தில் எழுதிய விவரங்கள் எப்படி குர்-ஆனுக்கு முரண்படுகின்றது என்பதை சுருக்கமாக காண்போம்.

**கட்டுரையின் தலைப்புக்கள்:**

1) பாராவின் படி முஹம்மது செய்த மொத்த யுத்தங்கள் எத்தனை?

2) குர்-ஆனின் படி முஹம்மது செய்த யுத்தங்கள் எத்தனை?

3) பாரா அல்லது அல்லாஹ் - யார் உண்மையைச் சொல்கிறார்கள்?

4) முடிவுரை

---

**1) பாராவின் படி முஹம்மது செய்த மொத்த யுத்தங்கள் எத்தனை?**

இந்த கேள்விக்கு பதில் கொடுப்பதில், உலக முஸ்லிம்களை விட பா. ராகவன் அவர்கள் மிகவும் தெளிவாக இருக்கிறார்கள். பாரா ஒரே அடியாக அடித்துச் சொல்கிறார், முஹம்மதுவின் காலத்தில் அவர் மரணிப்பதற்கு முன்பு செய்த யுத்தங்கள் வெறும் மூன்று தான். இதை யாராவது மறுத்தால் அவன் பொய்யன், அவன் யூதன் என்று குற்றஞ்சாட்டுகிறார். ஏனென்றால் யூதன் பொய் சொல்லுவான் என்று பாராவிற்கும் நன்கு தெரிந்திருக்கிறது (கி.பி. 7ம் நூற்றாண்டில் பல யூதர்கள் வாழ்ந்த மதினாவின் ஒரு முக்கியமான தெருவில் தான் பாராவும் வாழ்ந்திருக்கிறார் என்பது போல, வெட்டு ஒன்று துண்டு இரண்டு போல, கச்சிதமாக சொல்கிறார் பாரா).

போங்கையா! மூன்றே போர்கள் தான் நடந்துள்ளது என்று பாரா 20ம் அத்தியாயத்தில் எவ்வளவு அழுத்தம் திருத்தமாகச் சொல்கிறார் என்பதைப் பாருங்கள்.

**பாரா அவர்கள் எழுதியவை:**

*// பா.ராகவன் - நிலமெல்லாம் இரத்தம்*

*அத்தியாயம் 20 - இஸ்லாம் வாள்முனையில் பரவியதா?*

*மூலம்:* nilamellam.blogspot.in*/2005/01/20.*html

*. . . மாறாக, ஒட்டுமொத்த மத்திய ஆசியாவிலும் மிகக்குறுகிய காலத்தில் செல்வாக்குப் பெற்று, முகம்மது நபியின் மறைவுக்குப் பின்* ***மிகச்சில ஆண்டுகளிலேயே ஐரோப்பாவுக்கும் கிழக்காசியாவுக்கும் பரவி****, உலகின் இரண்டாவது பெரிய மதமாக இஸ்லாம் காலூன்றி நிற்க முடிந்திருக்கிறதென்றால், அது எவ்வாறு பரவியது என்பதைத் தெரிந்துகொள்வது மிகவும் அவசியமானது.*

இதை ஆராய்வதற்கு முதல் தடையாக இருப்பது, "அது அச்சுறுத்தலால் பரப்பப்பட்ட மதம்" என்கிற முன் அபிப்பிராயம், அல்லது முன் முடிவு அல்லது முன் தீர்மானம். இந்த முன் தீர்மானம் அல்லது முன் அபிப்பிராயத்தை இஸ்லாத்தைக் காட்டிலும் வேகமாகப் பரப்பி வேரூன்றச் செய்தவர்கள் **மேற்கத்திய சரித்திர ஆசிரியர்கள். பெரும்பாலும் யூதர்கள். சிறுபான்மை கிறிஸ்துவ சரித்திர ஆய்வாளர்கள்.**

மிகவும் அற்பமானதொரு உதாரணத்தை மட்டும் பார்க்கலாம். முகம்மது நபியின் காலத்தில் இஸ்லாத்தை முன்னிட்டு **மொத்தம் சுமார் எழுபத்தைந்து அல்லது எண்பது யுத்தங்கள் நிகழ்த்தப்பட்டதாக அனைத்து மேற்கத்திய சரித்திர ஆய்வாளர்களும் சொல்கிறார்கள்.** அத்தனை யுத்தங்களிலும் ரத்த ஆறு பெருகியதென்றும் யுத்தக் கைதிகளை வாள்முனையில் மிரட்டி இஸ்லாத்தில் இணைத்ததாகவும் ஏராளமான சம்பவங்களை இந்தச் சரித்திர ஆய்வாளர்கள் பட்டியலிடுகிறார்கள்.

உண்மையில் முகம்மது நபியின் காலத்தில் நடைபெற்ற யுத்தங்களாக ஆதாரங்களுடன் கிடைப்பது **மொத்தம் மூன்றுதான். பத்ரு, உஹைத், ஹுனைன் என்கிற மூன்று இடங்களில் முஸ்லிம்கள்** நேரடியாக யுத்தத்தில் ஈடுபட்டிருக்கிறார்கள். இஸ்லாம் குறித்து அல்லாமல், முகம்மது நபியின் வாழ்க்கை குறித்து ஆராய்ச்சி செய்திருக்கும் மேற்கத்திய ஆய்வாளர்களின் நூல்களில் இந்த யுத்தங்கள் பற்றிய குறிப்புகள் இருக்கின்றன. உண்மையில் எண்பது யுத்தங்கள் அவர் காலத்தில் நடந்திருக்குமானால், இந்த வாழ்க்கை வரலாற்றாசிரியர்கள் அவற்றையும் அவசியம் பதிவு செய்திருப்பார்கள். மாறாக, மேற்சொன்ன மூன்று யுத்தங்கள் பற்றி மட்டுமே அவர்கள் பேசுகிறார்கள்.

இதைக்கொண்டே, இஸ்லாத்தை முன்னிட்டு **முகம்மது நபியின் காலத்தில் நிகழ்த்தப்பட்ட யுத்தங்கள் மூன்றுதான் என்கிற முடிவுக்கு** வரவேண்டியதாகிறது.

ஆக, முகம்மது நபியின் காலத்தில் யுத்தங்களின் மூலம் இஸ்லாம் பரப்பப்படவில்லை என்கிற முடிவுக்கே வரவேண்டியதாகிறது. **ஆதாரங்களுடன் உள்ள மூன்று யுத்தங்கள் கூட** ஒரே தினத்தில் ஆரம்பித்து, நடந்து, முடிந்தவையாகவே இருக்கின்றன. அதாவது, ஒருநாள் கலவரம்.

கட்டக்கடைசி வினாடி வரை அவர் யுத்தங்களைத் தவிர்ப்பதற்கான முயற்சிகளையே மேற்கொண்டிருப்பதாகச் சரித்திரம் சுட்டிக்காட்டுகிறது. **தவிர்க்கவே முடியாத மூன்று சந்தர்ப்பங்களில்தான் முகம்மது, யுத்தத்துக்கான உத்தரவு அளித்திருக்கிறார். //**

பாரா அவர்கள் மேற்கண்ட வரிகளில் தெளிவாகவும், மிகவும் நம்பிக்கையாகவும் எழுதுகிறார் "ஆதாரங்களுடன் கிடைத்திருப்பது மூன்று யுத்தங்கள் தான், அவைகள்: பத்ரு, உஹைத், மற்றும் ஹுனைன்". இதற்கு மேலே யாராவது எண்ணிக்கையை உயர்த்தினால், அது ஆதாரமற்ற விவரமாகும். வாசகர்கள் இந்த விவரத்தை மனதில் வைத்துக்கொள்ளுங்கள்.

### 2) குர்-ஆனின் படி முஹம்மது செய்த யுத்தங்கள் எத்தனை?

இப்போது நாம் என்ன செய்யப்போகிறோம் என்றால், பாரா அவர்கள் சொன்னது குர்-ஆனோடு ஒத்துப்போகிறதா? இல்லையா? என்பதை பார்க்கப் போகிறோம்.

பாரா சொன்னதுபோல, மூன்றை விட ஒரே ஒரு யுத்தம் பற்றி அதிகமாக குர்-ஆன் சொல்லியிருந்தால், என்ன செய்யலாம் என்று பாரா அவர்களிடமே கேட்போம். அவர் தனக்கு இஸ்லாமை கற்றுக்கொடுத்த முஸ்லிம் அறிஞரிடம் கேட்டு பதில் சொல்லுவார்,

சொல்லவேண்டும். ஏனென்றால், முஸ்லிம்களின் நம்பிக்கையின் படி, குர்-ஆன் தான் உண்மையான சரித்திரம், குர்-ஆனில் சொல்லப்பட்டவைகளில் ஒரு வரி, ஒரு எழுத்து கூட பொய்யாகாது.

**பாரா அவர்கள் குறிப்பிட்டது மூன்று போர்கள் - பத்ரு, உஹைத், மற்றும் ஹுனைன்**

முதலாவதாக, இந்த போர்கள் பற்றி குர்-ஆன் ஏதாவது குறிப்பிடுகிறதா என்று பார்ப்போம். அதன் பிறகு வேறு ஏதாவது போர் பற்றி குர்-ஆன் குறிப்பிடுகின்றதா என்பதை ஆய்வு செய்வோம்.

| போரின் பெயர் | குர்-ஆன் வசனங்கள் | இதர விளக்கங்கள் |
|---|---|---|
| பத்ரு | 3:13, 3:123 - 125 & 8வது அத்தியாயம் | பத்ரு போர் பற்றிய விவரங்கள் இவ்வசனங்களில் காணப்படுகின்றது. |
| உஹைத் | 3:121,122, 8:36 | இப்னு கதீர் தம் விளக்கவுரையில் குர்-ஆன் 8:36ம் வசனம் உஹுத் போர் பற்றி பேசுகிறது என்று விளக்கமளித்துள்ளார். (https://en.wikipedia.org/wiki/Battle_of_Uhud ) |
| ஹுனைன் | 9:25-26 | இவ்வசனங்களில் ஹுனைன் போர் பற்றி அல்லாஹ் சிறிய விளக்கமளிக்கின்றான். |

மேற்கண்ட குர்-ஆன் வசனங்களில், பாரா அவர்கள் குறிப்பிட்ட மூன்று போர்கள் பற்றி அல்லாஹ் சுட்டிக்காட்டுகின்றான். ஆனால், பாரா அவர்களின் ஆய்வின் படி மூன்றுக்கு மேல் ஒரு போர் கூட நடக்கவில்லை, அதில் முஹம்மது கலந்துக்கொள்ளவே இல்லை, அவர் தம் சகாக்களுக்கு கட்டளையிடவும் இல்லை. இது உண்மையா? வாருங்கள் மறுபடியும் குர்-ஆனில் தேடுவோம்.

**குர்-ஆனில் பதிவான இதர போர்கள்:**

| போரின் பெயர் | குர்-ஆன் வசனங்கள் | இதர விளக்கங்கள் |
|---|---|---|
| அகழ்ப்போர் | 33:9 - 33:27 | அகழ்ப்போர் பற்றி இவ்வசனங்கள் கூறுகின்றன. |
| கைபர் | 48:20 | இந்த வசனத்தில் கைபர் போர் பற்றி அல்லாஹ் பேசுகின்றான். கைபர் போர் - ta.wikipedia.org/s/5v82 |

இன்னும் ஏதாவது போர்கள் பற்றி குர்-ஆன் சொல்கின்றதா? என்று நான் தேடிப்பார்க்கவில்லை. நமக்கு இது போதும்.

**3) பாரா அல்லது அல்லாஹ் - யார் உண்மையைச் சொல்கிறார்கள்?**

பாராவும் குர்-ஆனில் பதிவாகியுள்ள அகழ்ப்போரும்:

இந்த கட்டுரையில் நான் குர்-ஆனிலிருந்து மட்டுமே போர்கள் பற்றிய விவரங்களை எடுத்துள்ளேன். ஹதீஸ்களிலிருந்தோ, இதர சரித்திர நூல்களிலிருந்தோ நான் விவரங்களை எடுக்கவில்லை.

**பாரா அவர்களிடம் கேட்கவேண்டியவைகள்:**

1) குர்-ஆன் அகழ்ப்போர் என்ற இன்னொரு போர் பற்றி பேசுகின்றது ( குர்-ஆன் அத்தியாயம் 33:9-27). உங்களின் ஆய்வின் படி, வெறும் மூன்றே மூன்று போர்கள் தான் நடந்தன, மேலும் முஹம்மது அவைகளில் மட்டுமே பங்கு பெற்றார். ஆனால், குர்-ஆனின் படி அகழ்ப்போரும் நான்காவதாக வருகிறது. இதற்கு உங்கள் பதில் என்ன? உங்களின் கட்டுரைகளை சரிபார்த்த நாகூர் ரூமி அவர்களின் பதில் என்ன? நீங்கள் சரியா அல்லது அல்லாஹ் சரியா?

2) உங்கள் ஆய்வின் படி, மூன்றுக்கு மேல் போர்களை முஹம்மது செய்தார் என்றுச் சொல்பவர்கள், யூதர்கள் ஆவார்கள் மேலும் அவர்கள் பொய்யர்கள் ஆவார்கள். ஆக, குர்-ஆனின் 33வது அத்தியாயம் யூதர்களின் கைவேலை என்றுச் சொல்வீர்களா?

3) போனஸுக்காக, கைபர் என்ற போர் பற்றிய ஒரு வசனத்தையும் சுட்டிக்காட்டியுள்ளேன். இதுவும் யூதர்களின் கைவேலையா?

4) தமிழ் முஸ்லிம்களுக்கு உங்கள் பதில் என்ன? என்னை மன்னித்துவிடுங்கள் நான் தவறு செய்துவிட்டேன் என்று மன்னிப்பு கோருவீர்களா? அல்லது நான் சொன்னது தான் உண்மை, குர்-ஆன் சொன்னது பொய் என்றுச் சொல்வீர்களா?

**தமிழ் முஸ்லிம்களுக்கு:**

தமிழ் முஸ்லிம்களே, ஒரு மாற்று மதக்காரர் இஸ்லாமுக்கு ஆதரவாக புத்தகம் எழுதினால், அதன் மீது ஆய்வு செய்யாமல், மேலோட்டமாக மேய்த்துவிட்டு, திருப்தியாக 'ஆஹா ஓஹோ' என்று பாராட்டுகிறீர்களே! இந்த கேள்விக்கு என்ன பதில் சொல்லப்போகிறீர்கள்?

நான் ஒரு அறிவுரை கூறட்டுமா? நீங்கள் நேராக பாரா அவர்களிடம் சென்று, 'அய்யா பாரா அவர்களே, உங்கள் புத்தகத்துக்கு நன்றி. ஆனால், இந்த 20வது அத்தியாயத்தை திருத்துங்கள், அதில் பிழைகள் உள்ளது, அதை மாற்றி எழுதி பதித்து விடுங்கள், அல்லது அதனை முழுவதுமாக நீக்கிவிடுங்கள். எங்கள் உயிரினும் மேலான முஹம்மது நபி அவர்கள் செய்த போர்கள் வெறும் மூன்று என்று நீங்கள் சொல்லி, குர்-ஆனுக்கு முரணாக எழுதிவிட்டீர்கள், இது எங்களுக்கு அவமானமாக இருக்கிறது. அடுத்த பதிப்பில் அதனை மாற்றிவிடுங்கள்' என்று ஒரு வேண்டுகோள் வையுங்கள். இந்த மாற்றத்தை செய்வேன் என்று அவர் ஒப்புக்கொள்ளும்படி மிகவும் தாழ்மையாக வேண்டிக்கொள்ளுங்கள் [ஒருவேளை அவர் திருத்துகிறேன் என்று ஒப்புக்கொண்டால், மூன்று போர்கள் என்ற இடத்தில் அவர் என்ன எண்ணை போடப்போகிறார்? என்று ஒரு முறை கேட்டுக்கொள்ளுங்கள். நீங்கள் வீட்டுக்கு போன பிறகு, அவர் மூன்று போர்கள் இல்லை, முஹம்மது செய்தது வெறும் ஐந்து போர்கள் என்று எழுதினால், மறுபடியும் நீங்கள் அவரது வீட்டுக்குச் செல்லவேண்டி வரும் என்பதை அவருக்கு தெரிவியுங்கள். ஆனால், உண்மையான எண்ணிக்கை யாருக்காவது தெரியுமா?]

### 4) முடிவுரை:

பாரா அடித்துச் சொன்னார் ''முஹம்மது செய்தது மூன்று போர்கள் தான் என்று'', ஆனால் குர்-ஆனோ 'போடா போடா புண்ணாக்கு போடாத தப்பு கணக்கு, அட கிறுக்கு உனக்கு இருக்கு இப்ப எண்ணாத மனக் கணக்கு' என்று நம்மைப் பார்த்துச் சொல்கிறது.

**இதில் யார் சொல்வது சரி? குர்-ஆனா? அல்லது பாராவா?**

''இதில் என்ன சந்தேகம், பாரா தான் தவறு செய்தார்'' என்று முஸ்லிம்கள் சொல்வார்கள், ஆனால் பாரா ஒப்புக்கொள்ளவேண்டுமே! அவருக்கு உதவிய நாகூர் ரூமி அவர்கள் ஒப்புக்கொள்ளவேண்டுமே!

அடுத்த கட்டுரையில், ஆதார பூர்வமான ஹதீஸ்களின் படி முஹம்மதுவின் காலத்தில் அவர் புரிந்த, அவர் கட்டளையிட்ட போர்கள் எத்தனை என்பதை பார்ப்போம். ஏற்கனவே, குர்-ஆனை படிக்காமல் எழுதிய பாவத்துக்காக பாரா மாட்டிக்கொண்டு முழிக்கிறார், இப்போது ஹதீஸையும் நாம் ஆய்வு செய்தால் முஸ்லிம்கள் கூட மாட்டிக்கொண்டு முழித்தாலும் முழிக்கலாம். ஆனால், அவர்கள் என்ன பாவம் செய்தார்கள் என்று மாட்டிக்கொண்டு முழிக்கவேண்டும்? அல்லாஹ் நோஸ் த பெஸ்ட்.

அடுத்த தொடரில் சந்திப்போம்.



# 27) இந்த ஒரே ஒரு ஹதீஸை பாரா அவர்கள் படித்திருந்தால்!

**முன்னுரை:**

பாரா அவர்கள் நிலமெல்லாம் இரத்தம் புத்தகத்தின் 20ம் அத்தியாயத்தில், முஸ்லிம்களையும் ஆச்சரியத்தில் ஆழ்த்தும் ஒரு விவரத்தை எழுதியுள்ளார். அது என்னவென்றால், ஆதாரபூர்வமான விவரங்களின் படி, முஹம்மது மொத்தம் செய்த யுத்தங்கள் மூன்று தான். மூன்றுக்கு மேலே யாராவது எண்ணிக்கையை உயர்த்திச் சொன்னால், அவன் பொய்யனாவான், அவன் யூதனாவான். ஏனென்றால், முஹம்மதுவின் மீதும், இஸ்லாமின் மீதும் அபாண்டமான பழியை சுமத்துவது யூதர்களின் வேலையாகும். இப்படி அவர் எழுதியுள்ளார்.

**முந்தைய கட்டுரையில்** பாராவின் இந்த கூற்று எப்படி குர்-ஆனை அவமானப்படுத்துகிறது என்பதை விளக்கினேன். மூன்றைவிட அதிகமான போர்களில் முஹம்மது ஈடுபட்டதாக குர்-ஆன் சொல்கிறது. இந்த கட்டுரையில், முஸ்லிம்கள் "**அல்லாஹ்வின் வஹி**" என்று கருதும் ஹதிஸ்களின் வெளிச்சத்தில், பாரா அவர்களின் மேற்கண்ட கூற்று எப்படி பொய்யாக நிரூபனமாகிறது என்பதை காண்போம். இதற்காக நான் ஒரே ஒரு ஹதீஸை மட்டுமே இக்கட்டுரையில் மேற்கோள் காட்டப்போகிறேன்.

### 1) பாரா அவர்களின் முத்தான மூன்று போர்கள்

பாரா அவர்களின் புத்தகத்திலிருந்து சில வரிகளை மட்டுமே இங்கு சுட்டிக்காட்ட விரும்புகிறேன். அவரது 20வது அத்தியாயத்தை படிக்க விரும்புகிறவர்கள், கீழே கொடுக்கப்பட்ட தொடுப்பை சொடுக்கி படித்துக்கொள்ளலாம்.

**பாரா அவர்கள் எழுதியவை:**

*// பா.ராகவன் - நிலமெல்லாம் இரத்தம்*

***அத்தியாயம் 20 - இஸ்லாம் வாள்முனையில் பரவியதா?***

*மூலம்:* nilamellam.blogspot.in*/2005/01/20*.html

*இதை ஆராய்வதற்கு முதல் தடையாக இருப்பது, "அது அச்சுறுத்தலால் பரப்பப்பட்ட மதம்" என்கிற முன் அபிப்பிராயம், அல்லது முன் முடிவு அல்லது முன் தீர்மானம். இந்த முன் தீர்மானம் அல்லது முன் அபிப்பிராயத்தை இஸ்லாத்தைக் காட்டிலும் வேகமாகப் பரப்பி வேரூன்றச் செய்தவர்கள்* ***மேற்கத்திய சரித்திர ஆசிரியர்கள். பெரும்பாலும் யூதர்கள். சிறுபான்மை கிறிஸ்துவ சரித்திர ஆய்வாளர்கள்.***

***உண்மையில் முகம்மது நபியின் காலத்தில் நடைபெற்ற யுத்தங்களாக ஆதாரங்களுடன் கிடைப்பது மொத்தம் மூன்றுதான். பத்ரு, உஹைத், ஹுனைன் என்கிற மூன்று இடங்களில் முஸ்லிம்கள் நேரடியாக யுத்தத்தில் ஈடுபட்டிருக்கிறார்கள்.*** *இஸ்லாம் குறித்து அல்லாமல், முகம்மது நபியின் வாழ்க்கை குறித்து ஆராய்ச்சி செய்திருக்கும் மேற்கத்திய ஆய்வாளர்களின் நூல்களில் இந்த யுத்தங்கள் பற்றிய குறிப்புகள் இருக்கின்றன. உண்மையில் எண்பது யுத்தங்கள் அவர் காலத்தில் நடந்திருக்குமானால், இந்த வாழ்க்கை வரலாற்றாசிரியர்கள் அவற்றையும் அவசியம் பதிவு செய்திருப்பார்கள். மாறாக, மேற்சொன்ன மூன்று யுத்தங்கள் பற்றி மட்டுமே அவர்கள் பேசுகிறார்கள்.*

*இதைக்கொண்டே, இஸ்லாத்தை முன்னிட்டு* ***முகம்மது நபியின் காலத்தில் நிகழ்த்தப்பட்ட யுத்தங்கள் மூன்றுதான் என்கிற முடிவுக்கு வரவேண்டியதாகிறது.***

*. . .* ***ஆதாரங்களுடன் உள்ள மூன்று யுத்தங்கள் கூட ஒரே தினத்தில்*** *ஆரம்பித்து, நடந்து, முடிந்தவையாகவே இருக்கின்றன. அதாவது, ஒருநாள் கலவரம்.*

*கட்டக்கடைசி வினாடி வரை அவர் யுத்தங்களைத் தவிர்ப்பதற்கான முயற்சிகளையே மேற்கொண்டிருப்பதாகச் சரித்திரம் சுட்டிக்காட்டுகிறது.* ***தவிர்க்கவே முடியாத மூன்று சந்தர்ப்பங்களில்*** *தான் முகம்மது, யுத்தத்துக்கான உத்தரவு அளித்திருக்கிறார். //*

நன்றாக கவனியுங்கள், பாராவின் ஆய்வின் படி ''ஆதாரங்களுடன் கிடைத்திருப்பது மூன்று யுத்தங்கள் தான்''. யாராவது வேறு எண்ணிக்கையைச் சொன்னால், அது ஆதாரமற்ற பொய்யான செய்தியாகும்.

**2) ஹதீஸ்கள் சொல்லும் உண்மை என்ன?**

குர்-ஆனுக்கு அடுத்தபடியாக, புகாரி மற்றும் முஸ்லிம் ஹதீஸ்கள் நம்பகமானது என்று முஸ்லிம்கள் கருதுகிறார்கள். இந்த ஹதீஸ்கள் இல்லையென்றால், ஒரு முஸ்லிம் ஒரு முஸ்லிமாக வாழமுடியாது, சரியாகச் சொல்லவேண்டுமென்றால், குர்-ஆனை மட்டுமே வைத்துக்கொண்டு ஒரு முஸ்லிமினால் **50%** முஸ்லிமாக கூட வாழமுடியாது. ஒருவன் முஸ்லிமாக மாறும் நாளில் சொல்லும் ''விசுவாச பிரமாணம் - ஷஹதா'' சொல்வதிலிருந்து அவன் மரிக்கும் வரைக்கும் நடக்கும் அனைத்தும் ஹதிஸ்களில் கிடைக்கிறது. மேலும், அவன் அனுதினமும் செய்கின்ற பெரும்பான்மையான ஆசாரங்கள், தொழுகை செய்யும் முறைகள் அனைத்தும் ஹதீஸ்களிலிருந்து வருகின்றன.

**முஹம்மது அவர்கள் பங்கு பெற்றது 19 போர்களில்:**

புகாரி மற்றும் முஸ்லிம் ஹதீஸ் தொகுப்புக்களில், முஹம்மது 19 போர்களில் பங்கு பெற்றார் என்ற ஒரே விவரம் நான்கு ஹதிஸ்களில் வருகிறது.

**புகாரி எண்: 3949 & 4471**

3949. அபூ இஸ்ஹாக்(ரஹ்) அறிவித்தார்

நான் ஸைத் இப்னு அர்கம்(ரலி) அவர்களுக்கும் அருகிலிருந்தபோது, **'நபி(ஸல்) அவர்கள் புரிந்த போர்கள் எத்தனை?' என்று அவர்களிடம் வினவப்பட்டது. 'பத்தொன்பது' என்று அவர்கள் பதிலளித்தார்கள்.** 'நபி(ஸல்) அவர்களுடன் நீங்களும் பங்கெடுத்த போர்கள் எத்தனை?' என்று வினவப்பட்டபோது, 'பதினேழு' என்றார்கள். 'இவற்றில் முதல் போர் எது?' என்று நான் அவர்களிடம் கேட்டேன். அவர்கள், 'உஸைரா' அல்லது 'உஷைர்' என்று பதிலளித்தார்கள். கதாதா(ரஹ்) அவர்களிடம் நான் கேட்டபோது அவர்கள், 'உஷைரா தான் (சரியான உச்சரிப்பு)' என்றார்கள்.

4471. அபூ இஸ்ஹாக் அம்ர் அஸ்ஸபீஈ(ரஹ்) அறிவித்தார்

'இறைத்தூதர்(ஸல்) அவர்களுடன் எத்தனை புனிதப் போர்களில் நீங்கள் கலந்து கொண்டீர்கள்?' என்று நான் ஸைத் இப்னு அர்கம்(ரலி) அவர்களிடம் கேட்டேன். அதற்கு அவர்கள், 'பதினேழு (புனிதப் போர்களில் நபி அவர்களுடன் நான் கலந்து கொண்டேன்)' என்று பதிலளித்தார்கள். நான், **'நபி(ஸல்) அவர்கள் எத்தனை புனிதப் போர்களில் பங்கெடுத்தார்கள்' என்று கேட்டேன். அதற்கு அவர்கள், 'பத்தொன்பது போர்களில் (பங்கெடுத்தார்கள்)' என்று பதிலளித்தார்கள்.**

**முஸ்லிம் எண்: 2405 & 3706**

2405. அபூஇஸ்ஹாக் அம்ர் அஸ்ஸபீஈ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:

நான் ஸைத் பின் அர்கம் (ரலி) அவர்களிடம், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் எத்தனை அறப்போர்களில் நீங்கள் கலந்துகொண்டீர்கள்?" என்று கேட்டேன். அதற்கு அவர்கள், "பதினேழு அறப்போர்களில் (அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் நான் கலந்து கொண்டேன்)" என்று விடையளித்தார்கள். தொடர்ந்து அவர்கள், **"அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் பத்தொன்பது போர்களில் கலந்துகொண்டார்கள்.** அவர்கள் (மதீனாவிற்கு) நாடு துறந்து (ஹிஜ்ரத்) சென்ற பிறகு ஒரேயொரு ஹஜ் -விடைபெறும் ஹஜ்- மட்டுமே செய்தார்கள்" என்றும் கூறினார்கள். இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான அபூஇஸ்ஹாக் (ரஹ்) அவர்கள், "(நாடு துறந்து செல்வதற்கு முன்) அவர்கள் மக்காவில் இருந்தபோது மற்றொரு ஹஜ் செய்துள்ளார்கள்" என்று குறிப்பிடுகிறார்கள்.

3706. அபூஇஸ்ஹாக் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:

(அப்துல்லாஹ் பின் அஸ்ஸுபைர் (ரலி) அவர்களது ஆட்சியில் கூஃபாவின் ஆளுநராயிருந்த) அப்துல்லாஹ் பின் யஸீத் அவர்கள் மழை வேண்டிப் பிரார்த்திப்பதற்காக மக்களுடன் புறப்பட்டுச் சென்றார். அப்போது அவர் இரண்டு ரக்அத்கள் தொழுவித்துவிட்டு மழை வேண்டிப் பிரார்த்தித்தார்.

அப்போது நான் ஸைத் பின் அர்கம் (ரலி) அவர்களைச் சந்தித்தேன். எனக்கும் அவர்களுக்குமிடையே ஒரு மனிதர் மட்டுமே இருந்தார். அப்போது நான் ஸைத் (ரலி) அவர்களிடம், **"அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கலந்துகொண்ட போர்கள் எத்தனை?" என்று கேட்டேன். அதற்கு அவர்கள், "பத்தொன்பது" என விடையளித்தார்கள்.**

"அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் நீங்கள் கலந்துகொண்ட போர்கள் எத்தனை?" என்று வினவியபோது, "பதினேழு" என்றார்கள். "அவர்கள் கலந்துகொண்ட முதல் போர் எது?" என்று கேட்டதற்கு "தாத்துல் உசைர், அல்லது உஷைர்" என்று பதிலளித்தார்கள். இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

### 3) பாராவின் பொய்யும் ஹதீஸ்களின் மெய்யும்

என்னுடைய முந்தைய கட்டுரைகளில் நான் குறிப்பிட்டது போல, பாரா ஹதீஸ்களை படிக்கவில்லை என்று தெரிகிறது. அவர் ''நிலமெல்லாம் இரத்தம்'' தொடர்களை எழுதுகின்ற போது, குறைந்த பட்சம் தான் தொடுகின்ற தலைப்புக்களைப் பற்றி ஹதீஸ்கள் என்ன சொல்கின்றன என்று படித்து இருந்திருந்தால், இப்படிப்பட்ட பல பிழைகளை செய்து இருந்திருக்கமாட்டார். புத்தகத்தின் கடைசியில் அவர் பதித்த "**உதவிய நூல்கள்**" பட்டியலில், தமிழ் குர்-ஆனும், ஹதீஸ்களில் ஒரே ஒரு ஹதீஸின் தொகுப்பும் இடம் பெறாமல் இருந்தது, மன்னிக்கமுடியாத சோகமான ஆச்சரியம்.

குர்-ஆனையும், ஹதீஸ்களையும் படிக்காமல், எப்படி இவர் இஸ்லாம் பற்றி இப்படி வாரி வாரி வழங்குகிறார் என்று நான் ஆச்சரியப்பட்டேன். நண்பனின் செல்வங்களை எடுத்து கர்ணன் வாரி வழங்கியது போல, யாரோ அரைகுறை வேக்காடுகள் எழுதிய புத்தகங்களை படித்துவிட்டு, அவர் தன் பாணியில் அடித்து தள்ளினார்.

மேலே குறிப்பிட்ட ஹதீஸ் பலமான ஆதார பூர்வமானதாக முஸ்லிம்கள் நம்புகிறார்கள். இந்த ஹதீஸ் சொல்கிறது - ''முஹம்மது 19 போர்களில் சுயமாக ஈடுபட்டார்'' என்று, ஆனால் பாராவோ "அதெல்லாம் பொய், வெறும் மூணு தானய்யா" என்று சாலமென் பாப்பையா போல மிகவும் லேசாக சொல்லிவிட்டுச் சென்றுவிட்டார். இதனை கடந்த 10 ஆண்டுகளுக்கு மேலாக படித்துவிட்டு, சரமாரியாக பாராட்டுகிறார்கள் முஸ்லிம்கள், இவர்களை என்னச் சொல்ல!?

முஸ்லிம்களுக்கும் குர்-ஆன் மற்றும் ஹதீஸ்களின் முக்கியத்தும் சரியாக புரியவில்லை என்று நினைக்கிறேன். பாரா சொல்வது குர்-ஆனுக்கு முரணாக இருக்கிறதே, ஹதீஸ்களுக்கு முரணாக இருக்கிறதே! இதனை திருத்திக்கொள்ளும் படி அவருக்கு எடுத்துச் சொல்லலாம் என்ற எண்ணம் யாருக்காவது வந்ததா? வந்தவர்கள் பாரா அவர்களுக்கு இதனை எடுத்துக்காட்டினார்களா?

**இதில் ஒரு சிக்கல் இருக்கிறது:**

பாரா எழுதிய பாணியைப் பார்த்தால், **உலகத்தில் உள்ள ஒரே ஒரு அமைதி மார்க்கம் இஸ்லாம் தான்** என்ற பாணியில் விளாசிக்கட்டியுள்ளார். இந்த எண்ணத்தை மனதில் வைத்துக்கொண்டு தான் அவர் புத்தகம் முழுவதும் எழுதியுள்ளார். இதன் உச்சக்கட்டம் தான் அல்லது இரத்தினச் சுருக்கம் தான் "நிலமெல்லாம் இரத்தத்தின் 20வது

அத்தியாயம்''. ஒருவேளை இந்த அத்தியாயத்தை அவர் திருத்தவேண்டுமென்றால், முழு புத்தகத்தையும் அவர் திருத்தி எழுதவேண்டும், குறைந்தபட்சம் முதல் 20 அத்தியாயங்களில் மாற்றம் செய்யவேண்டும். இப்படி செய்தால், நிலமெல்லாம் இரத்தத்தில், நிலமும் இருக்காது, இரத்தமும் இருக்காது. முதல் 20 அத்தியாயங்கள் மாற்றமடைந்தால், அடுத்த 80 அத்தியாயங்களின் அஸ்திபாரம் ஆட்டம் கண்டுவிடும்.

**படித்த முஸ்லிம்கள் ஏன் சும்மா இருந்துவிட்டார்கள்?**

இந்த புத்தகத்தை பாராட்டிய முஸ்லிம்கள், அதனை முழுவதுமாக படித்து, சுவைத்து அதன் பிறகு தான் அவரை பாராட்டுகிறார்கள். அப்படியிருக்க அவர்களது கண்களில் இந்த விவரங்கள் தென்படவில்லையா? தென்பட்டு இருக்கும், இருந்தாலும் ஏன் பாராவிற்கு திருத்தும்படி சொல்லவேண்டும்? ஒருவகையில் பார்த்தால், பல போர்களை புரிந்ததாக குர்-ஆனும், ஹதீஸும் சொன்னாலும், பாரா எழுதியது மனதுக்கு இதமாக இருக்கிறதல்லவா? பல கோடி தமிழர்கள் படித்து, 'ஆஹா, இஸ்லாம் ஒரு அமைதி மார்க்கம்' என்றுச் சொல்வது உண்மைத் தான் என்று நினைப்பார்கள் அல்லவா?

பாரா அவர்கள், குர்-ஆன் மற்றும் ஹதீஸ்கள் மீது சாணியை வீசினாலும், இஸ்லாம் ஒரு அமைதி மார்க்கம் என்று எழுதிவிட்டார் அல்லவா? யூதர்கள் பொய்யர்கள் என்றும், பாலஸ்தீனம் முஸ்லிம்களுக்கே சொந்தம் என்றும் எழுதிவிட்டார் அல்லவா? இப்படியிருக்க, சாணியை துடைத்துக்கொண்டு ஒன்றுமே நடக்காதபடி சென்றுவிட்டால் போகிறது. இப்படிப்பட்ட எண்ணத்தினால் தான், முஸ்லிம்களும் போனால் போகட்டும் போடா... என்று இருந்துவிட்டார்கள்.

**முடிவுரை:**

இந்த கட்டுரையில், பாரா அவர்களின் கூற்று எப்படி ஹதீஸ்களுக்கு முரண்படுகின்றது என்பதை பார்த்தோம். நான் மேற்கோள் காட்டியது ஒரே ஒரு ஹதீஸை மட்டுமே. முஹம்மது பங்கு பெற்ற போர்கள் பற்றிய இதர ஹதீஸ்களும் உள்ளன, அவைகளை இங்கு சுட்டிக்காட்டத் தேவையில்லை. முஸ்லிம்களுக்கு அவைகளின் விவரங்கள் நன்றாகத் தெரியும், ஒவ்வொரு வெள்ளிக்கிழமை பயானில் முஹம்மதுவின் வாழ்க்கையிலிருந்து ஒரு நிகழ்ச்சியையாவது எடுத்து பேசவில்லையென்றால், அது எப்படி நிறைவான பயானாக இருக்கமுடியும்? ''முஸ்லிம்கள் போராடவேண்டும்'' என்றுச் சொல்லி வாலிபர்களை உற்சாகப்படுத்துவதற்கு தேவையான உதாரணங்கள், ஹதீஸ்களிலிருந்து தானே வருகின்றன, முக்கியமாக முஹம்மதுவும், அவரது தோழர்களும் போர்களில் செய்த சாகசம் மற்றும் தியாக நிகழ்ச்சிகளிலிருந்து தானே வருகின்றன!

பாரா அவர்களே! நீங்கள் செய்தது தவறு! உண்மையை பொய்யென்று, பொய்யை உண்மையென்று எழுதுவது ஒரு எழுத்தாளனுக்கு ஏற்புடையதல்ல.

அடுத்த பதிலில், நீங்கள் உங்களின் ''உதவிய நூல்களின் பட்டியலில்'' குறிப்பிட்டு இருந்த ஒரு புத்தகத்திலிருந்து சில விவரங்களை சுட்டிக்காட்ட விரும்புகிறேன். **எழுத்துலகில் மலை போன்று சாதனை செய்கின்ற உங்களைப்போன்றவர்கள், ஏன் மலை போன்ற தவறுகள் செய்ய விலைபோகிறீர்கள்?** சிறியவர்கள் சிறிய தவறுகளைச் செய்வார்கள், பெரியவர்கள் பெரிய தவறுகளைச் செய்வார்கள் என்றுச் சொல்வது இதனைத்தானா!



## 28) பாராவை ரணப்படுத்திய ரஹீக்

**முன்னுரை:**

குர்-ஆனையும், ஹதீஸ்களையும் படிக்காமல் இஸ்லாம் பற்றி பாரா அவர்கள் எழுதிய விவரங்களை நாம் ஆய்வு செய்துக்கொண்டு இருக்கிறோம். அவர் எழுதியவைகள் குர்-ஆனுக்கும் ஹதீஸ்களுக்கும் முரண்படுகிறது என்பதை முந்தைய கட்டுரைகளில் கண்டோம். அவரது நிலமெல்லாம் இரத்தம் தொடருக்காக உதவியதாக ஒரு சரித்திர நூலை தம்முடைய "உதவிய நூல்களின்" பட்டியலில் குறிப்பிட்டுள்ளார். இந்த ஒரு புத்தகத்தையாவது உருப்படியாக அவர் படித்திருந்தால், 20வது அத்தியாயத்தை எழுதியிருந்திருக்கமாட்டார். இதை நான் அவருக்கு ஒரு சவாலாகவே முன் வைக்கிறேன்.

குர்-ஆனை படிக்காமல் எழுதினார், மன்னித்துவிடலாம், ஏனென்றால் அவருக்கு அது புரியாது. ஹதீஸ்களையும் படிக்காமல் எழுதினார், அதையும் மன்னிக்கலாம், ஏனென்றால் அது ஒரு கோர்வையாக இல்லை மேலும் பல தொகுப்புக்களாகவும் பல ஆயிர பக்கங்கள் கொண்டதாகவும் உள்ளது. ஆனால், தமிழ் மொழியில் முஹம்மதுவின் சரித்திரத்தை கோர்வையாக பதிவு செய்த புத்தகத்தை படித்ததாக அவர் பட்டியலில் சேர்த்துள்ளார். இந்த புத்தகத்துக்கு எதிராக அவர் எழுதியதை எப்படி மன்னிப்பது? வரம் கொடுத்தவனின் தலையில் கைவைத்த கதையாக அல்லவா இருக்கிறது ரஹீக் புத்தகத்துக்கு பாரா கொடுத்த அல்வா!

### 1) ரஹீக் புத்தகம் - எட்டாவது இடம்

பாரா அவர்கள் தம்முடைய நிலமெல்லாம் இரத்தம் தொடரை முடித்த போது, அவருடைய ஆய்வுக்கு உதவிய நூல்கள் என்று ஒரு பட்டியலை கொடுத்துள்ளார். அந்த பட்டியலில் தமிழ் குர்-ஆனோ, ஹதீஸ்களோ இல்லை என்பது ஒரு பக்கம் இருக்கட்டும். அந்த பட்டியலில் எட்டாவது இடத்தில் ஒரு புத்தகத்தின் பெயரை கீழ்கண்டவாறு குறிப்பிடுகிறார்.

**பாரா அவர்கள் எழுதியது:**

> 8. ரஹீக், ஸஃபிய்யுர் ரஹ்மான் (மொழிபெயர்ப்பு: ஏ. ஓமர் ஷெரீஃப், தாருல் ஹுதா, சென்னை 1 வெளியீடு.)
>
> மூலம்: **nilamellam.blogspot.in/2005/11/end.html**

**இப்புத்தகத்தின் சிறப்பு என்ன?**

முஹம்மதுவின் வாழ்க்கை வரலாறு ஹதீஸ்களில் முழுவதுமாக இல்லை. குர்-ஆனில் முஹம்மதுவின் வரலாறு 1% கூட இல்லை என்றுச் சொல்லலாம். ஆரம்ப கால இஸ்லாமிய அறிஞர்கள் முஹம்மதுவின் வாழ்க்கை வரலாற்றை ஒரு கோர்வையாக எழுதினார்கள், அதில் முக்கியமானவர் இப்னு இஷாக் என்பவர் ஆவார். இவர் எழுதிய கையெழுத்துப் பிரதிகள் இப்போது நம்மிடம் இல்லை, ஆனால், இவரைத் தொடர்ந்து இப்னு இஷாம், மற்றும் தபரி போன்றவர்கள், இவருடைய புத்தகத்திலிருந்து முழுவதுமாக மேற்கோள் காட்டியுள்ளார்கள். அதாவது, அழிந்துவிட்ட இப்னு இஷாக்கின் சரித்திரம் முழுவதும் இவ்விருவரின் புத்தகங்களில் கிடைத்துவிடும். தமிழ் முஸ்லிம்களின் துரதிர்ஷ்டம் என்னவென்றால், இந்த சரித்திரங்கள் அனைத்தும் இதுவரை தமிழில் மொழியாக்கம் செய்யப்படவில்லை என்பதாகும் [ஆங்கிலத்தில் உண்டு]. இப்னு இஷாக்கின் "ஸீரத் ரஸூலல்லாஹ்" புத்தகத்தை தமிழில்

மொழிப்பெயர்க்கலாம் என்று கிறிஸ்தவ நண்பர்கள் 2010ம் ஆண்டுக்கு முன்பு பேசிக்கொண்டார்கள், அதற்கான நேரத்திற்காக காத்துக்கொண்டு இருந்தார்கள். ஆனால், எங்களுக்கு அடித்தது ஜாக்பாட்.

**”அர்ரஹீக்குல் மக்தூம்” அல்லது ரஹீக் என்ற பெயரில் ஒரு புத்தகம் தமிழில் முஸ்லிம்களால் மொழியாக்கம் செய்யப்பட்டது. இதில் சொல்லிக்கொள்ளும் அளவிற்கு முஹம்மதுவின் சரித்திரம் ஒரு கோர்வையாக எழுதப்பட்டுள்ளது.**

இப்புத்தகத்துக்கு ஒரு சிறப்பு உண்டு. ”உலக இஸ்லாமிய லீக்” என்ற இயக்கம் மக்காவை தலைமையிடமாகக் கொண்டு செயல்பட்டுக்கொண்டு இருக்கிறது. 1976ம் ஆண்டு, முஹம்மதுவின் வாழ்க்கை வரலாற்றை இஸ்லாமிய சரித்திரத்தின் அடிப்படையில் சிறப்பாக எழுதுபவர்களுக்கு பரிசுகள் வழங்கப்படும் (மொத்தம் 1,50,000 சௌதி ரியால்கள்) என்று அறிவித்தது. உலகமனைத்திலும் இருந்து 1182 ஆய்வுகள் பல மொழிகளில் பல இஸ்லாமிய அறிஞர்கள் எழுதி அனுப்பினார்கள். அதில் கடைசியாக 183 ஆய்வுகள் ஏற்றுக்கொள்ளப்பட்டு, முடிவாக 5 ஆய்வுகளுக்கு பரிசுகள் வழங்கப்பட்டது. இதில் முதல் பரிசை தட்டிச்சென்றது இந்த ”ரஹீக்” என்ற புத்தகம். இதனை தமிழிலும் மொழியாக்கம் செய்து வெளியிட்டார்கள். முஹம்மதுவைப் பற்றிய விவரங்களை கோர்வையாக படிக்க இந்த புத்தகம் பேருதவியாக உள்ளது.

இப்புத்தகத்தின் இதர விவரங்களை அறியவும், PDFல் மற்றும் ஆடியோவில் பதிவிறக்கம் செய்யவும் இந்த தொடுப்பிற்குச் செல்லவும்: **இஸ்லாம் கல்வி**

இணையத்தில் படிக்க இங்கு சொடுக்கவும்: **தமிழில் குர்-ஆன் - முஹம்மதுவின் வரலாறு**

ஆக, பாகிஸ்தானும், சௌதியும் (உலக முஸ்லிம் தலைவர்கள்) ஒன்றாக சேர்ந்து ஆய்வு செய்து, இது தான் உண்மையான ஆதார பூர்வமான முஹம்மதுவின் சரித்திரம் என்று பாராட்டி, பரிசுகள் வழங்கிய புத்தகம் தான் ரஹீக் (அர்ரஹீக்குல் மக்தூம் என்றால், முத்திரையிடப்பட்ட உயர்ந்த மதுபானம் என்று பொருள்). இதன் இன்னொரு சிறப்பு, இப்புத்தகத்தின் ஆசிரியர் ஒரு இந்தியர் (உத்திர பிரதேசம்) என்பதாகும்.

**பாரா தம்முடைய நிலமெல்லாம் புத்தகத்திற்காக ரஹீக்கை படித்தாரா?**

ஹதீஸ்களை படிக்காதவர், தமிழ் குர்-ஆனை படிக்காதவர் இதனை படித்துள்ளார், இதற்கு ஆதாரம், தம்முடைய ‘உதவிய நூல்களின் பட்டியலில் இதனை எட்டாவதாக குறிப்பிட்டுள்ளார்’ என்பதிலிருந்து அறிந்துக்கொள்ளலாம்.

## 2) ”ரஹீக்” புத்தகமும், நிலமெல்லாம் புத்தகத்தின் 20வது அத்தியாயமும்

பாரா அவர்களின் 20வது அத்தியாயத்தை முஸ்லிம்கள் படித்தால், கண்களில் கண்ணீர் ஓடும், இஸ்லாம் மீது ஒரு பற்று வரும், இல்லை இல்லை ”பற்று பற்றி எறியும்”. பாரா மேற்கத்திய ஆய்வாளர்கள் பொய்யர்கள் என்றார், அவர்கள் இஸ்லாம் மீது அவதூறு கூறுகிறார்கள் என்றார். முஸ்லிம்களாலேயே செய்யமுடியாத ஒரு அருமையான சேவையை பாரா இஸ்லாமுக்கு புரிந்துள்ளார். அது என்னவென்றால், முஹம்மது உயிரோடு இருந்த போது செய்த யுத்தங்கள் ”வெறும் மூன்று” தான் என்று அடித்துச் சொல்கிறார். இது தான் உண்மை சரித்திரம் என்கிறார். யாராவது நான்கு அல்லது மூன்றைவிட அதிகம் என்றுச் சொன்னால், அவர்கள் யூதர்கள் என்று பட்டம் சூட்டுகின்றார், அதாவது இஸ்லாமின் படி மிகவும் இழிவான பிறவிகள்.

நம்முடைய கையில் இப்போது ரஹீக் புத்தகம் உள்ளது, அதே புத்தகத்தை பாராவும் படித்துள்ளார் என்று அறிந்த போது பரவசமடைந்தேன்.

இப்போது நாம் சுருக்கமாக, ரஹீக் புத்தகத்தில்:

- முஹம்மது எத்தனை போர்களை கட்டளையிட்டார்?
- அவர் எத்தனை போர்களில் பங்கு பெற்றார்
- எத்தனை போர்களின் பெயர்களை இப்புத்தகம் முன்மொழிகிறது

என்பதை மட்டுமே காண்போம்.

போர்களின் பின்னணியோ, இதர விவரங்களோ நமக்கு தேவையில்லை, நமக்கு தேவை வெறும் எண்ணிக்கையும் அவைகளின் பெயர்களும் மட்டுமே. அப்புத்தகத்தின் தொடுப்பு கொடுக்கப்பட்டுள்ளது, வாசகர்கள் அதனை பதிவிறக்கம் செய்துக்கொண்டு படித்துக்கொள்ளலாம் அல்லது ஒவ்வொரு போரின் பெயரோடு கூட அதன் தொடுப்பையும் கொடுத்துள்ளேன், அதனை சொடுக்கி அந்த போர் பற்றி, ரஹீக் சரித்திரம் என்ன சொல்கிறது என்பதை வாசகர்கள் முஸ்லிம் தளங்களிலேயே படித்துக்கொள்ளலாம். இதில் எதனையும் நான் மறைக்கவில்லை.

பாரா ரஹீக் புத்தகத்தை படித்து தம்முடைய புத்தகத்தை எழுதியதால், வெறும் மூன்று போர்கள் மட்டுமே ரஹீக்கில் நாம் காண்போம் என்று நம்பி நம் ஆய்வை (தேடலை) தொடருவோம்.

### 3) ரஹீக்கின்படி போர்கள்/திடீர் தாக்குதல்கள்/வழிப்பறி கொள்ளைகள் எத்தனை?

#### ”போர்” மற்றும் ”படைப்பிரிவு” - வித்தியாசம் என்ன?

முஹம்மது பங்கு பெற்ற யுத்தங்களை ’’போர்’’ என்றும், தாம் போகாமல், மற்றவர்களை அனுப்பிய யுத்தங்களை (வழிப்பறி கொள்ளைகள், திடீர் தாக்குதல்கள், யுத்தங்களை) ‘‘படைப்பிரிவு’’ என்று குறிப்பிடுவதாக இப்புத்தகத்தின் ஆசிரியர் குறிப்பிடுகிறார்.

> ***// ரஹீக், பக்கம் 211***
>
> *(நபி (ஸல்) அவர்கள் கலந்துகொண்ட போருக்கு அரபியில் ‘கஸ்வா’ என்றும் அவர்கள் கலந்து கொள்ளாமல் தோழர்கள் மட்டும் சென்று வந்த போர்களுக்கு ‘ஸய்யா’ என்றும் கூறப்படும். நாம் இந்த தமிழாக்கத்தில் கஸ்வாவை ‘**போர்**’ என்றும் ஸய்யாவை ‘**படைப் பிரிவு**’ என்றும் குறிப்பிடுகிறோம்.)* ***மூலம் //***

#### ரஹீக் புத்தகத்தின் பொருளடக்கம்:

ரஹீக் புத்தகத்திற்கு உள்ளே சென்று எத்தனை போர்கள் என்று கணக்கெடுக்கவேண்டிய அவசியமில்லை. இந்த தளத்தில் **(http://www.tamililquran.com/mohamed_main.asp)** ரஹீக் புத்தகத்தின் பொருளடக்கம் அழகாக கொடுக்கப்பட்டுள்ளது. இந்த பொருளடக்கத்தில் வரும் போர்களின், படைப்பிரிவுகளின் எண்ணிக்கையை நாம் எடுத்தால் போதுமானது. இந்த எண்ணிக்கை மூன்றை தாண்டாது என்று யாராவது நினைத்தால், அவர்களுக்கு ஏமாற்றம் தான் மிஞ்சும்.

அடுத்து வரும் பட்டியலில் கொடுக்கப்பட்ட விவரங்கள் அனைத்தும், தலைப்புக்களோடு கூட ரஹீக் புத்தகத்திலிருந்து எடுக்கப்பட்டவைகளாகும். இப்படிப்பட்ட [அடைப்பிற்குள் உள்ளவை என் வரிகள்].

**1) ஆயுதமேந்தித் தாக்குதல் - இக்காலத்தில் நபியவர்கள் நிகழ்த்திய போர்களும் அனுப்பிய படைப் பிரிவுகளும்**

| எண் | தலைப்பு |
|---|---|
| 1 | ‘ஸய்ஃபுல் பஹர்’ |
| 2 | ‘ராபிக்’ |
| 3 | ‘கர்ரார்’ |
| 4 | ‘அப்வா’ (அ) ‘வத்தான்’ |
| 5 | ‘பூவாத்‘‘ |
| 6 | ‘ஸஃப்வான்‘‘ |
| 7 | ‘துல் உஷைரா‘‘ |
| 8 | ‘நக்லா‘‘ |

[மேற்கண்ட போர்கள், படைப்பிரிவுகள் பற்றி அறிந்துக்கொள்ள தொடுப்புக்களை சொடுக்கி படிக்கலாம். இவைகளை போர்கள் என்றுச் சொல்வதை விட ‘‘வழிப்பறி கொள்ளைகள்’’ என்று சொல்லவேண்டும். வியாபார கூட்டத்தை வழி மறைத்து, பொருட்களை திருடுவதை என்னவென்றுச் சொல்வது?]

**பாரா கணக்கு 3, ரஹீக் கணக்கு: 8**

**2) பெரிய பத்ர் போர் - பாரா கணக்கு 3, ரஹீக் கணக்கு: 9**

**3) பத்ர் மற்றும் உஹுத் போர்களுக்கு மத்தியில் நிகழ்ந்த ராணுவ நடவடிக்கைகள்**

| எண் | தலைப்பு |
|---|---|
| 10 | ஸுலைம் குலத்தவருடன் போர் |
| 11 | கைனுகா கிளையினருடன் போர் |
| 12 | ‘ஸவீக்’ போர் |
| 13 | தீ அம்ர் போர் |
| 14 | ‘பஹ்ரான்’ போர் |
| 15 | ஜைதுப்னு ஹாஸாம் படைப் பிரிவு |

**பாரா கணக்கு 3, ரஹீக் கணக்கு: 15**

**4) உஹுத் போர்**

| எண் | தலைப்பு |
|---|---|
| 17 | அபூ ஸலமா படைப் பிரிவு (ஹிஜ்ரி 4, முஹர்ரம்) |
| 18 | நழீர் இனத்தவருடன் போர் (ஹிஜ்ரி 4 ரபீஉல் அவ்வல், கி.பி. 625ஆகஸ்டு) |
| 19 | "நஜ்து" போர் (ஹிஜ் 4, ரபீவுல் ஆகிர் (அ) ஜுமாதா அல்ஊலா) |
| 20 | இரண்டாம் பத்ர் போர் (ஹிஜ் 4, ஷஃபான் மாதம், கி.பி. 626,ஜனவரி) |
| 21 | தூமத்துல் ஜன்தல் போர் (ஹிஜ் 5, ரபீஉல் அவ்வல் 25) |

**பாரா கணக்கு 3, ரஹீக் கணக்கு: 21**

**6) அல்அஹ்ஜாப் போர் - பாரா கணக்கு 3, ரஹீக் கணக்கு: 22**

**7) பனூ குரைளா போர் - பாரா கணக்கு 3, ரஹீக் கணக்கு: 23**

**8) அடுத்தகட்ட ராணுவ நடவடிக்கை**

| எண் | தலைப்பு |
|---|---|
| 24 | முஹம்மது இப்னு மஸ்லமா படைப் பிரிவு (ஹிஜ் 6, முஹர்ரம் 10) |
| 25 | லஹ்யான் போர் (ஹிஜ் 6, ரபீவுல் அவ்வல்) |
| 26 | குழுக்களையும் படைப்பிரிவுகளையும் தொடர்ந்து அனுப்புதல் |

**பாரா கணக்கு 3, ரஹீக் கணக்கு: 26**

**9) பனூ முஸ்தலக் (அ) அல்முரைஸீ போர் - பாரா கணக்கு 3, ரஹீக் கணக்கு: 27**

**10) குழுக்களும் படைப்பிரிவுகளும்**

| எண் | தலைப்பு |
|---|---|
| 28 | 'அப்துர் ரஹ்மான் இப்னு அவ்ஃப்' படைப் பிரிவு |
| 29 | 'அலீ இப்னு அபூதாலிப்' படைப் பிரிவு |
| 30 | 'அபூபக்ர் (அ) ஜைது' படைப் பிரிவு |
| 31 | 'குர்ஸ்' படைப் பிரிவு |

**பாரா கணக்கு 3, ரஹீக் கணக்கு: 31**

**11) ஹுதைபிய்யா ஒப்பந்தத்திற்குப் பின் நிகழ்ந்த போர் நடவடிக்கைகள் - தூகரத் (அ) காபா போர் - பாரா கணக்கு 3, ரஹீக் கணக்கு: 32**

**12) கைபர் போர் (ஹிஜ்ரி 7, முஹர்ரம்) - பாரா கணக்கு 3, ரஹீக் கணக்கு: 33**

**13) அடுத்தக்கட்ட போர்களும் படைப் பிரிவுகளும் (ஹிஜ்ரி 7)**

| எண் | தலைப்பு |
|---|---|

| | |
|---|---|
| 34 | காலிப் இப்னு அப்துல்லாஹ் படைப் பிரிவு |
| 35 | ஹிஸ்மா படைப் பிரிவு |
| 36 | உமர் இப்னு கத்தாப் படைப் பிரிவு |
| 37 | பஷீர் இப்னு ஸஅது படைப் பிரிவு |
| 38 | காலிபு இப்னு அப்துல்லாஹ் படைப் பிரிவு |
| 39 | அப்துல்லாஹ் இப்னு ரவாஹா படைப் பிரிவு |
| 40 | பஷீர் இப்னு ஸஅத் படைப் பிரிவு |
| 41 | அபூ ஹத்ரத் படைப் பிரிவு |

**பாரா கணக்கு 3, ரஹீக் கணக்கு: 41**

**14) உம்ராவை நிறைவேற்றப் புறப்படுதல் (உம்ரத்துல் கழா)**

| எண் | தலைப்பு |
|---|---|
| 42 | கஅபு இப்னு உமைர் அன்சாரி படைப் பிரிவு |
| 43 | ஷுஜா இப்னு வஹபு அல்அசதி படைப் பிரிவு |

**பாரா கணக்கு 3, ரஹீக் கணக்கு: 43**

**15) முஃதா யுத்தம்**

| எண் | தலைப்பு |
|---|---|
| 44 | முஃதா யுத்தம் |
| 45 | தாதுஸ்ஸலாசில் படைப் பிரிவு |
| 46 | அபூகதாதா படைப் பிரிவு |

**பாரா கணக்கு 3, ரஹீக் கணக்கு: 46**

**16) மக்காவை வெற்றி கொள்வது - பாரா கணக்கு 3, ரஹீக் கணக்கு: 47**

**17) ஹுனைன் யுத்தம் - பாரா கணக்கு 3, ரஹீக் கணக்கு: 48**

**18) மக்கா வெற்றிக்குப் பின் அனுப்பப்பட்ட படைப் பிரிவுகளும் குழுக்களும்**

| எண் | தலைப்பு |
|---|---|
| 49 | உயைனா இப்னு ஹிஸ்ன் படைப் பிரிவு |
| 50 | குத்பா இப்னு ஆமிர் படைப் பிரிவு |

**பாரா கணக்கு 3, ரஹீக் கணக்கு: 50**

**19) தபூக் போர் (ஹிஜ்ரி 9, ரஜப்) - பாரா கணக்கு 3, ரஹீக் கணக்கு: 51**

**20) இறுதிப் படை - பாரா கணக்கு 3, ரஹீக் கணக்கு: 52**

இந்த கணக்கு வெறும் ரஹீக் புத்தகத்தின் பொருளடக்கத்திலிருந்து எடுத்தது, முஹம்மது புரிந்த போர்கள் மற்றும் அவர் கட்டளையிட்ட போர்களின் (படை பிரிவுகள்) எண்ணிக்கையை இங்கு கொடுத்தேன். தனிப்பட்ட மனிதர்களை கொள்ளும்படி முஹம்மது கட்டளையிட்ட நிகழ்ச்சிகளை ரஹீக் பதிவு செய்துள்ளது, அவைகளை இங்கு கணக்கில் எடுத்துக்கொள்ளவில்லை என்பதை வாசகர்கள் கவனிக்கவும். இங்கு குறிப்பிட்ட படைப்பிரிவுகள் என்பது எப்போதும் பல ஆயிர இராணுவ வீரர்களை அனுப்பி செய்த யுத்தம் என்று எண்ணக்கூடாது, குறைந்த எண்ணிக்கையுள்ள இராணுவத்தையும் அனுப்பிய சம்பவங்களும் உண்டு.

**4) பாராவிற்கு கணக்கு போட தெரியுமா?**

முஹம்மதுவின் வாழ்க்கை சரித்திரத்தில் முதல் பரிசு பெற்ற புத்தகம், ''முஹம்மது செய்தது குறைந்தபட்சம் 50 போர்கள் என்று சொல்கிறது''. பாராவோ, வெறும் மூன்று என்றுச் சொல்கிறார்.

**மூன்று எங்கே? ஐம்பத்து இரண்டு எங்கே?**

**யார் சொல்வது உண்மை? பாராவா? ரஹீக் புத்தகமா?**

பாராவிற்கு எங்கே தவறு நடந்துள்ளது என்று இப்போது புரிந்திருக்கும் என்று நம்புகிறேன். இதற்கு மேலும் ஆதாரங்களை காட்டினால், பாரா தாங்கமாட்டார்.

**முடிவுரை:**

இஸ்லாம் வாளால் பரப்பப்பட்ட மார்க்கம் இல்லையாம்? ஏனென்றால், வெறும் மூன்று யுத்தங்களை மட்டுமே முஹம்மது புரிந்தாராம், அதுவும் தவிர்க்கமுடியாத சூழ்நிலைகளில் முஹம்மது இப்போர்களைச் செய்தாராம்.

ஆனால், ரஹீக் புத்தகம் பாராவின் முகத்தில் கரியை பூசிவிட்டது. பாரா எழுதியது, குர்-ஆனுக்கு முரண்படுகிறது, ஹதீஸ்களுக்கு முரண்படுகிறது, இஸ்லாமிய சரித்திரத்திற்கு முரண்படுகிறது. நிலமெல்லாம் இரத்தத்தின் ஆய்வு கடந்த கால இஸ்லாமிய சரித்திரத்தை இந்த இலட்சனத்தில் விளக்கியுள்ளது.

ஒருவேளை, ரஹீக் புத்தகத்தை எழுதிய ஆசிரியர் ஒரு யூதன் என்று பாரா குற்றம்சாட்டினாலும் ஆச்சரியப்படுதவற்கு ஒன்றுமில்லை. ஆனால், இவ்வாசிரியருக்கு முதல் பரிசை எப்படி பாகிஸ்தானும், சௌதி அரேபியாவும் ( இஸ்லாமிய அறிஞர்களைச் சொல்கிறேன்) கொடுத்தது? ஒருவேளை இவர்களும் யூதர்களின் கைக்கூலிகளாக இருப்பார்களோ! அப்படியானால், இந்த ரஹீக் புத்தகத்தை தங்கள் தளங்களில் பதித்துள்ள தமிழ் முஸ்லிம்கள் யார்? யூதர்களா? ஐயகோ! முஸ்லிம்களுக்குத் தான் யூதன் தூணிலும் இருப்பான் துரும்பிலும் இருப்பான் என்று எண்ணியிருந்தேன், இப்போது பாராவும் இந்த "யூதோபோபியா"வின் அங்கத்தினராக மாறிவிட்டாரே! என்ன செய்வது?

அடுத்த கட்டுரையில், பாராவின் 20வது அத்தியாயத்திலிருக்கும் ஒவ்வொரு பாராவிற்கும் பதில்களைக் காணலாம்.

இதன் பிறகு நிலமெல்லாம் இரத்தத்தின் 21வது அத்தியாயத்திற்கு குதிக்கவேண்டும்...

ஐஐஐஐ

## 29) இஸ்லாம் வாள்முனையில் பரவியதா? பாராவின் எடக்கு மடக்கு விவரங்கள்

**முன்னுரை:**

பாரா அவர்களின் நிலமெல்லாம் இரத்தம் புத்தகத்தின் 20வது அத்தியாயத்திற்கு கொடுத்த முந்தைய பதில்கள்:

1. **இஸ்லாமுக்கு முஹம்மதுவை விட பா. ராகவன் அதிக நன்மையை செய்துள்ளார்கள்**
2. **பாராவை புரட்டிப்போட்ட நூல்கள்**
3. **முஹம்மது எத்தனை போர்கள் புரிந்தார் என்று அல்லாஹ்வை விட பாரா நன்கு அறிவார்**
4. **இந்த ஒரே ஒரு ஹதீஸை பாரா அவர்கள் படித்திருந்தால்!**
5. **பாராவை ரணப்படுத்திய ரஹீக்**

இந்த வரிசையில் இது கடைசி பதில். பாரா அவர்கள் 20ம் அத்தியாயத்தில் **(இஸ்லாம் வாள்முனையில் பரவியதா?)** எழுதியவைகளை இக்கட்டுரையில் சுருக்கமாக ஆய்வு செய்வோம்.

**பாரா அவர்கள் எழுதியது:**

> *// அத்தியாயம் 20 - இஸ்லாம் வாள்முனையில் பரவியதா?*
>
> *"பிரசாரகர்களின் சாமர்த்தியத்தால் கிறிஸ்துவம் பரவியது; வாள்முனை மிரட்டலினால் இஸ்லாம் பரவியது" என்று ஒரு கருத்து உலகெங்கும் பரவலாகச் சொல்லப்பட்டு வருவது. **இன்று நேற்றல்ல, இஸ்லாம் பரவத் தொடங்கிய நாளாகவே** இக்கருத்து ஒரு குற்றச்சாட்டாக வைக்கப்பட்டு வந்திருக்கிறது. //*

**உமர் எழுதியது:**

ஏதோ! இஸ்லாம் தொடங்கி பல நூற்றாண்டுகளுக்கு பிறகு ‘‘வாள்முனை மிரட்டலினால் இஸ்லாம் பரவியது’’ என்ற குற்றச்சாட்டு புதிதாக வைக்கப்பட்டு இருந்திருந்தால், ஒப்புக்கொள்ளலாம். அதாவது, இஸ்லாம் பரவத்தொடங்கிய காலத்தில் இந்த குற்றச்சாட்டு இல்லை, ஏனென்றால் இஸ்லாமை கண்களால் கண்டவர்களாகிய முதல் முஸ்லிம் சமுதாயத்துக்கு ’’உண்மை இஸ்லாம் எப்படி பரவியது என்றுத் தெரியும்’’. ஆனால், சில நூறு ஆண்டுகள் உருண்டோடின போது, மக்களிடைய இஸ்லாம் பற்றிய தவறான கருத்துக்கள் உருவாகின, அதன் பிறகு தான் ‘‘இஸ்லாம் வாளால் பரவியது’’ என்ற குற்றச்சாட்டு புதிதாக உருவானது என்றுச் சொன்னால், ஏற்புடையதாக இருக்கும்.

ஆனால், பாரா அவர்களே! ''**இஸ்லாம் பரவத்தொடங்கிய காலத்திலிருந்தே, இந்த குற்றச்சாட்டு உண்டு**'' என்று நீங்கள் எழுதும் போது, லாஜிக் எங்கேயோ இடிக்கிறது என்று உங்களுக்கு தெரியவில்லையா?

அ) இஸ்லாம் அமைதி மார்க்கமாக இருந்திருந்தால், அது தொடங்கிய காலத்திலும் (முஹம்மது மற்றும் முதல் நான்கு கலிஃபாக்கள் வாழ்ந்த காலத்திலும்) இந்த பெயர் அதற்கு எப்படி வந்திருக்கும்?

ஆ) உங்கள் வரிகள் உண்மையென்றால், இஸ்லாமின் ஆரம்பமுதலே இந்த குற்றச்சாட்டு உண்டென்றால், இதற்கு உண்மை காரணம் இருந்திருக்கவேண்டுமில்லையா? நெருப்பில்லாமல் புகையுமா?

இ) ரஹீக் புத்தகத்தில் 50க்கும் அதிகமான போர்கள் பற்றி நாம் **முந்தைய கட்டுரையில்** ஆதாரங்களோடு கண்டோம். பத்து ஆண்டுகளில் இஸ்லாமின் பெயரில் முஹம்மது 50க்கும் அதிகமான போர்களை புரிந்திருந்தால், இந்த பெயர் இஸ்லாமுக்கு வரத்தானே செய்யும்? இல்லையென்று உங்களில் யாராவது சொல்லமுடியுமா?

**பாரா அவர்கள் எழுதியது:**

> *// **கிறிஸ்துவம் எப்படிப் பரவியது** என்பதை ஆழமாக அலசுவதற்கு இது இடமல்ல. ஆனால், இஸ்லாம் பரவிய விதத்தைத் தெரிந்துகொள்ள வேண்டியது அவசியமானது. //*

**உமர் எழுதியது:**

கிறிஸ்தவம் எப்படிப் பரவியது என்று நீங்கள் எழுதும் படி கேட்டுக் கொள்கிறேன். நினைவில் வைத்துக்கொள்ளுங்கள்! உண்மையை மட்டுமே எழுதவேண்டும். ''கேள்விப் பேச்சில் பாதிதான் நிசம்'' என்பார்கள், எனவே கேள்வி ஞானத்தை மட்டுமே வைத்துக்கொண்டு புத்தகம் எழுதாதீர்கள், ஆய்வு செய்து எழுதுங்கள்.

**பாரா அவர்கள் எழுதியது:**

> *// **முகம்மது நபி** பிறந்த சவூதி அரேபியாவிலோ, எல்லா நபிமார்களுக்கும் உகந்த இடமான பாலஸ்தீனிலோ மட்டும் **இஸ்லாம் குறித்த பிரசாரம் மேற்கொள்ளப்பட்டு**, அங்கே மட்டும் அம்மார்க்கம் செல்வாக்குப் பெற்றிருக்குமானால் இத்தகையதொரு விஷயம் பற்றிப் பேசவேண்டிய அவசியமே நேர்ந்திருக்காது. மாறாக, **ஒட்டுமொத்த மத்திய ஆசியாவிலும் மிகக்குறுகிய காலத்தில்** செல்வாக்குப் பெற்று, முகம்மது நபியின் மறைவுக்குப் பின் **மிகச்சில ஆண்டுகளிலேயே** ஐரோப்பாவுக்கும் கிழக்காசியாவுக்கும் பரவி, உலகின் இரண்டாவது பெரிய மதமாக இஸ்லாம் காலூன்றி நிற்க முடிந்திருக்கிறதென்றால், அது எவ்வாறு பரவியது என்பதைத் தெரிந்துகொள்வது மிகவும் அவசியமானது. //*

**உமர் எழுதியது:**

பாரா அவர்கள் என்னை மன்னிக்கவேண்டும். நீங்கள் முஹம்மதுவை குறிப்பிடும் போது ''முஹம்மது நபி'' என்று எழுதுகிறீர்கள். யார் முஹம்மதுவை நபி என்றுச் சொல்வாரோ, அவர் இஸ்லாமை ஏற்கிறார் என்று அர்த்தம். நபி என்பது பெயர் அல்ல, அது பட்டப்பெயர்.

முஹம்மதுவை நபி (இறைத்தூதர்/ தீர்க்கதரிசி) என்றுச் சொல்பவர், ‘‘**அல்லாஹ்வைத் தவிர வேறு இறைவன் இல்லை**’’ என்பதையும் சொல்லவேண்டும் அல்லது சொல்லிவிட்டதாக அர்த்தமாகிவிடும். உங்களுக்கு ஒரு தனிப்பட்ட கேள்வி: நீங்கள் முஸ்லிமாக மாற விரும்புகிறீர்களா?

அடுத்ததாக, ‘‘**இஸ்லாம் குறித்த பிரசாரம் மேற்கொள்ளப்பட்டு**’’ என்று எழுதியுள்ளீர்கள். எனக்கு சில சந்தேகங்கள் எழுகின்றன:

1) இஸ்லாம் பாலஸ்தீனாவில் எப்போது பிரச்சாரம் செய்யப்பட்டது? (பிரச்சாரம் என்றால் என்னவென்று உங்களுக்கு நன்றாக தெரியும் என்று நினைக்கிறேன்).

2) இஸ்லாமை பிரச்சாரம் செய்வதற்கு முஹம்மது யாரை பாலஸ்தீனாவிற்கு அனுப்பினார்? அபூ பக்கர் யாரை அனுப்பினார்? உமர் யாரை அனுப்பினார்? அலி யாரை அனுப்பினார்? உஸ்மான் யாரை அனுப்பினார்? பெயர்களை குறிப்பிடமுடியுமா?

3) முஹம்மது அனுப்பிய நபர் பாலஸ்தீனாவில் எத்தனை ஆண்டுகள் வாழ்ந்து பிரச்சாரம் செய்தார்? கிறிஸ்தவர்கள் செய்வது போல, ஒரு பகுதிக்குச் சென்று, அம்மொழியைக் கற்றுக்கொண்டு, அவர்களுக்கு கிறிஸ்தவத்தை போதிப்பது போல, இஸ்லாமில் யார் செய்தார்கள்? உங்களிடம் விவரமுண்டா? (தமிழ் முஸ்லிம்கள் யாரிடமாவது இந்த விவரம் உண்டா?)

4) மத்திய ஆசியாவில் எப்படி இஸ்லாம் குறுகிய காலத்தில் செல்வாக்கு பெற்றது? பிரச்சாரத்தினாலா அல்லது வாள்முனை மிரட்டலினாலா? போர்களினாலா?

5) முஹம்மது மத்திய ஆசியாவில் இருந்த நாடுகளுக்கு பிரச்சாரம் செய்ய யார் யாரை அனுப்பினார்? பட்டியலிடுங்கள் பார்க்கலாம்? அவர்கள் ஒவ்வொரு நாட்டிலும் எப்படி பிரச்சாரம் செய்தார்கள்?

6) ஒவ்வொரு நாட்டுக்கும் மிரட்டல் கடிதங்கள் எழுதியவைகளை இங்கு குறிப்பிடாதீர்கள், அவைகள் பிரச்சாரங்கள் அல்ல. அவைகள் சண்டை போடுவதற்கு முன்பு அனுப்பப்பட்ட பீரங்கி புறாக்கள். இஸ்லாமை ஏற்கிறாயா அல்லது போரில் செத்து மடிகிறாயா? இது தான் அக்கடிதங்களின் சுருக்கம்.

’’இஸ்லாமிய பிரச்சாரம்’’ என்று நீங்கள் எழுதியது, முஸ்லிம்களுக்கே ஆச்சரியமாக இருந்திருக்கும், **’’இஸ்லாம் ஓர் இனியமார்க்கம்’’ நிகழ்ச்சிகளை நடத்தி மக்களை முஹம்மது அழைக்கவில்லை.** இஸ்லாமின் மரண கடிதங்களை அனுப்பி மிரட்டினார். ’’இஸ்லாமிய பிரச்சாரம்’’ என்றுச் சொல்லி, முஹம்மதுவையும், அவரது தோழர்களையும் நீங்கள் அவமானப்படுத்திவிட்டீர்கள். செய்யாத ஒன்றை செய்ததாகச் சொல்வது குற்றம்தானே!

**பாரா அவர்கள் எழுதியது:**

> *// இதை ஆராய்வதற்கு முதல் தடையாக இருப்பது, "அது அச்சுறுத்தலால் பரப்பப்பட்ட மதம்" என்கிற* ***முன் அபிப்பிராயம்****, அல்லது முன் முடிவு அல்லது முன் தீர்மானம். //*

**உமர் எழுதியது:**

பாரா அவர்களே ''அது அச்சுறுத்தலால் பரப்பப்பட்ட மதம்'' என்பது முன் அபிப்பிராயம் அல்ல, அது இஸ்லாமிய சரித்திர ஏடுகளில் எழுதப்பட்ட அசத்தலான நிஜம். இதனை அறிந்துக்கொள்ள, நீங்கள் ஆய்வு செய்த ரஹீக் புத்தகத்தில் ''மதினாவிற்கு முஹம்மது இடம் பெயர்ந்த பிறகு என்ன நடந்தது'' என்பதைப் பற்றிய அத்தியாயங்களை முன் அபிப்பிராயங்கள் இல்லாமல் அமைதியாக படித்துப் பாருங்கள். அதன் பிறகு என்னிடம் கேள்வி கேளுங்கள், நான் பதில் சொல்கிறேன்.

**பாரா அவர்கள் எழுதியது:**

> *// இந்த முன் தீர்மானம் அல்லது முன் அபிப்பிராயத்தை இஸ்லாத்தைக் காட்டிலும் வேகமாகப் பரப்பி வேரூன்றச் செய்தவர்கள்* ***மேற்கத்திய சரித்திர ஆசிரியர்கள். பெரும்பாலும் யூதர்கள். சிறுபான்மை கிறிஸ்துவ சரித்திர ஆய்வாளர்கள். //***

**உமர் எழுதியது:**

பாரா அவர்களே, உங்கள் ஆய்வு உண்மையாக இருந்தால், மேற்கண்ட வரிகளை நீங்களே எழுதியதாக இருந்தால்:

**1)** நீங்கள் குற்றம் சாட்டிய ''மேற்கத்திய சரித்திர ஆசிரியர்களின் பெயர்களை'' கொடுக்கமுடியுமா?

**2)** அவர்கள் எந்த புத்தகத்தில் இப்படி எழுதினார்கள்?

**3)** அந்த புத்தகங்களை நீங்கள் (பாரா) படித்துப் பார்த்தீர்களா? அவர்கள் சொன்ன விவரங்களின் உண்மைத் தன்மையை நீங்கள் எப்படி சரிப்பார்த்தீர்கள்?

**4)** மேலும், எந்த சரித்திர ஆசிரியர் யூதராக இருந்தார், அவரது புத்தகத்தில் எதனை நீங்கள் படித்தீர்கள்?

**5)** சிறும்பான்மை கிறிஸ்தவ சரித்திர ஆசிரியர்களின் புத்தகங்களை தரமுடியுமா?

**6)** உங்களுக்கு மேற்கண்ட புத்தகங்கள் எங்கே கிடைத்தது? கொஞ்சம் விலாசம் தரமுடியுமா? நீங்கள் எழுதியதைப் பார்த்தால், உங்கள் வீட்டு நூலகத்திலேயே இப்புத்தகங்களை வைத்துக்கொண்டு இருப்பதாகத் தெரிகிறது. அப்படியானால், அவைகளின் விவரங்களை சுலபமாக உங்களால் கொடுக்கமுடியுமே!

நீங்கள், இஸ்லாம் பற்றி 100 தொடர்களை எழுதினீர்கள், குறைந்த பட்சம் தமிழ் குர்-ஆனின் பெயரை குறிப்பிடவில்லை, ஹதீஸ்களை படிக்கவில்லை! இந்த இலட்சனத்தில் மேற்கத்திய சரித்திர ஆசிரியர்களை குற்றப்படுத்துகிறீர்கள்! யாரோ முஸ்லிம்கள் உங்களிடம் வாந்தி எடுத்ததை அப்படியே உங்களின் இரண்டு கைகளில் பிடித்து, உங்கள் புத்தகத்தில் தெளித்து இருந்திருக்கிறீர்கள் என்பது மட்டும் தெள்ளத் தெளிவாகத் தெரிகிறது.

குர்-ஆனும், ஹதீஸ்களும், இப்னு இஷாக், இப்னு ஹிஷாம், தபரி போன்ற இஸ்லாமிய சரித்திர நூல்கள் இல்லாமல் மற்றவர்களுக்கு எப்படி இஸ்லாமிய விவரங்கள் கிடைத்துவிடும். நீங்கள் குறிப்பிட்ட ரஹீக் புத்தகத்தில் உள்ளவைகள் எவைகள் என்று உங்களுக்குத் தெரியுமா? நான் மேலே குறிப்பிட்ட இஸ்லாமிய நூல்களில் உள்ளவைகளும் மேலும்

இஸ்லாமிய ஆரம்ப காலத்திலிருந்து பக்தியுள்ள முஸ்லிம்களால் எழுதப்பட்ட குர்-ஆன் விளக்கவுரைகளில் உள்ளவைகளும் தான்.

மேற்கண்ட வரிகளை எழுதியதற்காக நீங்கள் சரித்திரங்களை ஆய்வுச் செய்து எழுதும் தகுதியை மொத்தமாக இழக்கிறீர்கள் அல்லது ஆய்வு செய்யும் எழுத்தாளர்களுக்கு இழுக்காக மாறுகிறீர்கள்.

**பாரா அவர்கள் எழுதியது:**

> *// மிகவும் அற்பமானதொரு உதாரணத்தை மட்டும் பார்க்கலாம். முகம்மது நபியின் காலத்தில்* ***இஸ்லாத்தை முன்னிட்டு மொத்தம் சுமார் எழுபத்தைந்து அல்லது எண்பது யுத்தங்கள் நிகழ்த்தப்பட்டதாக அனைத்து மேற்கத்திய சரித்திர ஆய்வாளர்களும் சொல்கிறார்கள்.*** *அத்தனை யுத்தங்களிலும் ரத்த ஆறு பெருகியதென்றும் யுத்தக் கைதிகளை வாள்முனையில் மிரட்டி இஸ்லாத்தில் இணைத்ததாகவும் ஏராளமான சம்பவங்களை இந்தச் சரித்திர ஆய்வாளர்கள் பட்டியலிடுகிறார்கள். //*

**உமர் எழுதியது:**

நான் முந்தைய கட்டுரையில் ரஹீக் புத்தகத்திலிருந்து 50க்கும் அதிகமான போர்கள், வழிப்பறி கொள்ளைகள், திடீர் தாக்குதல்கள் பற்றிய விவரங்களை பட்டியலிட்டு கொடுத்துள்ளேன். நீங்கள் ஒன்று செய்யுங்கள், அந்த பட்டியலை எடுத்துக்கொண்டு, ரஹீக் புத்தகத்தையும் எடுத்துக்கொண்டு (உங்களிடம் தான் இப்புத்தகம் இருக்கிறதே! இருந்தது ஆனா படிக்கலே), உங்களுக்கு இஸ்லாம் பற்றி போதித்த, அல்லது நிலமெல்லாம் இரத்தம் தொடர்களின் ஒவ்வொரு அத்தியாயத்தையும் சரி பார்த்த திரு நாகூர் ரூமி அறிஞரிடம் சென்று, கேட்டுப்பாருங்கள். முஹம்மது 19 போர்களில் ஈடுபட்டார் என்ற ஆதார பூர்வமான விவரத்தை நான் ஹதிஸ்களிலிருந்து எடுத்துக் காட்டினேன். குர்-ஆனிலிருந்து ஐந்து போர்கள் பற்றிய வசனங்களை மேற்கோள் காட்டினேன். இப்போது யார் சொல்வது உண்மை?

- **ரஹீக்** சொல்வது உண்மையா?
- **ஹதீஸ்கள்** சொல்வது உண்மையா?
- **குர்-ஆன்** சொல்வது உண்மையா?
- **அல்லது பாரா** சொல்வது உண்மையா?

என்று திரு நாகூர் ரூமி அறிஞரிடம் கேட்டு தெரிந்துக் கொள்ளுங்கள்.

பாரா அவர்களே! ''முகம்மது நபியின் காலத்தில் இஸ்லாத்தை முன்னிட்டு மொத்தம் சுமார் எழுபத்தைந்து அல்லது எண்பது யுத்தங்கள் நிகழ்த்தப்பட்டதாக **அனைத்து** மேற்கத்திய சரித்திர ஆய்வாளர்களும் சொல்கிறார்கள்'' என்று எழுதியுள்ளீர்கள்.

உங்களிடம் உள்ள அந்த ''**அனைத்து**'' ஆய்வாளர்களின் பெயர்களையும், புத்தகங்களின் பெயர்களையும் அவர்கள் எந்த அத்தியாயத்தில், எந்த பக்கத்தில் இப்படி சொல்லியுள்ளார்கள் என்பதையும் சொல்லுங்கள் பார்க்கலாம். ஒருவேளை அவர்கள் சொல்லிய விவரங்கள், நான் மேலே குறிப்பிட்ட இஸ்லாமிய நூல்களில் இல்லையென்று நிருபியுங்கள் பார்க்கலாம். கொஞ்சம் இஸ்லாமிய கண்ணாடியை கழற்றிவிட்டு, முஸ்லிம்கள் எடுத்த வாந்தியை அப்படியே பிடித்த உங்கள் கைகளை டெட்டால் போட்டு கழுவிக்கொண்டு, இஸ்லாமிய நூல்களில் உள்ள சரித்திரத்தை படித்துப் பாருங்கள் உண்மை விளங்கும்.

**பாரா அவர்கள் எழுதியது:**

> *// உண்மையில் முகம்மது நபியின் காலத்தில் நடைபெற்ற யுத்தங்களாக* ***ஆதாரங்களுடன் கிடைப்பது மொத்தம் மூன்றுதான். பத்ரு, உஹைத், ஹுனைன்*** *என்கிற மூன்று இடங்களில் முஸ்லிம்கள் நேரடியாக யுத்தத்தில் ஈடுபட்டிருக்கிறார்கள்.* ***இஸ்லாம் குறித்து அல்லாமல், முகம்மது நபியின் வாழ்க்கை குறித்து ஆராய்ச்சி செய்திருக்கும்*** *மேற்கத்திய ஆய்வாளர்களின் நூல்களில் இந்த யுத்தங்கள் பற்றிய குறிப்புகள் இருக்கின்றன. உண்மையில் எண்பது யுத்தங்கள் அவர் காலத்தில் நடந்திருக்குமானால்,* ***இந்த வாழ்க்கை வரலாற்றாசிரியர்கள் அவற்றையும் அவசியம் பதிவு செய்திருப்பார்கள்.*** *மாறாக, மேற்சொன்ன மூன்று யுத்தங்கள் பற்றி மட்டுமே அவர்கள் பேசுகிறார்கள்.*
>
> *இதைக்கொண்டே, இஸ்லாத்தை முன்னிட்டு முகம்மது நபியின் காலத்தில் நிகழ்த்தப்பட்ட யுத்தங்கள் மூன்றுதான் என்கிற* ***முடிவுக்கு வரவேண்டியதாகிறது.*** *//*

**உமர் எழுதியது:**

இது என்ன! முரண்பட்ட விவரங்களைச் சொல்கிறீர்கள்? நீங்கள் எடக்கு மடக்காக எழுதுகிறீர்கள்.

**பாராவின் எடக்கு:**

முகம்மது நபியின் காலத்தில் இஸ்லாத்தை முன்னிட்டு மொத்தம் சுமார் எழுபத்தைந்து அல்லது எண்பது யுத்தங்கள் நிகழ்த்தப்பட்டதாக **அனைத்து** மேற்கத்திய சரித்திர ஆய்வாளர்களும் சொல்கிறார்கள்.

**பாராவின் மடக்கு:**

**இஸ்லாம் குறித்து அல்லாமல், முகம்மது நபியின் வாழ்க்கை குறித்து ஆராய்ச்சி** செய்திருக்கும் **மேற்கத்திய ஆய்வாளர்களின்** நூல்களில் இந்த யுத்தங்கள் பற்றிய குறிப்புகள் இருக்கின்றன. உண்மையில் எண்பது யுத்தங்கள் அவர் காலத்தில் நடந்திருக்குமானால், இந்த வாழ்க்கை வரலாற்றாசிரியர்கள் அவற்றையும் அவசியம் பதிவு செய்திருப்பார்கள். மாறாக, மேற்சொன்ன மூன்று யுத்தங்கள் பற்றி மட்டுமே அவர்கள் பேசுகிறார்கள்.

ஒரு பாராவில் "அனைத்து மேற்கத்திய ஆய்வாளர்கள்" 75 அல்லது 80 போர்கள் இஸ்லாமின் பெயரில் நடத்தப்பட்டது என்று சொல்கிறார்கள் என்று எழுதுகிறீர்கள். அடுத்த பாராவில் "மூன்று மட்டுமே" என்று சொல்கிறார்கள் என்று எழுதுகிறீர்கள். தமிழ் படங்களை அதிகமாக பார்ப்பீர்களோ! நகைச்சுவை நடிகர்களை மிஞ்சுவிடுவீர்கள் போல் இருக்கிறதே!

1) மூன்று போர்கள் என்று எழுதிய அந்த மேற்கத்திய சரித்திர ஆசிரியர்கள் யார் என்று சொல்லமுடியுமா?

2) அவர்களின் பெயர்கள், புத்தகங்களின் பெயர்களை கொடுக்கமுடியுமா? நான் அமேஜானின் வாங்கிக்கொள்வேன், புத்தகத்தின் பெயரை மட்டுமே கொடுங்கள்.

உங்களுடைய இரண்டு பத்திகளில் நீங்கள் பயன்படுத்திய வார்த்தை பிரயோகங்களின் வித்தியாசத்தை நான் கவனிக்காமல் இல்லை, பாரா அவர்களே. ஒரு பத்தியில் ''**இஸ்லாத்தை முன்னிட்டு**'' ஆய்வு செய்தவர்கள் என்றுச் சொல்கிறீர்கள். அடுத்த பத்தியில் ''**முகம்மது நபியின் வாழ்க்கை குறித்து**'' ஆய்வு செய்தவர்கள் என்று குறிப்பிடுகிறீர்கள். நீங்க என்னதான் வார்த்தைகளை மாற்றி எழுதினாலும், உண்மை மறைந்துவிடுமா? ராமாயணத்திலிருந்து இராமரை பிரிக்கமுடியுமா? முடியாதல்லவா? அது போலத்தான் இஸ்லாமிலிருந்து முஹம்மதுவை பிரிக்கமுடியாது.

''இஸ்லாமை'' ஆய்வு செய்தவர் என்ன முடிவுக்கு வருவாரோ, அதே முடிவுக்குத் தான் ''முஹம்மதுவை'' ஆய்வு செய்தவரும் வரவேண்டும். இஸ்லாம் தான் முஹம்மது. முஹம்மது தான் இஸ்லாம்.

முஹம்மதுவின் வாழ்க்கையை ஆய்வு செய்து, வெறும் மூன்றே போர்களைத் தான் அவர் செய்தார் என்றுச் சொன்ன அந்த அறிவாளி யார் என்று சொல்வீர்களா? அவர் எழுதிய புத்தகம் என்னவென்று சொல்வீர்களா? ஒருவேளை அந்த அறிவாளி இப்போது உயிரோடு இருந்தால், உலகில் அவர் எங்கு இருந்தாலும் சரி, நான் சென்று அவரைக் கண்டு வருவேன். பிளீஸ் அவரது பெயரையும், புத்தகத்தின் பெயரையும் சொல்வீர்களா? ஒரு கண்டிஷன், அவர் முஸ்லிமாக இருக்கக்கூடாது. ஒரு முஸ்லிமாக இருந்தாலும் முஹம்மது புரிந்தது 3 போர்கள் என்று ஆதாரபூர்வமாகச் சொல்லமுடியாதே! பைத்தியங்களால் மட்டுமே இப்படி சொல்லமுடியும்.

**பாரா அவர்கள் எழுதியது:**

> *// முகம்மது நபி மெக்காவிலிருந்து மதினாவுக்கு இடம் பெயர்ந்து சென்றது கி.பி.622-ம் ஆண்டு. பத்தாண்டுகளே அவர் மதினாவில் இருந்தார். கி.பி. 630-ல் மெக்காவை வெற்றி கொண்டதற்கு இரண்டாண்டுகள் கழித்துக் காலமாகிவிட்டார். (கி.பி.632) இந்தக் கணக்கில் பார்த்தால்,* ***ஆண்டுக்கு எட்டு யுத்தங்கள் வீதம் நடந்திருந்தால்தான் எண்பது யுத்தங்கள் சாத்தியம்.*** *அரேபியாவில் அல்ல; உலகில் வேறு எங்குமே கூட அத்தனை யுத்தங்கள் ஒரு சேர நடந்ததாகச் சரித்திரமில்லை. //*

**உமர் எழுதியது:**

உங்கள் லாஜிக்குக்கே வருகிறேன். ரஹீக் 52 போர்களை முஹம்மது செய்தார் என்றுச் சொல்கிறது (தனி மனிதர்களை கொல்லும் படி ரௌடிகளை அனுப்பி கொன்ற நிகழ்ச்சிகள் இந்த 52 பட்டியலில் இல்லை).

சௌதி மற்றும் பாகிஸ்தானின் முஸ்லிம் அறிஞர்களால் முதல் பரிசு பெற்ற ரஹீக்கின் படி, 10 ஆண்டுகளில் முஹம்மது 52 போர்களை புரிந்தார், ஆண்டுக்கு கணக்கிட்டால், 5 என்று வருகிறது. இஸ்லாமிய கணக்கின் படியே ஆண்டுக்கு 5 என்று வருகிறது. நீங்கள் சொல்வது 10 ஆண்டுகளுக்கு மூன்றே போர்கள் ஆகும். இரண்டுக்கும் இடையே அதிக வித்தியாசம் உள்ளது.

பின்லாடன் உயிரோடு இருந்தபோது, அவரோடு ஒரு மாதம் செலவிட்டு இஸ்லாமை கற்றுக்கொள்ளுங்கள் என்றுச் சொல்லி, உங்களை அவரிடம் பாகிஸ்தானுக்கு அனுப்பியிருந்திருக்க வேண்டும். ஒரே மாதத்தில், இல்லை ஒரே நாளில் இஸ்லாமை முழுவதுமாக உங்களுக்கு கற்றுக்கொடுத்து இருந்திருப்பார்.

உள்ளங்கை நெல்லிக்கணி என்றுச் சொல்வது போல, ரிகார்ட் பிரேக் இஸ்லாமை உள்ளங்கையில் வைத்துக்கொண்டு, ''உலகில் வேறு எங்குமே கூட அத்தனை யுத்தங்கள் ஒரு சேர நடந்ததாகச் சரித்திரமில்லை.'' என்று எழுதுகின்றீர்களே, இது நியாயமா? இப்படி உலகில் எங்கும் நடக்காத அநாகரீக செயல்கள் முஹம்மதுவினால் அந்த 10 ஆண்டுகளில் அரங்கேற்றப்பட்டபடியினால் தான் படித்தவர்களில் சிலர் (ஹி.ஹி. என்னையும் சேர்த்து தான்) அதனை கடுமையாக விமர்சிக்கிறார்கள். [இந்த பத்தியில் படித்தவர்கள் என்று நான் குறிப்பிட்டது, இஸ்லாமைப் பற்றி படித்தவர்களைத் தான்.]

**பாரா அவர்கள் எழுதியது:**

> *// ஆக, முகம்மது நபியின் காலத்தில் யுத்தங்களின் மூலம் இஸ்லாம் பரப்பப்படவில்லை என்கிற* ***முடிவுக்கே வரவேண்டியதாகிறது****. ஆதாரங்களுடன் உள்ள மூன்று யுத்தங்கள் கூட ஒரே தினத்தில் ஆரம்பித்து, நடந்து, முடிந்தவையாகவே இருக்கின்றன. அதாவது,* ***ஒருநாள் கலவரம்****. //*

**உமர் எழுதியது:**

யார் இந்த முடிவுக்கு வரவேண்டியது? நீங்களா? முஸ்லிம்களா? அல்லது முஸ்லிமல்லாதவர்களா? மக்களுக்காக நீங்கள் சிந்திக்க வேண்டியதில்லை, நீங்கள் இஸ்லாமிய போர்கள் பற்றிய முடிவுகளை எடுக்கத்தேவையில்லை. மக்களுக்கு சிந்திக்கத்தெரியும், இஸ்லாமிய சரித்திரங்களின் அடிப்படையில் சரியான முடிவுகளை எடுக்கத்தெரியும். தனிப்பட்ட முடிவுகளை நீங்கள் எடுத்துக்கொள்ளுங்கள், பொதுவான முடிவுகளை மக்கள் எடுத்துக்கொள்வார்கள்.

பாரா அவர்களே, உங்கள் வார்த்தைகளை படிக்க படிக்க அமுத சுரபி போன்று உங்கள் பிழைகள் (ஏமாற்று வேலைகள்) தெள்ளத்தெளிவாக தெரிகின்றன. உங்களுக்கு “கலவரத்துக்கும் போருக்கும் இடையேயுள்ள வித்தியாசம்'' என்னவென்றுத் தெரியுமா? அதாவது “ஒரு நாள் கலவரம்'' என்று மென்மையாக மூடிமறைக்கப் பார்க்கிறீர்கள். நீங்கள் குறிப்பிட்ட பத்ரு போர் எப்படி துவங்கியது என்று உங்களுக்குத் தெரியுமா? நீங்கள் படித்த இஸ்லாமிய புத்தகங்களும், உங்களுக்கு இஸ்லாமிய ஞானத்தை போதித்த போதி மரங்களாகிய முஸ்லிம்களும் உங்களுக்கு இதன் பின்னணியை சொல்லவில்லையா? மேற்கொண்டு படியுங்கள், பத்ரூ போரின் பின்னணியை அடுத்தடுத்த பத்தியில் கொடுத்துள்ளேன்.

**பாரா அவர்கள் எழுதியது:**

> *// முகம்மதுவுக்கும் மற்ற இறைத்தூதர்களுக்கும் உள்ள மிகப்பெரிய வித்தியாசம் என்னவெனில்,* ***முகம்மது ஒருவர்தான் இறைத்தூதராகவும் ஆட்சியாளராகவும் இருந்திருக்கிறார்****. //*

**உமர் எழுதியது:**

என் முந்தைய கட்டுரைகளில் நான் குறிப்பிட்டது போல, உங்களுடைய மேற்கண்ட வரிகள் எல்லாம் முஸ்லிம்கள் காலங்காலமாக எடுத்துக்கொண்டு இருக்கின்ற வாந்தியாகும்.

முகம்மது ஒருவர்தான் இறைத்தூதராகவும் ஆட்சியாளராகவும் இருந்திருக்கிறாரா? உங்களிடம் இருக்கும் குர்-ஆனை திருப்பி நான் சொல்லும் நபர்கள் பற்றி படித்துப்

பாருங்கள்? [உங்களிடம் தமிழ் குர்-ஆன் இல்லையென்று எனக்குத் தெரியும், எனவே ஆங்கில குர்-ஆனிலும் இவைகளை தேடிப்பார்க்கலாம்].

- தாவீது (தாவூத்) - குர்-ஆன் **2:251; 4:163; 5:78; 6:84; 17:55; 21:78; 21:79; 27:15; 27:16; 34:10; 34:13; 38:17; 38:21; 38:22; 38:24; 38:26; 38:30**
- சாலொமோன் (ஸுலைமான்) - குர்-ஆன் **2:102; 4:163; 6:84; 21:78; 21:79; 21:81; 27:15; 27:16; 27:17; 27:18; 27:27; 27:30; 27:36; 27:37; 27:38; 27:40; 27:42; 27:44; 34:12; 34:13; 34:14; 38:30; 38:34;**

இவ்வசனங்களில் தாவீதும் அவரது மகன் சாலொமோனும் இறைத்தூதர்களாகவும், அதே நேரத்தில் ஆட்சியாளர்களாகவும் இருந்ததாகவும் குர்-ஆன் சொல்கிறது. சிறிது சிந்தித்து எழுதுங்கள், அரைகுறை ஞானம் ஆபத்து என்பதை நீங்கள் அறிவீர்கள். ஆட்சியாளராக முஹம்மது இருந்தார் அதனால் வன்முறையில் ஈடுபட்டார் என்றுச் சொல்லி அவரை காப்பாற்றவேண்டிய அவசியம் இல்லை. அரசனாக இருந்தாலும், ஆண்டியாக இருந்தாலும் தவறு செய்தால் தவறு தான்.

**பாரா அவர்கள் எழுதியது:**

> *// மதப்பிரசாரம் மட்டுமே அவரது பணியாக இருக்கவில்லை. மாறாக, அவர் மெக்காவிலிருந்து மதினாவுக்கு இடம்பெயர்ந்த நாளாக ஒட்டுமொத்த இஸ்லாமியர்களையும் கட்டிக்காக்கும் ஒரு பெரிய இனத்தலைவராகப் பொறுப்பேற்க நேர்ந்தது.* ***மிகக் குறுகிய காலத்தில் மதினாவாழ் அரேபியர்கள் அத்தனைபேருமே இஸ்லாத்தை ஏற்றுக்கொண்டுவிட்டபடியால்****, மதினாவின் முடிசூடாத மன்னராகவே அவர் ஆகிப்போனார். //*

**உமர் எழுதியது:**

அய்யா சாமி, முதலில் ரஹீக் புத்தகத்தில் முஹம்மதுவின் மதினா வாழ்க்கையை படியுங்கள். அதன் பிறகு எழுதுங்கள். மதினாவில் முஹம்மது எத்தனைப்பேரை கொன்றார்? அதைச் சுற்றியுள்ள இனமக்களை எப்படி அழித்தார்? தன்னை விமர்சித்தவர்களின் கதையை எப்படி முடித்தார் என்பதை படித்தீர்களானால், இப்படி "மிகக் குறுகிய காலத்தில் மதினாவாழ் அரேபியர்கள் அத்தனைபேருமே இஸ்லாத்தை ஏற்றுக்கொண்டு விட்டபடியால்" என்று உங்களால் எழுதமுடியாது.

மதினாவாழ் அரேபியர்கள், அதைச் சுற்றியுள்ளவர்கள் மிகக் குறுகிய காலத்தில் ஏன் இஸ்லாமை ஏற்றுக்கொண்டார்கள்?

ஆள்பலம் அதிகமுள்ள ஒரு சக்தி, ஆடிப்போய் இருக்கும் ஒருவனிடம் வந்து, "உயிர் வேண்டுமா? அல்லது இஸ்லாமை ஏற்கிறாயா?" என்று கேள்வி கேட்டால், அவன் என்ன பதில் சொல்லுவான்? இந்த கேள்விக்கு பெரும்பான்மையானவர்களின் பதில் என்னவாக இருக்கும் என்று உங்களுக்குத் தெரியுமென்று நினைக்கிறேன்.

ஒரு உதாரணத்தை இங்கு சுட்டிக்காட்டவேண்டும். முஹம்மது தம்மை சுற்றியுள்ள இதர நாட்டு மன்னர்களுக்கு கடிதங்கள் எழுதினார். நான் அல்லாஹ் அனுப்பிய நபி, நீ இஸ்லாமை ஏற்றால் சரி, இல்லையென்றால், என் வீரர்களின் படை உன் நாட்டை பிடிக்கும். இஸ்லாமை ஏற்கிறாயா? அல்லது செத்துமடிகிறாயா? இது தான் முஹம்மது அனுப்பிய கடிதத்தின்

சுருக்கம். நான் சொல்வதை நம்பவேண்டாம். உலக முஸ்லிம்களால் முதல் பரிசு பெற்ற ரஹீக் புத்தகத்திலிருந்து, ஒரு கடிதத்தை உங்களுக்காக இங்கு தருகிறேன்.

**இது தான் பிரச்சாரத்தின் மூலமாக இஸ்லாமை பரப்பும் விதமா?**

இப்படிப்பட்ட கடிதங்களை அனுப்பினால், ஏன் குறுகிய காலத்தில் அரேபியா முழுவதும் ரௌடிகளின் கைப்பிடியில் வராது?

*// நூல்: ரஹீக், பக்கம் 399*

*மூலம்:* www.tamililquran.com/history.php

*8) ஓமன் நாட்டு அரசருக்குக் கடிதம்*

*நபியவர்கள் ஓமன் நாட்டு அரசர் 'ஜைஃபர்' மற்றும் அவரது சகோதரர் 'அப்து'‘க்குக் கடிதம் அனுப்பினார்கள். அதன் வாசகமாவது:*

*‘‘அளவற்ற அருளாளனும், நிகரற்ற அன்புடையோனுமாகிய அல்லாஹ்வின் பெயரால்...*

*அல்லாஹ்வின் தூதர் முஹம்மது, அல் ஜுலந்தாவின் மகன்களான ஜைஃபர் மற்றும் அப்துக்கு எழுதுவது. நேர்வழியை பின்பற்றுபவருக்கு ஈடேற்றம் உண்டாகட்டும்! நான் உங்களிருவருக்கும் இஸ்லாமிய அழைப்பு விடுக்கின்றேன். நீங்கள் இருவரும் இஸ்லாமை ஏற்றுக் கொள்ளுங்கள் ஈடேற்றம் பெறுவீர்கள். நான் மக்கள் அனைவருக்கும் அனுப்பப் பட்ட அல்லாஹ்வின் தூதராவேன். உயிருடன் இருப்பவர்களை அச்சமூட்டி எச்சரிக்கை செய்வதற்கும், அல்லாஹ்வை நிராகரிப்பவர்களுக்கு நிச்சயம் வேதனை உண்டு என்பதை அறிவிப்பதற்கும் அல்லாஹ் என்னைத் தூதராக அனுப்பியிருக்கின்றான்.* ***நீங்கள் இருவரும் இஸ்லாமை ஏற்றுக் கொண்டால் உங்களையே நான் ஆட்சியாளர்களாக ஆக்கி விடுவேன். நீங்கள் இருவரும் இஸ்லாமை ஏற்றுக்கொள்ள மறுத்துவிட்டால் நிச்சயம் உங்களின் ஆட்சி கவிழ்ந்துவிடும் என்பதில் சந்தேகமேயில்லை. எனது வீரர்கள் உங்களது நாட்டிற்கு வெகு விரைவில் வந்திறங்குவார்கள். எனது நபித்துவம் உங்களது ஆட்சியை வெல்லும்.*** *’’ //*

இது 'உங்களுக்கு விருப்பமிருந்தால் இஸ்லாமில் வந்து சேருங்கள் என்று கூப்பிடும் அழைப்பிதழா?' அல்லது சாவு மணி காத்திருக்கிறது என்ற எச்சரிக்கையா?

இஸ்லாமை ஏற்றுக்கொண்டால், அந்த நாட்டு அரசனையே ஆட்சியாளராக முஹம்மது ஆக்கிவிடுவாராம். இதன் அர்த்தமென்ன? நீ இஸ்லாமை ஏற்றாலும் ஏற்காவிட்டாலும், நான் வந்து உன் நாட்டை பிடிப்பது உறுதி, நீ இஸ்லாமை ஏற்றால், உன்னையே நான் உன் நாட்டுக்கு தலைவராக நியமிப்பேன், இஸ்லாமை ஏற்காவிட்டால் நீ மடிவது உறுதி. யாருடைய ஆட்சியை யார் பிடுங்குவது? இது ரௌடித்தனம் இல்லையா? இந்தியாவிற்கு வெள்ளையர்கள் வந்து நம் நாட்டு குறுநில மன்னர்களிடம், எங்களுக்கு அடிபணிந்து, ஆண்டாண்டு எங்களுக்கு கப்பம் கட்டினால், உங்கள் ஊர்களுக்கு உங்களையே ஆட்சியாளர்களாக ஆக்குவோம் என்றுச் சொல்வது போல இருக்கிறது! அல்லவா? முஹம்மதுவிற்கும் ஆங்கிலேயர்களுக்கும் என்ன வித்தியாசம்?

**பாரா அவர்கள் எழுதியது:**

*// ஆகவே, முஸ்லிம்களுக்கு எதிரான குறைஷிகளின் யுத்தம் என்பது காலப்போக்கில் மதினா மக்களுக்கு எதிரான மெக்காவாசிகளின் யுத்தம் என்று ஆகிவிட்டது. மதினாவைத் தாண்டி இஸ்லாம் பரவத் தொடங்கியபோது, எங்கெல்லாம் முஸ்லிம்கள் அபாயத்தைச் சந்திக்க நேரிடுகிறதோ, அங்கெல்லாமும் பிரச்னையைத் தீர்க்கவேண்டிய பொறுப்பு முகம்மது நபியைச் சேர்ந்தது.* ***கட்டக்கடைசி வினாடி வரை அவர் யுத்தங்களைத் தவிர்ப்பதற்கான முயற்சிகளையே*** *மேற்கொண்டிருப்பதாகச் சரித்திரம் சுட்டிக்காட்டுகிறது.* ***தவிர்க்கவே முடியாத மூன்று சந்தர்ப்பங்களில்தான் முகம்மது, யுத்தத்துக்கான உத்தரவு அளித்திருக்கிறார். //***

**உமர் எழுதியது:**

என்னவோ நீங்க தான் முஹம்மதுவின் படைத்தளபதியாக இருந்தமாதிரி, ரொம்பவும் நம்பிக்கையாக எழுதுகிறீர்கள்! அய்யா பாரா அவர்களே! போதுமைய்யா! உங்களுடைய இஸ்லாமிய விசுவாசம் தாங்கமுடியல.

இந்த பத்தியில் நீங்கள் "**சரித்திரம்**" என்று குறிப்பிடுவது எதனை? அரைவேக்காடுகள் எழுதிய இஸ்லாமிய புத்தகங்களையா?

**பாரா அவர்கள் எழுதியது:**

*// அந்த மூன்று யுத்தங்களுள்,* ***பத்ரு யுத்தம் மிகவும் முக்கியமானது****. இந்த யுத்தத்தில் பங்குபெற்ற* ***முஸ்லிம்கள் மொத்தம் 313 பேர்****. எதிரிகளாக இருந்த குறைஷிகளின் படையில்* ***ஆயிரத்துக்கும் மேற்பட்ட வீரர்கள் இருந்தார்கள்****. முஸ்லிம்களின்மீது வலிந்து திணிக்கப்பட்ட இந்த யுத்தத்தில் அவர்கள் பெற்ற வெற்றி, வியப்புக்குரியது. (****முதலில் படையெடுத்து வந்தவர்கள் குறைஷியர்தாம்.****) ஆயிரக்கணக்கான குறைஷி வீரர்களை எப்படி வெறும் முந்நூறு முஸ்லிம் வீரர்கள் வென்றார்கள் என்கிற கேள்விக்கு அறிவியல்பூர்வமான பதில் ஏதும் கிடையாது. ஆனாலும் ஜெயித்தார்கள். //*

**உமர் எழுதியது:**

அது எப்படி (முதலில் படையெடுத்து வந்தவர்கள் குறைஷியர்தாம்.) என்று அடைப்பிற்குள் எழுதுகிறீர்கள். இந்த விவரத்தை எங்கு படித்தீர்கள்? குர்-ஆனிலா? ஹதீஸ்களிலா? அல்லது ரஹீக் புத்தகத்திலா?

உங்களுக்கு ரஹீக் புத்தகத்திலிருந்து பத்ரூ வழிப்பறி கொள்ளையின் பின்னணியை கொஞ்சம் எடுத்துக்காட்டவேண்டும் (பத்ரூ போர் இல்லை, அது வழிப்பறிக்கொள்ளை).

**பத்ரூவின் பின்னணி:**

மதினாவிற்கு முஸ்லிம்கள் இடம்பெயர்ந்துச் சென்றார்கள். அதன் பிறகு, மதினாவிற்கு சில மைல்கள் தூரத்தில் சென்றுக்கொண்டு இருந்த குறைஷிகளின் வியாபார கூட்டங்களை வழிமறைத்து, அவர்களின் பொருட்களை கொள்ளையடிப்பதற்கு முஹம்மது தம் சகாக்களோடுச் சென்றார். இதனை அறிந்த குறைஷிகள், மக்காவிலிருந்து தங்கள் வியாபார செல்வங்களை பாதுகாக்க 1000 பேரோடுச் சென்றார்கள். கொள்ளையடிக்கச் சென்ற அல்லாஹ்வின் கூட்டத்துக்கும், தங்கள் வியாபார பொருட்களைக் காக்கச்சென்ற குறைஷிகளுக்கும் இடையே நடைப்பெற்ற போர் தான் பத்ரூ யுத்தம்.

இது உங்களுக்கு "**ஒரு நாள் கலவரமாகத் தெரிகின்றதா?**" பாரா அவர்களே!

உங்களுக்காக "ரஹீக் புத்தகத்திலிருந்து பத்ரு போரின் காரணத்தை இங்கு பதிக்கிறேன்", தயவு செய்து படித்துக்கொள்ளுங்கள். அதன் பிறகு இதனை முதலில் தொடங்கியவர்கள் யார் என்று முடிவு செய்யுங்கள்.

*// நூல்: ரஹீக், பக்கம் 220 (மூலம்:* www.tamililquran.com/history.php)

போருக்குரிய காரணம்

*"உஷைரா' என்ற போரைப் பற்றி நாம் முன்பு குறிப்பிட்டபோது* ***மக்காவிலிருந்து ஷாமிற்கு சென்று கொண்டிருந்த வியாபாரக் கூட்டம் ஒன்று நபி (ஸல்) அவர்களிடமிருந்து தப்பித்து விட்டது*** *என்று கூறியிருந்தோம்.* ***இந்த வியாபாரக் கூட்டம் ஷாமிலிருந்து மக்காவிற்கு திரும்பும் நாள் நெருங்கிய போது இதன் செய்தியை அறிந்து*** *வருவதற்காக தல்ஹா இப்னு உபைதுல்லாஹ், ஸஈது இப்னு ஜைது (ரழி) ஆகிய இருவரை நபி (ஸல்) மதீனாவின் வடக்குத் திசையின் பக்கம் அனுப்பினார்கள். இவ்விருவரும் 'ஹவ்ரா' என்ற இடத்தை அடைந்து அங்கு தங்கியிருந்தனர். அபூ ஸுஃப்யான் வியாபாரக் கூட்டத்துடன் அவ்விடத்தை அடைந்த போது அவ்விருவரும் மதீனாவிற்குத் திரும்பி, செய்தியை நபி (ஸல்) அவர்களிடம் கூறினார்கள்.*

*இந்த வியாபாரக் கூட்டம் மிகப்பெரிய அளவில் குறைஷித் தலைவர்களுக்குரிய செல்வங்களுடன் சென்று கொண்டிருந்தது. இவர்களிடம் 50,000 தங்க நாணயங்களுக்குக் குறையாத அளவு வியாபாரப் பொருட்கள் 1,000 ஒட்டகங்களில் வந்து கொண்டிருந்தன. ஆனால், இவ்வளவு பெரிய வியாபாரக் கூட்டத்தைப் பாதுகாப்பதற்கு 40 வீரர்கள் மட்டுமே இருந்தனர்.*

*மக்காவாசிகளுக்கு பொருளாதார ரீதியாக மிகப்பெரிய சேதத்தை உண்டு பண்ணுவதற்கு இது முஸ்லிம்களுக்கு கிடைத்த பெரும் வாய்ப்பாகும். இந்த சேதத்தை ஏற்படுத்திவிட்டால் காலங்காலமாக காஃபிர்களின் உள்ளங்கள் துடிதுடித்துக் கொண்டேயிருக்கும். இப்போது நபி (ஸல்) முஸ்லிம்களுக்கு அறிவிப்புச் செய்தார்கள். "****இதோ... குறைஷிகளின் வியாபாரக் கூட்டம் அவர்களது பொருட்களுடன் வருகிறது. அக்கூட்டத்தை நோக்கி நீங்கள் புறப்படுங்கள். அல்லாஹ் அந்தப் பொருட்களை உங்களுக்கு அளிக்கக் கூடும்****" என்று நபி (ஸல்) கூறினார்கள்.*

*இப்போரில் கலந்துகொள்ள வேண்டுமென நபி (ஸல்) எவரையும் வலியுறுத்தவில்லை. காரணம் வியாபாரக் கூட்டத்திற்குப் பதிலாக மக்காவின் படையினருடன் பத்ர் மைதானத்தில் பெரிய அளவில் மூர்க்கமான சண்டையும் மோதலும் நிகழுமென்று அவர்கள் எதிர்பார்க்கவில்லை. அதாவது, செல்வங்களுக்குப் பதில் சண்டை நிகழுமென்று அப்பொழுது நபி (ஸல்) அவர்களுக்குத் தெரியாததால் இப்பயணத்தில் கலந்து கொள்வது அவரவரின் விருப்பம் என்று நபி (ஸல்) விட்டு விட்டார்கள். இதற்கு முன்பு தாங்கள் கண்ட சிறிய பெரிய ராணுவப் பயணங்களில் நிகழ்ந்ததைப் போன்றுதான் இந்தப் பயணத்திலும் நிகழும் என்றெண்ணி அதிகமான நபித்தோழர்கள் இப்பயணத்தில் கலந்துகொள்ளாமல் மதீனாவிலேயே தங்கிவிட்டனர். அதை நபி (ஸல்) அவர்களும் குற்றமாகக் கருதவில்லை. //*

பழிக்குபழி வாங்குகின்ற ஒரு மார்க்கத்தையா நீங்கள் அமைதியான மார்க்கமென்று சொல்கிறீர்கள்?

- வியாபார கூட்டத்தை கொள்ளையடிக்கச் சென்றவர்கள் யார்?
- மக்காவிலிருந்து 1000 பேரை ஏன் குறைஷிகள் திடீரென்று தயார்படுத்திக் கொண்டுச் சென்றார்கள்?
- வெறும் 40 பேரைக்கொண்டு, வியாபாரிகள் சென்றுக்கொண்டு இருக்கும் போது, 313 பேரைக்கொண்டு அவர்களை தாக்கச் சென்றவர்கள் யார்?

பாரா அவர்களே, இப்போது சொல்லுங்கள், பத்ரு போரை யார் முதலில் துவக்கினார்கள்? முஹம்மதுவா? அல்லது குறைஷிகளா?

**பாரா அவர்கள் எழுதியது:**

> *// இந்த யுத்தத்தில் அடைந்த தோல்விக்குப் பழிதீர்க்கும் விதமாக குறைஷிகள் தொடுத்த அடுத்த யுத்தம்தான் உஹைத் யுத்தம். (அதாவது, உஹைத் என்கிற இடத்தில் நடந்த யுத்தம்.) முகம்மது ஓர் இறைத்தூதரே ஆனாலும், இதுவும் வலிய வந்த யுத்தமே ஆனாலும் இந்தப் போரில் முஸ்லிம்கள் தோல்வியையே சந்திக்க நேர்ந்தது. இந்த யுத்தத்தில் முகம்மது நபியே வாளேந்தி, கலந்துகொண்டிருப்பதாகத் தெரிகிறது. அப்படியும் முஸ்லிம்கள் இதில் தோல்வியே அடைந்தார்கள்.*
>
> *மூன்றாவது யுத்தமான ஹுனைன் போருக்குக் குறைஷிகள் காரணமல்ல. மெக்கா நகரின் குறைஷி இனத்தவரின் ஜென்மப்பகையாளிகளான ஹவாஸின் என்கிற இன்னொரு அரபு இனத்தவர்களே இந்தப் போரின் சூத்திரதாரிகள். குறிப்பாக மாலிக் இப்னு அவ்ஃப் அன்சாரி என்கிற அந்த இனத்தலைவர்.*
>
> *பத்ரு போரில் குறைஷிகளை முஸ்லிம்கள் வெற்றி கொண்டதிலிருந்தே அவருக்கு ஒரு பதற்றம் இருந்தது. தங்களது பகையாளிகள் என்றாலும், குறைஷிகள் பெரிய வீரர்கள். அவர்களையே போரில் வெற்றி கொண்டவர்கள் என்றால், முஸ்லிம்களைச் சாதாரணமாக எண்ணிவிடமுடியாது. நாளைக்கு இந்த முஸ்லிம்கள் நம்மையும் தாக்கினால் என்னாவது என்கிற தீவிர முன் ஜாக்கிரதை உணர்வுடன் தாமாகவே வலிந்து தம் இனத்தவரைத் திரட்டி, தோழமையான பிற சாதியினரையும் உடன் இணைத்துக்கொண்டு முஸ்லிம்களுடன் யுத்தம் செய்யக் கிளம்பினார் மாலிக் இப்னு அவ்ஃப் அன்சாரி. //*

**உமர் எழுதியது:**

இவைகள் பற்றி தேவைப்படும் போது தனிக்கட்டுரையாக பார்ப்போம்.

**பாரா அவர்கள் எழுதியது:**

> *// ஒரு முழு நாள் நடந்த இந்த யுத்தத்தில் முஸ்லிம்களுக்கு வெற்றி கிடைத்தது.இந்த மூன்று யுத்தங்கள்தான் முகம்மது நபி உயிருடன் இருந்த காலத்தில் முஸ்லிம்கள் கலந்துகொண்ட யுத்தங்கள். இவை தவிர உஷைரா யுத்தம், அப்வா யுத்தம், சவீக் யுத்தம், சஃப்வான் யுத்தம், துமத்துல் ஜந்தல் யுத்தம், தபுக் யுத்தம், ஜாத்துர் யுத்தம், நுலைர் யுத்தம்* ***என்று ஏராளமான யுத்தங்கள் நடந்ததாக மேற்கத்திய சரித்திர ஆசிரியர்கள் சொன்னாலும் இந்த யுத்தங்கள் நடந்ததற்கான ஆதாரங்கள் ஏதுமில்லை****. சில சந்தர்ப்பங்களில் யுத்த மேகங்கள் சூழ்ந்தது உண்மையே. ஆனால் பெரும்பாலும் பேச்சுவார்த்தைகளில் யுத்தம் தவிர்க்கப்பட்டிருப்பதாகவே தெரிகிறது. மேலும் சில யுத்தக்களங்களில் முகம்மது நேரில் கலந்துகொள்ள வருகிறார் என்று கேள்விப்பட்டு, யுத்தம் செய்ய வந்தவர்கள் பின்வாங்கிப் போனதாகவும் சில வரலாற்றாசிரியர்கள் தெரிவிக்கிறார்கள். //*

**உமர் எழுதியது:**

மூன்று யுத்தங்களைத் தவிர, இதர யுத்தங்கள் ஆதாரமில்லாதவைகளா? அவைகள் மேற்கத்திய சரித்திர ஆசிரியர்கள் புனைந்த பொய்யான விவரங்களா?

**அப்படியானால், ரஹீக் புத்தகத்தை என்ன செய்வது?**

முஸ்லிம்களின் நண்பன், இஸ்லாமை கக்கும் காவலன் மற்றும் எழுத்தாளனாகிய பா. ராகவன் சொல்கிறேன், "**முஸ்லிம்களே, ரஹீக் புத்தகத்தை குப்பையில் போட்டுவிடுங்கள், ஏனென்றால், அதில் 50க்கும் அதிகமான போர்களை முஹம்மது புரிந்தார் என்ற பொய் சொல்லப்பட்டுள்ளது, இது மேற்கத்திய சரித்திர ஆசிரியர்களின் சூழ்ச்சி மற்றும் யூதர்களின் கைவேலை**" என்று ஒரு அறிக்கையை முஸ்லிம் சமுதாயத்துக்கு நீங்கள் கொடுக்கமுடியுமா?

அது எப்படி என்னால் இப்படி அறிக்கையிடமுடியும்? என்று கேட்பீர்களானால், மேற்கண்ட பத்தியில் நீங்கள் எதை எழுதியுள்ளீர்கள், இதைத்தானே! உங்களின் மேற்கண்ட பத்திக்கும், மேலேயுள்ள அறிக்கைக்கும் என்ன வித்தியாசம் இருக்கிறது என்று கருதுகிறீர்கள்?

[முஸ்லிம்களே! ரஹீக் புத்தகத்தை குப்பையில் போடுவதற்கு முயலாதீர்கள், அப்படி செய்வீர்களானால், அந்த புத்தகத்தோடு கூட புகாரி, முஸ்லிம் போன்ற ஹதீஸ்களையும், குர்-ஆனையும் நீங்கள் குப்பையில் போடவேண்டிய நிலைக்கு தள்ளப்படுவீர்கள். ஏனென்றால், ரஹீக் புத்தகத்தில் பல நூறு மேற்கோள்கள் ஹதீஸ்கள் மற்றும் குர்-ஆனிலிருந்து எடுக்கப்பட்டுள்ளன.]

**பாரா அவர்கள் எழுதியது:**

> *// முகம்மது நபி ஒரு சிறந்த போர் வீரரா, யுத்த தந்திரங்கள் அறிந்தவரா என்பது பற்றிய போதுமான ஆதாரங்கள் ஏதும் நமக்குக் கிடைப்பதில்லை. //*

**உமர் எழுதியது:**

இதை உங்களுக்குச் சொன்னவர் யார்? அப்படி எத்தனை இஸ்லாமிய சரித்திர நூல்களை படித்து கிழித்துவிட்டீர்கள் என்றுச் சொல்லி இப்படி எழுதுகிறீர்கள்?

போங்கைய்யா! போய் ஹதீஸ்களை படிங்கையா? சுன்னி முஸ்லிம் பிரிவுக்கு 6 ஹதீஸ் தொகுப்புக்கள் உள்ளன. ஷியா பிரிவு ஹதீஸ்களை படிக்கவில்லையென்றாலும் பரவாயில்லை. சுன்னி பிரிவு நூல்களை படிங்கைய்யா? ரஹீக் புத்தகத்தை படிங்கைய்யா! இப்னு இஷாக்கின் சரித்திரத்தை படிங்கைய்யா!

முஹம்மது ஒரு சிறந்த யுத்த வீரரா? அவருக்கு போர்த் தந்திரங்கள் தெரியுமா? போன்றவைகளை அறிவதற்கு போதுமான ஆதாரங்கள் இல்லை என்று பாரா சொல்கிறாரே! இந்த அநியாயத்தை [தட்டிக்]கேட்க முஸ்லிம்களிலில் யாருமில்லையா!

**பாரா அவர்கள் எழுதியது:**

> *// ஆனால் மக்கள் செல்வாக்குப் பெற்ற ஒரு பெருந்தலைவராக அவர் இருந்தபடியால் இயல்பாகவே **அச்சம் கலந்த மரியாதை இஸ்லாத்தின் எதிரிகளுக்கும் இருந்திருக்கிறது**. //*

**உமர் எழுதியது:**

இப்படி வேண்டுமானால் சொல்லிக்கொள்ளலாம், **அச்சம் 99%, மரியாதை 1%.**

வாசகர்கள் நன்றாக கவனிக்கவேண்டும். யாருக்கு "அச்சம் கலந்த மரியாதை" இருந்ததாம்? "எதிரிகளுக்கு" இருந்ததாம். முஹம்மதுவின் எதிரிகள், அவரை எப்படி தீர்த்துக்கட்டலாம், அவர் எப்போது மண்டையை போடுவார் என்று காத்துக்கொண்டு இருந்தார்கள். அவர்களுக்கு இவர் மீது எப்படி மரியாதை இருக்கும்? கவிதைக்காக பொய் சொல்லலாம், சரித்திரம் பற்றி எழுதும் போதும் பொய் சொல்லவேண்டுமா?

**பாரா அவர்கள் எழுதியது:**

> *// அதே சமயம், முகம்மதின் தோழர்கள் பலர் மாபெரும் வீரர்களாக இருந்திருக்கிறார்கள். பின்னாளில் கலீஃபாக்களான உமர், அலி போன்றவர்கள், போர்க்களங்களில் காட்டிய வீரத்துக்காகவே இன்றளவும் நினைக்கப்படுபவர்களாக இருந்திருக்கிறார்கள். (முகம்மது நபியின் காலத்துக்குப்பின் நடந்த யுத்தங்கள் பிறகு வரும்.) //*

**உமர் எழுதியது:**

ஓ... உமர் மற்றும் அலி போன்றவர்கள் தாங்கள் போர்க்களங்களில் புரிந்த வீரத்துக்காகத் தான் நினைக்கப்படுகிறார்களா, அவர்களின் நன்னடத்தைக்காக இல்லையா?

முஹம்மது மூன்று போர்கள் மட்டும் செய்தார்கள் என்று மார்தட்டும் பாரா அவர்களே, அவரது தோழர்களாகிய அபூ பக்கரும், உமரும், அலியும் ஏன் போர் செய்தார்கள்? அவர்களுக்கு போர் செய்யவேண்டிய அவசியம் வந்திருக்கவேண்டியதில்லையே? அவைகள் பற்றி நீங்கள் எழுதும் போது, நாம் அவைகளை ஆய்வு செய்வோம்.

**பாரா அவர்கள் எழுதியது:**

> *// இவை ஒருபுறமிருக்க, தொடர்ந்து போர் அச்சுறுத்தல்களும் நிம்மதியின்மையும் இருந்துகொண்டே இருந்ததால் மதினாவில் நிரந்தர அமைதிக்கான ஓர் ஏற்பாட்டைச் செய்யவேண்டிய கட்டாயம் முகம்மதுவுக்கு ஏற்பட்டது. மதத்தலைவராக அல்லாமல், ஓர் ஆட்சியாளராக இதனைச் செய்யவேண்டிய கடமை அவருக்கு இருந்தது என்பதை நினைவில் கொள்ள வேண்டும்.*
>
> *முகம்மது ஓர் உபாயம் செய்தார். மெக்காவிலிருந்து அவருடன் மதினாவுக்கு வந்த முஸ்லிம்கள் ஒவ்வொருவரையும், மதினாவாழ் மக்கள் தம் உறவினராக ஏற்றுக்கொள்ள வேண்டும் என்று கேட்டுக்கொண்டார். அதாவது, முகம்மதுவுடன் மெக்காவிலிருந்து வந்த ஒவ்வொரு ஆணையும் பெண்ணையும் குழந்தையையும், ஒவ்வொரு மதினாவாசியும் தம் உறவினராக மானசீகமாக சுவீகரித்துக்கொள்வது. இதன்மூலம் மெக்கா முஸ்லிம்களுக்கும் மதினா முஸ்லிம்களுக்கும் பிரச்னை ஏதும் உண்டாகாது. பொது எதிரி யாராலாவது பிரச்னை வந்தாலும் இரு தரப்பினரும் இணைந்தே எதிர்கொள்வார்கள். //*

**உமர் எழுதியது:**

பாரா அவர்களே! இந்த ஏற்பாட்டை முஹம்மது மதினாவிற்கு சென்றவுடனேயே செய்துள்ளார், நீங்கள் சொல்வது போல, பல ஆண்டுகளுக்கு பிறகு அல்ல.

**பாரா அவர்கள் எழுதியது:**

> *// அடுத்தபடியாக மதினாவாழ் யூதர்கள். முன்பே பார்த்தபடி அன்றைக்கு மதினாவில் யூதர்கள் அதிகம் வசித்துக்கொண்டிருந்தார்கள். ஆனாலும் மெக்கா முஸ்லிம்களும் மதினா முஸ்லிம்களும் இணைந்தபோது அவர்களின் பலம், யூதர்களின் பலத்தைக் காட்டிலும் அதிகரித்துவிட்டிருந்தது. ஆகவே முகம்மது நபி, மதினாவில் வசிக்கும் யூதர்கள், அங்குள்ள முஸ்லிம்களுடன் இணக்கமாக நடந்துகொள்ளவேண்டும்; ஒருத்தருக்கொருத்தர் உதவிகள் செய்துகொண்டு வாழவேண்டும் என்று வேண்டுகோள் விடுத்தார். வெறும் வேண்டுகோள் அல்ல அது. ஓர் அதிகாரபூர்வ அரசு அறிக்கையே வெளியிட்டார். அந்த அறிக்கையில் முஸ்லிம்கள் மற்றும் யூதர்களின் உரிமைகள் குறித்தும் அவர்களது சுதந்திரம் குறித்தும் திட்டவட்டமான ஷரத்துகள் இடம்பெற்றிருந்தன.*
>
> *"நமது குடியரசில் தம்மை இணைத்துக்கொள்ளும் யூதர்களின் உரிமைகள் பாதுகாக்கப்படும். அவர்கள் முஸ்லிம்களுக்குச் சம உரிமை படைத்தவர்களாவார்கள். யூதர்கள் தமது மத வழக்கங்களைப் பின்பற்றி வாழ எந்தத் தடையும் இல்லை. அனைத்து இனக்குழுக்களையும் உள்ளடக்கிய மதினாவாழ் யூதர்கள், முஸ்லிம்களுடன் இணைந்து உருவாக்குகிற தேசம் இது."*
>
> *"முகம்மது நபி, ஓர் ஆட்சியாளராக, அதிகாரபூர்வமாக வெளியிட்ட முக்கியமான முதல் அறிக்கை இது. //*

**உமர் எழுதியது:**

இந்த அறிக்கையை எப்போது முஹம்மது கொடுத்தார்? இதனை நீங்கள் எந்த இஸ்லாமிய மூல நூலிலிருந்து எடுத்தீர்கள் என்று ஆதாரத்தை காட்டமுடியுமா?

யூதர்கள், அரேபிய தீபகர்ப்பத்தில் இருக்கக்கூடாது என்று கங்கணம் கட்டிக்கொண்டு செயல்பட்டவர் முஹம்மது. மேற்கண்ட உம்முடைய வரிகளுக்கு ஆதாரங்களை கொடுங்கள் பார்க்கலாம்.

முஸ்லிம்களின் ஆட்சியில் முஸ்லிம்களுக்கும் யூதர்களுக்கும் சம உரிமையா? இது சாத்தியமா என்று முதலில் தற்கால முஸ்லிம்களிடம் கேட்டுப்பாருங்கள். அவ்வளவு ஏன், சௌதி அரேபியாவில் ''முஸ்லிமல்லாத ஒருவர்'' முஸ்லிம்களுக்கு கொடுக்கப்படும் சம உரிமைகளோடு வாழ முடியுமா? என்பதை கேட்டுப்பாருங்கள், உண்மை புரியும்.

**பாரா அவர்கள் எழுதியது:**

> *// முகம்மது நபிக்குப் பின்னால் வந்த கலிஃபாக்களோ, சரித்திரத்தின் வழியெங்கும் பின்னால் உலகெங்கும் ஆண்டு மறைந்த எத்தனையோ பல முஸ்லிம் மன்னர்களோ, சக்ரவர்த்திகளோ இந்தளவுக்கு மத நல்லிணக்கத்துடன் ஓர் அறிக்கை வெளியிட்டதில்லை. குறிப்பாக,* ***யூதர்களைப் பொறுத்தவரை அவர்கள் அதுநாள் வரை வாழ்ந்த அடிமை வாழ்வுடன் ஒப்பிடுகையில்****, முகம்மதுவின் இந்த அறிக்கைப் பிரகடனம், அவர்களாலேயே நம்ப முடியாதது. //*

**உமர் எழுதியது:**

பாரா அவர்களே ஒரு நிமிஷம் கவனியுங்கள். உங்களுடைய கீழ்கண்ட வரிகளில் யூதர்கள் மதினாவில் அடிமைகளாக வாழ்ந்ததாக சொல்கிறீரே, இதனை எங்கேயிருந்து எடுத்தீர்கள்?

**''யூதர்களைப் பொறுத்தவரை அவர்கள் அதுநாள் வரை வாழ்ந்த அடிமை வாழ்வுடன் ஒப்பிடுகையில்''**

மதினாவில் செல்வந்தர்களாக, பலமுள்ளவர்களாக இருந்தவர்கள் யூதர்கள் என்று சரித்திரம் சொல்கிறது, நீங்களும் இதனை சில இடங்களில் குறிப்பிட்டுள்ளீர்கள். இப்போது புதிதாக, ''யூதர்கள் அடிமை வாழ்க்கை வாழ்ந்தார்கள்'' என்றுச் சொல்கிறீர்களே?

மதினாவில் யூதர்கள் முஹம்மதுவின் காலத்தில் அடிமைகளாக வாழ்ந்தார்களா? மதினாவில் அவர்களை விடுவிக்க வந்த இரட்சகரா முஹம்மது? அல்லது அவர்களை கூண்டோடு கைலாசம் அனுப்பிய எமதர்ம ராஜாவா? என்ன எழுதுகிறீர்கள்? நீங்கள், பக்கத்துக்கு பக்கம் முரண்பட்டு எழுதுவது ஏன்?

**பாரா அவர்கள் எழுதியது:**

> *// இந்த அறிக்கைக்குப் பிறகு, முகம்மது எதிர்பார்த்தபடி மதினாவாழ் யூதர்கள் அங்கிருந்த முஸ்லிம்களுடன் நல்லுறவைத் தொடர்ந்திருப்பார்களேயானால், பின்னாளில் உறங்க ஒரு நிலமில்லாமல் உலகெங்கும் தலைதெறிக்க ஓடிக்கொண்டிருக்கவே வேண்டியிருந்திருக்காது என்று தோன்றுகிறது. வஞ்சனையின்றி, பகையின்றி, சூதின்றியே* ***யூதர்களுக்கான தனி தேசம் சாத்தியமாகியிருக்கலாம்.*** *//*

**உமர் எழுதியது:**

மன்னிக்கவேண்டும் பாரா அவர்களே, உங்களுக்கு உண்மையான இஸ்லாமின் சரித்திரம் 1% கூட தெரியவில்லை என்பது உண்மையாகிவிட்டது.

இஸ்லாமின் அடிப்படை கொள்கை என்னவென்று உங்களுக்குத் தெரியுமா? உலகெங்கிலும் இஸ்லாமிய ஆட்சி நடைப்பெறவேண்டும், முஸ்லிமல்லாதவனின் ஆட்சியோ, மதமோ, ஜனநாயகமோ இருக்கக்கூடாது. இதை நோக்கியே, அன்று முஹம்மது செயல்பட்டார், வலியச்சென்று நாடுகளை பிடித்தார், அவருக்கு பிறகு, அவரது தோழர்களாகிய கலிஃபாக்களும் நாடுகளை பிடித்தார்கள். இவர்களது அடிச்சுவடிகளில் அல்கெய்தாவும், ஐஎஸ் போன்ற தீவிரவாத இயக்கங்களும் செயல்பட்டுக்கொண்டு இருக்கின்றன.

**பாரா அவர்கள் எழுதியது:**

> *// ஏனெனில், கலீஃபா உமரின் காலத்தில் முதல்முதலாக ஜெருசலேத்தை முஸ்லிம்கள் கைப்பற்றியபோது, மதினாவில் முகம்மதுநபி யூதர்களின் உரிமைகளாக எதையெதையெல்லாம் வகுத்தாரோ, அதையெல்லாம் அப்படியே கடைப்பிடித்தார்கள்.* **யூதர்களும் முஸ்லிம்களும் ஒரு கொடியில் பூத்த இரு மலர்கள்தான் என்பதைத் தமது பல்வேறு நடவடிக்கைகளின்மூலம் அழுத்தந்திருத்தமாக எடுத்துக் காட்டி,** *யூதர்களின் சுதந்திரத்துக்கு எவ்வித இடையூறும் கூடாது என்று உமர் வலியுறுத்திச் சொன்னார்.* **தங்களது சுதந்திரம் என்பது, தனியான யூததேசம்தான் என்பதை அன்று அவர்கள் உமரிடம் எடுத்துச் சொல்லியிருந்தால்கூட ஒருவேளை சாத்தியமாகியிருக்கலாம்.**
>
> *மாறாக, முஸ்லிம்களின் ஆட்சியை ஏற்றுக்கொண்டு, அந்த ஆட்சிக்கு உட்பட்ட அளவில் சுதந்திரமாக வாழ்வதாக ஒப்புக்கொண்டு, பின்னால் மறைமுகமாகச்*

*சதித்திட்டங்கள் தீட்டத் தொடங்கியபோதுதான் யூதர்களின் இருப்பு பிரச்னைக்குள்ளானது.*

*எப்போதும் புத்திசாலித்தனமான செயல்பாடுகளுக்குப் பேர்போன யூதர்கள், அந்த ஒரு சந்தர்ப்பத்தில் மட்டும் ஏன் அப்படியரு முட்டாள்தனமான நடவடிக்கையில் ஈடுபட்டார்கள் என்கிற கேள்விக்கு விடையில்லாததுதான் சரித்திர வினோதம். //*

**உமர் எழுதியது:**

பாரா அவர்களே, யூதர்களின் உரிமைகளுக்கு உமர் குரல் கொடுத்தார் என்று சொல்வதற்கு முன்பாக, ஏன் உமர் ஜெருசலேமை பிடித்தார் என்றுச் சொல்லுங்களேன்? இஸ்லாம் ஒரு அமைதி மார்க்கம் என்றுச் சொன்னால், உமர் அவர்கள், மதினாவில் ஆட்சியை செய்துக்கொண்டு, உலகமெல்லாம் "இஸ்லாமை பிரச்சாரம் முலமாக பரப்புவதற்கு" ஆட்களை அனுப்புவதை விட்டுவிட்டு, ஏன் நாடுகளை பிடிக்க இராணுவத்தை அனுப்பினார்?

முஹம்மதுவிற்கு பிறகு வந்த நான்கு கலிஃபாக்களும் என்ன செய்தார்கள் என்று உங்களுக்குத் தெரியுமா? மதினாவில் நல்லாட்சி செய்துக்கொண்டு இருந்தார்களா? அல்லது அக்கம் பக்கத்து நாடுகளை பிடிக்க இராணுவங்களை அனுப்பினார்களா?

மண்ணாசை, பொன்னாசை மற்றும் பெண்ணாசை இம்மூன்றும் ஒன்றாக சேர்ந்த கலவை தான், இஸ்லாம் என்பதற்கு முஹம்மதுவின் மதினா வாழ்க்கையும், கலிஃபாக்களின் ஆட்சிகளும் சிறந்த உதாரணங்களாகும்.

**முடிவுரை:**

பாரா அவர்களின் நிலமெல்லாம் இரத்தம் புத்தகத்தின் 20ம் அத்தியாயத்தில் கொடுக்கப்பட்ட பொய்யான விவரங்களுக்கு பதில்களை பார்த்துக்கொண்டு இருக்கிறோம்.

இந்த ஒரு அத்தியாயத்தில் மலையளவிற்கு பாரா அவர்கள் பிழைகளை செய்துள்ளார் என்பதை விளக்கினோம். குர்-ஆனையும், ஹதீஸ்களையும், இஸ்லாமிய சரித்திர நூல்களையும் படிக்காமல், பாரா அவர்கள் இஸ்லாம் பற்றி எழுத ஆரம்பித்தது, பல் போன கிழவன் கரும்புத் தின்ன ஆசைப்பட்டதற்கு சமமாகும். இது ஒரு புறமிருக்க, ரஹீக் என்ற ஒரு புத்தகத்தை படித்து, அந்த புத்தகத்துக்கு எதிராகவே பாரா அவர்கள் எழுதியது 'முஸ்லிம்களால் கூட ஜீரணித்துக் கொள்ளமுடியாத செயலாகும்".

முஹம்மது 50க்கும் அதிகமான போர்களை செய்தார் என்று ரஹீக் புத்தகத்தில் கொட்டை எழுத்தில் ஆதாரங்களோடு எழுதியிருந்தால், பாரா அவர்கள் வெறும் மூன்று தான் சொல்கிறார். ஆய்வு என்ற பெயரில் மடமையை வெளிப்படுத்தும் எழுத்தாளர்கள் இருப்பார்கள் என்பதற்கு பாரா அவர்கள் ஒரு சிறந்த உதாரணம் என்றுச் சொல்வதை விட வேறு என்ன சொல்லமுடியும்?!

இதோடு நிலமெல்லாம் இரத்தத்தின் 20ம் அத்தியாயத்திற்கு முழுக்கு போட்டுவிட்டு, அடுத்தடுத்த அத்தியாயங்களுக்குச் செல்வோம். இன்னும் முஸ்லிம்களை திருப்திபடுத்த பாரா அவர்கள் அவ்வத்தியாயங்களில் என்னென்ன எழுதியிருக்கிறாரோ!

ஐஏஐஏஐஏஐஏ

# 30) தலை கால் புரியாமல் எழுதும் எழுத்தாளர் பாரா

**முன்னுரை:**

குர்-ஆனையும் படிக்காமல், ஹதீஸ்களையும் தொடாதவன் ''எனக்கு இஸ்லாம் தெரியும், நான் விளக்குகிறேன்'' என்று சொன்னால், அவனிடம் எச்சரிக்கையாக இருக்கவேண்டும், ஏனென்றால் அவன் நிச்சயம் ''தெளிவாக குழப்புவான்''. பாரா அவர்களின் 21வது அத்தியாயம் இந்த குழப்பத்திற்கு சிகரம் போன்றது. ''முதலையும் மூர்க்கனும் கொண்டது விடா'' என்றுச் சொல்வார்கள், அது போல, பாரா அவர்கள் இஸ்லாம் பற்றிய அறியாமையை விடாமல் ஒவ்வொரு அத்தியாயத்திலும் பதித்திருக்கிறார். பாரா அவர்களுக்கு பசுமரத்தாணி போல இஸ்லாமிய குழப்பம் பதிந்துவிட்டிருக்கிறது போல தெரிகிறது.

இந்த கட்டுரையில், நிலமெல்லாம் இரத்தம், 21வது அத்தியாயத்தில் பாரா அவர்கள் எழுதிய சில வரிகளை ஆய்வு செய்வோம்.

**1) முஹம்மதை ஒப்புக்குத்தான் அவர்கள் இறைத்தூதராக ஏற்றார்கள்**

**பாரா அவர்கள் எழுதியது:**

> *// நூல்: நிலமெல்லாம் இரத்தம்,*
>
> ***அத்தியாயம் 21: இஸ்லாத்தின் வானளாவிய வளர்ச்சியின் அஸ்திவாரம்***
>
> *முஸ்லிம்களுக்கு முதலில் யூதர்கள் ஏன் இப்படி நடந்துகொள்கிறார்கள் என்பது புரியவில்லை. பிறகு, அவர்கள் முகம்மதை ஒரு இறைத்தூதராக மனப்பூர்வமாக ஏற்கவில்லை; ஒப்புக்குத்தான் அவரது அறிக்கையை ஏற்பதாகச் சொல்லியிருக்கிறார்கள் என்கிற விஷயம் தெரியவந்தபோது, உடனடியாக யூத உறவைக் கத்திரித்துவிட விரும்பினார்கள். //*

**உமர் எழுதியது:**

யூதர்கள் மட்டுமல்ல, மதினாவில் முஹம்மது வாழ்ந்த காலத்தில், அரேபியாவில் வாழ்ந்த அரபு பழங்குடியின தலைவர்கள் அனைவரும், **முஹம்மது ஒரு இறைத்தூதர்** என்று வெறும் ஒப்புக்குத்தான் ஏற்றுக்கொண்டார்கள். முஹம்மதுவை ஏற்கவில்லையென்றால் தலை சீவப்படுமே! போர் நடக்குமே! பலமுள்ளவன் சண்டையிடுவான், பலவீனன் என்ன செய்வான்?

ராமன் ஆண்டால் என்ன! ராவணன் ஆண்டால் என்ன! தலை தப்பினால் போதும் என்று பலர் இஸ்லாமை அன்று ஏற்றனர். முடியாது என்று அடம் பிடித்தவர்கள், வாழ்க்கையை சீக்கிரமாக முடித்துக்கொண்டு, மண்ணுக்கடியில் அடம்பிடிக்காமல் தூங்கிவிட்டார்கள்.

ஆண்டுகள் கடந்தன, முஹம்மது மரித்துவிட்டார் என்று அக்குறுநில மன்னர்கள் அல்லது குழுத்தலைவர்கள் அறிந்தவுடன், துள்ளிக்குதித்தார்கள். இனி, நாம் சுதந்திரமாக வாழலாம், மதினாவில் இருக்கும் இஸ்லாமிய ஆட்சிக்கு கப்பம் கட்டத்தேவையில்லையென்றுச் சொல்லி மகிழ்ந்தார்கள். முஹம்மது இறைத்தூதர் அல்லவா? இஸ்லாமிய ஆட்சியை அவமதிப்பது, கப்பம் கட்டமாட்டேன் என்றுச் சொல்வது, முஹம்மதுவை அவமதிப்பது ஆகாதா! என்று

அவர்களின் மனசாட்சி சண்டையிடவில்லை. அன்று மனசாட்சியை கேட்டா நீ இஸ்லாமை ஏற்றாய்? இல்லையே, உயிருக்கு பயந்தல்லவா இஸ்லாமை ஏற்றாய், முஹம்மதுவிற்கு கப்பம் கட்டினாய். இதோ, அவர் மரித்துவிட்டார், தலையே போய்விட்டது, யார் வாலுக்கு பயப்படுவான் என்று அவர்கள் நினைத்தார்கள்.

முஹம்மதுவிற்கு அடுத்தபடியாக ஆட்சிப்பீடத்தில் அமர்ந்த, அபூ பக்கர் சும்மா விடுவாரா? அபூ பக்கர் முஹம்மதுவின் ''வால்'' இல்லை, அவர் முஹம்மதுவின் ''வாள்'' ஆவார். புலிக்கு பிறந்தது பூனையாகுமா? ''ரித்தா போர்கள்'' என்ற பெயரில் இரண்டாண்டுகள், அம்மன்னர்களோடு போரிட்டார், மறுபடியும் தன் கட்டுப்பாட்டுக்குள் (அதாவது இஸ்லாமுக்குள்) கொண்டுவந்தார். அக்குறுநில மன்னர்களின் நிலை கிணற்றுக்குத் தப்பித் தீயிலே பாய்ந்தவன் கதையாக மாறிவிட்டது.

பயப்படவைத்து மார்க்கத்தில் இணைத்தால், மனிதன் ஒப்புக்குத்தான் நம்புவான், மனதிலே கலர் கலராக திட்டித்தீர்ப்பான். அராஜகம் என்றுமே ஜெயிக்காது.

**இதைப் பற்றி கீழ்கண்ட கட்டுரையில் தெளிவாக எழுதியுள்ளேன்:**

> **2015** கடிதம் **16 -** **<u>அபூ பக்கரின் ரித்தா போர்கள் - ஜனநாயகமா? (அ) மதவாத அடக்குமுறையா?</u> -**

## 2) யூத இயேசுவையே ஏற்காதவர்கள் அரேபிய முகம்மதை எப்படி மனப்பூர்வமாக ஏற்பார்கள்?

**பாரா அவர்கள் எழுதியது:**

> *// யூத குலத்திலேயே பிறந்து, யூதர்களின் மரபு மீறல்களை மட்டுமே சுட்டிக்காட்டி கண்டித்த முந்தைய இறைத்தூதரான இயேசுவையே ஏற்காதவர்கள் அவர்கள். முகம்மதை எப்படி மனப்பூர்வமாக ஏற்பார்கள்? தவிரவும் யூதர்களுக்குத் தம்மைப்பற்றிய உயர்வு மனப்பான்மை எப்போதும் உண்டு. யூத இனத்தைக் காட்டிலும் சிறந்த இனம் வேறொன்று இல்லை என்பதில் அவர்களுக்கு இரண்டாவது அபிப்பிராயமே கிடையாது. ஆகவே, ஓர் அரேபியரை இறைத்தூதராகவோ, அரபு மொழியில் வழங்கப்பட்டுக்கொண்டிருந்த குர்ஆனை ஒரு வேதமாகவோ ஏற்பதில் அவர்களுக்கு நிறையச் சங்கடங்கள் இருந்தன. //*

**உமர் எழுதியது:**

யார் ஒரு நபியாக இருக்கமுடியும்? என்பதில் யூதர்கள் தெளிவாக இருந்தார்கள். யூதர்களிடம் பழைய ஏற்பாடு (தனக்) இருந்தது. அவர்கள் பல தீர்க்கதரிசிகளின் வாழ்க்கையை படித்தறிந்தவர்கள். முஹம்மது தன்னை ஒரு தீர்க்கதரிசி என்றுச் சொன்னவுடன், அவரை சோதித்துப்பார்க்க எண்ணினார்கள். அவர்கள் வைத்த அனைத்து பரிட்சைகளிலும் அவர் தோற்றார்.

முஹம்மது, மோசேயைப் போல அற்புதங்கள் செய்யவில்லை. பலதார திருமணங்களை ஆதரித்தது மட்டுமல்லாமல், வைப்பாட்டிகளையும் வைத்துக்கொண்டு இருந்தார். அடிமைப் பெண்களை முஸ்லிம்கள் கற்பழிக்க அனுமதி கொடுத்தார். பழைய ஏற்பாட்டு நபிகளோடு ஒப்பிடும் போது, முஹம்மது பலவகைகளில் முரண்படுகிறார். முஹம்மதுவை ஒரு நபி என்று ஏற்கவேண்டிய எந்த ஒரு காரணத்தையும் படித்த பக்தியுள்ள யூதர்கள்

காணவில்லை. எனவே, அவரை ஏற்கவோ, குர்-ஆனை வேதம் என்று கருதவோ அவர்களுக்கு நியாயமான காரணங்கள் தென்படவில்லை.

முஹம்மதுவின் விஷயத்தில் கிறிஸ்தவர்களின் நிலை இன்னும் கூறிய வாள் போன்றது. இதர நபிகளோடு மட்டுமல்ல, கிறிஸ்தவர்கள் இயேசுவின் போதனைகளோடும் ஒப்பிட்டுப்பார்த்தார்கள். முஹம்மதுவிற்கு டெபாஸிட்டும் கிடைக்கவில்லை, எனவே இன்றும் அவரை கிறிஸ்தவர்கள் நபி என்று ஒப்புக்கொள்ளாததற்கு நியாயமான, அறிவுபூர்வமான காரணங்கள் உள்ளன.

### 3) பாராவின் சரித்திர பிசகு "அப்போது" என்ற வார்த்தை பிரயோகம்

**பாரா அவர்கள் எழுதியது:**

> *// இவையெல்லாவற்றையும் விட முக்கியமான காரணம், அச்சம். இஸ்லாத்தின் வீச்சு குறித்த அச்சம். பெரும்பாலான அரேபிய சமூகமும், ஏராளமான கிறிஸ்துவர்களும் "உமக்கே நாம் ஆட்செய்தோம்" என்று குழுக் குழுவாக இஸ்லாத்தில் இணைந்துகொண்டிருந்ததால் விளைந்த அச்சம். ஏற்கெனவே கிறிஸ்துவத்துக்கு மாறிய யூதர்களையே மீட்க இயலாத நிலையில், மிச்சமிருக்கும் யூத சமூகத்தினர் எங்கே இஸ்லாத்தில் இணைந்துவிடுவார்களோ என்கிற கலவரம்.*
>
> ***அப்போது** பெரும்பாலும் பிரசாரம் மூலம்தான் இஸ்லாம் பரவிக்கொண்டிருந்தது. புனிதப்பயணமாக உலகெங்கிலுமிருந்து சவூதி அரேபியாவுக்கு வரும் மக்களிடையே முஸ்லிம்கள் பிரசங்கம் நிகழ்த்துவார்கள். குறைஷியரின் வன்முறைகளுக்கு இடையிலும் பிரசாரப் பேச்சுகள் நிற்காது. //*

**உமர் எழுதியது:**

பாரா அவர்களே, நீங்கள் நன்றாக குழம்பியிருக்கிறீர்கள். மேற்கண்ட உங்களுடைய வரிகளில் ''இஸ்லாம் பற்றிய படிப்படியான விவரங்கள் உங்களுக்கு புரியவில்லை'' என்று தெளிவாகத் தெரிகிறது. இஸ்லாமின் தலை எது, கால் எது என்று உங்களுக்கு புரியவில்லை.

மேற்கண்ட முதல் பத்தியில் பாரா அவர்கள், யூதர்களின் அச்சம் பற்றி பேசுகிறார். யூதர்கள் இவரை நபி என்று ஏன் ஏற்கவில்லையென்றுச் சொல்கிறார். மக்கள் குழுக்குழுவாக இஸ்லாமில் இணைகிறார்கள் என்றுச் சொல்கிறார். இந்த வர்ணனை எதைக் காட்டுகிறது - முஹம்மதுவின் மதினாவின் வாழ்க்கையைக் காட்டுகிறது, அதாவது கி.பி. 622 லிருந்து 632ம் காலக்கட்டத்தைக் காட்டுகிறது (மதினாவின் காலம்). இது முஹம்மதுவின் வாழ்க்கையின் இரண்டாம் பாகம். இதனை மனதில் வைத்துக்கொள்ளுங்கள்.

இரண்டாவது பத்தியில், பாரா அவர்கள், முஹம்மதுவின் முதல் பாகத்தைப் பற்றி பேசுகிறார். இஸ்லாம் பிரச்சாரம் மூலம் பரவிக்கொண்டு இருந்தது, பல நாடுகளிலிருந்து மக்காவிற்கு புனித யாத்திரையாக மக்கள் வருவார்கள், குறைஷிகள் வன்முறைகளில் ஈடுபடுவார்கள். இருந்தபோதிலும், முஸ்லிம்கள் பிரச்சாரம் செய்தார்கள் என்று எழுதுகிறார். இது கி.பி. 610 லிருந்து 622 வரையிலான காலக்கட்டமாகும் (மக்காவின் காலம்).

மக்காவின் காலக்கட்டத்தில் முஹம்மதுவிற்கு குறைஷிகளிலிருந்து தான் அதிக தொல்லைகள் வந்தன, யூதர்கள் மற்றும் கிறிஸ்தவர்களின் எதிர்ப்பு அவ்வளவு அதிகம் இல்லை. அதிக அளவு யூதர்களை முஹம்மது சந்தித்தது, மதினாவில் தான்.

பாராவின் மிகப்பெரிய பிழை, அவருக்கு இஸ்லாமின் காலவரிசை சரியாகத் தெரியவில்லை என்பதாகும். வெறும் வாய்ப்பேச்சாக இருந்த இஸ்லாம் மதினா வந்த பிறகு வாள்பேச்சாக மாறிவிட்டது. இங்கு தான் யூதர்களை அவர் சந்திக்கிறார், பிரச்சனை முத்துகிறது, யூதர்கள் இவர் நபி என்று நம்ப மறுக்கிறார்கள், முஸ்லிம்களின் கிப்லா மாற்றமடைகிறது. யூதர்களின் புனிதஸ்தலமான ஜெருசலேமை நோக்கி தொழுதுக்கொண்டு, அவர்களை எப்படி தாக்கிப்பேசமுடியும், அவர்களை எப்படி ஒழித்துக்கட்டமுடியும். ஆகையால், யூதர்களுக்கு எதிராக முஹம்மது போர்க்கொடி தூக்கிய முதல் நிகழ்ச்சி கிப்லா மாற்றமாகும்.

பாரா அவர்களே! மேற்கண்ட இரண்டாவது பத்தியில் "**அப்போது**" என்று தொடங்கியது, மிகப்பெரிய சரித்திர பிழையாகும்.

முதல்பத்தியில் கிபி 622-632வரையிலான காலம் பற்றி பேசிவிட்டு, "அப்போது" என்று தொடங்கி இரண்டாம் பத்தியில் "கிபி 610-622வரையிலான" காலம் பற்றி பேசியது, தவறானதாகும்.

"**அப்போது , பெரும்பாலும் பிரசாரம் மூலம்தான் இஸ்லாம் பரவிக்கொண்டிருந்தது.**"

பிரச்சாரம் மூலமாக இஸ்லாம் பரப்பப்பட்டது மக்காவின் காலத்தில், மதினாவின் காலத்தில், பெரும்பாலும், "போர்கள்" மூலமாகத்தான் இஸ்லாம் பரவியது. மதினாவின் 10 ஆண்டுகளில் 52க்கும் அதிகமான போர்களை முஹம்மது நடத்திக்காட்டினார் என்பதிலிருந்து அறிந்துக்கொள்ளலாம்.

உங்கள் தொடர்களை படிக்கும் வாசகர்களை ஏமாற்றியுள்ளீர்கள். இஸ்லாத்தில் குழுக்குழுவாக மக்கள் இணைந்தபோது, பிரச்சாரங்களினால் தான் இஸ்லாம் பரப்பட்டது என்று வாசகர்கள் புரிந்துக்கொள்ளவேண்டும் என்று தவறாக நீங்கள் மனப்பால் குடித்தீர்கள். நாங்கெல்லாம், அந்த பாலில் டீ போட்டு குடிக்கிறவங்க, எங்களிடம் உங்கள் மாயவலையை வீசாதீர்கள்.

"அப்போது" என்ற ஒரு வார்த்தையினால், உண்மை சரித்திரத்தை தலைக்கீழாக மாற்றி எழுத முயலாதீர்கள் "எப்போதும்" அது உங்களுக்கு பிரச்சனையே!

### 4) அவரை ஒருமுறை சந்தித்துவிட்ட யாரும்

**பாரா அவர்கள் எழுதியது:**

> *// அவரை ஒருமுறை சந்தித்துவிட்ட யாரும் இஸ்லாத்தில் இணையாதோராக இருந்ததாகச் சரித்திரமில்லை //*

**உமர் எழுதியது:**

இதனை தமாஷுக்காகத் தானே எழுதினீர்கள்?

மக்காவில் முஹம்மது 10 ஆண்டுகளுக்கு மேலாக பிரச்சாரம் செய்தார், வெறும் சொற்ப எண்ணிக்கையில் தான் மக்கள் இஸ்லாமை ஏற்றார்கள். மதினாவிற்கு அவர் இடம் பெயர்ந்த பிறகு தான், வாள் கையில் எடுத்த பிறகு தான் மக்கள் குழுக்குழுவாக அச்சத்தின் காரணமாக சேர்ந்தார்கள். இது தான் சரித்திரம் பாரா அவர்களே, நீங்கள் எழுதியது வெறும் எழுத்துத்திறமை.

**5) யானைகள் மறுபுறம் அணிவகுத்திருந்தன! முஹம்மதுவிடம் ஏதைய்யா யானை?**

**பாரா அவர்கள் எழுதியது:**

> *// காரணம், முகம்மதுவின் பின்னால் அணிவகுத்திருந்த அந்தப் படை, பத்ருப்போரில் பங்குபெற்றதைப் போல முந்நூற்றுப் பதின்மூன்று பேர் கொண்ட படை அல்ல. மாறாக, கண்ணுக்கெட்டும் தொலைவு வரை அணிவகுத்திருந்தனர் முஸ்லிம் ராணுவ வீரர்கள். அவர்களது ஒட்டகப்பிரிவு ஒரு சாலையை அடைத்து நிறைத்திருந்தது. யானைகள் மறுபுறம் அணிவகுத்திருந்தன. வீரர்களின் வாள்களில் நட்சத்திரங்கள் மின்னின. வெற்றியை முன்கூட்டியே தீர்மானித்தவர்களைப் போல் அவர்களின் முகங்களில் அமைதியும் உறுதியும் ததும்பின. //*

**உமர் எழுதியது:**

அருமை எழுத்தாளர் பாரா அவர்களே, இஸ்லாமிய சரித்திர நூல்களை கரைத்து ஃபில்டர் காபி போட்டு குடித்தவரே! முஹம்மதுவின் இராணுவத்தில் யானைப்படை இல்லையென்பதை மிகவும் தாழ்மையுடன் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்த வரிகளை எழுதும் போது, இந்திய அரசர்களின் போர்கள் பற்றிய ஏதாவது ஒரு புத்தகத்தை படித்துவிட்டு, அதன் வர்ணனைகளை ஏழாம் நூற்றாண்டுக்கு கொண்டுச்சென்று எழுதிவிட்டீர்களா?

பாலைவனங்களில் ஒட்டகங்களைப் போன்று யானைகளை அவ்வளவு சுலபமாக வளர்க்கமுடியாது.

[ஒருவேளை இராணுவத்தில் சிலருக்கு யானைக்கால் இருந்திருக்கலாம், நீங்கள் இதனை குறிப்பிடவில்லையே! யாரோ ஒரு சரித்திர ஆசிரியர், வீரர்களின் கால்களை குனிந்துப் பார்த்து, யானைக்காலைப் பார்த்து, யானைப்படை என்று எழுதிவிட்டார் போல் தெரிகிறது. அந்த சரித்திரத்தை நீங்கள் படித்திருந்திருக்கவேண்டும்].

பாரா அவர்களே, நீங்கள் குர்-ஆனில் இந்த வசனத்தை தனியாக படித்துவிட்டு எழுதவில்லையே! இந்த கதை வேறு.

> குர்-ஆன் **105:1. (நபியே!) யானை(ப் படை)க் காரர்களை உம் இறைவன் என்ன செய்தான் என்பதை நீர் பார்க்கவில்லையா?**

குர்-ஆனில் யானை என்ற வார்த்தை ஒரே முறை தான் வருகிறது என்று நினைக்கிறேன், அதுவும் இங்கு தான்.

**6) முகம்மது ஓர் உத்தரவை இட்டிருந்தார். யாரையும் கொல்லாதீர்கள்**

**பாரா அவர்கள் எழுதியது:**

> *// வெற்றிக்களிப்புடன் க"அபாவுக்குள் நுழைந்த முஸ்லிம் ராணுவ வீரர்களுக்கு முகம்மது ஓர் உத்தரவை இட்டிருந்தார். யாரையும் கொல்லாதீர்கள். யாரையும் எதிரி என்று எண்ணாதீர்கள். யாரையும் கைது செய்யவும் வேண்டாம்.*

*உலக சரித்திரத்தில் இன்றுவரை இதற்கு நிகரானதொரு சம்பவம் எந்த தேசத்திலும், எந்தப் போர்க்களத்திலும் நடந்ததில்லை. தோல்வியுற்ற மெக்கா ராணுவத்தினர் ஒருவர்கூட கைது செய்யப்படவில்லை. கொல்லப்படவில்லை. மாறாக, "உங்கள் மீது எந்தக் குற்றமும் இல்லை. எல்லாவற்றிலிருந்தும் நீங்கள் விடுதலை பெற்றீர்கள். மனிதர்களுக்கு இடையில் இதுகாறும் இருந்துவந்த அனைத்து ஏற்றத்தாழ்வுகளையும் வெறுப்பையும் காலடியில் இட்டு நசுக்கிவிடுவோம்" என்று சொன்னார் முகம்மது நபி. //*

**உமர் எழுதியது:**

பாரா அவர்களே, நீங்கள் என்னை ரொம்ப படுத்துறீங்க, தாங்க முடியலே!

வாசகர்கள் கூர்ந்து பாராவின் வரிகளை கவனிக்கவேண்டும்.

**முஹம்மது இப்படி சொன்னாராம்:**

- யாரையும் கொல்லாதீர்கள்.
- யாரையும் எதிரி என்று எண்ணாதீர்கள்.
- யாரையும் கைது செய்யவும் வேண்டாம்.

மக்காவினருக்கு முஹம்மது அப்படியே மன்னிப்பை வாரி வழங்கிவிட்டாராம். ஒருவரையும் கொல்லவில்லையாம், இது சரித்திரமாம். இவர் படித்தது என்ன சரித்திரமோ? பொய்யை உண்மையென்று இவருக்கு கற்றுக்கொடுத்துள்ளது.

உமரே! மக்காவின் வெற்றிக்கு பிறகு, முஹம்மதுவின் கட்டளையின் பேரில் கொலைகள் நடந்தன என்று, நீ என்ன ஆதாரங்களைக் காட்டப்போகிறாய்? என்று என்னிடம் யாரோ கேட்பது போல என் காதுகளில் தொணிக்கிறது. இதோ பதில் தயாராக இருக்கிறது, அதுவும் பாரா அவர்கள் படித்த ரஹீக் புத்தகத்திலிருந்தே வருகிறது.

பத்து பேர்களுக்கு அதிகமானவர்கள் கொல்லப்படவேண்டும் என்று முஹம்மது கட்டளையிட்டுள்ளார். அவர்களில் ஆறுபேர் கொல்லப்பட்டுள்ளார்கள். மீதியுள்ளவர்களுக்கு முஸ்லிம்களில் சிலர் சிபாரிசு செய்தபடியினால், அவர்கள் இஸ்லாமை ஏற்றபடியினால், உயிர் தப்பினார்கள். இந்த விவரங்களை ரஹீக் புத்தகத்திலிருந்து இங்கு தருகிறேன், தொடுப்பையும் கொடுத்துள்ளேன் படித்துக்கொள்ளுங்கள்.

பாரா அவர்களே, நான் முன்னமே சொன்னது போல, ரஹீக் உங்களை புரட்டிப்போடும் என்பதில் சந்தேகமில்லை.

*// நூல்:* **ரஹீக்**, *பக்கம் 452, 453*

*தலைப்பு:* **பெருங்குற்றவாளிகளைக் கொல்ல கட்டளையிடுதல்**

தொடுப்புக்கள்:

www.tamililquran.com/history.php *&* www.tamililquran.com/history.php

**பெருங்குற்றவாளிகளைக் கொல்ல கட்டளையிடுதல்**

நபி (ஸல்) இன்றைய தினம் ஒன்பது கொடுங்காஃபிர்களை அவர்கள் கஅபாவின் திரைக்குள் நுழைந்தாலும் கொல்லப்பட வேண்டும் எனக் கட்டளையிட்டார்கள். அவர்களின் பெயர்கள்: 1) அப்துல் உஜ்ஜா இப்னு கதல், 2) அப்துல்லாஹ் இப்னு ஸஅத் இப்னு அபூ சரஹ், 3) இக்மா இப்னு அபூஜஹ்ல், 4) ஹாரிஸ் இப்னு நுஃபைசல் இப்னு துஹப், 5) மகீஸ் இப்னு சுபாபஹ், 6) ஹபார் இப்னு அல் அஸ்வத், 7, 8) இப்னு கத்தலின் இரண்டு அடிமைப் பாடகிகள், 9) அப்துல் முத்தலிப் வம்சத்திற்குச் சொந்தமான 'சாரா' எனும் அடிமை. இப்பெண்ணிடம்தான் ஹாதிப் அனுப்பிய ராணுவ இரகசிய கடிதம் பறிமுதல் செய்யப்பட்டது. இவர்களைப் பற்றியுள்ள குறிப்புகள் அடுத்து வருகின்றன.

அப்துல்லாஹ் இப்னு ஸஅதை உஸ்மான் (ரழி) அழைத்து வந்து சிபாரிசு செய்ய நபி (ஸல்) ஏற்றுக் கொண்டார்கள். எனவே, அவர் உயிர் பாதுகாக்கப்பட்டது. இவர் இதற்கு முன் ஒருமுறை இஸ்லாமை ஏற்று ஹிஜ்ரத் செய்து மதீனா வந்திருந்தார். சில காலங்கள் அங்கு தங்கிய பின் இஸ்லாமை விட்டு வெளியேறி மக்கா வந்துவிட்டார். இவர் நபியின் அவையில் தான் இப்போது முஸ்லிமாகி விடுவதாக அறிவித்தார். ஆனால், தங்களது தோழர்களில் யாராவது ஒருவர் அவரை கொன்றுவிட வேண்டும் என்ற எண்ணத்தில் நபி (ஸல்) இருந்ததால் அவரது இஸ்லாமை ஏற்க தயக்கம் காட்டினார்கள். பின்பு சிறிது நேரம் கழித்து அவரது இஸ்லாமை நபி (ஸல்) ஏற்றுக் கொண்டார்கள். அப்துல் உஜ்ஜா இப்னு கத்தல் கஅபாவின் திரையைப் பிடித்துத் தொங்கிக் கொண்டான். நபித்தோழர் ஒருவர் நபியிடம் வந்து "என்ன செய்வது?" என்று கேட்டார். **"அவனைக் கொன்று விடவேண்டியதுதான்" என நபி (ஸல்) அவர்கள் கூறியவுடன் அவர் அவனைக் கொன்று விட்டார்.**

மகீஸ் இப்னு சபாபா- இவன் ஏற்கனவே முஸ்லிமாக இருந்தான். ஓர் அன்சாரித் தோழரை கொன்றுவிட்டு மதம் மாறி முஷ்ரிக்குகளுடன் சேர்ந்து கொண்டான். **இவனை நுபைலா இப்னு அப்துல்லாஹ் (ரழி) என்பவர் கொன்றொழித்தார்.**

ஹாரிஸ் இப்னு நுஃபைல்- இவன் மக்காவில் நபியவர்களை அதிகம் துன்புறுத்திக் கொண்டிருந்தான். **இவனை அலீ (ரழி) கொன்றார்கள்.**

ஹப்பார் இப்னு அஸ்வத்- இவர்தான் நபி (ஸல்) அவர்களின் மகள் ஜைனப் (ரழி) ஹிஜ்ரத் செய்து மதீனா சென்றபோது வழிமறித்து தனது ஈட்டியால் குத்தினார் இதனால் அவர்கள் அமர்ந்திருந்த (கஜாவா) ஒட்டகத் தொட்டியிலிருந்து கீழே விழுந்தார்கள் அவர்களது வயிற்றில் காயமேற்பட்டு கரு கலைந்துவிட்டது. இவர் மக்கா வெற்றியின் போது அங்கிருந்து தப்பி ஓடினார் பின்பு சில காலம் கழித்து இஸ்லாமை ஏற்றார்.

மற்ற இப்னு கத்லுடைய **இரு அடிமைப் பாடகிகளில் ஒருத்தி கொலையுண்டாள்.** மற்றவள் முஸ்லிம் ஒருவரால் அடைக்கலம் தரப்பட்டு பின்னர் இஸ்லாமை ஏற்றார். அவ்வாறே 'சாரா' என்ற அடிமைப் பெண்ணும் அடைக்கலமாகி இஸ்லாமைத் தழுவினார்.

அறிஞர் இப்னு ஹஜர் (ரஹ்) கூறுகிறார்: ஹாரிஸ் இப்னு துலாத்தில் அல்குஸாயீ என்பவனையும் கொல்லும்படி நபி (ஸல்) கட்டளையிட்டார்கள். எனவே, **அவனை அலீ (ரழி) கொன்றொழித்தார்கள்** என அபூ மஃஷக் (ரழி) கூறுகிறார்.

பிரபல கவிஞர் கஅப் இப்னு ஜுஹைரையும் கொல்லும்படி நபி (ஸல்) அவர்கள் கட்டளை பிறப்பித்தார்கள். ஆனால், இவர் நபி (ஸல்) அவர்கள் சமூகம் வந்து

*இஸ்லாமை ஏற்று தண்டனையிலிருந்து தப்பித்துக் கொண்டார். இவரைப் பற்றிய விரிவான செய்தி பின்னால் வரவிருக்கின்றது.*

*இவ்வாறே ஹம்ஜா (ரழி) அவர்களைக் கொலை செய்த வஹ்ஷியையும் கொன்றுவிட கட்டளையிடப்பட்டது. பின்னர் இஸ்லாமைத் தழுவியதால் மன்னிக்கப்பட்டது. அபூஸுஃப்யானின் மனைவி ஹிந்த் பின்த் உத்பாவும் கொலைப் பட்டியலில் இருந்தார். அவரும் இஸ்லாமை ஏற்றதால் மன்னிக்கப்பட்டார்.* ***இப்னு கதலின் அடிமைப் பெண் அர்னப் என்பவளும் கொலையுண்டாள்*** *என இமாம் ஹாகிம் (ரஹ்) குறிப்பிடுகின்றார். கொலையுண்டவர்களில் உம்மு ஸஅத் என்பவரும் உண்டு என இப்னு இஸ்ஹாக் (ரஹ்) குறிப்பிடுகின்றார்.* ***இந்த கணக்கின்படி எட்டு ஆண்களும் ஆறு பெண்களும் இப்பட்டியலில் இடம் பெற்றிருந்தனர்.*** *ஆனால், இங்கு கூறப்பட்ட அர்னப், உம்மு ஸஅத் இருவரும் இப்னு கத்தலின் இரண்டு பாடகிகளாக இருக்கலாம். அவ்விருவருடைய பெயர்கள் அல்லது புனைப் பெயர்களில் ஏற்பட்ட கருத்து வேற்றுமையால் தனித் தனியாகக் கூறப்பட்டிருக்கலாம். (இப்னு ஹஜர் (ரஹ்) கூற்று முடிவுற்றது.) (ஃபத்ஹுல் பாரி) //*

**ஒட்டு மொத்த இந்தியர்களுக்கும் இது ஒரு எச்சரிக்கை மணியாகும்**

பாரா அவர்களே, உங்களுக்கு ஒரு அபாயத்தை இங்கு குறிப்பிடவேண்டும், உங்களுக்கு மட்டுமல்ல, எனக்கும், ஒட்டு மொத்த இந்தியர்களுக்கும் இது ஒரு எச்சரிக்கை மணியாகும்.

முஹம்மது அன்று மக்காவை பிடித்ததுபோல, இந்தியாவையும் பிடித்தால், என்ன நடக்கும் தெரியுமா? ரஹீக் புத்தகத்தின் கீழ்கண்ட அத்தியாயத்தை படித்துப்பாருங்கள். மக்காவை பிடித்த பிறகு, தன்னுடைய பரம எதிரிகளை கொன்று விட்டபிறகு (மேற்கண்டவைகளை படிக்கவும்), மக்காவை சுற்றியுள்ள ஒவ்வொரு பகுதிக்கும், ஊருக்கும் சென்று அனைத்து ''சிலைகளையும்'' அழிக்கும் படி கட்டளையிட்டார். புரியவில்லையா? முஹம்மது மக்காவில் கால் வைத்தது போல இந்தியாவில் நுழைந்தால், இந்திய மண்ணில் உள்ள அனைத்து கோயில்களில் உள்ள சிலைகள் உடைக்கப்படும், சின்ன கோயில்களிலிருந்து பெரிய கோயில்கள் வரை அனைத்தும் நாசமாக்கப்படும். இதனை நம்பமுடியவில்லையல்லவா? ரஹீக் சொல்லும் விவரங்களை படித்து ஞானத்தை வளர்த்துக் கொள்ளுங்கள். நான் வெறும் சில வரிகளை இங்கு பதிக்கிறேன், அனைத்து விவரங்களையும் படிக்க தொடுப்புக்களை சொடுக்கவும்:

**மக்காவில் நபியவர்களின் செயல்பாடுகள் & படைப் பிரிவுகளும் குழுக்களும்**

**மூலம்: www.tamililquran.com/history.php (page 456)**

**www.tamililquran.com/history.php (page 457)**

**www.tamililquran.com/history.php (page 458)**

மேலும், இஸ்லாமிய அழைப்புப் பணிக்காகவும், சுற்றியுள்ள பகுதிகளில் இருந்த சிலைகளை உடைத்தெறிவதற்காகவும் தோழர்களின் குழுக்களை அனுப்பினார்கள் அவை அனைத்தும் உடைத்து நொறுக்கப்பட்டன. நபியவர்களின் அறிவிப்பாளர், ''அல்லாஹ்வையும் மறுமை நாளையும் நம்பிக்கை கொண்டவர்கள் தங்கள் வீடுகளிலுள்ள சிலைகளை உடைத்தெறிய வேண்டும்'' என்று அறிவித்துக் கொண்டிருந்தார்.

**1)** **‘**நக்லா**’** என்ற இடத்தில் **‘**உஜ்ஜா**’** என்ற சிலை இருந்தது.. . . நபி (ஸல்) காலித் இப்னு வலீதை முப்பது வீரர்களுடன் அந்தச் சிலைiயை உடைத்தெறிய அனுப்பினார்கள். அதை உடைத்து வந்த காலிதிடம் ‘‘ஏதாவது அங்கு கண்டீர்களா?’’ என்று நபி (ஸல்) கேட்க, அவர் ‘‘நான் எதையும் காணவில்லை’’ என்றார். ‘‘அப்படியானால் நீ அதனைச் சரியாக உடைக்கவில்லை. திரும்பச் சென்று அதனை உடைத்து வா!’’ என்று அனுப்பி வைத்தார்கள்.

**2)** மக்காவின் வட கிழக்கே **150** கி.மீ. தொலைவில் **‘**ருஹாத்**’** என்னுமிடத்தில் ஹுதைல் கிளையினர் வணங்கும் **‘**சுவா**’** என்ற சிலை இருந்தது. அதனை உடைக்கும்படி இதே ரமழான் மாதத்தில் அம்ர் இப்னு ஆஸை நபி (ஸல்) அனுப்பினார்கள். . . .

**3)** **‘**குதைத்**’** என்ற ஊரருகே **‘**முஷல்லல்**’** என்ற இடத்தில் **‘**மனாத்**’** எனும் சிலை இருந்தது. . . .

**4)** இதுவே மக்கா வெற்றியின் சுருக்கமான வரலாறு. இப்போர் முஸ்லிம்களுக்கு நிரந்தர வெற்றியை நிர்ணயித்தது மட்டுமல்ல இம்மாபெரும் போராட்டம் இறைநிராகரிப்புடைய கோட்டையை சுவடு தெரியாமல் நிர்மூலமாக்கியது. அரபு தீபகற்பத்தில் இறைநிராகரிப்பின் வாடையே வீசாமல் அழித்தொழித்து விட்டது. முழு அரபுலகமே முஸ்லிம்களுக்கும் முஷ்ரிக்குகளுக்கும் இடையே நடைபெற்று வந்த போர்களின் முடிவை ஆவலுடன் எதிர்நோக்கிக் கொண்டிருந்தது. . .

**7)** சவூதி அரேபியா, ஈராக், ஈரான், லிபியா, சிரியா, பாலஸ்தீன் எப்போது சுயமாக இஸ்லாத்தை ஏற்றுக்கொண்டது?

**பாரா அவர்கள் எழுதியது:**

*// அலையலையாக வந்து அவர்கள் இஸ்லாத்தில் இணைந்தார்கள். சவூதி அரேபியா, ஈராக், ஈரான், லிபியா, சிரியா, பாலஸ்தீன் என்று ஒவ்வொரு தேசமாக இஸ்லாத்தைத் தழுவிக்கொண்டது. //*

**உமர் எழுதியது:**

பாரா அவர்களே! எழுத்தாளர்களின் வரிகளில் சில நேரங்களில் ஆங்காங்கே சில பொய்கள் தெரியும், அதுவும் நாம் தேடிப்பார்த்தால் கிடைக்கும். அறியாமையினாலோ, அல்லது தெரிந்தோ சிலர் சில பொய்களை தங்கள் எழுத்துக்களில் புகுத்திவிடுவார்கள். ஆனால், உங்களுடைய வரிகளில், உண்மைகள் எங்கே இருக்கிறன என்று பொய்களின் மத்தியில் தேடவேண்டியதாகிவிட்டது. ஆனால், உங்களின் ஒவ்வொரு அத்தியாயத்திலும் ஒரு உண்மை வாக்கியம் மட்டும் எனக்கு பளிச்சென்று தெரிகிறது, அதனை கீழே கொடுத்துள்ளேன்:

**”நன்றி: குமுதம் ரிப்போர்ட்டர் 3 பெப்ரவரி, 2005”**

அதுவும் இணையத்தில் பதித்துள்ள தொடர்களில் மட்டுமே! இவ்வரியும் உங்கள் வரியில்லை, அந்த பிளாக்கரில் பதித்தவரின் வரியாகும். சரி, விஷயத்துக்கு வருகிறேன்.

முஹம்மதுவின் காலத்தில் ''சவூதி அரேபியா'' இல்லையே! வெறும் அரேபியா தான் இருந்தது. அதனையும் முஹம்மது போர்கள் புரிந்து தான் வெற்றிக்கொண்டார்.

அது எப்படி, இந்த நாடுகள் தானாக வந்து இஸ்லாமுடன் இணைந்துவிட்டன? இந்நாட்டு மன்னர்களுக்கு என்ன பைத்தியமா? தானாக வந்து முஹம்மதுவுடன் இணைவதற்கு?

பாரா அவர்களே, நீங்கள் சொல்வது போல, இந்த நாடுகள் அனைத்தும் தானாக வந்து இஸ்லாமோடு இணையவில்லை. முஹம்மதுவிற்கு பிறகு போர்களைத் தொடுத்து, முஸ்லிம் கலிஃபாக்கள் ரத்த ஆறு ஓடவைத்து வென்றுள்ளார்கள்.

நான் இப்படி கேட்கிறேன் என்று தவறாக நினைக்கவேண்டாம், பாரா அவர்களே! நீங்கள் ''பொய்களைச் சொல்லிதான் பிழைப்பு நடத்தனுமா?''

**விக்கீபீடியா தொடுப்புக்கள்:**

- **en.wikipedia.org/wiki/Muslim_conquest_of_Egypt**
- **en.wikipedia.org/wiki/Islamization_of_Egypt**
- **en.wikipedia.org/wiki/Muslim_conquest_of_Persia (Arab conquest of Iran)**
- **en.wikipedia.org/wiki/Muslim_conquest_of_the_Levant (Syria, Iraq etc..)**
- **en.wikipedia.org/wiki/History_of_Libya**
- **en.wikipedia.org/wiki/Siege_of_Jerusalem_(636%E2%80%93637)**

**8) கலிஃபா அபூ பக்கர் ஊரிலுள்ள அத்தனை பேரின் ஆடுகளிலும் பால் கறந்து கொடுத்துவிட்டு வந்தவர்**

**பாரா அவர்கள் எழுதியது:**

> *// உண்மையில் ஒரு சக்ரவர்த்திக்கு நேரெதிரான துறவு மனப்பான்மை கொண்டவர் அவர். பரம சாது. அதைவிடப் பரம எளிமைவாதி. தானென்ற அகங்காரம் ஒருபோதும் தனக்கு வந்துவிடக்கூடாது என்பதனால், கலீஃபாவான பிறகும் ஒரு வயதான மூதாட்டியின் வீட்டுக்குத் தினசரி சென்று வீட்டுவேலைகளைச் செய்து வைத்துவிட்டு, ஊரிலுள்ள அத்தனை பேரின் ஆடுகளிலும் பால் கறந்து கொடுத்துவிட்டு வந்தவர். //*

**உமர் எழுதியது:**

என்னய்யா இது!

ஒரு அரசனாக முடிசூட்டிக்கொண்ட பிறகு கூட, அபூ பக்கர் ''ஊரிலுள்ள அத்தனை பேரின் ஆடுகளிலும் பால் கறந்து கொடுத்துவிட்டு'' வந்தாரா?

**அபூ பக்கர் என்ன ஆட்டுக்கார வேலனா?**

ஏதோ ஒரு பேச்சுக்காக, ஒரு முறை ஒரு குடிமகனின் ஆட்டைபிடித்து, பால் கறந்து கொடுத்து இருந்திருப்பார், அபூ பக்கர் கலிஃபா. அதற்காக, அவர் ஆட்சியில் இருந்த 2 ஆண்டுகள், இப்படி செய்தார் என்றுச் சொல்வது, கொஞ்சம் இல்லை, அதிகமாகவே அதிகம்.

பாரா அவர்களே, உங்களுக்கு பதில் கொடுப்பதற்குள் என் அகராதியில் உள்ள அனைத்து வார்த்தைகளும் பத்தாதுபோல் இருக்கிறது. இன்னும் புதிய வார்த்தைகளை நான் கற்றுக்கொண்டால் தான், உங்களுக்கு பதில் கொடுக்கமுடியும் போல் இருக்கிறது.

**உங்களுடைய வாதம் அறிவுக்கு பொருந்துகிறதா?**

மதினாவில் 10000 ஆடுகள் இருந்தால், அபூ பக்கர் கலிஃபா, ஒவ்வொரு வீடாகச் சென்று, பாலை கறந்து கொடுத்துவிட்டு வந்தார் என்றுச் சொல்வது, முட்டாள்தனமாகத் தெரியவில்லை? ஒரு நாளுக்குள் ஒரு மனிதன் 10000 ஆடுகளிலிருந்து பாலை கறந்து கொடுக்கமுடியுமா? 1000 ஆடுகளாக இருந்தாலும் இது சாத்தியமா? இது ஒரு அரசனுக்குத் தேவையா?

அபூ பக்கர் ஊரிலுள்ள ஆடுகளிலிருந்து பாலை கறந்து கொடுத்துவிட்டு, அதன் பிறகு ரித்தா போர்களைச் செய்ய புறப்படுவாரா?

பாரா அவர்களே, நிலாவுலே ஆயா வடசுட்ட கதையைவிட கேவலமாக உள்ளதைய்யா உங்கள் வரிகள். கொஞ்சம் சிந்திக்கணும் பாரா அவர்களே! சாமி எதுக்கு நமக்கு மூளையை கொடுத்திருக்கிறது, சிந்திப்பதற்கு! மூளையை பயன்படுத்த கத்துக்கணும்.

பக்தி முத்திப்போன முஸ்லிம்களோடு நட்பு கொண்டால், இப்படித்தான் எழுதத்தோணும்.

**9) உமர் ராஜாங்க ரீதியில் படையெடுப்புகள் மூலம் சாம்ராஜ்ஜிய விஸ்தரிப்பு**

**பாரா அவர்கள் எழுதியது:**

> *// இறக்கும் தறுவாயில், அபூபக்கரே தமக்குப்பின் உமர்தான் கலீஃபாவாக வேண்டும் என்று சொல்லிவிட்டுச் சென்றதனால், கி.பி. 634-ல் உமர் இஸ்லாமிய சாம்ராஜ்ஜியத்தின் பெருந்தலைவராகப் பொறுப்பேற்றுக்கொண்டார். ராஜாங்க ரீதியில் படையெடுப்புகள் மூலம் சாம்ராஜ்ஜிய விஸ்தரிப்பு, ஒழுங்கமைக்கப்பட்ட விரிவான மதப்பிரசாரங்கள், குர் ஆனை உலகறியச் செய்ய மேற்கொள்ளப்பட்ட நடவடிக்கைகள், முகம்மது நபியின் வாழ்வில் நடந்த சம்பவங்கள், அவரது பொன்மொழிகளைத் திரட்டும் பணியை மேற்கொள்ளுதல் போன்ற பல காரியங்கள் உமரின் காலத்தில்தான் ஆரம்பமாயின.*
>
> *ஜெருசலேத்தில் கால்வைத்த முதல் இஸ்லாமியச் சக்ரவர்த்தி உமர்தான். அது கி.பி. 638-ம் ஆண்டு நடந்தது. //*

**உமர் எழுதியது:**

நான் அடிக்கடி கண்ட ஒரு உண்மை என்னவென்றால், ''முஸ்லிம்கள் தங்களை பெரிய அறிவாளிகளாக காட்ட படாத பாடு படுவார்கள், ஆனால், கடைசியில் மாட்டிக்கொள்வார்கள், அது போலத்தான் பாரா அவர்களும்''.

தம்முடைய தொடரின் ஆரம்ப முதல், இஸ்லாமை அமைதி மார்க்க, முஹம்மது நல்லவரு, வல்லவரு என்று எழுதிக்கொண்டே இருப்பார். கலிஃபாக்களும் அமைதிவாதிகள் என்று அடிக்கிக்கொண்டே போவார், ஆனால் கடைசியில் ''ராஜாங்க ரீதியில் படையெடுப்புகள் மூலம் சாம்ராஜ்ஜிய விஸ்தரிப்பு'' என்று எழுதி மொத்தமாக கோட்டையைவிட்டுவிடுவார்.

• அது எப்படி ஒரு அமைதி மார்க்கம் தன் இராஜ்ஜியத்தை விஸ்தரிக்க போர்களைச் செய்யலாம்?

• படையெப்புக்களில் மக்கள் கொல்லப்படுவார்கள் என்ற அடிப்படை புத்தி இல்லையா இவர்களுக்கு?

• இஸ்லாமிய கலிஃபாவாகிய உமர், வேற்று நாட்டவர் மீது போர் தொடுத்து, அவர்களின் இராணுவத்தை கொன்றுப்போட்டு, அந்நாட்டின் பெண்களை விதவைகளாக்கி, பிள்ளைகளை அநாதைகளாக்கி, பெண்களை அடிமைகளாக விற்று, கற்பழித்து, குர்-ஆனின் படி, அப்பெண்களை தங்கள் வலக்கரத்துக்கு சொந்தங்களாக மாற்றி, கணவன் மனைவிகளை பிரித்து, கணவர்களின் முன்பு, மனைவிகளை கற்பழித்து, அப்பாக்களின் முன்பு மகள்களை கற்பழித்துவிட்டு, நாட்டை பிடித்த பிறகு, அங்குள்ளவர்களுக்கு இஸ்லாமை போதித்தால், என்ன நடக்கும்?

• இது தான் "இஸ்லாமிய சாம்ராஜ்ஜிய விஸ்தரிப்பு" இல்லையா?

இது தான் இஸ்லாம் என்ற மார்க்கம் கற்றுக்கொடுக்கும் பாடமா? வேற்று நாட்டு மக்களின் பிணங்களின் மீது இஸ்லாம் கட்டப்படவேண்டுமா? பிணங்களைக் கொத்திச் சாப்பிடும் கழுகுகளைப் போல கலிஃபாக்கள் செய்வது நியாயமா? இப்படியா அல்லாஹ் கட்டளையிட்டுள்ளான்?

**முடிவுரை:**

இந்த கட்டுரையில், பாரா அவர்களின் 21வது அத்தியாயத்தை தூர்வாரினேன். இன்னும் தூர்வாரவேண்டிய அத்தியாயங்கள் அனேகம் உண்டு.

இதுவரை படித்த உங்கள் உள்ளங்களில் என்ன எண்ணங்கள் ஓடுகின்றன? யார் இந்த உமர்? ஏன் இவ்வளவு கடினமாக எழுதுகிறான் என்று திட்டத்தோன்றுகிறதா? திட்டுங்கள், ஆனால் நான் சொன்ன விவரங்களில் கொஞ்சமாவது உண்மை இருக்கிறது என்று உணர்ந்தால், நீங்கள் சுயமாக ஆய்வு செய்துப் பாருங்கள். உண்மையை நீங்கள் அறிவீர்கள், அந்த உண்மையே உங்களை விடுதலையாக்கும்.

அடுத்த கட்டுரையில் சந்திப்போம். . . அது வரை அபூ பக்கர் அரசரால் எப்படி ஒரே நாளில் ஊரிலிருக்கும் எல்லா ஆடுகளிலிருந்தும் பால் கறக்கமுடிந்தது என்று சிந்தித்துப் பாருங்கள்.

# 31) ’கலீஃபா உமர் ஒரு சமாதான புறா’ என்று நம்பிவிட்டாரா பாரா!

**முன்னுரை:**

பாரா அவர்கள் 22ம் அத்தியாயத்தில் கலீஃபா உமர் அவர்களுக்காக சிந்திய முத்துக்களை இந்த கட்டுரையில் சேகரிக்கப் போகின்றோம். இஸ்லாமின் இரண்டாம் கலீஃபா உமர் அவர்கள் ‘ஒரு சமாதான புறா’ என்பது போலவும், அவர் இஸ்லாமை வாளால் பரப்பவில்லையென்றும் பாரா அவர்கள், ஒரு விசித்திர வக்காளத்து வாங்கியுள்ளார். ஆதாரங்களோடு தன் முடிவைச் சொல்கிறாரா? என்று பார்த்தால் அதுவும் இல்லை. நடந்துமுடிந்துவிட்ட சரித்திரம் பற்றி எழுதும் போது, உண்மையைச் சொல்லவேண்டும், வெறும் வாயில் கூழ் காய்ச்சக்கூடாது. யாராக இருந்தாலும் சரி, பொய்யைக் காட்டி ”இது தான் உண்மை” என்றுச் சொல்லி, தன் எழுத்துத் திறமையினால் மக்களை ஏமாற்ற நினைப்பது தவறு. பாராவாயாயினும் நா காக்க...

தற்காலத்தில் மக்கள் சரித்திரங்களை படிப்பதே அபூர்வம், அதிலும் பாரா போன்றவர்கள் ‘சரித்திரம் சொல்கிறேன், வாங்க’ என்றுச் சொல்லி, சரித்திரத்தை மாற்றிச் சொன்னால் என்ன நடக்கும்? மக்கள் தவறான ஒன்றை சரியான ஒன்றாக நினைத்து வழிதவறிப் போவார்கள். இதைத் தான் இஸ்லாமியர்களில் சிலர் செய்துக்கொண்டு இருக்கிறார்கள். அவர்களோடு கூட பாரா போன்றவர்கள் கைகோர்த்து நடந்தால், சமுதாயம் உருப்படுமா?

என்னுடைய கட்டுரைகளில் நான் முன்வைக்கும் வாதங்களை வாசகர்கள் கவனிக்கவேண்டும், சுட்டிக்காட்டப்படும் ஆதாரங்களை சரி பார்க்கவேண்டும். கடைசியாக, பாரா அவர்கள் என்ன சொல்லியுள்ளார் என்பதை ஒப்பிட்டுப்பார்த்து, யார் உண்மைச் சரித்திரம் சொல்கிறார்கள், யார் வெறும் சத்தம் மட்டும் போடுகிறார்கள் என்பதை சுலபமாக புரிந்துக்கொள்ளலாம்.

**பாரா அவர்கள் எழுதியது:**

> **// நூல்: நிலமெல்லாம் இரத்தம்**
>
> அத்தியாயம்: **22) கலீஃபா உமர்**
>
> ஜெருசலேமில் முதல் முதலில் இஸ்லாமியர் ஆட்சி வந்தது கி.பி. 638-ல். அது கலீஃபா உமரின் காலம். //

**உமர் எழுதியது:**

உமர் ஒரு ஆன்மீகவாதி மற்றும் முஹம்மதுவின் நெருங்கிய தோழர் ஆவார். அமைதி மார்க்கத்தை பின்பற்றும் அவர் ஏன் மற்ற நாடுகள் மீது போர் தொடுக்கவேண்டும்? அவர் ஏன் ஜெருசலேமை பிடித்தார்?

ஜெருசலேம் மட்டுமல்ல, இவரது 12 ஆண்டுகால ஆட்சியில் எத்தனை நாடுகளை வலியச்சென்று பிடித்தார் என்பதை ஆதாரங்களோடு இந்த கட்டுரையில் பார்க்கவுள்ளோம். இதனால், கலிஃபா உமர் அவர்கள் ஒரு சமாதான புறா அல்ல, அவர் ஒரு கொத்தும் கழுகு என்பதை பாரா அவர்கள் புரிந்துக்கொள்வார்கள்.

**பாரா அவர்கள் எழுதியது:**

*// அதுவரை யூதர்களாலும் ரோமானியர்களாலும் கிறிஸ்துவர்களாலும் எகிப்திய பைசாந்தியர்களாலும் ஆளப்பட்டுக்கொண்டிருந்தது ஜெருசலேம். **பாலஸ்தீன நிலப்பரப்பின் மூத்தகுடிகளான அரேபியர்களுக்கு**, இது தங்கள் மண் என்கிற எண்ணமே கிட்டத்தட்ட மறந்துவிடும் அளவுக்குப் பல நூற்றாண்டுக் காலம் தொடர்ந்தது இது. //*

**உமர் எழுதியது:**

பாரா அவர்களே, உங்களின் இப்படிப்பட்ட இவ்வரிகளுக்காக, 2016ம் ஆண்டு ரமளான் தொடர் கட்டுரையில் பல கேள்விகளை நான் எழுப்பியுள்ளேன். வெறும் "**பாலஸ்தீன நிலப்பரப்பின் மூத்தகுடிகளான அரேபியர்களுக்கு, இது தங்கள் மண்**" என்று எழுதுவதினால் அது உண்மையாகிவிடாது, ஆதாரங்களோடு நிருபிக்கவேண்டும், அப்போது அது உண்மையென்று எல்லோரும் ஒப்புக்கொள்வோம். மேற்கண்ட உங்களுடைய வரிகளிலிருந்து அறிவது என்னவென்றால், பாலஸ்தீனா என்று நாம் அழைக்கப்படும் பகுதியில்,

"எகிப்து பைசாந்தியர்களுக்கு முன்பாக,

கிறிஸ்தவர்களுக்கு முன்பாக,

ரோமானியர்களுக்கு முன்பாக,

யூதர்களுக்கு முன்பாக

அரேபியர்கள் ஆண்டார்கள்"

என்றுச் சொல்லவருகிறீர்கள். யூதர்களுக்கு முன்பாக அரேபியர்கள் அந்த பகுதியை ஆண்டார்கள், அது அவர்களின் **'மண்'** என்பதை சரித்திரத்திலிருந்து விளக்கமுடியுமா? இதைப் பற்றி கேட்கப்பட்ட இதர கேள்விகளை படிக்க, கீழ்கண்ட கட்டுரையை சொடுக்கவும்.

2016 ரமளான் (8) - நிலமெல்லாம் இரத்தம் - யூத மண்ணில் அரேபியர்களின் முகவரி

"அரேபியர்களும் பாலஸ்தீனமும்" என்ற தலைப்பில் இன்னும் அதிகமாக உங்களுடைய வரிகளை ஆய்வு செய்யவேண்டியுள்ளது, அவைகளை உங்களுடைய அடுத்தடுத்த கட்டுரைகளுக்கு கொடுக்கப்படும் பதில்களில் காண்போம்.

**பாரா அவர்கள் எழுதியது:**

*// யூதர்கள், கிறிஸ்துவர்கள் எல்லாம் ஆளப்பிறந்தவர்கள், தாங்கள் அடங்கிவாழ விதிக்கப்பட்டவர்கள் என்று மிகவும் இயல்பாகவே அவர்கள் நினைத்துக்கொண்டிருந்தார்கள். ஒரு மாற்றுச் சிந்தனையாக தாங்களும் ஆளலாம் என்று எண்ணத் தொடங்கியதே உமரின் ஆட்சிக்காலத்தின் போதுதான்.*

*ஏனெனில், இஸ்லாமிய மன்னர்களுள் முதல் முதலாக, ஒரு திட்டவட்டமான செயல்திட்டம் வகுத்துக்கொண்டு தேசத்தின் எல்லைகளை விஸ்தரிப்பது என்று புறப்பட்டவர் உமர்தான். //*

**உமர் எழுதியது:**

மேற்கண்ட வரிகளை எழுதி நீங்கள் முஹம்மதுவை கேவலப்படுத்திவிட்டீர்கள். அரேபியர்கள் கூட ஆளப்பிறந்தவர்கள் என்ற எண்ணத்தை முஹம்மது மதினாவிற்கு வந்த பிறகு மிகவும் ஆழமாக பதித்துவிட்டார், உமர் அல்ல. மக்காவில் இருந்தவரை அமைதிப் புறாக்களாக வளம் வந்த முஸ்லிம்கள், மதினா வந்தவுடன் பரினாம வளர்ச்சி அடைந்து, மக்களைக் கொத்தித்திண்ணும் கழுகுகளாக மாறிவிட்டார்கள்.

வேண்டுமென்றால் ''முஹம்மது எட்டு அடி பாய்ந்தார், உமர் பதினாறு அடி பாய்ந்தார்'' என்றுச் சொல்லிக்கொள்ளலாம். முஹம்மது விதைத்தார், நீர்ப்பாய்ச்சினார், செடியும் முளைத்தது, பூவும் பூத்தது, ஆனால், முழுமையான கனிகளை அறுவடை செய்வதற்குள் மரித்துவிட்டார், அறுவடையை கலிஃபாக்கள் அறுத்தார்கள். போர் செய்து, நாடுகளை பிடிக்கவேண்டும் என்பது முஹம்மதுவின் மந்திரம், அதனை முதல் கலீஃபா அபூ பக்கரும், இரண்டாம் கலிஃபா உமரும் தொடர்ந்து செயல்படுத்தினார்கள். ''மீன் குட்டிக்கு நீந்த கற்றுக்கொடுக்கவேண்டுமா?'' முஸ்லிம் கலிஃபாக்களுக்கு போர் செய்ய கற்றுக்கொடுக்கவேண்டுமா? ஆக, இவர்களுக்கு பிறகு வந்த முஸ்லிம் கலிஃபாக்கள் ''நாடுகளை பிடிப்பதை'' செவ்வனே செய்து முடித்தார்கள். முஸ்லிம்கள் என்று தங்களை அடையாளப்படுத்திக்கொண்ட கலிஃபாக்களுக்கும், மற்ற முஸ்லிமல்லாத அரசர்களுக்கும் இடையே எந்த ஒரு வித்தியாசமும் இல்லாதபடி, இவர்கள் மண் மீது ஆசைக்கொண்டு, தங்கள் ராஜ்ஜியங்களை விஸ்தரித்தார்கள்.

- காஃபிர் அரசர்கள் மண்ணுக்காக போர் தொடுத்தார்கள், கலிஃபாக்களும் அப்படியே செய்தார்கள்.
- காஃபிர் அரசர்கள் செல்வங்களுக்காக போர் தொடுத்தார்கள், கலிஃபாக்களும் அப்படியே செய்தார்கள்.
- காஃபிர் அரசர்கள் பெண்கள் மீது ஆசைக்கொண்டு பல திருமணங்களைச் செய்தார்கள், கலிஃபாக்களும், இஸ்லாமிய அரசர்களும் அப்படியே செய்தார்கள்.
- கஃபிர் அரசர்கள் திருடர்கள், கொள்ளைக்காரர்கள் என்றால், கலிஃபாக்களும் போர் என்ற போர்வையில் அப்படியே திருடினார்கள், கொள்ளையிட்டார்கள்.

இஸ்லாமிய கலீஃபாக்கள் 'வித்தியாசமாக செய்தது என்ன?'

**பாரா அவர்கள் எழுதியது:**

> *// கைப்பற்றும் தேசங்களையெல்லாம் இஸ்லாமிய சாம்ராஜ்ஜியத்தின் ஒரு பகுதியாகக் கொண்டுவந்த உமர், மிகவும் ஜாக்கிரதையாக இஸ்லாத்தை அந்நாட்டு மக்களின்மீது திணிக்காமல் இருக்க தம் தளபதிகளுக்கு உத்தரவிட்டிருந்தார். பிரசாரங்களைக்கூட அரேபியர்களிடம் மேற்கொள்ளலாமே தவிர யூதர்களிடமோ, கிறிஸ்துவர்களிடமோ வேண்டாம் என்று உமர் ஓர் உத்தரவில் தாமே கைப்பட எழுதித் தந்திருப்பதாக ஐரோப்பாவைச் சேர்ந்த சில இஸ்லாமியச் சரித்திர ஆசிரியர்கள் தெரிவிக்கிறார்கள். //*

**உமர் எழுதியது:**

ஏன் உமர் 'தேசங்களை கைப்பற்றினார்'? சும்ம மதினாவில் இருக்கமுடியவில்லையா?

இஸ்லாமிய ஆட்சியின் கீழ், ஜிஸ்யா கட்டும் மக்களாக வாழ்வது இரண்டாம் தர குடிமக்களாக வாழ்வதற்கு சமமாகும். ஜிஸ்யா வரி கட்டுபவர்கள் ஒரு கேவலமான வாழ்வை வாழவேண்டும், தலை குனிந்து வாழவேண்டும். ஒரு காலத்தில் நம் இந்தியாவில், கீழ்

**ஜாதிக்காரர்கள் என்று பட்டம் சூட்டி, அவர்களை அவமானப்படுத்திய அனைத்து கீழ்தரமான செயல்கள் அனைத்தும், முஸ்லிமல்லாதவர்கள் மீது இஸ்லாம் செய்யும் படி கட்டளையிடுகிறது.**

**பாரா அவர்களே, நீங்கள் எந்த புத்தகத்தை படித்து இப்படி எழுதினீர்களோ எனக்குத் தெரியாது, ஆனால், நான் இஸ்லாமிய மூல நூல்களிலிருந்தும், அவர்களின் விளக்கவுரைகளிலிருந்தும் ஆதாரங்களைத் தருகிறேன். இப்னு கதீர் விளக்கவுரை இஸ்லாமிய உலகில் புகழ்பெற்ற விளக்கவுரையாகும், இதனை அரபியிலும், ஆங்கிலத்திலும் இணையத்தில் படித்துக்கொள்ளலாம்.**

**பாரா அவர்களே, இந்த விளக்கவுரையில் உமர் சிரியா நாட்டு கிறிஸ்தவர்களுடன் செய்த உடன்படிக்கைப் பற்றி விளக்கப்பட்டுள்ளது.**

மூலம்: **<u>இப்னு கதீர் தஃப்ஸீர்: குர்-ஆன் 9:29ம் வசனத்துக்கு விளக்கவுரை</u>**

**உங்களுக்காக நான் தமிழில் அதனை இங்கு தருகிறேன், ஆங்கிலத்திலும் அதனை படிக்க <u>இங்கு</u> சொடுக்கவும்:**

*// **தலைப்பு:** காஃபிர்கள் தாழ்த்தப்படவேண்டும் என்பதற்கு அடையாளமே ஜிஸ்யா வரி அவர்களிடம் வாங்குவதாகும்*

*. . .ஆகவே, திம்மீ மக்களாகிய அவர்களை (யூதர்கள்/கிறிஸ்தவர்களை) முஸ்லிம்கள் மற்ற முஸ்லிம்களை விட உயர்வாக நினைக்கக்கூடாது. ஏனென்றால், அவர்கள் இழிவானவர்கள், தாழ்த்தப்பட்டவர்கள் மற்றும் அவமானப்படுத்தப்பட்டவர்கள் ஆவார்கள். முஸ்லிம் ஹதிஸ் தொகுப்பில், இறைத்தூதர் அவர்கள் கூறியதாக, அபூ ஹுரைரா அறிவிக்கிறார்:*

*யூதர்களுக்கும், கிறிஸ்தவர்களுக்கும் முதலாவதாக முஸ்லிம்கள் ஸலாம் வாழ்த்து கூறக்கூடாது. இவர்களில் யாரையாவது முஸ்லிம்கள் சாலையில் சந்திக்க நேரிட்டால், அவர்களை சாலையின் குறுகிய பாதையில் போகும் படி கட்டாயப்படுத்தவேண்டும்.*

*இதனால் தான் நம்பிக்கையாளர்களின் தலைவராகிய உமர் பின் கத்தாப் (ரலி) அவர்கள், தம்முடைய நிபந்தனைகளுக்கு கட்டுப்படும்படி கிறிஸ்தவர்களை வற்புறுத்தினார். இந்த நிபந்தனைகள் அனைத்தும், கிறிஸ்தவர்களை தொடர்ந்து தாழ்த்துகின்றனவாகவும், அவமானப்படுத்துகின்றனவாகவும் இருந்தன.*

***ஹதீஸ் அறிஞர்கள், அப்துர் ரஹ்மான் பின் கன் அஷ்ஷரி அறிவித்ததாக, ஒரு ஹதிஸைச் சொல்கிறார்கள்.***

*உமர் பின் கத்தாப்(ரலி) கட்டளையின் பேரில், நான் ஷாம் கிறிஸ்தவர்களுக்கான நிபந்தனைகளை உடன்படிக்கையாக எழுதினேன், அதன் விவரம் வருமாறு:*

*நிகரற்ற அருளாளனும், அளவற்ற அன்புடையோனுமாகிய அல்லாஹ்வின் திருப்பெயரால் துவங்குகிறேன். இது அல்லாஹ்வின் சேவகரும், நம்பிக்கையாளர்களின் தலைவருமாகிய உமர் என்பவருக்கும், இன்ன இன்ன நகரத்தில் வாழும் கிறிஸ்தவர்களுக்கும் இடையே எழுதப்படும் உடன்படிக்கை ஆவணமாகும். முஸ்லிம்களாகிய நீங்கள் எங்களிடம் வந்தபோது (எங்களை ஆட்சி செய்யும் போது), உங்களிடமிருந்து எங்களையும், எங்கள் பிள்ளைகளையும், சொத்துக்களையும், எங்கள் பகுதியில் எங்கள் மார்க்கத்தை பின்பற்றுபவர்களையும்*

உங்களிடமிருந்து காப்பாற்றிக் கொள்வதற்கு உங்களிடமே நாங்கள் கோரிக்கைவிடுக்கிறோம்.

**எங்கள் மீது நாங்களே கீழ்கண்ட நிபந்தனைகளை விடுத்துக்கொள்கிறோம்:**

- எங்கள் பகுதியில் புதிய கிறிஸ்தவ மடத்தையோ, சர்சையோ மற்றும் துறவிகளுக்கான இல்லங்களையோ கட்டமாட்டோம்.
- எங்கள் வணக்கஸ்தலங்கள் புதுப்பிக்கவேண்டிய நிலையில் சிதிலமடைந்து இருந்தாலும், அதனை புதுப்பிக்கமாட்டோம், பழுது பார்க்கமாட்டோம்.
- எங்களின் வணக்க ஸ்தலங்களை முஸ்லிம்களுக்கு எதிராக செயல்படும் இடமாக மாற்றமாட்டோம்.
- எந்த ஒரு முஸ்லிமாவது எங்கள் வணக்கஸ்தலங்களில் வந்து இளைப்பாற வேண்டும் என்று விரும்பினால், அவர் பகலிலோ இரவிலோ எப்போது வந்தாலும் எங்கள் திருச்சபை கதவுகள் அவர்களுக்காக திறந்தே வைப்போம், அவருக்கு இல்லையென்று மறுப்பு கூறமாட்டோம்.
- வழிப்பிரயாணிகளாக வரும் முஸ்லிம்களுக்கு எங்கள் வீடுகளில்/சபைகளில் மூன்று நாளுக்கான இருப்பிடமும், உணவும் நாங்கள் தருவோம்.
- முஸ்லிம்களுக்கு எதிராக வேவு பார்ப்பவர்களுக்கு எங்கள் வீடுகளில், திருச்சபைகளில் பதுங்கி இருக்க இடம் தரமாட்டோம்.
- எங்கள் பிள்ளைகளுக்கு நாங்கள் குர்-ஆனை கற்றுத்தரமாட்டோம்.
- ஷிர்க் என்றுச் சொல்லக்கூடிய இஸ்லாமிய பாவங்களைச் செய்ய நாங்கள் மற்றவர்களை உற்சாகப்படுத்தமாட்டோம்.
- எங்கள் மதத்திலிருந்து முஸ்லிமாக மாறவிரும்புகிறவர்களை நாங்கள் தடுக்கமாட்டோம்.
- முஸ்லிம்களை நாங்கள் மதிப்போம், நாங்கள் உட்கார்ந்து இருக்கும் இடத்தில் அவர்கள் வந்து உட்கார விரும்பினால், நாங்கள் அந்த இடத்தை அவர்களுக்கு கொடுத்துவிட்டு, சென்றுவிடுவோம்.
- முஸ்லிம்களைப்போல நடை உடை பாவணையை நாங்கள் செய்யமாட்டோம். அதாவது முஸ்லிம்களைப் போல உடை, தொப்பி, தலைப்பாகை, செருப்பு அணிவது, முஸ்லிம்களைப்போல தலைமுடி வைத்துக்கொள்வது, பேச்சு, புனைப்பெயர்கள், பட்டங்கள், மிருகங்கள் மீது முஸ்லிம்களைப் போல பயணிப்பது, முஸ்லிம்களைப் போல பட்டயங்களை தோள்களில் சுமந்துக் கொண்டுச் செல்வது, இப்படிப்பட்ட ஆயுதங்களை வாங்குவது போன்றவைகளைச் செய்யமாட்டோம். (எங்களை முஸ்லிம்களாக காட்டும் எதனையும் செய்யமாட்டோம்).
- எங்கள் ஸ்டாம்புகளை/இதர அச்சுக்களை அரபியில் பதிக்கமாட்டோம் மற்றும் மதுபானம் விற்கமாட்டோம்.
- எங்கள் தலைமுடியின் முன்பாகத்தை கத்தரித்துக்கொள்வோம்.
- எங்களின் பாரம்பரிய உடைகளை அணிவோம். நாங்கள் எங்கு இருந்தாலும் இடுப்பில் இடைக்கச்சை (பெல்ட்) கட்டுவோம்.
- எங்கள் திருச்சபைகளுக்கு முன்பாக, அல்லது திருச்சபை கட்டிடத்தின் மேல் சிலுவை சின்னத்தை வைக்கமாட்டோம்.
- கடைகளிலும், சந்தைகளிலும், இதர புத்தகங்களிலும், எங்கள் மார்க்கம் சம்மந்தப்பட்ட காரியங்களை முஸ்லிம்களுக்கு முன்பாக வைக்கமாட்டோம், விற்கமாட்டோம்.
- எங்கள் திருச்சபைகளில் கோயில் மணியை அடிக்கமாட்டோம்.
- எங்கள் திருச்சபைகளில் முஸ்லிம்கள் இருந்தால் அவர்களுக்கு முன்பாக எங்கள் வேதங்களை சத்தத்தை உயர்த்தி வாசிக்கமாட்டோம்.
- எங்கள் சவ அடக்க ஆராதனைகளிலும், சத்தத்தை உயர்த்தி ஜெபம் செய்யமாட்டோம்.

- *சவ அடக்கத்துக்காக கல்லறைக்கு முஸ்லிம்களின் சந்தை மற்றும் கடைத்தெரு வழியாகச் செல்லும்போது, மெழுகுகளை எரித்துக்கொண்டுச் செல்லமாட்டோம்.*
- *மரித்த கிறிஸ்தவர்களை, முஸ்லிம்களின் கல்லறைக்கு பக்கத்தில் அடக்கம் செய்யமாட்டோம்.*
- *முஸ்லிம்கள் வாங்கிய அல்லது வாங்க விரும்பும் அடிமைகளை வேலையாட்களை நாங்கள் வாங்கமாட்டோம்.*
- *முஸ்லிம்களின் வீடுகளில் அவர்களின் தனிமையை நாங்கள் கெடுக்கமாட்டோம்.*

*இந்த ஆவணத்தை நான் எழுதிய பிறகு, உமர் அவர்களிடம் சரி பார்ப்பதற்காக கொடுத்தேன், அவர் 'இதோடு கூட, கீழ்கண்ட நிபந்தனையும் சேர்த்து எழுது என்றுச் சொன்னார்', அதாவது*

- *நாங்கள் முஸ்லிம்களை அடிக்கமாட்டோம்.*
- *இந்த நிபந்தனைகளை நாங்களும், எங்கள் பகுதியில் வாழும் இதர கிறிஸ்தவர்களும் எங்கள் மீது சுமத்திக்கொள்கிறோம். இதற்கு பதிலாக, இஸ்லாமிய அரசாங்கத்திலிருந்து பாதுகாப்பை பிரதிபலனாக கேட்கிறோம்.*
- *நாங்கள் இந்த நிபந்தனைகளில் ஒன்றையாவது மீறினால், நாங்கள் "திம்மாஹ்(பாதுகாப்பு அளிக்கப்படும் நிலையிலிருந்து)" நீங்கிவிடுவோம். அப்போது, இஸ்லாமிய அரசுக்கு எதிராக நடப்பவர்களுக்கு என்ன தண்டனை கொடுக்கப்படுமோ அந்த தண்டனையை எங்களுக்குத் தரலாம்.*

*தமிழ் மூலம்:* www.answering-islam.org/tamil/dictionary/u/pact_of_umar.html //

**உமர் புறா அல்ல, பிணங்களைக் கொத்தித்திண்ணும் கழுகு என்றுச் சொல்லும் இஸ்லாம்:**

பாரா அவர்களே, மேற்கண்ட விளக்கவுரையை நிதானமாக படித்துப் பாருங்கள். உமர் சிரியாவை பிடித்த போது, அங்கிருக்கும் கிறிஸ்தவர்கள் இஸ்லாமிய ஆட்சியாளர்களின் கையில் செத்து மடியாமல் [பாதுகாப்பாக] இருக்கவேண்டுமென்றால், என்னவெல்லாம் செய்யவேண்டும் என்ற நிபந்தனைகள் அடங்கிய உடன்படிக்கையை எழுதி கையெழுத்து வாங்கியுள்ளார். இந்த உடன்படிக்கை, கிறிஸ்தவர்கள் எழுதியதாக இருந்தாலும், அதனை எழுதியவர் உமர் ஆவார்.

**மேற்கண்ட விளக்கத்தை இப்னு கதீர் எழுதியது இந்த வசனத்துக்குத்தான்:**

> குர்-ஆன் **9:29.** வேதம் வழங்கப்பட்டவர்களில் எவர்கள் அல்லாஹ்வின் மீதும் இறுதிநாளின் மீதும் நம்பிக்கை கொள்ளாமலும், அல்லாஹ்வும் அவனுடைய தூதரும் தடுத்தவற்றை **'**தடுக்கப்பட்டவை**'** என்று கருதாமலும் சத்திய மார்க்கத்தைப் பின்பற்றாமலும் இருக்கின்றார்களோ அவர்களுக்கு எதிராகப் போர் புரியுங்கள்; **அவர்கள் சிறுமை அடைந்தவர்களாகி (தமது) கையால் ஜிஸ்யா வரியைச் செலுத்தும் வரை!** (இஸ்லாமிய நிறுவனம் டிரஸ்ட் **(IFT)** தமிழாக்கம்)

**பாரா அவர்கள் எழுதியது:**

> *// உண்மையில், உமருக்கு இஸ்லாத்தைப் "பரப்ப" வேண்டிய அவசியம் அத்தனையன்றும் தீவிரமாக இருப்பதாக அப்போது தோன்றவில்லை. தானாகவே அது பரவிக்கொண்டிருந்தது. ஆகவே, அமைப்பு ரீதியில் இஸ்லாமிய சாம்ராஜ்ஜியத்தை வலுவாக நிறுவுவதே அவரது முக்கிய நோக்கமாக இருந்தது. //*

**உமர் எழுதியது:**

சரியாகத் தான் சொன்னீர்கள். இஸ்லாம் பற்றியும் அல்லாஹ் பற்றியும் கலிஃபாக்கள் அக்கரைக்கொள்ளவில்லை. நாடுகளை பிடித்தால் போதும், அவர்களிடமிருந்து ஜிஸ்யா வரிகளை வாங்கினால் போதும்.

'கடமை கண்ணியம் கட்டுப்பாடு' என்ற ஸ்லோகம் இருப்பது மாதிரி, முஸ்லிம் கலிஃபாக்களின் ஸ்லோகம் 'மண்ணும், பெண்ணும், பொன்னும்' என்பதாக இருந்தது. இஸ்லாமை நான் ஏன் பரப்ப முயலவேண்டும்? நாடுகளை பிடித்து, அம்மக்களிடம் இஸ்லாமை ஏற்கிறாயா அல்லது ஜிஸ்யா வரி தருகிறாயா? என்று கட்டாயப்படுத்தினால் போதும். மேலும், காலப்போக்கில் இஸ்லாமிய நாட்டில் காஃபிர்கள் அனுபவிக்கும் கொடுமைகளிலிருந்து தங்களை காத்துக்கொள்ள முஸ்லிமாக அனேகர் மாறிவிடுவார்கள் (மேற்கண்ட உமரின் உடன்படிக்கையின் நிபந்தனைகளைப் பார்க்கவும்).

இஸ்லாமிய ஆட்சியை வலிவான ஒன்றாக மாற்றவேண்டும் என்பதற்காக, நாடுகளை பிடிக்க போர் செய்து பல இலட்ச மக்களின் தலைகளை போர்க்களங்களில் சீவுவது அல்லாஹ்விற்கு உகந்த ஒன்றா? இப்படியும் ஒரு மார்க்கம் உலகிற்கு வேண்டுமா?

**பாரா அவர்கள் எழுதியது:**

> *// அடிமைகளாகவே இருந்து பழகிவிட்ட அரேபியர்களின் வாழ்வில் ஒரு மறுமலர்ச்சியை உண்டுபண்ணுவதே அவரது முதல் சிந்தனையாக இருந்திருக்கிறது. இந்தச் செயல்பாடுகள் ஒழுங்காக நடைபெறும் பட்சத்தில், ஒட்டுமொத்த அரேபிய சமூகமும் இஸ்லாத்தில் இணைவது பெரிய விஷயமாக இருக்காது என்றே அவர் கருதினார். //*

**உமர் எழுதியது:**

நீங்க நல்லா ஜோக் அடிக்கிறீங்க பாரா!

நகைச்சுவையாக எழுதுவது ஒரு கலை. ஆனால், உலகத்துக்கே பகையாக மாறிய இஸ்லாமை சுவையாக மாற்றி எழுதுவது அதிலும் பெரிய கலை.

உமர் சமூக சீர்திருத்தவாதியா? அப்படியே அரேபியர்களின் வாழ்வில் மறுமலர்ச்சியைச் கொண்டுவரவேண்டுமென்றால், அரேபிய தீபகற்பத்தில் உள்ள அரேபியர்களின் வாழ்வில் செய்யவேண்டியது தானே!

- அது எப்படி அரேபியாவிற்கு வெளியே இருக்கும் நாடுகளை ஆக்கிரமித்துக்கொண்டால், அரேபியர்களின் வாழ்வில் மறுமலர்ச்சி வரும்?
- அது எப்படி கிறிஸ்தவ நாடுகளோடு போரிட்டு, அவர்களிடம் ஜிஸ்யா என்ற வரியை வாங்கினால், அரேபியர்களின் வாழ்வில் மறுமலர்ச்சி வரும்?
- அது எப்படி, சிரியாவில், எகிப்தில் உள்ள கிறிஸ்தவர்களை கொன்றுகுவித்து, நாட்டை பிடித்தால், அரேபியாவில் உள்ள அரேபியர்களின் வாழ்வில் மறுமலர்ச்சி வரும்?

பாரா அவர்களே, உங்கள் லாஜிக் எனக்கு பிடிபடவில்லையே! மத்திய கிழக்கு வரைபடத்தை (மேப்பை) பார்த்து இருக்கீங்களா?

கி.பி. 624 லிருந்து கி.பி. 733 வரை இஸ்லாம் எப்படி போர்கள் தொடுத்து, அரேபியாவைச் சுற்றியுள்ள நாடுகளை பிடித்தது என்பதைப் பற்றிய சரித்திர விவரங்கள் அடங்கிய ஒரு

படத்தை இங்கு தருகிறேன். இது ஒரு **GIF** படமாகும், இது **16** நொடிகளில் இஸ்லாமின் முதல் **110** ஆண்டுகளின் ஆக்கிரமிப்புக்களை தெளிவாக சொல்லிவிடும். இந்த படத்தில் கி.பி. **634** லிருந்து கி.பி. **644** வரையுள்ள விவரம் தான் உமரின் ஆக்கிரமிப்புக்கள்.

**இஸ்லாமிய விஸ்தரிப்பு: கி.பி. 624ல்**




**இஸ்லாமிய விஸ்தரிப்பு: கி.பி. 628ல்**



**இஸ்லாமிய விஸ்தரிப்பு: கி.பி. 632ல்**




**இஸ்லாமிய விஸ்தரிப்பு: கி.பி. 634ல்**



இஸ்லாமிய விஸ்தரிப்பு: கி.பி. 640ல்




இஸ்லாமிய விஸ்தரிப்பு: கி.பி. 661ல்



**இஸ்லாமிய விஸ்தரிப்பு: கி.பி. 670ல்**




**இஸ்லாமிய விஸ்தரிப்பு: கி.பி. 710ல்**



இஸ்லாமிய விஸ்தரிப்பு: கி.பி. 733ல்




மூலம் ஆங்கிலத்தில்: **The Raise of Islam**
இந்த தொடுப்பில் ஒவ்வொரு ஆண்டுக்கும் கொடுக்கப்பட்ட ரேடியோ பட்டணை அழுத்தி, இஸ்லாமிய விஸ்தரிப்பை அறிந்துக்கொள்ளலாம்.

மேலும், உமரின் காலத்தில் இஸ்லாமிய ராஜ்ஜியம் எதுவரை விஸ்தரிக்கப்பட்டது என்பதையும் விக்கீபீடியாவிலிருந்து ஒரு படத்தை இங்கு தருகிறேன்.



**Source: Wikipedia - Caliph Umar's empire at its peak 644**

இந்த போர்கள் வலியச்சென்று செய்த போர்கள் ஆகும், மற்ற நாட்டு மக்களின் தலைகளை சீவி, அவர்களின் இரத்தத்தை கலவையாக சேர்த்து போடப்பட்டது தான் இஸ்லாமிய விஸ்தரிப்பு அஸ்திபாரங்கள். இந்த இராஜ்ஜிய விஸ்தரிப்புக்கள் இஸ்லாமிய பிரச்சாரங்களினால் செய்யப்படவில்லை, போர்கள் புரிந்து நாட்டை பிடித்தார்கள். இஸ்லாமின்

முதல் நான்கு கலீஃபாக்கள் எத்தனை போர்களை புரிந்தார்கள்? எப்படி இஸ்லாமை பரப்பினார்கள் என்பதை வாசகர்கள் இணையத்தில் தேடி படித்துக்கொள்ளலாம். இதைப் பற்றி தேவைப்பட்டால், அடுத்தடுத்த கட்டுரைகளில் காண்போம்.

**பாரா அவர்கள் எழுதியது:**

> *// ஏனெனில், "மனப்பூர்வமாக அன்றி, உயிருக்குப் பயந்தோ, தன்னைக் காப்பாற்றிக்கொள்வதற்காகவோ இஸ்லாத்தை ஏற்பது இறைவனாலேயே அங்கீகரிக்கப்படாது" என்ற பொருளில் வரும் குர் ஆனின் ஒரு வசனத்தின்மீது அவருக்கு அளப்பரிய நம்பிக்கை உண்டு. //*

**உமர் எழுதியது:**

இப்படியெல்லாம் எழுதச்சொல்லி உங்களுக்கு முஸ்லிம்கள் சொன்னார்களா?

உமர் எப்படி நடந்துக்கொண்டார் என்பதை அறிய முஹம்மது எப்படி இந்த விஷயத்தில் செயல்பட்டார் என்பதை கவனிக்கவேண்டும். இதற்காக, நான் ரஹீக் சரித்திர புத்தகத்தை இங்கு மேற்கோள் காட்டவேண்டும். இந்த புத்தகத்தை பாரா அவர்களும் படித்துள்ளார்கள் என்பது குறிப்பிடத்தக்கது.

முஹம்மது மக்காவை பிடிக்கிறார், அவரது முன்னால் எதிரிகளை கொல்லும்படி கட்டளையிடுகிறார். முஸ்லிம்களில் சிலர் சிலருக்கு சிபாரிசு செய்தார்கள். உயிருக்கு பயந்து சிபாரிசு செய்யப்பட்டவர்கள் இஸ்லாமை ஏற்றார்கள். அவர்கள் ஏற்காமல் இருந்திருந்தால், அவர்களின் தலைகள் சீவப்பட்டு இருந்திருக்கும். இவ்விவரங்கள் என் சொந்தத்திலிருந்து எடுத்து எழுதவில்லை, ரஹீக் புத்தகம் இதனை பதிவு செய்துள்ளது. ரஹீக்கை படித்த பாரா அவர்கள், இந்த விஷயத்தில் மிகப்பெரிய பொய்யைச் சொல்லியுள்ளார் என்பது தான் உண்மை. [ரஹீக் புத்தகத்தின் முக்கியத்துவம் பற்றி அறிய, இக்கட்டுரையை படிக்கவும்: 2017 ரமளான் (28) - நிலமெல்லாம் இரத்தம் - பாராவை ரணப்படுத்திய ரஹீக்]

**ரஹீக் புத்தகத்திலிருந்து மேற்கோள்கள்:**

> *// நூல்: ரஹீக், பக்கம் 452, 453*
>
> *தலைப்பு:* **பெருங்குற்றவாளிகளைக் கொல்ல கட்டளையிடுதல்**
>
> தொடுப்புக்கள்: page *452 & 453* (www.tamililquran.com/history.php)
>
> **பெருங்குற்றவாளிகளைக் கொல்ல கட்டளையிடுதல்**
>
> *நபி (ஸல்) இன்றைய தினம் ஒன்பது கொடுங்காஃபிர்களை அவர்கள் கஅபாவின் திரைக்குள் நுழைந்தாலும் கொல்லப்பட வேண்டும் எனக் கட்டளையிட்டார்கள். அவர்களின் பெயர்கள்: 1) அப்துல் உஜ்ஜா இப்னு கதல், 2) அப்துல்லாஹ் இப்னு ஸஅத் இப்னு அபூ சரஹ், 3) இக்மா இப்னு அபூஜஹ்ல், 4) ஹாரிஸ் இப்னு நுஃபைசல் இப்னு துஹப், 5) மகீஸ் இப்னு சுபாபஹ், 6) ஹபார் இப்னு 7)அல் அஸ்வத், 8) இப்னு கத்தலின் இரண்டு அடிமைப் பாடகிகள், 9) அப்துல் முத்தலிப் வம்சத்திற்குச் சொந்தமான 'சாரா' எனும் அடிமை. இப்பெண்ணிடம்தான் ஹாதிப் அனுப்பிய ராணுவ இரகசிய கடிதம் பறிமுதல் செய்யப்பட்டது. இவர்களைப் பற்றியுள்ள குறிப்புகள் அடுத்து வருகின்றன.*

அப்துல்லாஹ் இப்னு ஸஅதை உஸ்மான் (ரழி) அழைத்து வந்து சிபாரிசு செய்ய நபி (ஸல்) ஏற்றுக் கொண்டார்கள். எனவே, அவர் உயிர் பாதுகாக்கப்பட்டது. இவர் இதற்கு முன் ஒருமுறை இஸ்லாமை ஏற்று ஹிஜ்ரத் செய்து மதீனா வந்திருந்தார். சில காலங்கள் அங்கு தங்கிய பின் இஸ்லாமை விட்டு வெளியேறி மக்கா வந்துவிட்டார். இவர் நபியின் அவையில் தான் இப்போது முஸ்லிமாகி விடுவதாக அறிவித்தார். ஆனால், தங்களது தோழர்களில் யாராவது ஒருவர் அவரை கொன்றுவிட வேண்டும் என்ற எண்ணத்தில் நபி (ஸல்) இருந்ததால் அவரது இஸ்லாமை ஏற்க தயக்கம் காட்டினார்கள். பின்பு சிறிது நேரம் கழித்து அவரது இஸ்லாமை நபி (ஸல்) ஏற்றுக் கொண்டார்கள். அப்துல் உஜ்ஜா இப்னு கத்தல் கஅபாவின் திரையைப் பிடித்துத் தொங்கிக் கொண்டான். நபித்தோழர் ஒருவர் நபியிடம் வந்து "என்ன செய்வது?" என்று கேட்டார். "அவனைக் கொன்று விடவேண்டியதுதான்" என நபி (ஸல்) அவர்கள் கூறியவுடன் அவர் அவனைக் கொன்று விட்டார்.

மகீஸ் இப்னு சபாபா- இவன் ஏற்கனவே முஸ்லிமாக இருந்தான். ஓர் அன்சாரித் தோழரை கொன்றுவிட்டு மதம் மாறி முஷ்ரிக்குகளுடன் சேர்ந்து கொண்டான். இவனை நுபைலா இப்னு அப்துல்லாஹ் (ரழி) என்பவர் கொன்றொழித்தார்.

ஹாரிஸ் இப்னு நுஃபைல்- இவன் மக்காவில் நபியவர்களை அதிகம் துன்புறுத்திக் கொண்டிருந்தான். இவனை அலீ (ரழி) கொன்றார்கள்.

ஹப்பார் இப்னு அஸ்வத்- இவர்தான் நபி (ஸல்) அவர்களின் மகள் ஜைனப் (ரழி) ஹிஜ்ரத் செய்து மதீனா சென்றபோது வழிமறித்து தனது ஈட்டியால் குத்தினார் இதனால் அவர்கள் அமர்ந்திருந்த (கஜாவா) ஒட்டகத் தொட்டியிலிருந்து கீழே விழுந்தார்கள் அவர்களது வயிற்றில் காயமேற்பட்டு கரு கலைந்துவிட்டது. இவர் மக்கா வெற்றியின் போது அங்கிருந்து தப்பி ஓடினார் பின்பு சில காலம் கழித்து இஸ்லாமை ஏற்றார்.

மற்ற இப்னு கத்லுடைய இரு அடிமைப் பாடகிகளில் ஒருத்தி கொலையுண்டாள். மற்றவள் முஸ்லிம் ஒருவரால் அடைக்கலம் தரப்பட்டு பின்னர் இஸ்லாமை ஏற்றார். அவ்வாறே 'சாரா' என்ற அடிமைப் பெண்ணும் அடைக்கலமாகி இஸ்லாமைத் தழுவினார்.

அறிஞர் இப்னு ஹஜர் (ரஹ்) கூறுகிறார்: ஹாரிஸ் இப்னு துலாத்தில் அல்குஸாயீ என்பவனையும் கொல்லும்படி நபி (ஸல்) கட்டளையிட்டார்கள். எனவே, அவனை அலீ (ரழி) கொன்றொழித்தார்கள் என அபூ மஃஷக் (ரழி) கூறுகிறார்.

பிரபல கவிஞர் கஅப் இப்னு ஜுஹைரையும் கொல்லும்படி நபி (ஸல்) அவர்கள் கட்டளை பிறப்பித்தார்கள். ஆனால், இவர் நபி (ஸல்) அவர்கள் சமூகம் வந்து இஸ்லாமை ஏற்று தண்டனையிலிருந்து தப்பித்துக் கொண்டார். இவரைப் பற்றிய விரிவான செய்தி பின்னால் வரவிருக்கின்றது.

இவ்வாறே ஹம்ஜா (ரழி) அவர்களைக் கொலை செய்த வஹ்ஷியையும் கொன்றுவிட கட்டளையிடப்பட்டது. பின்னர் இஸ்லாமைத் தழுவியதால் மன்னிக்கப்பட்டது. அபூஸுஃப்யானின் மனைவி ஹிந்த் பின்த் உத்பாவும் கொலைப் பட்டியலில் இருந்தார். அவரும் இஸ்லாமை ஏற்றதால் மன்னிக்கப்பட்டார். இப்னு கதலின் அடிமைப் பெண் அர்னப் என்பவளும் கொலையுண்டாள் என இமாம் ஹாகிம் (ரஹ்) குறிப்பிடுகின்றார். கொலையுண்டவர்களில் உம்மு ஸஅத் என்பவரும் உண்டு என இப்னு இஸ்ஹாக் (ரஹ்) குறிப்பிடுகின்றார். இந்த கணக்கின்படி எட்டு

*ஆண்களும் ஆறு பெண்களும் இப்பட்டியலில் இடம் பெற்றிருந்தனர். ஆனால், இங்கு கூறப்பட்ட அர்னப், உம்மு ஸஅத் இருவரும் இப்னு கத்தலின் இரண்டு பாடகிகளாக இருக்கலாம். அவ்விருவருடைய பெயர்கள் அல்லது புனைப் பெயர்களில் ஏற்பட்ட கருத்து வேற்றுமையால் தனித் தனியாகக் கூறப்பட்டிருக்கலாம். (இப்னு ஹஜர் (ரஹ்) கூற்று முடிவுற்றது.) (ஃபத்ஹுல் பாரி)*

**ஸஃப்வான் இப்னு உமய்யா, ஃபழாலா இப்னு உமைய்யா இஸ்லாமைத் தழுவுதல்**

*ஸஃப்வான் குறைஷிகளின் பெருந்தலைவர்களில் ஒருவராக இருந்தும் அவரைக் கொல்ல வேண்டுமென்று நபி (ஸல்) கட்டளையிடவில்லை. இருப்பினும் அவர் பயந்து மக்காவிலிருந்து ஓட்டம் பிடித்தார். அவருடைய முன்னாள் நண்பர் உமைர் இப்னு வஹப் அல் ஜுமஹ நபியிடம் அவருக்காக (பாதுகாப்பு) அபயம் தேடினார். நபி (ஸல்) அதனை ஏற்று மக்காவுக்குள் வரும் போது தாம் அணிந்திருந்த தலைப்பாகையைக் கொடுத்தனுப்பினார்கள். உமைர் (ரழி) அதனை பெற்றுக் கொண்டு ஸஃப்வானைத் தேடிப் புறப்பட்டார். 'ஜுத்தா' எனும் கடற்கரையில் யமன் நோக்கிய பயணத்திற்கு ஸஃப்வான் ஆயத்தமான போது உமைர் (ரழி) அவரைச் சந்தித்து நபி (ஸல்) அவர்களிடம் அழைத்து வந்தார். ஸஃப்வான் நபியிடம் தனக்கு இரண்டு மாத கால அவகாசம் வேண்டுமெனக் கோரினார். அதற்கு நபி (ஸல்) நான்கு மாத கால அவகாசம் தருவதாக மொழிந்தார்கள். சில நாட்களுக்கு பின் ஸஃப்வான் இஸ்லாமைத் தழுவினார். இவருடைய மனைவியோ இவருக்கு முன்பே இஸ்லாமை ஏற்றிருந்தார். நபி (ஸல்) இருவரையும் பழைய திருமண உறவைக் கொண்டே சேர்த்து வைத்தார்கள். //*

**பயத்தினால் இஸ்லாமை ஏற்ற மக்காவினர் (முஹம்மதுவின் எதிரிகள்):**

[மேற்கண்ட மேற்கோளில் **கொட்டை எழுத்துக்களில் கொடுக்கப்பட்டவைகள் முஹம்மதுவினால் மன்னிக்கப்படாமல் கொல்லப்பட்டவர்கள்]**

**மேற்கண்ட சரித்திர விவரங்களை கூர்ந்து கவனிக்கவேண்டும். திடீரென்று முஹம்மது பெரும்படையுடன் மக்காவிற்குள் நுழைந்தார். 20 ஆண்டுகளாக முஹம்மதுவின் பரம எதிரிகளாக இருந்தவர்கள், இவரை ஒழித்துக்கட்டவேண்டும் என்று கங்கணம் கட்டிக்கொண்டு இருந்தவர்கள் அங்கு இருந்தார்கள். மேலும், இதற்கு முன்பு முஹம்மதுவை கேலி செய்து கவிதை பாடி விமர்சித்தவர்கள் கூட முஹம்மதுவின் 'மரண பட்டியலில்' இருந்தார்கள். அமைதி புறா அதாவது முஹம்மது இவர்களைக் கொல்லும்படி கட்டளையிட்டார். உயிருக்கு பயந்து, சிலர் ஊரைவிட்டே ஓடினார்கள். சிலர் காபாவின் மீது போர்த்தி இருக்கும் [புனிதமான] போர்வையை பிடித்துக்கொண்டார். முஹம்மது காபாவை மதிக்கிறார் என்பதால் உயிர் தப்பித்துக்கொள்ளலாம் என்று கனவு கண்டார்கள். ஆனால், முஹம்மது விடுவதாக இல்லை. அதாவது, அவனை இழுத்துக்கொண்டு வந்து கொல்லுங்கள் என்று கட்டளையிட்டார், முஸ்லிம்கள் கொன்றும் போட்டார்கள்.**

**சிலருக்கு முஸ்லிம்களிடமிருந்து சிபாரிசு கிடைத்தது (எல்லோரும் நண்பர்களும் சொந்தக்காரர்கள் தானே), உடனே இவர்களுக்கு ஞானோதயம் வந்தது. 20 ஆண்டுகளாக கள்ள நபி என்றும், பைத்தியக்காரன், ஏமாற்றுக்காரன் என்றும் சொன்னவர்களுக்கு, அன்று ''முஹம்மது ஒரு இறைத்தூதராக காணப்பட்டார்''. உயிருக்கு பயந்து இஸ்லாமை ஏற்றவன் உயிர் தப்பினான், சிபாரிசு கிடைக்காதவனின் தலை சீவப்பட்டது.**

**பாரா அவர்களே, இது தான் உண்மை சரித்திரம். இஸ்லாம் பற்றி எழுத உங்களுக்கு அனுபவம் பத்தாது, உங்களுக்கு அதைப் பற்றிய ஞானமும் இல்லை. நீங்கள் இஸ்லாம் பற்றி**

கற்றுக்கொண்டது, வெறும் ஆனா, ஆவன்னா தான். இன்னும் கற்கவேண்டியது நிறைய இருக்கிறது. அரைகுறை ஞானத்தோடு இஸ்லாமை தொடாதீங்க! வேண்டாம், பட்ட [ நிலமெல்லாம் இரத்தத்திற்காக படப்போகும்] தலைகுனிவு போதும், இன்னும் அதிகமாக எழுதி கேவலப்பட்டு போகாதீங்க என்று தாழ்மையுடன் கேட்டுக்கொள்கிறேன். இப்படி எழுதுகிறேன் என்று என்மீது கோபம் வேண்டாம், உங்களைப் போன்றவர்களுக்கு பாடம் புகட்டுவதற்கு எழுத்துவடியில் பதில்கள் கொடுப்பதைத் தவிர வேறு வழியில்லை கிறிஸ்தவர்களுக்கு!

**பாரா அவர்கள் எழுதியது:**

> *// இதன் அடிப்படையில்தான், அவர் தாம் கைப்பற்றும் தேசங்களில் உள்ள பிற இனத்தவர் அனைவரிடமும் "உங்கள் உரிமைகள் அவசியம் பாதுகாக்கப்படும்" என்று முதலில் சொல்லிவிடுவது வழக்கம். இன்னும் ஒரு படி மேலே சென்று ஒருமுறை, "இஸ்லாமிய சாம்ராஜ்ஜியத்தின் பிரதிநிதியாக ஓர் ஆளுநரை நான் உங்களுக்கு நியமிக்கிறேன். அவரது பணி உங்கள் தோலை உரிப்பதோ, உங்கள் சொத்தை அபகரிப்பதோ அல்ல. உங்கள் மார்க்கத்தை நீங்கள் பின்பற்றிச் செல்வதற்கு எந்த இடையூறும் இன்றிப் பாதுகாப்பது மட்டுமே. இதிலிருந்து எந்த ஆளுநராவது தவறுகிறார் என்றால் எனக்குத் தெரியப்படுத்துங்கள். உரிய தண்டனை அவருக்கு நிச்சயம் உண்டு" என்று பேசியிருக்கிறார். //*

**உமர் எழுதியது:**

இந்த கட்டுரையின் ஆரம்பத்தில், இஸ்லாமிய அறிஞர் இப்னு கதீர் அவர்களின் விளக்கவுரையிலிருந்து, உமர் கிறிஸ்தவர்களோடு செய்த உடன்படிக்க நிபந்தனைகளை கொடுத்துள்ளேன், 'எப்படிப்பட்ட உரிமைகளை உமர் கொடுத்துள்ளார்' என்பதை படித்து தெரிந்துக்கொள்ளுங்கள்.

இந்த கண்கட்டு வித்தை இனியும் இங்கு செல்லுபடியாகாது பாரா அவர்களே!

**பாரா அவர்கள் எழுதியது:**

> *// இந்த அறிவிப்புக்குப் பிறகுதான் உமர் எகிப்தின் மீது படையெடுத்தார். எகிப்தை அப்போது ஆண்டுகொண்டிருந்தவர்கள், பைசாந்தியர்கள். (பைசாந்தியர்கள் என்பது இனத்தின் அடையாளப்பெயர். மத ரீதியில் அவர்கள் அனைவரும் கிறிஸ்துவர்களே.)*
>
> . . .
>
> *ஆனால், புதியதொரு பேரரசை நிறுவுவது என்கிற மாபெரும் கனவுடனும்* ***தன்னம்பிக்கையுடனும் யுத்தத்தில் பங்குபெற்ற இஸ்லாமிய வீரர்களின் ஆக்ரோஷமான தாக்குதலுக்கு முன்னால் பைசாந்திய ராணுவத்தால் தாக்குப்பிடிக்க இயலவில்லை.*** *பல இடங்களில் தோல்வியை ஒப்புக்கொண்டு முழந்தாளிட்டார்கள்.* ***வேறு பல இடங்களில் வாளுக்கு இலக்காகி அவர்களது தலைகள் மண்ணைத் தொட்டன.*** *(யுத்தத்தில் வாகனங்களாகப் பயன்படுத்தப்பட்ட மிருகங்களின்மீது தாக்குதல் தொடுப்பதில்லை என்பதை உமர் ஒரு கொள்கையாக வைத்திருந்ததாகச் சில ஆசிரியர்கள் எழுதியிருக்கிறார்கள். ஆனால் இதற்குத் தக்க ஆதாரங்களாக மிகப்பழைய அதாவது கி.பி. ஏழாம் நூற்றாண்டுக்கு மிக நெருக்கமான பிரதிகளிலிருந்து எதையும் பெற இயலவில்லை.)*

*சரித்திரத்தில், மிகக் கடுமையான யுத்தங்கள் என்று வருணிக்கப்படுவனவற்றுள் ஒன்று இது. எத்தனை தினங்கள் நடைபெற்றன என்பது பற்றிய திட்டவட்டமான புள்ளிவிவரங்கள் ஏதும் கிடைக்கவில்லையாயினும், மிகுந்த போராட்டத்துக்குப் பிறகே பைசாந்தியர்கள் தோல்வியைத் தழுவியதாகத் தெரிகிறது. //*

**உமர் எழுதியது:**

**''வேறு பல இடங்களில் வாளுக்கு இலக்காகி அவர்களது தலைகள் மண்ணைத் தொட்டன''**

பைசாந்திய வீரர்களின் தலைகள் சீவப்பட்டு மண்ணைத் தொட்டன என்று சுருக்கமாக, இஸ்லாமின் கோரதாண்டவத்தை ஒரே வரியில் சொல்லிவிட்டீர்கள். ஏனய்யா உமர் எகிப்தோடு சண்டையிடவேண்டும்? அல்லாஹ் சொன்னானா? இஸ்லாம் அமைதி மார்க்கம் என்று மார்தட்டுவது உண்மையானால், ஏன் பல்லாயிரக்கணக்கான மனித தலைகள் மண்ணைத் தொட வேண்டும்?

**கலீஃபா உமரும் இன்றைய கௌ ரக்ஷாக்களும் ஒரே இனத்தைச் சார்ந்தவர்கள்:**

உமரின் காலத்தில் மனிதர்களின் தலைகள் மண்ணைத்தொட்டன, ஆனால், வாகனங்களாக வந்த மிருகங்களை காயப்படுத்தக்கூடாது என்று உமர் சொன்னாராம்? என்னே ஒரு நல்ல மனிதர் கலீஃபா உமர்? இவருக்கு புளூ கிராஸ் குழுமத்தின் சார்ப்பிலிருந்து 'கால் நடைகளின் இரட்சகர் என்ற விருது வழங்க, உலக மக்கள் சிபாரிசு செய்யவேண்டும்'. ஆனால், மனித உரிமையை மீறி தலைகளை சீவினாரே, இந்த செயலுக்கு என்ன பரிசு தருவது?

மனுஷனா முக்கியம்! போரில் பயன்படுத்தப்படும் மிருகங்கள் தான் முக்கியம்! நம் இந்தியாவில் கௌ ரக்ஷா என்ற பெயரில் நடப்பது கூட இது தானே! மனிதன் முக்கியமல்ல, மாடு தான் முக்கியம். உமருக்கு அன்று 'மனிதன் முக்கியமல்ல, ஒட்டகமும், குதிரைகளும் தான் முக்கியம்'. இவ்விருவருக்கும் வித்தியாசம்: 'இந்தியாவில் மாடு, அரேபியாவில் ஒட்டகம் & குதிரை' அவ்வளவு தான். அப்போ மனுஷன்? 'போனால் போகட்டும் போடா? இந்த பூமியில் நிலையாய் வாழ்ந்தவன் யாரடா'?

மாடு **சாமி**, மனுஷன் ஆ**சாமி** தானே! அவனை மாட்டுக்காக சாகடிக்கலாம். இதுவரை மனுஷன் மாட்டை அடித்து சாப்பிட்டான், ஆனால், இப்போது சில மாடுகள் மனிதனை அடித்துக்கொண்டு இருக்கின்றது. மனுஷனுக்கு ஒரு காலம் வந்தால், மாட்டுக்கும் ஒரு காலம் வரும்.

**குறிப்பு:** நான் மாட்டுக்கறி சாப்பிடுவதில்லை. நான் ஆடு, கோழி, சேவல், நண்டு, மீன் போன்றவைகளை மட்டுமே சாப்பிடுகிறேன்(சில வேளைகளில் ஹெல்மட் போடாமல் இருசக்கர வாகனம் ஓட்டும் போது என்னையறியாமல் கொசுக்கள் வாயில் சென்றதுண்டு, இதற்கு நான் பொறுப்பல்ல. யாருக்குத் தெரியும் கொசு கூட சிலருக்கு சாமியாக இருந்தால்?). எனக்குத் தெரியாமல் யாராவது மட்டுக்கறி கொடுத்துவிட்டால் ஆடு என்று நினைத்து சாப்பிட்ட அனுபவங்கள் மட்டும் சில இருக்கின்றன. எனக்கு ஆட்டுக்கறிக்கும் மாட்டுக்கறிக்கும் வித்தியாசம் தெரிவதில்லை. இனி ஜாக்கிரதையாக இருந்துவிடுவேன். கௌ ரக்ஷாக்கள் இதனை குறித்துக்கொள்ளவும்.

மனிதனின் தலைகளை உருட்டி, அதன் மேல் இஸ்லாமிய சாம்ராஜ்ஜியம் கட்டவேண்டுமா? இஸ்லாம் ஒரு அமைதி மார்க்கம் என்றுச் சொல்லிக்கொள்ள முஸ்லிம்கள் வெட்கப்படவேண்டாமா? உமரைப் போன்றவர்களை முஸ்லிம்கள் புறக்கணிக்கவேண்டாமா? அமைதி இஸ்லாமின் தலைவர் என்றுச் சொல்லிக்கொண்டு, இரத்த ஆறை இப்படி

ஓடவிட்டால், அவன் எப்படி முஸ்லிமாகமுடியும்? என்று முஸ்லிம்கள் கேள்வி கேட்கவேண்டாமா?

அடுத்ததாக, பாரா அவர்களே உங்களின் கீழ்கண்ட வரிகள் சில கேள்விகளை உங்களிடம் கேட்க வைத்துவிட்டது:

//(யுத்தத்தில் வாகனங்களாகப் பயன்படுத்தப்பட்ட மிருகங்களின்மீது தாக்குதல் தொடுப்பதில்லை என்பதை உமர் ஒரு கொள்கையாக வைத்திருந்ததாகச் சில ஆசிரியர்கள் எழுதியிருக்கிறார்கள். ஆனால் இதற்குத் தக்க ஆதாரங்களாக மிகப்பழைய அதாவது கி.பி. ஏழாம் நூற்றாண்டுக்கு மிக நெருக்கமான பிரதிகளிலிருந்து எதையும் பெற இயலவில்லை.)//

**அய்யா பாரா அவர்களே,**

- ''கி.பி. 7ம் நூற்றாண்டுக்கு நெருக்கமான பிரதிகள்'' என்று எவைகளை நீங்கள் குறிப்பிட்டுள்ளீர்கள்? அவைகளின் பெயர்களை தரமுடியுமா? அவைகள் எந்த நூலகத்தில் அல்லது அருங்காட்சியகத்தில் வைக்கப்பட்டுள்ளது என்று குறிப்பிடமுடியுமா? உங்கள் கையில் அவைகள் எப்படி வந்தது?

- குர்-ஆனையும், ஹதீஸ்களையும், முஹம்மதுவின் வாழ்க்கை வரலாற்றை படிக்காத நீங்கள், மேற்கண்ட வரிகளில் சொன்ன அந்த ''பிரதிகள்'' எவை என்று குறிப்பிடமுடியுமா?

- உங்களுக்கு ஒரு உண்மையைச் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். முஹம்மது பற்றி, இஸ்லாம் பற்றி 7ம் நூற்றாண்டில் எழுதப்பட்ட ஒரு நூல் கூட உலகத்தில் கிடையாது. அதாவது முஸ்லிம்கள் நம்பகப்பூர்வமான ஆவணங்கள் என்றுச் சொல்லிம் ஹதீஸ்கள் முஹம்மதுவிற்கு 150 ஆண்டுகளுக்கு பிறகு தான் தொகுக்கப்பட்டது. ஹதீஸ்களுக்கு சில ஆண்டுகளுக்கு முன்பு எழுதப்பட்டது தான் இப்னு இஷாக்கின் முஹம்மதுவின் வாழ்க்கை சரித்திரம் (இது நம்மிடம் இல்லை). இச்சரித்திரத்திலிருந்து மேற்கோள்கள் காட்டப்பட்ட இப்னு இஷாம் மற்றும் தபரி சரித்திரங்கள் நம்மிடம் உள்ளது, இவைகள் கூட முஹம்மதுவிற்கு 150 ஆண்டுகளுக்கு பிறகு எழுதப்பட்டவைகள்.

- இவைகளை விட்டுவிட்டு, வேறு எந்த பிரதிகளை நீங்கள் ''கி.பி. ஏழாம் நூற்றாண்டுக்கு மிக நெருக்கமான பிரதிகள்'' என்றுச் சொல்கிறீர்கள். கி.பி. 7ம் நூற்றாண்டுக்கு நெருக்கமான பிரதிகள் என்றால், கி.பி. 699க்கு முன்பு எழுதப்பட்ட சரித்திரம் ஆகும். உங்கள் நூலகங்களில் தேடிப்பார்த்து அவைகளின் பெயர்களைச் கொஞ்சம் சொல்லுங்கள் பார்க்கலாம். தமிழ் முஸ்லிம் அறிஞர்கள் இதனை ஒரு சவாலாக எடுத்துக்கொள்ளட்டும், கி.பி. 699க்கு முன்பு எழுதப்பட்ட இஸ்லாமிய சரித்திரம் யாரிடமாவது இருந்தால் உலகத்துக்கு தெரிவிக்கலாம்.

- ஒருவேளை ''பிரதி'' என்று நீங்கள் குறிப்பிட்டது குர்-ஆனையா? குர்-ஆனில் முஹம்மது பற்றி தேடினாலே வாழ்க்கை குறிப்பு கிடைக்காது, இதில் உமர் பற்றி எங்கே விவரங்கள் இருக்கப்போகின்றது? தமாஷ் பண்ணாதீங்க பாரா!

இப்படியெல்லாம், உங்கள் ஆய்வுத்திறமைகளை அற்பவிலைக்கு குத்தகைக்கு விற்று இருக்கிறீர்கள் என்று நான் எதிர்ப்பார்க்கவில்லை.

**பாரா அவர்கள் எழுதியது:**

*// எகிப்துப் பேரரசின் மீதான உமரின் இந்தத் தாக்குதலை முதலில் வைத்துத்தான், வாள் முனையில் இஸ்லாத்தைப் பரப்பத் தொடங்கினார்கள் என்று மேற்கத்திய சரித்திர ஆசிரியர்கள் ஆரம்பிக்கிறார்கள். ஆனால், யுத்தத்தின் இறுதியில் நடைபெற்ற சம்பவத்தை ஒருகணம் சிந்திக்க இயலுமானால் இந்த வாதத்தின் அடிப்படை நொறுங்கிவிடுவதைப் பார்க்கலாம். //*

**உமர் எழுதியது:**

பாவம்! அந்த மேற்கத்திய சரித்திர ஆசிரியர்கள், அவர்களுக்கு ஒன்றுமே தெரியவில்லை. பாராவிற்கு தான் எல்லாம் தெரியும்.

ஆமாம், நான் சொல்வது உண்மை. உமர் என்னவோ, எகிப்து மீது தான் முதன் முதலாக போர் தொடுத்த மாதிரியும், அதுவரை 'உமர் ரொம்ப சமத்து பிள்ளை' என்று பெயர் வாங்கியது போலவும் எழுதுகிறீர்கள் நீங்கள்.

உமர் எகிப்தோடு செய்த போரில் மட்டும் தான் வாள்களை பயன்படுத்தினாரா? அதற்கு முன்பாக செய்த போர்களில் முஸ்லிம் இராணுவத்தினர் மிஸ்வாக் குச்சிகளை வைத்து யுதத்ம் செய்தார்களா? அல்லது ஏகே47 என்றுச் சொல்லக்கூடிய துப்பாக்கிகளை வைத்து சண்டை போட்டார்களா?

என்ன எழுத்தாளரே கதை கட்டுகிறீர்! உலக ஞானத்தை கைக்குள் வைத்து பார்வையிடும் இக்காலத்தில், நிலாவில் ஆயா வடை சுட்டாள், ஏழு கடல்களுக்கு அப்பால், ஒரு இராட்சன் இருந்தான் என்றெல்லாம் பாட்டிக்கதைகளைச் சொல்லிக்கொண்டு இருக்கிறீர்கள்?!

உமர் 634-644 வரை 12 ஆண்டுகள் ஆட்சி செய்தார். இந்த காலக்கட்டத்தில், அவர் மதினாவின் மசூதியில் உட்கார்ந்துக்கொண்டு நமாஸ் செய்துக்கொண்டு, ரமளான் நோன்பு இருந்துக்கொண்டு, அமைதியாக இருக்கவில்லை. நீங்கள் எழுதிய வரிகளின் படி சொல்லவேண்டுமென்றால், "இராஜ்ஜிய விஸ்தரிப்பு" பற்றி தான் அவர் அதிகமாக சிந்தித்தார். அக்கம் பக்கம் நாடுகள் மீது போர் தொடுத்து, நாடுகளை சூரையாடினார். அவரது 12 ஆண்டுகால ஆட்சியில் அவர் எந்தெந்த நாடுகளை, எந்தெந்த ஆண்டில் போர் தொடுத்து பிடித்தார் என்ற பட்டியலை இங்கு தருகிறேன். தொடுப்புக்களை சொடுக்கி படித்துக்கொண்டு, இஸ்லாமிய ஞானத்தை வளர்த்துக்கொள்ளுங்கள். இனி இப்படி கேவலமாக எழுதாதீர்கள்.

மூலம்: en.wikipedia.org/wiki/Military_conquests_of_Umar%27s_era

| Wars of Caliph Umar<br><br>கலீஃபா உமரின் போர்கள் |
|---|
| **Conquest of Eastern Roman Empire**<br><br>• Conquest of Syria (634 - 637)<br>• Conquest of Palestine (635 - 636)<br>• Campaigns in Eastern Anatolia (638)<br>• Conquest of Armenia (638 & 644)<br>• Conquest of Upper Egypt (640 - 641) |

- **Conquest of Lower Egypt (641 - 642)**
- **Conquest of North Africa (643)**

**Conquest of Sassanid Persian Empire**

- **Conquest of Iraq (636 - 637)**
- **Conquest of Isfahan & Tabaristan (642 - 643)**
- **Conquest of Fars (642)**
- **Conquest of Kerman & Makran (643 - 644)**
- **Conquest of Sistan (643 - 644)**
- **Conquest of Azerbaijan (643)**
- **Conquest of Khurasan (643 - 644)**

இப்போது சொல்லுங்கள்! உமர் இஸ்லாமை வாளால் பரப்பினார் என்ற குற்றச்சாட்டு, எகிப்தை பிடிக்கும் போது மட்டுமே வந்ததா? அதற்கு முன்பாக அவர் யுத்தமே செய்யாத சுத்தமான அரசாங்கத்தை நடத்தினாரா!

ஒரு அளவுக்குத் தான் இஸ்லாமுக்கு வக்காளத்து வாங்கவேண்டும். அதற்கு மேல் வாங்கினால், இப்படி தலைகுனிய நேரிடும்.

**பாரா அவர்கள் எழுதியது:**

> *// எகிப்துப் பேரரசின் மீதான உமரின் இந்தத் தாக்குதலை முதலில் வைத்துத்தான், வாள் முனையில் இஸ்லாத்தைப் பரப்பத் தொடங்கினார்கள் என்று மேற்கத்திய சரித்திர ஆசிரியர்கள் ஆரம்பிக்கிறார்கள். ஆனால், யுத்தத்தின் இறுதியில் நடைபெற்ற சம்பவத்தை ஒருகணம் சிந்திக்க இயலுமானால் இந்த வாதத்தின் அடிப்படை நொறுங்கிவிடுவதைப் பார்க்கலாம்.*
>
> *. . .*
>
> *யுத்தத்தில் வெற்றிகண்ட உமரின் ராணுவம், பெருத்த ஆரவாரத்துடன் ஜெருசலேத்தில் நுழைந்தது. பாலஸ்தீனத்து அரேபியர்கள் அத்தனை பேரும் மகிழ்ச்சிப் பெருக்கில் பிரமாண்டமான வரவேற்பு விழா எடுத்தார்கள். (உமர் பாலஸ்தீனுக்குள் நுழைவதற்கு முன்பே இஸ்லாம் அங்கே நுழைந்துவிட்டது என்பதை ஏற்கெனவே பார்த்திருக்கிறோம்!) கிறிஸ்துவர்களின் ஆட்சியிலிருந்து விடுதலை அடைந்துவிட்டோம் என்கிற பரவசத்தில், அந்த வெற்றியை இறைவனின் வெற்றியாக முழக்கமிட்டார்கள். பாலஸ்தீனில், யூதர்களின் மேலாதிக்கத்தை கிறிஸ்துவர்கள் அடக்கியிருந்தார்கள். இப்போது கிறிஸ்துவர்களின் ஆதிக்கத்துக்கும் ஒரு முடிவு வந்திருக்கிறது என்கிற சந்தோஷம் அவர்களுக்கு. இந்த மகிழ்ச்சியை எதிலிருந்து கொண்டாட ஆரம்பிக்கலாம்?மிகச்சிறந்த வழி, ஜெருசலேம் நகரின் புகழ்பெற்ற, மாபெரும் கிறிஸ்துவ தேவாலயத்தில் உமர், தொழுகை செய்யவேண்டும். அதன்மூலம் பாலஸ்தீனில் இஸ்லாம் காலூன்றிவிட்டதை அழுத்தந்திருத்தமாக நிறுவிவிடலாம்.*
>
> *ஒட்டுமொத்த பாலஸ்தீனத்து அரேபியர்களும் இத்திட்டத்தை ஆமோதித்து உமரிடம் தங்கள் விருப்பமாக இதனைத் தெரிவித்தார்கள்.*

ஆனால் உமர் உடனடியாக இதை மறுத்துவிட்டார். அவர் சொன்ன காரணம் : "**நான் தொழுகை நடத்தினால், முதல்முதலில் தொழுகை நடத்தப்பட்ட இடம் என்று சொல்லி நீங்கள் மசூதி கட்டிவிடுவீர்கள். அது கிறிஸ்துவர்களுக்கு வருத்தம் தரலாம்.**"

இது கதையல்ல. இஸ்லாமிய சரித்திரத்தின் ஓரங்கமான இச்சம்பவம் அனைத்து யூத, கிறிஸ்துவ வரலாற்று நூல்களிலுமேகூடப் பதிவு செய்யப்பட்டிருக்கிறது.

"முகம்மது நபியே ஒரு கட்டத்தில் யூத மதத்துக்கு மாறிவிடத் தயாராக இருந்தார்" என்று எவ்வித ஆதாரமும் இல்லாத வாதத்தை முன்வைத்த யூத சரித்திர ஆராய்ச்சியாளர் **மார்ட்டின் கில்பர்ட்** போன்றவர்கள் கூட உமரின் இந்த முடிவையும், இதனைத் தொடர்ந்து கலீஃபாக்களின் ஆட்சியில் யூதர்கள் எத்தனை நிம்மதியுடன் வாழ முடிந்தது என்பதையும் பக்கம் பக்கமாக வருணித்திருக்கிறார்கள். //

**உமர் எழுதியது:**

ஒரு பைத்தியக்காரன் கூட பாராவை போல ஒப்பிடமாட்டான்:

மேறகண்ட பத்தியில் பாரா அவர்கள் ஒப்பிடும் லாஜிக்கைப் பார்த்தால், ஆச்சரியத்தில் அப்படியே புல்லரித்துவிடும். ஆமாம்! ஒரு பைத்தியக்காரன் கூட இவரைப்போல ஒப்பிடமாட்டன், அவ்வளவு அடிமட்ட நிலைக்குச் சென்று இவர் எழுதுகிறார். உண்மையைச் சொல்லவேண்டுமென்றால், இவரது வரிகளை படிக்கும் வாசகர்களைத் தான் இவர் பைத்தியக்காரர்களாக கருதி இவைகளை எழுதியுள்ளார். நான் இப்படி எழுதுவதற்கான காரணங்களைத் தருகிறேன், படியுங்கள். அப்போது தான் புரியும், பாராவின் வரிகளில் காணப்படும் முட்டாள்தன ஒப்பீடு:

**பாராவின் மேற்கண்ட வரிகளின் சுருக்கம் இது தான்:**

1. எகிப்து மீது உமர் தொடுத்த போரின் அடிப்படையில் தான் மேற்கத்திய சரித்திர ஆசிரியர்கள், இஸ்லாம் வாளால் பரப்பப்பட்டது என்று சொல்கிறார்களாம்.
2. ஆனால், இது தவறான கருத்தாம், இஸ்லாம் வாளால் பரப்பப்படவில்லையாம்.
3. இது எப்படி? என்று கேட்டால், அந்த போருக்கு பிறகு நடந்த ஒரு சம்பவத்தை பாரா அவர்கள் சுட்டிக்காட்டி, **'**இந்த நிகழ்ச்சியின் படி பார்த்தால், உமர் இஸ்லாமை வாளால் பரப்பவில்லை**'** என்று அறிந்துக்கொள்ளலாம் என்றுச் சொல்கிறார்.

இஸ்லாம் வாளால் பரப்படவில்லை என்பதற்கு நிரூபனமாக உமரின் அந்த நிகழ்ச்சி உள்ளது என்று பாரா அவர்கள் எழுதினார்கள். இதைத் தான் ''ஒரு பைத்தியக்காரனும் செய்யாத ஒரு ஒப்பீட்டை பாரா செய்தார்'' என்று நான் பாரா அவர்கள் மீது குற்றம்சாட்டுவதற்கு காரணமாக உள்ளது.

**பாராவின் லாஜிக் பைத்தியக்காரத்தனமா? ஆம்.**

**1)** முதலாவதாக, உமர் வெறும் எகிப்தை மட்டுமே போர் செய்து பிடித்தார் என்பது போல ஒரு பாவனையை பாரா தம் வரிகளில் எழுதியுள்ளார். இது சுத்தப்பொய்யாகும். உமர் எகிப்தை பிடிப்பதற்கு முன்பு, அரேபியாவைச் சுற்றியுள்ள இதர நாடுகள் மீதும் போர் தொடுத்து அவைகளையும் பிடித்தார், இதன் பட்டியல் முந்தைய பாயிண்டில் கொடுத்துள்ளேன்.

**2)** இரண்டாவதாக, கொசுவை வடிகட்டி, ஒட்டகத்தை விழுங்குவது என்றுச் சொல்வார்களே அது போல, உமர் பல நாடுகளை பிடித்து, தலைகள் உருளச்செய்துவிட்டு, இரத்த ஆறை ஓடச்செய்தார். ஆனால், கடைசியாக ஜெருசலேமில் ஒரு செயலைச் செய்தாராம். அதனால், உமர் இஸ்லாமை வாளால் பரப்பவில்லையென்று பாரா கூறுவது பைத்தியக்காரத்தனமாகும்.

**3)** ஒரு பக்கம் உமர், பல ஆயிர உயிர்களை எடுத்தார், பலரை விதவைகளாக்கினார், சின்னஞ்சிறு பிள்ளைகளை ஆனாதைகளாக்கினார், பெண்களை அடிமைகளாக எடுத்துக்கொண்டு அவர்களை தன் இராணுவத்தினரிடம் அடிமைகளாக பிரித்துக்கொண்டார். இன்னொரு பக்கம், நான் இந்த ஆலயத்தில் தொழுதால், அந்த ஆலயத்தை முஸ்லிம்கள் மசூதியாக்கிவிடுவார்கள் என்றுச் சொன்னாராம். இது ஒரு சிறந்த செயலாம்.

**4)** உண்மையாக உமர் இஸ்லாமை வாளால் பரப்பக்கூடாது என்று எண்ணியிருந்தால், மதினாவில் நமாஜ் செய்துக்கொண்டு சும்மா இருந்திருக்கவேண்டும், இப்படி நாடுகளை பிடிக்க வாளை தூக்கியிருந்திருக்கக்கூடாது.

**5)** பாராவின் பைத்தியக்கார இஸ்லாமிய வக்காளத்து எப்படி இருக்கின்றதென்றால், இந்தியாவில் படையெடுத்த வந்த அக்காலத்து சுல்தான்களில் ஒருவர், இந்திய கோயில்களை கொள்ளையடித்துவிட்டு, சிலைகளை உடைத்துவிட்டு, திரும்பிச் செல்லும்போது, கோயிலுக்கு எதிரே போட்டு இருந்த கோலத்தைப் பார்த்து, இந்த கோலம் இந்துக்களின் கலாச்சார சின்னமாக இருக்கிறது, இதனை மதிக்கவேண்டும், மிதிக்கக்கூடாது என்பதற்காக அதனை தொடாமல் ஒதுங்கிச் சென்றால் எப்படி இருக்கும்? பாரா இந்த நிகழ்ச்சியை எப்படி விவரிப்பார் தெரியுமா? சுல்தான்கள் கோயிலை கொள்ளையடித்தார்கள் என்றுச் சொல்வது அவதூறு ஆகும். சுல்தான்களுக்கு கோயில்களை கொள்ளையடிக்கவேண்டும் என்ற ஆசையெல்லாம் இல்லை. இதற்கு ஒரு நிரூபனம் என்னவென்றால், அந்த சுல்தான் கோயிலை கொள்ளையடித்துவிட்டு திரும்பிவரும் போது, 'கோயிலை மதித்து, அதற்கு முன்பாக போடப்பட்டு இருந்த கோலங்களை கலைக்காமல், அதன் மீது கால் வைக்காமல் போனதிலிருந்தே, அந்த சுல்தான்களுக்கு இந்திய கோயில்கள் என்றால் எவ்வளவு கௌரவம் என்பது தெரிந்துவிடுகிறது''.

**6)** இந்த உதாரணம் உங்களுக்கு எப்படித் தெரிகிறது? பைத்தியக்காரத்தனமாகத் தெரிகின்றதல்லவா? அது போலத் தான் உள்ளது, உமர் ஜெருசலேமில் செய்த செயலை குறிப்பிட்டு, உமர் இஸ்லாமை வாளால் பரப்பவில்லை என்றுச் சொல்வது.

**யார் யாரை தொழுக அழைத்தார்கள்? ஏன் இந்த பொய்?**

பாரா அவர்கள் எழுதியதை கூர்ந்து கவனியுங்கள். பாலஸ்தீனாவில் அரபியர்கள் இருந்தார்களாம், அவர்கள் தான் கிறிஸ்தவ ஆலயத்தில் தொழும் படி, உமரை கேட்டுக்கொண்டார்களாம். ஆனால், உமர் மறுத்துவிட்டாராம். ஆனால், உண்மையில் அவரை தொழுக அழைத்தவர்கள் பாலஸ்தீன அரேபியர்கள் அல்ல, ஜெருசலெமின் தலைவர் ஆவார். மற்றவிவரங்கள் எப்படியோ, இஸ்லாம் பற்றி பாரா அவர்கள் எழுதினால் போதும், முதலாவது வருவது பொய்யான விவரங்கள் தான்.

> **It has been recorded in the annals of Muslim chronicles, that at the time of the Zuhr prayers, Sophronius invited Umar to pray in the rebuilt Church of the Holy Sepulchre. Umar declined, fearing that accepting the invitation might endanger the church's status as a Christian temple, and that Muslims**

**might break the treaty and turn the temple into a mosque.[11] After staying for ten days in Jerusalem, the caliph returned to Medina.[20]**

மூலம்: **en.wikipedia.org/wiki/Siege_of_Jerusalem_(636%E2%80%93637)**

**ஹக்ஸ் இஸ்லாமிய அகராதி:**

இஸ்லாமிய அகராதி ஜெருசலேமில் அப்போது **12,000** கிரேக்கர்கள் இருந்தார்கள், மற்றும் **50000** கிறிஸ்தவர்கள் இருந்தார்கள் என்றுச் சொல்கிறது. அரபியர்கள் இருந்தார்கள் என்று வேறு ஏதாவது ஆய்வு நூலில் நீங்கள் படித்திருக்கிறீர்களா? படிக்கவில்லையென்றால், எங்கேயிருந்து விவரங்கள் உங்களுக்கு கிடைத்தன? (ஒருவேளை முஹம்மதுவிற்கு வந்தது போல, வஹி உங்களுக்கும் வந்ததா?)

**There were withing the city 12,000 Greeks and 50,000 natives, and the Khalifah 'Umar insisted that all the Greeks depart within three days, and that the natives should pay tribute. Five dinars were imposed upon the rich, four upon the middle classes, and three upon the lower classes; very old and very young persons paid nothing.**

**A DICTIONARY OF ISLAM by THOMAS PATRICK HUGHES, Page 228**

மூலம்: **answering-islam.org/Books/Hughes/j.htm**

**பாரா அவர்கள் எழுதியது:**

*// "முகம்மது நபியே ஒரு கட்டத்தில் யூத மதத்துக்கு மாறிவிடத் தயாராக இருந்தார்" என்று எவ்வித ஆதாரமும் இல்லாத வாதத்தை முன்வைத்த யூத சரித்திர ஆராய்ச்சியாளர் மார்ட்டின் கில்பர்ட் போன்றவர்கள் கூட உமரின் இந்த முடிவையும், இதனைத் தொடர்ந்து கலீஃபாக்களின் ஆட்சியில் யூதர்கள் எத்தனை நிம்மதியுடன் வாழ முடிந்தது என்பதையும் பக்கம் பக்கமாக வருணித்திருக்கிறார்கள். //*

**உமர் எழுதியது:**

இதுவரை பாரா அவர்களின் வரிகளை ஆய்வு செய்ததில், இந்த பத்தியில் அவர் எழுதியதை நம்ப முடியவில்லை. மார்ட்டின் கில்பர்ட் பல புத்தகங்களை எழுதியுள்ளார் **(https://en.wikipedia.org/wiki/Martin_Gilbert).** பாரா அவர்கள் படித்த புத்தக(ம்)ங்கள் எவைகள் என்றுச் சொன்னால், அவைகளை வாங்கி, படித்து தெரிந்துக்கொள்ளலாம், அதுவரை மேற்கண்ட பத்தியில் பாரா அவர்கள் எழுதியதை நம்புவதற்கு எனக்கு தைரியம் இல்லை.

பாரா அவர்களின் ''உதவிய நூல்களின் பட்டியலில்'' மார்டின் கில்பர்ட் எழுதிய ஒரு நூலின் பெயரும் இல்லையென்பது குறிப்பிடத்தக்கது.

**பாரா அவர்கள் எழுதியது:**

*// உமரின் தோற்றம் குறித்து எழுதியிருக்கும் ஆசிரியர்கள் அத்தனைபேரும் அவரை அபூபக்கரைக் காட்டிலும் எளிமையானவராகவே சித்திரித்திருக்கிறார்கள். அவர் புதிய ஆடைகள் அணிந்து ஒருபோதும் பார்த்ததில்லை என்று சொல்லுகிறார்கள்.*

*எப்போதும் துண்டு துண்டாக துணிகளைத் தொகுத்து, கையால் தைத்து ஒட்டுப்போட்ட அங்கியையே அவர் அணிந்திருப்பார். அணிந்திருக்கும் ஓர் அங்கி, மாற்று உடையாக ஓர் அங்கி. இதைத்தவிர வேறு உடைகள் அவருக்குக் கிடையாது. அபூபக்கரைப் போலவே, தன் அகங்காரம் மிகுந்துவிடாமலிருப்பதற்காக, வீடு வீடாகப் போய் காலைவேளையில் பால் கறந்து கொடுப்பது, வயதான பெண்மணிகளின் வீடுகளுக்குப் போய்ப் பாத்திரங்கள் தேய்த்துக் கொடுப்பது, துணிகளைத் துவைத்துக் காயவைத்து, மீண்டும் மாலை வேளையில் சென்று மடித்துத் தந்துவருவது என்பன போன்ற **நம்பமுடியாத** காரியங்களை கலீஃபா ஆன பிறகும் உமர் தொடர்ந்து செய்துவந்திருக்கிறார். //*

**உமர் எழுதியது:**

அபூபக்கரைப் பற்றி பாரா அவர்கள் சொன்ன **'**நிலாவில் ஆயா வடசுடும்**'** கதைப்போன்று, உமரின் விஷயத்திலும் இன்னொரு ஆயா, இன்னொரு நிலாவில் அதே மாதிரியான வடைகளை சுட்டதாக எழுதுகிறார் பாரா. [ஆயா வேறு, நிலா வேறு, ஆனால், வடைகள் ஒரே மாதிரி தான்]

ஒரு மகா சக்கரவர்த்தி, பல போர்களை புரிந்தவர், இப்படியெல்லாம் செய்யமுடியுமா?

- வீடு வீடாகப் போய் காலைவேளையில் பால் கறந்து கொடுப்பது
- வயதான பெண்மணிகளின் வீடுகளுக்குப் போய்ப் பாத்திரங்கள் தேய்த்துக் கொடுப்பது
- துணிகளைத் துவைத்துக் காயவைத்து
- மீண்டும் மாலை வேளையில் சென்று மடித்துத் தந்துவருவது

பாரா அண்ணே! முஸ்லிம்கள் கலிஃபாக்கள் இவ்வளவு நல்லவங்க இல்லை என்றுச் சொல்வது ஒரு புறமிருக்க, இவைகள் ஒரு மகா சக்கரவர்த்திக்கு சாத்தியமா? என்பதை சிந்தித்துப் பாருங்கள். நம் நாட்டு அரசியல் தலைவர்கள், சாலையில் நின்றுக்கொண்டு தொடப்பத்தை பிடித்துக்கொண்டு சுத்தம் செய்வது மாதிரி நாம் செய்திகளில் வாசிப்பது, ஏதோ ஒரு முறை செய்தது, அதுவும், ஒரு சில நிமிடங்கள் தான். அதற்காக, எங்கள் தலைவர் அண்ணா சாலை முழுவதும் துடபத்தால் சுத்தம் செய்தார் அதுவும், தன் ஆட்சி காலம் முழுவதும் 5 ஆண்டுகள் இப்படி தினமும் செய்தார் என்றுச் சொன்னால், இந்த **'**கேணத்தனமான செய்தியை**'** பாரா நம்புவாரா? ஆனால், இப்படி கேணத்தனமாக அவர் எழுதியை ஒட்டுமொத்த குமுதம் ரிப்போர்ட்டர் வாசகர்கள் நம்பவேண்டும் என்று பாரா நினைத்துள்ளார்.

பாராவின் இந்த நிலமெல்லாம் இரத்தம் தொடரை குமுதத்தில் படித்த வாசகர்கள், பாராவின் இப்படிப்பட்ட ''ஆயா சுட்ட வடைக்கதைகள்'' பற்றி படித்தபோது, அவருக்கு தொலைப்பேசியில் அழைத்து, **'**இப்படியெல்லாம் நடக்குமா?**'** என்று கேட்டீர்களா?

**பாரா அவர்கள் எழுதியது:**

*// தங்களது சக்ரவர்த்தி எப்படியெல்லாம் இருப்பார் என்கிற பெரிய எதிர்பார்ப்புடன் ஜெருசலேமில் உமரின் நகர்வலத்தின்போது பார்க்கக் கூடிய அரேபியர்கள் வியப்பில் பேச்சு மூச்சற்றுப் போய்விட்டார்களாம். மாபெரும் வீரர் என்று வருணிக்கப்படும் உமர், அந்த நகர்வலத்தின்போது ஓர் எளிய சந்நியாசியைப் போலவே காட்சியளித்தார் என்று எழுதுகிறார்கள் பல சரித்திர ஆசிரியர்கள் //*

**உமர் எழுதியது:**

அரேபிய மொழியைப்பேசும் நாடுகள் மீது போர் தொடுத்து, அவைகளை அழித்துத்தீர்த்துக்கட்டிய உமர் எப்படி ஜெருசலேமில் இருக்கும் அரேபியர்களுக்கு 'தங்கள் சக்ரவர்த்தி' ஆனார்? கி.பி. 636 - 640 காலக்கட்டத்தில் ஜெருசலேமில் எத்தனை ஆயிர அரேபியர்கள் இருந்தார்கள்? பாராவிற்கு இதன் கணக்குத் தெரியுமா? முதலாவது, ஜெருசலேமில் அரேபியர்கள் இருந்தார்களா? (அரபி பேசும் கிறிஸ்தவர்களோ, யூதர்களோ, கிரேக்கர்களோ அல்ல).

உமர் எளிமையான உடைகளை அணிந்திருந்தார் என்றுச் சொல்வதில் எனக்கு முரண்பாடு இல்லை, ஆனால், ஜெருசலேமில் அரேபியர்கள் இருந்தார்கள் என்று பாரா சுட்ட ஆயா வடையிலிருந்து தான் எனக்கு வாசனை அதிகமாக அடிக்கிறது.

**பாரா அவர்கள் எழுதியது:**

> *// நகர்வலத்தின் இறுதியில் மக்களிடையே உரையாற்றிய உமர், ஒரே ஒரு விஷயத்தை மிகவும் அழுத்தம் கொடுத்துப் பேசினார். "யூதர்கள், கிறிஸ்துவர்கள், இஸ்லாமியர்கள் மூவருமே இப்ராஹிமின் (ஆபிரஹாம்) வழித்தோன்றல்கள். சண்டையின்றி ஒற்றுமையாக வாழவேண்டியது அவசியம்." //*

**உமர் எழுதியது:**

இந்த உரையை உமர் அவர்கள் மதினாவில் இருந்துக்கொண்டு சொல்லியிருந்தால் உலக சரித்திரம் வெறு வகையாக இருந்திருக்கும். இதர நாடுகளை வலியச்சென்று பிடித்து, கொள்ளையடித்து, பெண்களை அடிமைகளாக விற்று, தலைகளை சீவி, கடைசியாக ஜெருசலேமையும் விட்டுவைக்காமல் அதனையும் பிடித்துக்கொண்டு, 'ஒற்றுமையாக வாழுங்கள்' என்று உரை நிகழ்த்துவது, மிக மிக கேவலமான ஒன்று. படித்தவர்கள் இதனை எப்படி அங்கீகரிப்பார்கள்?

**முஸ்லிம்களிடம் கேட்கவேண்டிய கேள்விகள்:**

குஜராத் கலவரத்துக்கு மோடியின் அரசாங்கம் தான் காரணம் என்று முஸ்லிம்கள் நம்புகிறீர்கள். இந்த கலவரத்தை செய்துவிட்டு, அனேகரை கொன்றுகுவித்துவிட்டு, கடைசியாக மோடி வந்து முஸ்லிம்களிடம் 'இந்துக்களும் முஸ்லிம்களும் ஒற்றுமையாக இருப்போம்' என்றுச் சொன்னால், உங்களுக்கு எங்கே எரியும்? அப்படித்தான் இருக்கிறது 'உமர் உரையாற்றியதாக பாரா எழுதியது'. ஒற்றுமையாக இருங்கள் என்றுச் சொல்லும் தகுதி உமருக்கு இல்லை, அவ்வளவு ஏன் முஹம்மதுவிற்கும் இல்லை. மக்களை கொன்றுவிட்ட பிறகு 'சமாதான பிரபு' போல பேசுவது ஏன்?

உமர் அன்று ஜெருசலேமில் பேசியது சரியானது என்றுச் சொல்வீர்களானால், மோடி போன்ற அரசியல் தலைவர்கள் ஊடகங்களில் நல்லவர்கள் போல நடிப்பதும் சரியானது தான்.

**பாரா அவர்கள் எழுதியது:**

> *// ஜெருசலேம் கைப்பற்றப்பட்டபிறகு அங்கே உமர் வெளியிட்ட முதல் அரசு உத்தரவு, அந்தக் குப்பைகள் அப்புறப்படுத்தப்பட வேண்டுமென்பதுதான். உத்தரவிட்டதுடன் நின்றுவிடாமல், குப்பை அள்ளும் பணியில் முதல் கரம் கொடுத்ததும் அவரேதான். இதுவும் பல யூத சரித்திர நூல்களில் பதிவுசெய்யப்பட்டிருக்கும் சம்பவமே. (ஆனால் கிறிஸ்துவ ஆசிரியர்களின் நூல்களில் இந்தச் சம்பவம் எழுதப்பெறவில்லை.) //*

**உமர் எழுதியது:**

நீங்கள் மொட்டையாக எழுதியவைகளையெல்லாம் அப்படியே நம்புவதற்கு நான் குமுதம் ரிப்போர்டர் வாசகன் அல்ல என்பதை தாழ்மையுடன் தெரிவித்துக்கொள்கிறேன். அந்த அடைப்பிற்குள் எழுதிய வரிகளுக்கு பதிலைச் சொல்லமுடியுமா? கிறிஸ்தவ ஆசிரியர்களின் நூல்கள் என்று நீங்கள் குறிப்பிடுவது எவைகளை? நீங்கள் படிக்காமல் எழுதியிருக்கமாட்டீர்கள் என்று நம்புகிறேன். நீங்கள் படித்த யூத மற்றும் கிறிஸ்தவர்களின் சரித்திர நூல்களின் பெயர்களை இங்கு குறிப்பிடமுடியுமா?

**பாரா அவர்கள் எழுதியது:**

> *// ஆனால் இத்தனை பரந்த மனம் படைத்தவராக இருந்த உமர், முஸ்லிம் அல்லாத பிற இனத்தவர் அனைவரையும் இஸ்லாமியப் பேரரசின் எல்லைக்கு உட்பட்ட கடலோரப் பகுதிகளில் இருந்தும், மெக்கா, மதினா ஆகிய நகரங்களிலிருந்தும் வலுக்கட்டாயமாக வெளியேற்றி, வேறு இடங்களில் வசிக்க நிர்ப்பந்தித்ததாக ஒட்டுமொத்த யூத, கிறிஸ்துவ சரித்திர ஆசிரியர்களும் தவறாமல் குறிப்பிட்டிருக்கிறார்கள். இக்குற்றச்சாட்டுக்கு இஸ்லாமியர் தரப்பு பதில் என்று குறிப்பிடும்விதமாக ஏதும் கிடைக்கவில்லை. //*

**உமர் எழுதியது:**

சபாஷ் பாரா சபாஷ், ரொம்ப நன்னா இருக்கு உங்களுடைய டுபாகூர் ஆய்வுகள்!

உமர் பற்றிய நல்லவைகள் கிறிஸ்தவ சரித்திர நூல்களில் இல்லையென்று எழுதுகிறீங்க. ஆனால் அதே உமர் பற்றிய தீய செயல்கள் யூத கிறிஸ்தவ நூல்களில் இருக்கின்றன, ஆனால், இஸ்லாமிய நூல்களில் இல்லை என்றுச் சொல்கிறீங்க! உங்களின் இந்த நிலைப்பாட்டிற்கே, முஸ்லிம்கள் உங்களை பாராட்டி இருந்திருப்பார்களே!

பச்சோந்தியே வெட்கப்படும் அளவிற்கு நீங்கள் அடிக்கடி உங்கள் கலரை மாற்றிக்கொண்டுள்ளீர்கள்.

உமர் மற்றவர்களை அரேபியாவிலிருந்து துரத்தினார் என்ற விஷயம் உங்களுக்கு இஸ்லாமிய நூல்களில் கிடைக்கவில்லையா? நெசம்மா! சொல்லுங்க! பொய் சொன்னா பொம்பள புள்ளே பொறக்கும் என்று எங்க கிராமத்துலே சொல்லுவாங்க!

ம்ம்ம்.... உங்களுக்கு எங்கே இப்படிப்பட்ட விவரங்கள் எல்லாம் கிடைக்கும்! நீங்க யூத புத்தகங்களை படிப்பீங்க! நீங்க கிறிஸ்தவ புத்தகங்களை படிப்பீங்க! ஆனா இஸ்லாமிய புத்தகங்களை படிக்கமாட்டீங்க? ஹதீஸ்களை படிக்கமாட்டீங்க! உங்களுக்கு எப்படி சரியான விவரங்கள் கிடைக்கும்?

உமர் மக்களை நாடு கடத்தின விஷயத்தை ஹதீஸ்கள் பதிவு செய்கின்றன. புகாரி, முஸ்லிம் ஹதிஸ்களின் நம்பகத்தன்மை என்னவென்று முஸ்லிம்களிடம் கேட்டுப்பாருங்கள்.

நான் மேற்கோள் காட்டப்போகும் கீழ்கண்ட இரண்டு ஹதீஸ்கள் பொய் என்று ஒட்டுமொத்த தமிழ் முஸ்லிம்கள் சொல்லும்படி செய்துவிட்டீர்கள் என்றால், நான் உங்களுக்கு 10 ஆயிரம் பரிசு தருவேன். ஏனென்றால், உங்களுக்கு கிடைக்காத விவரங்கள் அல்லவா இவைகள்! நீங்கள் தேடிப்பார்த்தீர்கள், ஆனால் உங்களுக்கு கிடைக்கவில்லை, நீங்கள் என்ன செய்யமுடியும்!?

**யூதர்களையும் கிறிஸ்தவர்களையும் நாடு கடத்திய உமர்:**

**புகாரி ஹதீஸ்: எண்: 2338 (மேலும் பார்க்க புகாரி எண் 3152 & 6832)**

**2338.** அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

உமர் இப்னு கத்தாப்(ரலி) யூதர்களையும் கிறிஸ்தவர்களையும் ஹிஜாஸ் மாநிலத்திலிருந்து நாடு கடத்திவிட்டார்கள். இறைத்தூதர் கைபர் பிரதேசத்தை வெற்றி கொண்டபோது (அங்கிருந்த) யூதர்களை நாடு கடத்திட விரும்பினார்கள். (ஏனெனில்,) அந்தப் பிரசேத்தை வெற்றி கொண்டபோது அந்தப் பகுதியிலிருந்த நிலம் முழுவதும் அல்லாஹ்வுக்கும் அவனுடைய தூதருக்கும் முஸ்லிம்களுக்கும் உரியதாகி விட்டிருந்தது. (அந்த நிலையில்) யூதர்கள் அல்லாஹ்வின் தூதரிடம், 'நாங்கள் இந்த நிலங்களில் பயிரிட்டு உழைக்கிறோம். இவற்றின் விளைச்சலில் 'பாதியைப் பெற்றுக் கொள்கிறோம். (மீதியை இஸ்லாமிய அரசுக்கு நிலவரியாகச் செலுத்தி விடுகிறோம்)' என்று கேட்டுக் கொண்டார்கள். இறைத்தூதர்(ஸல்) அவர்கள், 'நீங்கள் ஒப்புக் கொண்ட இந்த நிபந்தனையின் (நிலக் குத்தகை ஒப்பந்தத்தின்) அடிப்படையில் நாம் விரும்பும் வரை நீங்கள் அதில் பயிரிட்டுக் கொள்ள நாம் அனுமதிக்கிறோம்' என்று கூறினார்கள். எனவே, உமர்(ரலி), தம் ஆட்சிக் காலத்தில் அந்த யூதர்களை தைமா, அரீஹா, (ஜெரிக்கோ) ஆகிய பகுதிகளுக்கு நாடு கடத்தி அனுப்பும் வரை அவர்கள் அங்கேயே (நிலங்களைப் பயிரிட்டு வரி செலுத்தி) வசித்து வந்தார்கள்.

**முஸ்லிம் ஹதீஸ் எண்: 3158 (மேலும் பார்க்க முஸ்லிம் எண் 3626)**

**3158. இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:**

(கலீஃபா) உமர் பின் அல்கத்தாப் (ரலி) அவர்கள் யூதர்களையும் கிறித்தவர்களையும் "ஹிஜாஸ்" மாநிலத்திலிருந்து நாடு கடத்தினார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கைபரை வெற்றி கொண்டபோதே அங்கிருந்த யூதர்களை வெளியேற்றிவிட விரும்பினார்கள். ஏனெனில், அந்தப் பிரதேசம் வெற்றிகொள்ளப்பட்ட பின் அது அல்லாஹ்வுக்கும் அவன் தூதருக்கும் முஸ்லிம்களுக்கும் உரியதாகிவிட்டிருந்தது. ஆகவேதான், யூதர்களை அங்கிருந்து வெளியேற்ற விரும்பினார்கள். இந்நிலையில், யூதர்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம், "நாங்கள் இங்கேயே தங்கி, இந்த நிலங்களில் பயிரிட்டு உழைக்கும் பொறுப்பை ஏற்கிறோம். இவற்றின் விளைச்சலில் பாதியைப் பெற்றுக் கொள்கிறோம் (மீதியை மதீனா அரசுக்குச் செலுத்திவிடுகிறோம்); இதற்கு எங்களை அனுமதிக்க வேண்டும்" என்று கேட்டுக்கொண்டார்கள்.

அவ்வாறே அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இதன்படி நாம் விரும்பும்வரை நீங்கள் இங்கே தங்கிப் பயிரிட அனுமதிக்கிறோம்" என்று கூறினார்கள். ஆகவே, உமர் (ரலி) அவர்கள் தமது ஆட்சிக் காலத்தில் அந்த யூதர்களை "தைமா" "அரீஹா" (ஜெரிக்கோ) ஆகிய பகுதிகளுக்கு நாடுகடத்தி அனுப்பும்வரை அவர்கள் அங்கேயே (நிலங்களைப் பயிரிட்டு, வரி செலுத்தி) வசித்துவந்தார்கள். - இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

மேற்கண்ட புகாரி மற்றும் முஸ்லிம் ஹதீஸ்கள் மிகவும் கேவலமான விதத்தில் பாராவின் ஆய்விற்கு பதிலடி கொடுத்துள்ளன.

**முடிவுரை:**

இந்த கட்டுரையில் பாரா அவர்களின் நிலமெல்லாம் இரத்தத்தின் 22ம் அத்தியாயத்தில் இருக்கும் ஓட்டைகளின் வழியாக, பாராவின் ஆய்வை சிறிது அலசினோம். எத்தனை பொய்கள், எத்தனை மடத்தனமான வாதங்கள் பாராவின் வரிகளில் கண்டோம். எதிர்காலத்தைப் பற்றி பொய்யாக முன்னறிவிப்பு செய்யும் தீர்க்கதரிசிகளையும் மன்னித்துவிடலாம், ஆனால் கடந்த காலத்தில் நடந்துமுடிந்த சரித்திரத்தை மாற்றி எழுதும் எழுத்தாளர்களுக்கு சரியான ஒரு பதிலடி கொடுத்தே ஆகவேண்டும். இவர்களை இப்படியே விட்டால், நாளைக்கு பாரா போன்றவர்கள், பின்லாடன் ஒரு தீர்க்கதரிசி என்றுச் சொன்னாலும் சொல்லுவார்கள். உமரைப் பற்றி எப்படியெல்லாம் பாரா பரிந்து பேசினாரோ, அதே போல பின்லாடன் பற்றியும் பேசுவார், எனவே, போடவேண்டிய வரிகளில் சூடு போடவேண்டியது என் கடமை.

**கடைசியாக, ஒரு முக்கியமான விஷயம்.**

"பாரா என்ன செய்வார்? அவர் படித்த புத்தகங்களில் உள்ளதைத் தானே அவர் எழுதமுடியும்! அவர் வெறும் அம்பு தானே! எய்தது அப்புத்தகங்கள் அல்லவா?" என்று என் தொடர் பதில்களை படிக்கும் வாசகர்கள் கேட்கலாம். உங்கள் ஆதங்கம் சரியானது தான், நான் புரிந்துக்கொண்டுள்ளேன். "இஸ்லாமுக்கு கொஞ்சமும் சம்மந்தமில்லாத ஒரு எழுத்து வியாபாரி" அவர் என்று எனக்கு நன்றாகத் தெரியும். ஆனால், ஒருவருக்கு தண்டனை கொடுத்தால், அதைப் பார்ப்பவர்கள் திருந்துவார்கள் அல்லவா! இனி இப்படி எழுதுபவர்கள் எச்சரிக்கையாக இருப்பார்கள் அல்லவா! அதற்காகத் தான், இந்த விமர்சனங்கள் முன்வைக்கப்படுகின்றன. மேலும், இன்னொரு விவரத்தை இங்கு குறிப்பிடவேண்டும், அது என்னவென்றால், 'பாரா ஒரு பாமரன் அல்ல, அவர் படித்தவர், எழுத்தாளர் மற்றும் இதர விவரங்களை நான்றாக ஆய்வு செய்பவர்'. இப்படிப்பட்டவர் இஸ்லாமின் விஷயத்துக்கு வரும் போது பல இடங்களில் தன் மனசாட்சிக்கும், ஆய்வுக்கும் எதிராக அவர் எழுதியுள்ளார் என்பது என் கருத்து. வேண்டுமென்றே சில இடங்களில் சரித்திரத்தை திருத்தி எழுதியுள்ளார், அது அறியாமையோ, அல்லது தெரிந்தே செய்ததோ! எழுத்துவடிவில் கொஞ்சம் தண்டனை கொடுக்கத்தான் வேண்டும்.

ஒருவகையில் நான் பாராவிற்கு நன்றிகளைச் சொல்லவேண்டும். அவர் மூலமாக அனேகர் எச்சரிக்கப்படப்போகிறார்கள் என்பது அவருக்கும் ஒரு மகிழ்ச்சி தானே!

இனிய ரமளான் வாழ்த்துக்கள்.

அடுத்த தொடரில் சந்திப்போம்.

**அடிக்குறிப்புக்கள்:**

**1. Rights of Non-Muslims in an Islamic State - www.answering-islam.org/NonMuslims/rights.htm**

**2. Tolerance in islam - www.answering-islam.org/Shamoun/badawi_tolerance.htm**

**3. Muhammad's Mistreatment of the People of the Book - A Dawagandist Seeks to Justify Islam's Degradation of Jews and Christians - www.answering-islam.org/Shamoun/badawi_greetings.htm**

**4.** உமர் ஜெருசலேம் கிறிஸ்தவர்களோடு செய்த உடன்படிக்கை - தபரி சரித்திரத்திலிருந்து ஒரு மேற்கோள். பாரா அவர்கள் சொல்வதற்கும் இதற்கும் முரண்பாடுகள் உள்ளது. பாராவின் படி, ஜெருசலேமில் யூதர்களுக்கு உமர் அனுமதி அளித்தார், ஆனால் தபரி சரித்திரத்தின் படி, ஒரு யூதன் ஜெருசலேமில் வாழக்கூடாது என்று உமர் உடன்படிக்கை செய்ததாக வருகிறது. இதைப் பற்றி தனியாக ஒரு கட்டுரையில் காண்போம்.

**lostislamichistory.com/jerusalem-and-umar-ibn-al-khattab/**

**In the name of God, the Merciful, the Compassionate. This is the assurance of safety which the servant of God, Umar, the Commander of the Faithful, has given to the people of Jerusalem. He has given them an assurance of safety for themselves for their property, their churches, their crosses, the sick and healthy of the city and for all the rituals which belong to their religion. Their churches will not be inhabited by Muslims and will not be destroyed. Neither they, nor the land on which they stand, nor their cross, nor their property will be damaged. They will not be forcibly converted. No Jew will live with them in Jerusalem.**

**The people of Jerusalem must pay the taxes like the people of other cities and must expel the Byzantines and the robbers. Those of the people of Jerusalem who want to leave with the Byzantines, take their property and abandon their churches and crosses will be safe until they reach their place of refuge. The villagers may remain in the city if they wish but must pay taxes like the citizens. Those who wish may go with the Byzantines and those who wish may return to their families. Nothing is to be taken from them before their harvest is reaped.**

**If they pay their taxes according to their obligations, then the conditions laid out in this letter are under the covenant of God, are the responsibility of His Prophet, of the caliphs and of the faithful.**

**— Quoted in The Great Arab Conquests, from Tarikh Tabari**

ঌঙঌঙঌঙঌঙ